ஓம்.

ஸ்ரீசற்குருவேதுணை.

# சத்தப்பிரகரணம்.

இந்திரபீடம் கரபாத்திர சுவாமிகள் ஆதீனம்

பிறைசை அருணாசலசுவாமிகள்

செய்த நூதன உரையுடன்

இவரது மாணாக்கர்

ஸ்ரீ. சச்சிதானந்த சுவாமிகளின்

தருமபரிபாலன சபையாருத்தரவின்படி,

காரியதரிசி

ப. முத்துகிருஷ்ணரெட்டியாரவர்களால்

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

மன்மத௵ ஐப்பசிமீ.

ஓம்.

ஸ்ரீ சற்குருவே நம:

# சத்தப்பிரகரணம்.

(குருஸ்துதி.)

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌂 𑌪𑌰𑌮𑌸𑍁𑌖𑌦𑌂 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌂
𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌾𑌤𑍀𑌤𑌂 𑌗𑌗𑌨𑌸𑌦𑍃𑌶𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌸𑍍𑌯𑌾𑌦𑌿𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌂
𑌏𑌕𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑌿𑌮𑌲𑌮𑌚𑌲𑌂 𑌸𑌰𑍍𑌵𑌧𑍀𑌸𑌾𑌕𑍍𑌷𑌿𑌭𑍂𑌤𑌂
𑌭𑌾𑌵𑌾𑌤𑍀𑌤𑌂 𑌤𑍍𑌰𑌿𑌗𑍁𑌣𑌰𑌹𑌿𑌤𑌂 𑌸𑌦𑍍𑌗𑍁𑌰𑍁𑌂 𑌤𑌂 𑌨𑌮𑌾𑌮𑌿 ॥ (க)

இதன்பொருள்: பிரமானந்தஸ்வரூபமாயும், சிரேஷ்டமான சுகத்தைக்கொடுப்பதாயும், நிர்விகாரமாயும், ஞானவடிவமாயும், பிரபஞ்சாதீதமாயும், ஆகாசத்துக்குச் சமானமாயும், மஹாவாக்கியங்களுக்கு லக்ஷியார்த்தமாயும், ஒன்றாயும், நித்தியமாயும், நின்மலமாயும், அசைவற்றதாயும், எப்போதுஞ் சாக்ஷிமாத்திரமாயும், பாவனைகளுக் கப்பாற்பட்டதாயும், முக்குணங்களு மில்லாததாயு மிருக்கின்ற சற்குருவை நமஸ்காரம் பண்ணுகிறேன். (க)

(இதுவுமது.)

𑌮𑍂𑌕𑌾𑌮𑍍𑌬𑌾𑌕𑌟𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍 𑌮𑍋𑌹𑌾𑌦𑍍𑌵𑌿𑌮𑍀𑌚𑌨𑌂 𑌸𑌂𑌸𑌾𑌰𑌾𑌤𑍍 𑌶𑌿𑌷𑍍𑌯𑌂 𑌯𑌃 ।
𑌏𑌕𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 𑌶𑍇𑌷𑌗𑌿𑌰𑍀𑌶𑌂 𑌶𑍇𑌷𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌦𑍇𑌶𑌿𑌕𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 ॥ (உ)

(இ-ள்.) மூகாம்பாளது கடாக்ஷத்தினாலே சீடனை மோகத்தினின்றும் விடுவித்தவராயும், ஏகஸ்வரூபராயும், சமஸ்தமான உபநிடதங்களுக் காசிரியராயு மிருக்கின்ற சேஷகிரீசரென்னு நாமதேயத்தை யுடைய ஆசாரியரை நமஸ்காரம் பண்ணுகின்றேன். (உ)

## சத்தப்பிரகரணம்.

## இராகத்துவேஷாதிப்பிரகரணம்.

தனது நித்தியானந்த சுயம்பிரகாசத்தினின்று ஓரறிவு சங்கற்பரூபமாகத் தோன்றிப் பகிர்முகமானவிடத் துண்டான அறிவறியாமையே பிரகிருதி மகத்தத்துவமெனவும், அவற்றினின்றும் விகற்பித்தெழாநின்ற அறிவின் அறிவறியாமையே மாயை யவித்தையெனவும், அவற்றிற் பிரதிபலித்த சீவேசுவர சங்கற்ப விகற்பமே ஞானமுதலிய விருபத்தைந்து தத்துவங்களெனவும், அவற்றினின்றுஞ் சங்கற்பரூபமாகப் பரிணமித்ததே பாஞ்சபூத பவுதிகமெனவும், அவற்றைச் சங்கற்ப

விகற்ப ரூபமான சித்தவிருத்தியால் வருகிற ராகத் துவேஷங்களால்
அனுபவிக்குஞ் சுகதுக்கங்களை விடயமெனவுந் தோற்றிய அத்தியா
ரோபத்தை அபவாதத்தால் மூன்றுண்டான முறைமைப்படி யடக்
கித் தனது நிசானந்தத்தை வெளிப்படுத்தும் நிமித்தம் அருளே திரு
மேனியாக வெழுந்தருளிய சேஷாத்திரிசிவனுரென்னும் ஞானாசாரியர்
சங்கற்ப விகற்பங்களினுல் விருப்பு வெறுப்புண்டாய் அதனுல் விட
யங்களிற் சுழலாநின்ற சித்தத்தின் விருத்தியைக் கெடுத்து, அதற்குச்
சுத்தியுண்டாகும் பொருட்டு அவ்விருப்பு வெறுப்பை ராகத்துவேஷப்
பிரகரண மெனவும், அச்சித்த சுத்தி யுண்டானவிடத்து யதார்த்த
த்தைக் காண்பதற் கேதுவாகத் தோற்றின குறியைத் தெரிவித்தற்
பொருட்டு அதனைச் சாதன சதுஷ்டயப் பிரகரண மெனவும், அவை
உதித்தவிடத்துப் பஞ்சபூதபவுதிக முதலிய அனைத்துஞ் சடமெனத்
தெரிவித்தற்பொருட்டு அதனைத் தூலப்பிரகரண மெனவும், அவை
கள் சடமானவிடத்து அவைகளை மேல் நித்தைக்கொண்டு அசை
ப்பிக்கும் அந்தக்கரணங்களைச் சடமென்றறிந்து அவைகளை நீக்கு
தற் பொருட்டு அதனைச் சூக்குமப் பிரகரண மெனவும், அவைக
ளடங்கினவிடத்து அவைகட்குக் காரணமான மாயை யவித்தைகளை
ஆரோபித மென்றறிந்து அகற்றும் பொருட்டு அதனைக் காரணப்பிர
கரணமெனவும், அவைக ணீங்கினவிடத்து எதிரிட்ட சிவசுவரூப
கனை மறைத்த மகதத்துவம் பிரகிருதிகளை நீக்குதற் பொருட்டு
அதனை மகாகாரணப் பிரகரண மெனவும், இவைக ளனைத்துந்
தற்பிரகாசமாக நீங்கினவிடத்துத் தனது சுயம்பிரகாசமாக விளங்
காநின்ற நித்தியானந்தமே நமது ஸ்வரூபமெனத் தெரிவிக்கும்
பொருட்டு அதனை நிசானந்தானுபூதிப் பிரகரண மெனவும் ஏழு பிர
கரணங்களாகக் கூறி, இங்ஙன முறையாகக் கூறத் தொடங்கிய
இப்பிரகரணங்களுள் முந்தின பிரகரணத்தில் ராகத்துவேஷாதிகளின்
ஸ்வரூபத்தை நிரூபிக்கின்றூர்.

(சுலோகம்.)

காமாத்³யா: ஷோட³ஶ ப்ரோக்தா ராகாத்³யாஸ்த்ரயோத³ஶ
ஹேயாஸ்ஸ்யுரிச்சா²த்³யாஸ்த்ரய உபாதே³யா இதி || (௩)

(இ-ள்.) காமமுதற் பதினாறு குணங்களில் ராகமுதற் பதின்மூன்றுந் தள்ளத்தக்கனவும், இச்சைமுதல் மூன்றுங் கொள்ளத் தக்கனவுமாம். அவைகளின் ஸ்வரூபம் நிரூபிக்கப்படுகின்றது. ராகத்தின் அம்சமே காமமாதலால் காமாதியெனக் கூறினூர். இப்பதின் மூன்றும் ராகத்துவேஷங்களின் பரியாயமெனக் கொள்க.

எந்த ராகத் துவேஷங்களினுற் றிரிவித கரணங்களுந் திரிவித கன்மங்களைச் செய்கின்றனவோ, அந்த ராகத் துவேஷங்களின் குணங்களை நிரூபிக்கின்றோம். அவையாவன: ராகம், துவேஷம், காமம்,

குரோதம், உலோபம், மோகம், மதம், மச்சரம், ஈரிஷை, அசூயை, டம்பம், தர்ப்பம், அகங்காரம் எனப் பதின்மூன்றும். இப்பதின்மூன்றும் மோக்ஷ மடைதற்கு விக்கினமா யிருக்கின்றபடியால் இவற்றை முமுட்சுவானவர்கள் காலத்திரயங்களிலும் பரிசியாமற் சர்வாத்மனு விட்டுவிடவேண்டியது சித்தம். இவைகளின் விவரம் வருமாறு:—

க. இராகம்.

பரஸ்திரீகமனம் பண்ணவேண்டுமென்று விகற்பித்து வருகிற சித்தவிருத்திக்கு ராகமென்று பேர்; இதைமுமுட்சுவானவர்கள் காலத்திரயத்திலு மில்லாமற் சர்வாத்மனு விட்டுவிடவேண்டியது. ஏன் விடவேண்டிய தென்றால் பூருவத்தி லிராவணன் பரதாரமான சீதையம்மனை யிச்சித்த ராகத்தினால் அவன் பிராண ஹானி, பந்துநாசம், இராச்சியஹானி, இகபரங்களில் அபகீர்த்தி இவை முதலான அநேக அநர்த்தங்கள் அனுபவித்ததும், இன்னுஞ் சகோதரரான சுந்தோபசுந்தரர்க ளிருவருந் திலோத்தமையைக்கண்டு உன் பாரி என் பாரியென் றடித்துக்கொண்டிறந்ததும், இன்னும் அநேகம்பேர் இந்தராகத்தினாற் றுக்கம் அனுபவித்ததுஞ் சாத்திரங்களிற் கண்டிருக்கிறோமானபடியினாலும், இப்போதிருக்கிற பேர்களும் இந்த ராகத்தினால் அநேகதுக்கங்கள் அனுபவிப்பது பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிறபடியினாலும், இனிப் பிறக்கப்போகிற பேர்களிடத்திலும் இந்த ராக மிருந்தாற் றுக்கமே யனுபவிப்பார்களென்று தோற்றுகிற படியினாலும் இந்த ராகத்தை முமுட்சுவானவர்கள் சர்வாத்மனு விட்டுவிட வேண்டியது சித்தம்.

உ. துவேஷம்.

இப்படியே தனக்கொருவன் அபகாரம்பண்ணினால் அவனுக்குப் பதில் அபகாரம் பண்ணவேண்டுமென்று விகற்பித்து வருகிற சித்தவிருத்திக்குத் துவேஷமென்றுபேர். இதைமுமுட்சுவானவர்கள்காலத்திரயத்திலும் இல்லாமல் சர்வாத்மனு விட்டுவிடவேண்டியது. ஏன் விடவேண்டியதென்றால், பூருவத்தில் இரணியகசிபன் தன்றமையனைக்கொன்ற நாராயணனைக் கொல்லவேண்டுமென்ற துவேஷத்தினால் அவனுடைய பிராணஹானி, பந்துநாசம், இராச்சிய ஹானி, இகபரங்களில் அபகீர்த்தி இவை முதலான அநேக அநர்த்தங்கள் அனுபவித்ததும், இன்னும் அநேகம்பேர் இந்தத் துவேஷத்தினால் துக்கம் அனுபவித்ததுஞ் சாத்திரங்களிற் கண்டிருக்கிறோமானபடியினாலும், இப்போதிருக்கிற பேர்களும் இந்தத் துவேஷத்தினால் அநேக துக்கம் அனுபவிப்பது பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிறபடியினாலும், இனிப் பிறக்கப்போகிற பேர்களிடத்திலும் இந்தத் துவேஷமிருந்தாற் றுக்கமே யனுபவிப்பார்களென்று தோற்றுகிற படியினாலும் இந்தத் துவேஷத்தை முமுட்சுவானவர்கள் சர்வாத்மனு விட்டுவிட வேண்டியது சித்தம்.

௩. காமம்.

இப்படியே புத்திர மித்திர களத்திர கிரகக் கிராம க்ஷேத்திர தன தான்யாதிகள் மேன்மேலுஞ் சம்பாதிக்க வேண்டுமென்று விகற்பித்து வருகிற சித்தவிருத்திக்குக் காமமென்று பேர். இதை முமூட்சுவானவர்கள் காலத்திரயத்திலு மில்லாமற் சர்வாத்மனு விட்டுவிடவேண்டியது. ஏன் விடவேண்டியதென்றால், பூருவத்தில் நரகாசுரன் இலக்ஷம் ஸ்திரீகளைக் கலியாணஞ் செய்வதற்காக இச்சித்துத் தேவஸ்திரீகள் பதினாறாயிரம்பேர்களைச் சிறைபிடித்துவந்ததைக்கேட்ட ஸ்ரீகிருஷ்ண சுவாமியால் அவன் பிராணஹானி,பந்துநாசம்,இராச்சியஹானி, இகபரங்களில் அபகீர்த்தி யிவை முதலான துக்கங்கள் அனுபவித்ததும், இன்னும் அநேகம்பேர் துக்க மனுபவித்ததுஞ் சாத்திரங்களிற் கண்டிருக்கிறோ மானபடியினாலும்,இப்போதிருக்கிறபேர்களும் இந்தக் காமத்தினால் அநேக துக்கம் அனுபவிப்பது பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிறபடியினாலும், இனிப் பிறக்கப்போகிற பேர்களிடத்திலும் இந்தக் காமமிருந்தால் துக்கமே யனுபவிப்பார்களென்று தோற்றுகிறபடியினாலும் இந்தக்காமத்தை முமூட்சுவானவர்கள் சர்வாத்மனு விட்டுவிடவேண்டியது சித்தம்.

௪. குரோதம்.

இப்படியே தனக்குவேண்டிய காரியங்களை ஒருவன் விக்கினம் பண்ணினால் அவனிடத்தில் ஆக்கிரகமாக விகற்பித்து வருகிற சித்தவிருத்திக்குக் குரோதமென்று பேர். இதை முமூட்சுவானவர்கள் காலத்திரயத்திலு மில்லாமற் சர்வாத்மனு விட்டுவிடவேண்டியது. ஏன் விடவேண்டியதென்றால், பூருவத்தில் பகாசூரன் தனது புசிப்பிற்கு விக்கினஞ்செய்த வீமராஜன்பேரிற் குரோதம் வைத்து அதனால் அவன் பிராணஹானி, பந்துநாசம், இராச்சிய ஹானி, இகபரங்களில் அபகீர்த்தி யிவை முதலான அநேக அனர்த்தங்கள் அனுபவித்ததும்,இன்னும் அநேகம்பேர் இந்தக்குரோதத்தினால் துக்கம் அனுபவித்ததுஞ் சாத்திரங்களிற் கண்டிருக்கிறோ மானபடியினாலும், இப்போதிருக்கிற பேர்களும் இந்தக் குரோதத்தினாற் துக்கம் அனுபவிப்பது பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிறபடியினாலும், இனிப்பிறக்கப்போகிறபேர்களிடத்திலும் இந்தக் குரோதம் இருந்தாற்றுக்கமே யனுபவிப்பார்களென்று தோற்றுகிறபடியினாலும் இந்தக்குரோதத்தை முமூட்சுவானவர்கள் சர்வாத்மனு விட்டுவிடவேண்டியது சித்தம்.

௫. உலோபம்.

இப்படியே தான் சம்பாதித்த பதார்த்தங்களில் ஒருவருக்கும் ஒரு காசளவுஞ் செலவு பண்ணலாகாதென்று விகற்பித்து வருகிற சித்தவிருத்திக்கு உலோபமென்றுபேர். இதை முமூட்சுவானவர்கள் காலத்திரயத்திலும் இல்லாமற் சர்வாத்மனு விட்டுவிடவேண்டியது.

என் விடவேண்டியதென்றால், பூருவத்தில் துரியோதனனானவன் சூதாடிக் கெலித்த பாண்டவர்களுடைய இராச்சியத்தில் அவர்கள் வசிக்கக்கூட இடங்கொடுக்கமாட்டேனென்ற உலோபத்தினால் அவன் பிராணஹானி, பந்துநாசம், இராச்சியஹானி, இகபரங்களில் அபகீர்த்தி யிவை முதலான அநேக அநர்த்தங்கள் அனுபவித்ததும், இன்னும் அநேகம்பேர் துக்கம் அனுபவித்ததுஞ் சாத்திரங்களிற் கண்டிருக்கிறோமானபடியினாலும், இப்போதிருக்கிறபேர்களும் இந்த உலோபத்தினால் அநேக துக்கம் அனுபவிப்பது பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிறபடியினாலும், இனிப் பிறக்கப்போகிற பேர்களிடத்திலும் இந்த உலோபம் இருந்தாற் றுக்கமே யனுபவிப்பார்களென்று தோற்றுகிற படியினாலும் இந்த உலோபத்தை முமூட்சுவானவர்கள் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது சித்தம்.

## சு. மோகம்.

இப்படியே தான் சம்பாதித்த பதார்த்தங்களின்பேரிற் பிரிய மோதப்பிரமோதமாய் விகற்பித்து வருகிற சித்த விருத்திக்கு மோகமென்றுபேர். இந்தமோகத்தைமுமூட்சுவானவர்கள்காலத்திரயத்திலும் இல்லாமற் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது. என் விடவேண்டியதென்றால், பூருவத்தில் தசரதமகாராஜன் றனது ஜேஷ்டபுத்திரனை ஸ்ரீராமன்பேரில் வைத்தமோகத்தினால் பிராணஹானி, பந்துநாசம், இகபரங்களில அபகீர்த்தியிவைமுதலான அநேகஅநர்த்தங்கள் அனுபவித்ததும், இன்னும் இந்த மோகத்தினால் அநேகம் பேர் துக்கம் அனுபவித்ததுஞ் சாத்திரங்களிற் கண்டிருக்கிறோமானபடியினாலும், இப்போதிருக்கிறபேர்களும் இந்தமோகத்தினலநேகதுக்கங்கள் அனுபவிக்கிறது பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிறபடியினாலும், இனிப்பிறக்கப்போகிற பேர்களிடத்திலும் இந்த மோகம் இருந்தாற் றுக்கமே யனுபவிப்பார்களென்றுதோற்றுகிறபடியினாலும் இந்த மோகத்தை முமூட்சுவானவர்கள் சர்வாத்மனா விட்டுவிட வேண்டியது சித்தம்.

## எ. மதம்.

இப்படியே ஐசுவரிய பாகுள்யத்தினாற் கெர்வித்துக் கிருத்தியாகிருத்தியந் தெரியாமல் விகற்பித்து வருகிற சித்தவிருத்திக்கு மதமென்றுபேர். இந்த மதத்தை முமூட்சுவானவர்கள் காலத்திரயத்திலும் இல்லாமற் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது. என் விடவேண்டியதென்றாற், பூருவத்தில் கார்த்தவீரியார்ச்சுனனானவன் றன்னிடத்தில் வந்த மகாரிஷியான நாரதரை மதித்து உபசாரம் பண்ணாமற் கெர்வித்திருந்ததைக்கேட்ட பரசுராமனால் அவன் பிராணஹானி, பந்துநாசம், இராச்சியஹானி, இகபரங்களில் அபகீர்த்தி யிவை முதலான அநேக அநர்த்தங்கள் அனுபவித்ததும், இன்னும் இந்த மதத்தினால் அநேகம்பேர் துக்கம் அனுபவித்ததுஞ் சாத்திரங்களிற் கண்டிருக்கிறோமானபடியினாலும், இப்போதிருக்கிற பேர்களும் இந்தமதத்தினால்

அநேகதுக்கம் அனுபவிக்கிறது பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிறபடியினாலும், இனிப்பிறக்கப்போகிற பேர்களிடத்திலும் இந்தமதமிருந்தாற்றுக்கமே யனுபவிப்பார்களென்று தோற்றுகிறபடியினாலும் இந்தமதத்தை முமூட்சுவானவர்கள் சர்வாத்மனா விட்டுவிட வேண்டியது சித்தம்.

அ. மச்சரம்.

இப்படியே அன்னியர் சுகமாயிருந்தால் அவர்களைப் பார்த்துச் சகிக்காமல் விகற்பித்து வருகிற சித்தவிருத்திக்கு மச்சரமென்றுபேர். இந்த மச்சரத்தை முமூட்சுவானவர்கள் காலத்திரயத்திலும் இல்லாமற் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது. ஏன் விடவேண்டியதென்றால், பூருவத்தில் சிசுபாலனானவன் தருமராஜன் ராசசூயயாகத்தில் ஸ்ரீகிருஷ்ணசுவாமிக்கு அக்கிர தாம்பூலம் கொடுத்தது சகியாமல் மச்சரப்பட்டதினால் அவனுடைய பிராணஹானி, பந்துநாசம், இராச்சியஹானி, இகபரங்களில் அபகீர்த்தி யிவை முதலான அநேக அநர்த்தங்கள் அனுபவித்ததும், இன்னும் இந்தமச்சரத்தினால் அநேகம்பேர் துக்கம் அனுபவித்ததுஞ் சாத்திரங்களிற் கண்டிருக்கிறோமானபடியினாலும், இப்போதிருக்கிற பேர்களும் இந்த மச்சரத்தினாற்றுக்கம் அனுபவிக்கிறது பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிற படியினாலும், இனிப் பிறக்கப்போகிற பேர்களிடத்திலும் இந்த மச்சரமிருந்தாற்றுக்கமேயனுபவிப்பார்களென்றுதோற்றுகிறபடியினாலும்இந்தமச்சரத்தை முமூட்சுவானவர்கள் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது சித்தம்.

கூ. ஈரிஷை.

இப்படியேதனக்குவந்ததுக்கம் பிறருக்கும் வரலாகாதாவென்று விகற்பித்துவருகிற சித்தவிருத்திக்கு யீரிஷையென்றுபேர். இந்த ஈரிஷையை முமூட்சுவானவர்கள்காலத்திரயத்திலுமில்லாமற் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது. ஏன் விடவேண்டியதென்றால் பூருவத்தில் அருணாக்ஷதன் றனக்குவந்த துக்கந் தனதிஷ்டனான வாணாசுரனுக்கு வரலாகாதாவென் றெதிர்த்த ஈரிஷையினாற் பிராணஹானி, பந்துநாசம், இராச்சிய ஹானி, இகபரங்களில் அபகீர்த்தி இவைமுதலான அநேக அநர்த்தங்கள் அனுபவித்ததும், இன்னும் இந்த ஈரிஷையினால் அநேகம்பேர் துக்கம் அனுபவித்ததுஞ் சாத்திரங்களிற் கண்டிருக்கிறோமானபடியினாலும், இப்போதிருக்கிற பேர்களும் இந்த ஈரிஷையினாற் றுக்கமே யனுபவிப்பது பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிறபடியினாலும், இனிப்பிறக்கப்போகிற பேர்களிடத்திலும் இந்தஈரிஷையிருந்தாற் றுக்கமே யனுபவிப்பார்களென்று தோற்றுகிற படியினாலும் இந்த ஈரிஷையை முமூட்சுவானவர்கள் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது சித்தம்.

## கo. அசூயை.

இப்படியே தனக்குவந்த சுகம் அன்னியர்க்கு வரலாமாவென்று விகற்பித்து வருகிற சித்த விருத்திக்கு அசூயையென்று பேர். இதை முமூட்சுவானவர்கள் காலத்திரயத்திலும் இல்லாமல் சர்வாத்மனு விட்டுவிடவேண்டியது. ஏன் விடவேண்டியதென்றால், பூருவத்தில் பவுண்டரீக வாசுதேவனானவன் றனக்கும் வாசுதேவனென்று பேர், கிருஷ்ணனுக்கும் வாசுதேவனென்று பேரா வென்கிற அசூயையி னால் அவரை எதிர்த்துப் பிராணஹானி, பந்துநாசம், இராச்சிய ஹானி, இகபரங்களில் அபகீர்த்தி யிவைமுதலான அநேக அநர்த் தங்கள் அநுபவித்ததும், இன்னும் அநேகம்பேர் இந்த அசூயை யினாற் றுக்கமே யனுபவித்ததுஞ் சாத்திரங்களிற் கண்டிருக்கிறோ மானபடியினாலும், இப்போதிருக்கிறபேர்களும் இந்த அசூயையினாற் றுக்கமே யனுபவிப்பது பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிறபடியினா லும், இனிப் பிறக்கப்போகிற பேர்களிடத்திலும் இந்த அசூயை யிருந் தாற் றுக்கமே யனுபவிப்பார்களென்று தோற்றுகிற படியினாலும், இந்த அசூயையை முமூட்சுவானவர்கள் சர்வாத்மனு விட்டுவிட வேண்டியது சித்தம்.

## கக. டம்பம்.

இப்படியே தான் பண்ணின தருமத்தை நாலுபேரும் பார்த்துப் பளா நன்றாயிருக்கிறதென்றுசொல்லவேண்டுமென்று விகற்பித்துவரு கிற சித்தவிருத்திக்கு டம்பமென்றுபேர். இதை முமூட்சுவானவர்கள் காலத்திரயத்திலு மில்லாமற் சர்வாத்மனு விட்டுவிடவேண்டியது. ஏன் விடவேண்டிய தென்றால், பூருவத்தில் கபூர்வமகாராஜனானவன் துருவாச ரிஷியைப்பார்த்து நான்செய்த யாகங்களைப்போல யார் செய்யப்போகிறார்கள், இது நன்றாயிருக்கிறதேயென்று கேட்க, யானை த்துதிக்கைபோல ஆயிரம்வருஷம் நெய்சொரிந்து யாகஞ்செய்தவனும் இப்படிக்கேட்கவில்லையே, ஈதென்ன டம்ப யாக மென்று சொல்லி அவனைக் கோபிக்க, அவனது யாகம்கெட்டு அவன் பிராணஹானி, பந்து நாசம், இராச்சியஹானி, இகபரங்களில் அபகீர்த்தி யிவைமுத லான அநேக அநர்த்தங்கள் அநுபவித்ததும், இன்னும் இந்த டம்பத்தி னால் அநேகம்பேர் துக்கம் அநுபவித்ததுஞ் சாத்திரங்களிற்கண்டிருக் கிறோ மானபடியினாலும், இப்போதிருக்கிற பேர்களும் இந்த டம்பத்தி னாற் றுக்கமே யனுபவிப்பது பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிறபடியி னாலும், இனிப் பிறக்கப்போகிறபேர்களிடத்திலும் இந்த டம்ப மிருந் தாற் றுக்கமே யனுபவிப்பார்களென்று தோற்றுகிறபடியினாலும் இந்த டம்பத்தை முமூட்சுவானவர்கள் சர்வாத்மனு விட்டுவிடவேண்டியது சித்தம்.

## கஉ. தர்ப்பம்.

இப்படியேபுத்திரமித்திர களத்திர தன தானியாதி சம்பத்துக்கள் தனக்கேயுண்டு, தனக்கொருவருஞ் சமானமில்லையென்று விகற்பித்து வருகிற சித்தவிருத்திக்குத் தர்ப்பமென்று பேர். இதை முமூட்சுவானவர்கள் காலத்திரயத்திலு மில்லாமற் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது. ஏன் விடவேண்டியதென்றால், பூருவத்திற் சதகண்ட இராவணன் ஐசுவரியத்திற் றனக்கொருவருஞ் சமானமில்லையென் றமரர்களுக்கு உபத்திரவஞ்செய்ததை நாரதர் இராமனுக்கறிவிக்க அவர் பிரியாளான சீதையம்மனால் அவன் பிராணஹானி, பந்துநாசம், இராச்சிய ஹானி, இகபரங்களில் அபகீர்த்தி யிவைமுதலான அநேக அநர்த்தங்கள் அனுபவித்ததும் இன்னும் இந்தத் தர்ப்பத்தினால் அநேகம் பேர் துக்கம் அனுபவித்ததுஞ், சாத்திரங்களிற் கண்டிருக்கிறோ மான படியினாலும், இப்போதிருக்கிற பேர்கள் இந்தத் தர்ப்பத்தினாற் றுக்கமே யனுபவிப்பது பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிற படியினாலும், இனிப் பிறக்கப்போகிற பேர்களிடத்திலும் இந்தத் தர்ப்பமிருந்தாற் றுக்கமே யனுபவிப்பார்களென்று தோற்றுகிறபடியினாலும் இந்தத் தர்ப்பத்தை முமூட்சுவானவர்கள் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது சித்தம்.

## கங. அகங்காரம்.

இப்படியே அடா என்னை அறியாயா! நான்பிடித்த காரியத்தை விடுவேனா! நீயா எனக்குப் புத்திசொல்லுகிறவன்! என்று விகற்பித்து வருகிற சித்தவிருத்திக்கு அகங்காரமென்றுபேர். இதை முமூட்சுவானவர்கள் காலத்திரயத்திலும்இல்லாமற் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது. ஏன்விடவேண்டிய தென்றால், பூருவத்தில் மதுகைடவனென்பவர்கள் மகாவிஷ்ணுவோடு பதினாயிரம் வருஷம் யுத்தஞ்செய்து இளையாமலும் அவர் வரங்களுக்கு ஆசைப்படாமலும் தாங்களே விஷ்ணுவுக்கு வரங்கொடுத்த அகங்காரத்தினாற் பிராணஹானி, பந்துநாசம், இராச்சியஹானி, இகபரங்களில் அபகீர்த்தி இவை முதலான அநேக அநர்த்தங்கள் அனுபவித்ததும், இன்னும் இந்த அகங்காரத்தினால் அநேகம் பேர் துக்கம் அனுபவித்ததுஞ் சாத்திரங்களிற் கண்டிருக்கிறோமான படியினாலும், இப்போதிருக்கிறபேர்களும் இந்த அகங்காரத்தினாற் றுக்கமே யனுபவிப்பது பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிறபடியினாலும், இனிப் பிறக்கப்போகிறபேர்களிடத்திலும் இந்த அகங்காரமிருந்தாற் றுக்கமே யனுபவிப்பார்களென்று தோற்றுகிறபடியினாலும் இந்த அகங்காரத்தை முமூட்சுவானவர்கள் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது சித்தம்.

இந்த ராகமுதல் அகங்கார மீறான பதின்மூன்றுகுணங்களினால் இராவணன்முதல் மதுகைடவர்க ளீறானபேர்கள் மஹா சமர்த்தர்களாயிருந்தும் அவர்கள் பிராணஹானி முதலான அநேக அநர்த்தங்

கள் முன்னனுபவித்தது சாத்திரங்களிற் கண்டிருக்கிறோமானபடியினாலும், இப்படியே சத்தியவர்த்தமான காலத்திலும் இந்தராகாதிகுணங்களால் அநேக சனங்கள் பிராணஹானிகளும், அநேகரோகங்களும், அநேக திரவிய நாசங்களும், பந்துக்கள் விரோதங்களும், அபகீர்த்திகளும் இவைமுதலான அநேக அநர்த்தங்கள் அனுபவிப்பது பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிறோமானபடியினாலும், இனிப்பிறக்கப்போகிற பேர்களும் இந்தராகாதிகுணங்களினின்றும் விடுபடாமற் போவர்களாகில் இப்படியே அநேக அநர்த்தங்கள் அனுபவிப்பார்களென்று தோற்றப்படுகிற படியினாலும், இந்தராகாதிபதின்மூன்று குணங்களும் மோக்ஷ மார்க்கத்துக்குச் சத்துருவாயிருக்கிறபடியினாலும், சநந மரணப் பிரவாக ரூபமான நரகத்துக் கேதுவாயிருக்கிறபடியினாலும் இப்பதின்மூன்று குணங்களையும் முமூட்சுவானவர்கள் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது சித்தம். இவைகளாலுண்டான சநநமரணமே நரகமென்பதாம். இதற்குச்சமுசயமில்லை. சநநமரணரூபமானதேகமே நரகமென்பதற்குப் பிரமாணம்: எங்கே சரீரமுண்டோ, அங்கேயெல்லாந் துக்கமுண்டு; எங்கே சரீரமில்லையோ அங்கேயெல்லாந் துக்கமில்லையென்று வேதத்திற் சொல்லியிருக்கிறபடியினாலும், இந்தச் சரீரமே சகல துக்கங்களுக்குஞ் சகல அநர்த்தங்களுக்கும் ஏதுவாய் இருப்பதினாலும் இந்தச் சரீரமே நரகமென்று சொன்னது சித்தம். ஆதலால் இந்தச் சரீரத்துக்கேதுவான இப்பதின்மூன்று குணங்களையும் முமூட்சுவாயிருக்கப்பட்ட பேர்கள் அவசியம் விட்டுவிடவேண்டியது சித்தம்.

௧௪ இச்சை, ௧௫ பத்தி, ௧௬ சிரத்தை.

இனிக்கொள்ளத்தக்கவைகளான இச்சை முதன் மூன்றுகுணங்களையும் நிரூபிக்கிறோம். அவையாவன:— (௧௪) இச்சை: பசிதாக நிமித்தம் அன்னபானாதி கிரகியமும், மலமூத்திர விசர்ச்சனமும் பண்ணவேண்டுமென்று வருகிறசித்தவிருத்திக்கு இச்சையென்றுபேர் இவை பண்ணாமற்போனாற் றுக்கமும் பண்ணினாற் சுகமுமாயிருக்கும். இதனாற் பந்தமோக்ஷஞ் சுவர்க்கநரகமில்லையாதலாற்கொள்ளத்தக்கனவாம். (௧௫) பத்தி: இப்படியேமகாதேவரிடத்திற் பிரியம்வருகிற சித்தவிருத்திக்குப் பத்தியென்றுபேர். (௧௬) சிரத்தை: குருவேதாந்த சாஸ்திரங்களில் மிகவும் விசுவாசம் வைத்த சித்தவிருத்திக்குச் சிரத்தையென்றுபேர். இந்தப்பத்திசிரத்தை முத்தியையடைவிப்பதற் கேதுவாதலினாலும், பூருவத்திற் கட்டுவாங்கனென்கிறமகாராஜன் இந்தச் சிரத்தாபத்தியினாலே இரண்டு நாழிகையில் முத்தியடைந்தானென்று சாத்திரங்களிற் கண்டிருக்கிறோமானபடியினாலும் முமூட்சுவானவர்கள் இந்தச் சிரத்தாபத்திகளை யவசியம் பண்ணவேண்டியது சித்தம். இராகாதி பதினாறுகுணங்களும் நிரூபிக்கப்பட்டன.

ராகத்துவேஷாதிப்பிரகரணஞ் சம்பூரணம்.

---

இரண்டாவது

# சாதனசதுஷ்டயப்பிரகரணம்.

---

முற்பிரகரணத்திற் கற்பனுரூபமான விஷய சுகங்களைப் பிரியமாக விசுவசித்து அதிற் சுழலாநின்ற மனோவிருத்திக்கு அவை அன்பமெனத் தெரிவித்து அவ்விருத்தியை விஷயசுகங்களினின்று நீக்கிமேல் யதார்த்த சுகத்திற் பிரியம் வைக்கும்படி செய்து அதனுலுண்டான சிரத்தாபத்தியினுற் சித்தசுத்தியுண்டாக்கி, பின்பு அவ்யதார்த்தம் வெளிப்படுவதற் கேதுவான சாதன சதுஷ்டயப்பிரகரணம் நிரூபிக்கிறார்.

(சுலோகம்.)

[illegible] |
[illegible] || (௧)

(இ-ள்.) வேதாந்தத்தில் நான்கு சாதனங்கள் அதிகாரிகளுக்காகச் சொல்லப்பட் டிருக்கின்றன. எந்தச் சாதன சதுஷ்டய சம்பத்தியினுல் யாவரும் மோக்ஷம் அடைவார்களோ, அந்தச் சாதன சதுஷ்டய சம்பத்தியை நிரூபிக்கிறோம். (௧)

அவை நித்தியாநித்தியவஸ்துவிவேகம், இகாமுத்திரார்த்த பலபோகவிராகம், சமாதிசட்கசம்பத்தி, முமூட்சுத்துவமென நான்காம். நித்தியாநித்தியவஸ்து விவேகமாவது பிரமமே நித்தியம், சகத்து அநித்தியமெனப்பகுத்தறிவதாம். சகம் அநித்தியமென்பதெப்படியெனில், இது பூதபவுதிகாத்மக மானபடியினுல் அநித்தியமேயாம். இங்ஙனம் பூதபவுதிகாத்மகமாகத் தோற்றப்படுகிற சகத்தில் முன்பு பவுதிகங்களுக்கு அநித்தியத்துவம் நிரூபிக்கிறோம். அப்பவுதிகமாவை தியாதெனில் நால்வகையோனி, எழுவகைத்தோற்றம், எண்பத்துநான்கு லக்ஷம் பேதங்களாயுள்ள சரீரங்களாம். அவற்றில் நால்வகை யோனி யென்பது சராயுசம், அண்டசம், சுவேதசம், உற்பீச மென்பனவாம். இவற்றிற் பையிற் கட்டுப்பட்டுப்பிறப்பது சராயுசமும், முட்டையிற் கட்டுப்பட்டுப் பிறப்பது அண்டசமும், வியர்வையிடமாகப் பிறப்பது சுவேதசமும், பூமியிடமாகப் பிறப்பது உற்பீசமுமாம். எழுவகைத் தோற்றமென்பது தேவரும் மானிடரும் மிருகமும் பட்சிகளும் ஊர்வனவும் நீர்வாழ்வனவுந் தாபரங்களுமாம். எண்பத்துநான்கு லக்ஷம் பேதமென்பது தேவபேதம் பதினுலுலக்ஷமும், மானிடபேத மொன்பதுலக்ஷமும், மிருகபேதம் பத்துலக்ஷமும், பட்சிபேதம் பத்துலக்ஷமும், ஊர்வனபேதம் பதினெருலக்ஷமும், நீர்வாழ்வனபேதம் பத்துலக்ஷமும், தாபரபேதம் பதினெட்டுலக்ஷமுமாம். இவற்றில் தேவ கங்

தருவ சித்த சாத்திய கின்னர கிம்புருட குய்யக வித்தியாதர யக்ஷ ராக்ஷச பூதப் பிரேத பிசாச சாகினி டாகினி வேதாள ஆதியான தேவ சரீரங்களும், மனு மாந்தாதி சக்கிரவர்த்தி பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரர் முதலான நர சரீரங்களும், காமதேனு சிங்கமுதலான மிருக சரீரங்களும், அன்னங் கருடன் முதலான பட்சிசரீரங்களும், சேடன் எறும்புமுதலிய ஊர்வனசரீரங்களும், மகர மச்சங் கூர்ம முதலிய நீர் வாழ்வன சரீரங்களும், கற்பக விருட்சம் பாரிசாத முதலிய தாபர சரீரங்களுமாம்.

பூருவத்தில் இத்தேவர் முதலிய வெண்பத்து நான்கு லட்சம் பேதமாயுள்ள சரீரங்களும் நசித்துப்போனது சாத்திரங்களிற் கண்டிருக்கிறோமானபடியினாலும், இப்படியே சத்தியவர்த்தமான காலத்திலு மிருக்கின்ற மாதா பிதா முதலான சகலசரீரங்களும் நசிப்பது பிரத்தியட்சமாகக் கண்டிருக்கிறபடியினாலும், இனிப் பிறக்கப்போகிற சகலசரீரங்களும் இப்படியே நசிக்குமென்று தோற்றுகிறபடியினாலும் இந்தப்பவுதிகமான சகலசரீரங்களும் அநித்தியமென்பது சித்தம். இப்படியே பிருதிவியாதி பஞ்சபூதங்களுக்கும் அநித்தியத்துவம் நிரூபிக்கிறோம். இப்பூதங்கள் தோன்றியொடுங்குகிறபடியினாலும், அவயவிகளாயிருக்கிறபடியினாலும், பிரளயகாலத்தில் நசித்துப்போகிறபடியினாலும் அநித்தியமேயாம். எப்படி நசிக்கிறதென்றால், பிரமப் பிரளயம் வருகிறகாலத்திற் பன்னிரண்டு சூரியர்களும் உதயமாய் நூறு வருஷம் மழையில்லாம லெரித்துச் சகத்தெல்லாம் பஸ்பம்பண்ணிப் பூமியைத் தாங்கிக்கொண்டிருந்த ஆதிசேடனுடைய மகுடங்களைப் பஸ்பம் பண்ணுகிறபோது அந்த ஆதிசேடனுடைய முகங்களிலிருந்து காளகூட விஷாக்கினி பிறந்து அந்த விஷாக்கினியுஞ் சூரியாக்கினியுங் கூடி யந்த வாதிசேடன்முதற் றுவாத சாதித்தர்களையும் பஸ்பம் பண்ணி யப்படி பஸ்பம் பண்ணின அக்கினியின்றுஞ் சத்த மகாமேகங்கள் பிறந்து நூறுவருஷம் யானைத்துதிக்கைபோல வருஷதாரைகள்வருஷிக்கும். அந்தவருஷசலமே காரணமாநிற்கும். அந்தச் சலத்தில் அப்பூமி பஸ்பம் இலீனமாகும். அப்போது அந்தச்சலம் வாயுஸ்தம்பமாக நிற்கும். அப்படி நிற்கின்ற சலத்தில் வடவானலம் பிறந்து அந்தஏகாரணவமான சலமெல்லாங் கிரகிக்கும். அவ்வடவாக்கினியும் பிரசண்டவாயுவில் இலீனமாகும். அந்த வாயுவும் ஆகாசத்தில் இலீனமாகும். அவ்வாகாசமும் அஞ்ஞானத்தில் இலீனமாகும். அவ்வஞ்ஞானமும் பிரமத்தில் இலீனமாகும். அப்பிரமம் ஒன்றுமாத்திரம் சேஷித்துநிற்கும். ஆனபடியினாற் பஞ்சபூத பவுதிகாத்மகமான சகத்து அநித்தியமென்று சொன்னதும், இப்படி விசேஷித்து நின்ற பிரமத்துக்கு வேறேகாரணமில்லாதபடியாற் பிரமமேநித்தியமென்று சொன்னதுஞ் சித்தம்.

இங்ஙனம் நித்தியா நித்திய வஸ்துக்களின் நிச்சயத் தெரிதலாகிய முதற்சாதனங் கை வந்தாற் போதாதோவென்றாற் போதாது. ஏன் போதாதென்றாற் சிலவித்துவான்கள் சாஸ்திரபாண்டித்தியத்தினால் ஆத்மா வொன்றுதான் நித்தியமென்றும், சகத்து அநித்தியமென்றுஞ் சொல்லிக்கொண்டு, ஸ்திரீ புத்திர தன தானியாதிபோகங்களி லிச்சை வைத்துக்கொண் டிருக்கிறதினால் அநித்தியமானது நித்தியமென்று வரும். ஆதலால் இரண்டாஞ் சாதனமான இகாமுத்திரார்த்த பல போக விராகமுஞ் சம்பாதிக்கவேண்டும். இவ்விகாமுத்திரார்த்த பல போக விராகமாவ தியாதென்றால் அதையும் நிரூபிக்கிறோம். அது இகலோக வைராக்கியமென்றும். பரலோக வைராக்கியமென்றும் இரண்டுவிதமாம். இவற்றில் இகலோக வைராக்கியமாவது ஸ்ரக்சந்தன வநிதாதிவிஷயங்களில்,வாந்தாசன மூத்திரபுரீஷங்களிலெப்படி யிச்சை வாராதோ,அப்படி யிச்சைவாராமற் போவது. இவ்வித வைராக்கியம் இல்லாவிடில்இகத்திற் றான்சம்பாதிக்கவேண்டுமென்கிற புத்திரமித்திர களத்திர பசு பிரத்தியபல பந்து கிரக கிராம க்ஷேத்திர தனதானியாதிகள் முதலியவற்றைச் சம்பாதிக்கவேண்டு மென்றால் மிகவும் பிரயாச அசாத்தியமா யிருக்கிறபடியினாலும்,பிரயாசைப்பட்டு எத்தனம் பண்ணினால் அப்படி யெத்தனம்பண்ணின பதார்த்தங்களிற் சிறிது கூடிவருகிறதுஞ் சிறிது கூடிவாராமலும் போகிறபடியினாலும், அப்படிக் கூடிவாராத பதார்த்தத்தைத்தொட்டு வெகுதுக்க பரம்பரைகள் வருகிறபடியினாலும் அந்தத் துக்கத்தோடு கூடிக்கொண்டிருக்கிற வேளையிற் பெரியோர்களா யிருக்கப்பட்டபேர்கள் வந்து ஏதாகிலும் உபகாரம் பண்ணவேண்டுமென்று கேட்டதுண்டானால் அவர்கள் பேரில் யுக்தா யுக்தங்கள் தெரியாமற் கடினமான சொல்லினாற் றிரஸ்காரம் பண்ணுகிறான். அவர்களை யப்படிச் சொல்லும்போது வீட்டிற் றாயார் முதலானபேர் பிரியவசனஞ்சொல்லிப் பெரியவர்களை யப்படிச் சொல்லலாமாவென்று சொன்னால் அவர்கள்பேரில் அக்கிரகமாகவிழுந்து யுக்தாயுக்தமில்லாத கடினமான சொல்லினால் நிராகரிக்கிறான். ஆனபடியினாலும், அப்படி நிராகரிப்பதனால் அநேக அனர்த்தங்களும், அநேக தோஷங்களும் வருகிறபடியினாலும், அப்பாவத்தினால் நரகங்களில் விழுகிறானானபடியினாலும், இப்படி யசாத்தியமான பதார்த்தங்களினால் இத்தனை யனர்த்தங்கள் பிறக்க, சாத்தியமான பதார்த்தங்களினால் அநர்த்தங்கள்வருகிறதற்குச் சொல்லவேண்டுமா? அஃதெப்படி யென்றால், சாத்தியமான வொரு பெண்சாதியைத் தொட்டுச் சார பயங்களும், தாயார் தகப்பனார் விரோதங்களும், அண்ணன் தம்பி விரோதங்களும், அன்றித் தான் செய்யவேண்டுமென்கிற நல்ல காரியங்களுக்கு விரோதங்களும் தன்னையன்றுமல் வருகிறபடியினால் துக்கமே தோற்றுகிறது. இப்படியே சாத்தியமாயிருக்கப்பட்ட தனத்தைக் குறித்துத் தாயாதிகள் பயமும், ராச சோராக்கினிபயமும், இன்னும் இவைமுதலான மகாபயங்களுமான

துக்கங்களுக் கேதுவா யிருக்கிறபடியினாலும், இப்படியே சாத்தியமான புத்திரன் சொன்னவார்த்தைகேளாமற் றிரிதல்,புத்திசாலியாகாமற் போதல், சார சோரனாகத் திரிதல், முதலான அநேக துக்கங்களுக்கு ஏதுவாயிருக்கிறபடியினாலும், இப்படியே சாத்தியா சாத்தியமாயிருக்கப்பட்ட இப்பதார்த்தங்களினாற் றுக்கமே தோற்றுகிற படியினாலும் இந்த இகலோக வைராக்கியம் அவசியஞ் சம்பாதிக்க வேண்டியது சித்தம்.

பரலோக வைராக்கியமாவ தேதென்றால், சுவர்க்கலோக முதற் சத்தியலோகம் வரைக்குமுள்ள சகலலோக போகங்களிலும் வாந்தாசன மூத்திர புரீஷங்களி லெப்படி யிச்சையில்லையோ அப்படியே யிச்சையற்றுப் போவதாம். இப்பரலோக வைராக்கியம் பண்ணாமற் போனாற் றோஷமென்னவென்றால் இகத்தில் நகுஷமகாராசன் தேவேந்திர போகத்தின்பேரி லிச்சைப் பட்டுச் சோடச மகா தானங்களும் அசுவமேத யாகங்களுஞ் செய்து சுவர்க்கத்துக்குப்போய்த் தேவேந்திரப் பட்டமுங்கட்டிக்கொண்டு இந்திராணியோடு போகிக்கவேண்டுமென்கிற அதிகபாபரப்பினாற்பல்லக்கெடுக்கிறசத்தரிஷிகளில் அகத்தியரிஷியை யவமானம் பண்ணின படியினால் அவர்சபிக்க அச்சாபத்தினால் அவ்விந்திராணி முதலான சகலபோகங்களும் வியர்த்தமாய்த் தான் பண்ணின யக்கிய தான பலன்களும் வியர்த்தமாய் மலைப்பாம்பாய்ப் பூமியில் விழுந்துபோனபடியினாலும், இன்னும் அநேகம்பேர் சுவர்க்காதி போகங்கள் வேண்டுமென்கிற ஆசையினால் செய்த அநேக யக்கியங்களும் அநேக தருமங்களும் வியர்த்தமாய் அநேக துக்கங்கள் அனுபவிக்கிறார்க ளானபடியினாலும், அச்சுவர்க்கலோகமுதற் சத்தியலோக பரியந்தமுள்ள லோகங்களிலிருக்கிற பிரமாதி சகலதேவதைகளுஞ் சகலரிஷிகளும் ஒருவருக் கொருவர் அன்னியோன்னிய சாபத்தினாலும் ஒருவர்பெண்சாதியை யொருவர் அபகரிக்கிறபடியினாலும், இராக்ஷசர்கள் இராச்சியத்தை அபகரித்துக் கொண்டு போவார்களென்கிற பயத்தினாலும்,ஒருவர் ஐசுவரியத்தையொருவர் அபகரிக்கிறபடியினாலும், இப்படியே வைகுண்டத்திலுங் கைலாசத்திலும் இருக்கிறபேர்கள்கூட அன்னியோன்னிய சாபங்களினாற் றுக்கரூபமா யிருக்கிறபடியினாலும், அவ்விடஞ்செல்வதற்கு மிகவும் பிரயாசஅசாத்தியமா யிருக்கிறபடியினாலும் அவசியமாய்ப்பரலோக வைராக்கியமும்பண்ண வேண்டியது சித்தம்.

இப்படியே யிகபர வைராக்கியங்களாற் சகல போகங்களையுஞ் சுகதுக்க கன்மங்களையும் விட்டு விராகையாயிருக்கிற இரண்டாஞ் சாதனங் கைவந்தாற் போதாதோவென்னிற் போதாது. ஏன் போதாதென்றால் வெடாஷாண்டிகள் காஷாயந்தரித்துச் சந்நியாசியென்று பேரிட்டுக்கொண்டு, சம்சாரத்தையும மோக்ஷப் பிரதானமான கன்மங்களையும் விட்டுத் தன்சரீர சவுக்கியம் பண்ணும்பொருட்டுக்குட்டி

வாதைதீரச் சில வித்தைகளைக் கற்றுக்கொண்டு தான்பெரியவனென்கிறபேரினால் எனக்குச் சமானம் யார் என்றகங்கரித்துஞ் சபித்தும் வைதும் இதனால் வெகு துக்கம் அடைந்து; முன்னுள்ள வில்லறமும் பின்னுள்ள துறவறமுமின்றி யுபயப் பிரஷ்டத்துவம் அடைகிறபடியினால் மூன்றாஞ் சாதனமான சமாதிசட்கசம்பத்தியுஞ் சம்பாதிக்க வேண்டும்.

சமாதிசட்கசம்பத்தியாவ தியாதென்னில் அவையும் நிரூபிக்கிறோம். அவை சமம், தமம், உபரதி, திதிக்ஷை, சமாதானம், சிரத்தையென ஆறாம். இவற்றிற் சமமாவது: மனோநிக்கிரகம்; அஃதாவது மனதைச்சலியாமல் அகத்தில் அடக்குவதாம். இந்த மனோநிக்கிரகஞ் செய்யாமற்போனாற் பூருவத்தில் அபிமானித்திருந்த பதார்த்தங்கள் நசித்தும் அவைகளை வாசனையால் நினைத்துக்கொண்டே யிருக்கும். அதனாற் றுக்கமே யுண்டாகிறபடியினாலும், சத்தியவர்த்தமான காலத்திற்றான் சம்பாதித்த பதார்த்தங்களில மிகுந்த மோகமாய்,அவைகளை நினைத்துக்கொண்டேயிருக்கும்போது அப்பதார்த்தங்களுக்குச் சற்று விக்கினம் வந்ததுண்டானால் அதனால் மிகவுந் துக்கமே தோற்றுகிறபடியினாலும், இனி வரப்போகிற பதார்த்தங்களை வாசனையால் நினைத்துக்கொண்டேயிருக்க அவை வாராமற்போனாற் றுக்கமே விளைகிறபடியினாலும் இத்துக்கங்கள் மனதில் அடைந்திருக்குங்கால்பெரியோர்களது வசனங்கள் பிடிபடாதபடியினாலும் அந்த மனோக்கிரகம் அவசியம் பண்ண வேண்டியது சித்தம்.

தமமாவது: பாகியேந்திரிய நிக்கிரகம். அஃதாவது சுரோத்திராதி ஞானேந்திரிய பஞ்சகமும், வாக்காதி கன்மேந்திரிய பஞ்சகமுமாம். இவ்விந்திரியங்களை ஜயம்பண்ணாமற்போனால் இப்பாகியேந்திரியம் விஷயங்களிற்போய் விழும். அப்படிப் போய் விழுமேயானால் அதனால் மகத்தான ஹானி வரும். அஃதெப்படியென்றால், சத்த விஷயத்தினால் மானுக் கெப்படி ஹானிவந்ததோ, பரிசவிஷயத்தினால் யானைக்கு எப்படி ஹானி வந்ததோ, ரூபவிஷயத்தினால் விட்டிற்பூச்சிக் கெப்படி ஹானிவந்ததோ, ரசவிஷயத்தினால் மீனுக் கெப்படி ஹானிவந்ததோ, கந்தவிஷயத்தினால் வண்டுக் கெப்படி ஹானி வந்ததோ அப்படியே இந்தப் பாகியேந்திரியங்கள் விஷயங்களிற் சென்றால், மகத்தான ஹானி வரும். ஆனபடியினால் இப்பாகியேந்திரியங்கள் விஷயங்களிற் போய் விழாமல் அவசியம் நிக்கிரகஞ் செய்ய வேண்டியது சித்தம்.

உபரதியாவது: ஈஷணாத்திரயத் தியாகபூருவகமான சர்வகர்ம சந்நியாசமாம். அக்கன்மமாவது பாவகன்மமெனவும், புண்ணியகன்மமெனவு மிரண்டாம். இவற்றிற் பாவகன்மத்தினால் நரகப் பிராப்தியுந் திரியக்காதி சரீரமும் வருகிறபடியினால் இந்தப் பாவகன்மங்களை அவசியுஞ் சர்வாத்மனா விட்டு விடவேண்டியது சித்தம். இப்படியே

புண்ணிய கன்மங்களைக் காமியார்த்தமாகச் செய்வானேயாகிற் சுவர்க்கலோகப் பிராப்தியும் தேவத்துவமும் மேற்கீழ்ப் போதலும் வருதலும், ஹானிவிருத்திகளும், லாபா லாபங்களும், சநநமரணங்களும் வருகிறபடியினால் இந்தக் காமியார்த்தமான புண்ணிய கன்மங்களையுஞ் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது சித்தம். இப்புண்ணிய கன்மத்தைப் பகவத் பிரீதியாகப் பண்ணினால் நிட்காமமாம். இந் நிட்காம புண்ணியத் துவாரா சித்தசுத்தி வரும்; இச்சித்தசுத்தித் துவாரா சற்குருலாபங்கிடைக்கும்;இச்சற்குருலாபத்துவாரா சிரவணமுண்டாம்; இச்சிரவணத்துவாரா மனனமுண்டாம்; இம்மனனத் துவாரா நிதித்தியாசன முண்டாம்;இந்நிதித்தியாசனத்துவாரா சமாதி ஞானமுண்டாம்; இந்த ஞானத்துவரா மோக்ஷமடைவார்கள். ஆதலாற் புண்ணியகன்மங்களை நிட்காமமா யவசியஞ் செய்யவேண்டியது சித்தம். ஈஷணாத்திரயத் தியாகமாவது தனத்தினிடத்தும், புத்திரனிடத்தும், தாரத்தினிடத்து மிருக்கின்ற இச்சையை நீக்குதலாம். இவ்விதமான வுபாதியை யவசியம் பண்ணவேண்டியது சித்தம்.

திதிக்ஷையாவது: சுகதுக்கங்கள்வரின் பொறுத்திருத்தலாம். அஃதாவது தான் சம்பாதித்திருக்கிற புத்திர மித்ர களத்ராதியான சகல பதார்த்தங்களும் செவ்வையா யிருந்தாற் சுகம். அப்பதார்த்தங்களுக் கோர் விக்கினம் வந்தாற் றுக்கம். இச்சுகதுக்கங்கள், லாபாலாபங்கள், மானாவமானங்கள், ஜயாப ஜயங்களாகிய இவை வந்தபோது சமமாய்ச் சகித்திருத்தலும்,தன்னை யொருவர் வாதிக்கிற் றான் தண்டிப்பதற் கதிகாரமிருந்தும் தண்டியாமல் பொறுத்திருத்தலுமாம். இத்திதிக்ஷை யில்லாமற்போனால் இத்தொந்தங்களில் அகப்பட்டு அநேக அநர்த்தங்களும்,அநேகபாவங்களும்,அநேக சாஞ்சல்யங்களும், தேகசோஷணைகளும், பெரியோர்கள் சஹவாசத்துக்கு விக்கினங்களும், அவர்கள் சொல்லும் வசனங்கள் மனதிற் றரியாமல் போதலும் இவை முதலான அனேகதோஷங்க ளிருக்கிறபடியினால் இப்பொறுமை ரூபமாயிருக்கும் திதிக்ஷை யவசியம் இருக்கவேண்டியதுசித்தம்.

சமாதானமாவது: ஆறு இந்திரியங்களையுஞ் சிரவணத்தில் நிறுத்தல். அஃதாவது: பெரியோர்களிடத்திற் சென்று சிரவணம் பண்ணுகிற காலத்தில் மனதும் இந்திரியங்களும் வாசனாவசத்திற் செல்லாமற் றிருப்பிச் சிரவணத்திலேயே நிறுத்துதலாம். இதைப் பண்ணாமற் போனாற் பெரியோர்கள் வசனிக்கும் வசனங்கள் மனதிற் பிடிபடாமல் விஷயங்களிற் சென்றுகொண் டிருக்கும். அதனாற் பெரியோர்கள் சொன்னதிற் பயனில்லாமலும் தான் நினைத்திருக்கிற காரியம் ஆகாமலும் உபயப்பிரஷ்டத்துவம் வரும். அதனால் அநேக துக்கப் பிராப்திகளு முண்டாம். அதனால் மோட்சத்துக்கு விக்கினங்கள் வரும். ஆனபடியினால் இச்சமாதானம் அவசியம் பண்ணவேண்டியது சித்தம்.

சிரத்தையாவது: பத்தி விசுவாசமென விரண்டாம். அவை தாய் தந்தை முதலானவர்களிடத்தி லிருக்கிற பிரியங்களெல்லாஞ் சற்குரு வேதாந்த வாக்கியங்களிடத்தில் ஏகாக்கிரமாக வைப்பது விசுவாசமும், ஈசுவரனிடத்து ஏகாக்கிரமாக வைப்பது பத்தியுமாம். சற்குருவினிடத்தில் மிகவும் விசுவாசம் பண்ணவேண்டியது. ஏன் பண்ணவேண்டியதென்றால் அவர் மகிமையை முன்னதாக நிரூபிக்கிறோம். அஃதாவது பிராந்தி ரகிதராயும், பரிபூரணராயும், ஞானம் பத்தி வைராக்கிய சம்பன்னராயும், நிரந்தர சந்தோஷத்தை யடைந்தவராயும், நித்தியதிருப்தி யடைந்தவராயும், சச்சிதானந்தப் பிரம ஸ்வரூபராயும், தேச கால வஸ்து பரிச்சேத ரகிதராயும், சுசாதி விசாதி சுகதபேத ரகிதராயும், சட்பாவ விகாரரகிதராயும், சுத்த புத்த முத்த நித்திய பரமானந்த ஸ்வரூபராயும், சர்வ பரிபூரண கருணா சாகரராயும், நிர்வியாச்சிய நிர்லேப நிர்ச்சங்க நிர்வாண நிட்காம நிரூப நிரந்தர நிரவயவ நிர்விசேஷானந்த நிருபத்திரவ நிபத்த நிர்வேத்திய நிர்க்குண நிரஞ்சன நிச்சல நிட்பிரபஞ்ச ஸ்வரூபராயும், அச்சேத்திய அக்கிலேத்திய அசோஷிய அதாகிய அசல அவாச்சிய அநாமய அக்ஷர அப்பிரமேய அசிந்திய அநியபாகிய அக்குரோத அவிதர்க்கிய அதிரிசிய அநாசிரய அநாதார ஆநந்த அகண்டாகார ஸ்வரூபராயும், விசுவ தைஜஸ பிராஞ்ஞருக் கதீதமான பிரத்தியக் சைதன்னியராயும், விராட் டிரணியகர்ப்ப அவ்வியாகிருதங்களை யறிகின்ற சர்வசாட்சியாயும், மூலப்பிரகிருதி யகண்டாகாரவிருத்தி யானந்தவிருத்தி யதீதராயும், கிருத கிருத்தியராயும் விளங்குவதோடு ஸ்வரூபஞான மில்லாத மூடர்களாய் மல மூத்திர பாத்திரமாயிரா நின்ற தேகமே நானென் றிந்தச் சரீரத்தைக் குறித்துவந்த ஞானவிருத்திகளும், சாதி வர்ணம் குலம் கோத்திரம் ஆசிரமம் நாமம் வேஷமாதிகளும், சநந மரணங்களும் நானென்று கொண்டிருக்கிறவர்களாயும், சங்கற்ப விகற்பமா யிருக்கிற மனதை நானென்று கொண்டிருக்கிறவர்களாயும், உசுவாச நிசுவாசமா யிருக்கின்ற பிராணவாயுவை நானென்று கொண்டிருக்கிறவர்களாயும், ஆபாசமா யிருக்கிற ஜீவனை நானென்றுகொண் டிருக்கிறவர்களாயும், சசவிஷாணம்போ லிருக்கிற சூனியமே நானென்றுகொண்டிருக்கிறவர்களாயுமிரா நின்ற அநேக மதஸ்தர்களும், திரிசியங்களாயும், பரிச்சின்னங்களாயும், சாவயவங்களாயும், அனுர்த்தசட துக்க ரூபங்களாயும், அஞ்ஞானமுதலான தேகேந்திரிய பிராணபுத்தியே நானென்றுகொண்டிருக்கிறவர்களாயும், லோக காமியா யிருக்கப்பட்ட ஜீவனே நானென்றுகொண்ட கிஞ்சிஞ்ஞர்களாயுமிருக்கிறவர்களுங்கூட நிரேதுகமாய்த் தம்முடைய வீக்ஷணத்துக்குப் பாத்திரமாவர்களாகில், அவ்வீக்ஷணாதிசயத்தினாற் சர்வகன்ம விமுத்தர்களாக்கி, அப்படிச் சேர்ந்தவர்களுடைய பாவங்களுடன் சகபாவனா ரூபங்களாயிருக்கிற சகலபிராந்திகளும் சூனியம் பண்ணி, தம்மைப் போலக் கிருதகிருத்தியர்களாய்ப் பண்ணுகிறவராயு மிருப்பரென்க.

(சுலோகம்.)

𑌬𑌹𑌵𑍋 𑌗𑍁𑌰𑌵𑌃 𑌸𑌨𑍍𑌤𑌿 𑌶𑌿𑌷𑍍𑌯𑌵𑌿𑌤𑍍𑌤𑌾𑌪𑌹𑌾𑌰𑌕𑌾𑌃 |
𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑍋𑌽𑌯𑌂 𑌗𑍁𑌰𑍁𑌰𑍍𑌦𑍇𑌵𑌿 𑌶𑌿𑌷𑍍𑌯𑌹𑍃𑌤𑍍𑌤𑌾𑌪𑌹𑌾𑌰𑌕𑌃 || (௫)

(இ-ள்.) சிடனது கைப்பொருள் பறிக்கும்படியான ஆசாரியர் வெகுபே ருண்டு. அச்சிடனது மனத்தின்கண்ணுள்ள துன்பத்தைப் பறிக்கத்தக்க ஆசாரியர் கிடைப்ப தரிது. (௫)

இப்படிச் சாஸ்திரங்களிற் பிரமாணம் இருக்கிறபடியால் இங்ஙனங் கிடைப்பதற்கரிய சற்குருவினிடத்தில் அவசியம் விசுவாசம் வைக்கவேண்டியது சித்தம். இப்படியே வேதாந்த சாஸ்திரத்தினிடத்திலும் அவசியம் விசுவாசம் வைக்கவேண்டியது. ஏன் விசுவாசம் வைக்கவேண்டியதென்றால், வேதாந்த சாஸ்திரங்களிலும் மகாமகிமை யிருக்கின்றபடியினாற்றான். அம்மகிமை யென்னவென்றால், அவ்வேதாந்த சாஸ்திரங்கள் சகல பிராந்திகளையும் நாசம்பண்ணுகிறதாயும், ஜநநமரண மென்கிற சம்சார சாகரத்தைத் தாண்டுகிறதற்குத் தெப்பமாயும், ஸ்வகர்மகுணசாலமென்கிற மேகங்களைப் போக்கடிக்கிற பிரசண்ட வாயுவாயும், ஆதியாத்மீக ஆதிபௌதிக ஆதிதெய்விகமென்கிற தாபத்திரயாக்கினிகளைச் சாந்திபண்ணுகிற அமிர்தவருஷமாயும், புத்திர மித்திர களத்திர பசுப் பிரத்தியக் கிரக கிராம க்ஷேத்ர தன தானியாதிகளிடத்திற் பிரியமோதப் பிரமோதமா யிருக்கின்ற அஞ்ஞானமான மோகாந்தகாரத்தைப் போக்கடிக்கிற சூரியப் பிரகாசமாயும், தானத்திரய சங்கத்திரய பந்தத்திரய சீவத்திரய சத்தித் திரய விந்துத்திரய தெய்வத்திரய ஈஷணத்திரய கர்மத்திரய காரணத்திரய வாசனாத்திரயமான இவ்விலங்குகளைப் பேதிக்கிற வச்சிராயுதமாயும், இதரமான சப்த மீமாம்ச யந்திர கர்ம யோக நியாய முதலான சாத்திரங்கள் படித்துஞ் சுக துக்க மோக கர்ம பந்த ஜநநமரணங்களை நிரசனம் பண்ண மாட்டாமற் சமுசயங்களோடு கூடியநேக மயக்கங்களினால் மோக்ஷமாகிற கரையைக் காணாமல் இருக்கிறபேர்கள்கூடத் தெய்வாதீனமாய் வேதாந்த சாத்திர சிரவணம் பண்ணினால் அது சகல சமுசயங்களையுஞ் சகல பய துக்க மோகாதிகளையுந் தள்ளி மோக்ஷ கதியைக் காண்பிக்கிறதா யிருக்கிறபடியினாலும் இந்த வேதாந்த சாத்திரங்களின்பேரில் மிகவும் விசுவாசம் வைக்கவேண்டியது சித்தம்.

இப்படியே ஈசுவரனிடத்திலும் அவசியம் பக்தி பண்ண வேண்டியது. ஏன் பண்ணவேண்டியதென்றால், சகலத்திற்குங் காரணராயும்; பாவமும், கர்மமும், நாமமும, ரூபமும், குணங்களு மில்லாமல் உற்பத்தி, ஸ்திதி, லயம் பண்ணுகிற நிமித்தம் மாயையினாற் சீவ சகத்துக்களை விஸ்தரிக்கிறவராயும், அச்சீவ சகத்துக்களில் அனுகூதராயும்; அவ்வியாகிருத, இரணியகர்ப்ப, விராட்டு, பிரமா, விஷ்ணு,

மஹேசுவர, ராம, கிருஷ்ணுதி யவதாரராயும், சற்குரு ரூபமாயு
மிருக்கின்றமையின் அந்த ஈசுவரனைக்குறித்துச் சிரத்தாபத்தியோடு
உபாசனைபண்ணினுல் ஈசுவரானுக்கிரகமுண்டாய் அவ்வனுக்கிரகத்தி
ஞற் சகல பாவங்களும் நசித்து மோக்ஷத்தை யடைவார்கள். ஆதலால்
ஈசுவரனிடத்திலும் அவசியம் பத்திபண்ண வேண்டியது சித்தம்.

இப்படிக் குரு வேதாந்தவாக்கியம் ஈசுவரர்களிடத்தில் மிகவும்
விசுவாசம் வைக்காமற்போனுற் சனன மரணப் பிரவாக ரூபமான சம்
சார துக்கமென்கிற நரகந் தப்பாது வருவதோடு; அஞ்ஞானம், அவி
வேகம், அபிமானம், ராகம், கர்மம், சரீர துக்கபாதிகளான சகல
பிராந்திகளும் நாசமாகா. ஆகையால் அவசியம் சற்குரு வேதாந்த
வாக்கியம், ஈசுவரன் இவர்களிடத்தில் மிகவுஞ் சிரத்தாபத்தி பண்ண
வேண்டியது சித்தம்.

இங்ஙனம் சம தமாதி குணங்களையுடைய சமாதிஷட்க சம்பத்தி
யான மூன்றும் சாதனங் கைவந்தாற் போதாதோ வென்றாற் போ
தாது. ஏன் போதாதென்றால், சிலர், தாம் ஞானிகளெனவும், யோகி
களெனவும், குருக்களெனவும், பாரம்பரியமான பெரியோர்கள் வம்சத்
திற் பிறந்தவரெனவுஞ் சொல்லிக்கொள்வதோடு, முன்னுள்ள மகான்
கள் பேரை வைத்துக்கொண்டு, அவர்களது மகா மகிமையுள்ள
குணாதிசயங்கள் தங்களுக் கிருக்கிறதுபோலச் சம தமாதிகளை வரவ
ழைத்துக்கொண்டு திரவியார்ஜனமாகச் சாந்தாதிகுணங்களை யடைந்து
மோக்ஷமெப்போது வருமென்கிற விசாரமில்லாமற் போயமே, மயக்
கம், சமுசய மிவைகளை யுடையவர்களாய்த் தேகசுகத்திற்காகவுந்
தருக்க புத்தியில் மிகவும் விருப்பமுள்ளவர்களாய் வித்தியாப்யாசங்
களை யப்பியாசித்து ஞானம்போலச் சில வார்த்தைகளைக் கற்று ஆத்
மானந்தத்தை யடையாமல் மூடசிரோமணிகளாயிருக்கிறார்களாத
லால் நான்காஞ் சாதனமான முமூட்சுத்துவமும் அவசியம் சம்பா
திக்கவேண்டியது. முமூட்சுத்துவமாவது மோக்ஷ விருப்பம். அதை
யும் நிரூபிக்கின்றோம்.

சனன மரணப் பிரவாக ரூபமான சமுத்திரத்தி லிருக்கிறபோர் தா
பத் திரயங்களில் அடிபட்டு இத்துச் சம்சாரம் மகாவுபாதி நரகத்
தைக்காட்டிலும் அதிக துக்கமாயிருக்கிறபடியினுல் இச்சம்சாரத்தில்
க்ஷணமாத்திரமாயினு மிருக்கலாகாதென்று மகா பயத்தை யடைந்து
இப்படிப்பட்ட கோரமான சம்சார பய துக்க பிரவாகத்தைப்
போக்கடித்து நித்த சுத்த புத்த முத்த சத்திய பரமானந்தாத்துவித
சுகஸ்வரூபமா யிருக்கப்பட்ட சாம்பிராஜ்யத்தை எந்தப்பெரியோர்
களால் அடையலாகுமோ, அப்படிப்பட்ட சற்குரு எங்கே யிருக்
கிறாரோ, இதற்கென்ன சாதனங்கள் வேண்டுமோ வென்கிற விசாரத்
தோடு தலையில் நெருப்புப் பற்றினவனுக்கும் நாக்கு வறண்டுபோன

னுக்குத் தண்ணீரைக் கண்டாலொழிய வொருகாரியத்திலும் மனது மீளாததுபோல வெப்போது மோக்ஷம் வரப்போகிறதென் றெடுத்த விடாய் தீராமல் கிருத கிருத்தியனுமனாவும் விசாரத்திலும் தவித்துக் கொண் டிருக்கிறதே முமூட்சுத்துவமென்று சொல்லப்படும். இந்த முமூட்சுத்துவ மில்லாவிட்டாற் சநநமரண மென்கிற ரோகம் விடாது; பந்தமும் போகாது; ஆனபடியினால் எவ்விதத்திலும் முமூட்சுத்துவத் தைச் சம்பாதிக்கவேண்டியது சித்தம்.

இச்சாதனங்களுள்ளவனே பிரம விசாரத்துக்கு அதிகாரியாவன். அவ்விசாரமாவது அசத் தின்னதென்றறிந்து அதை நீக்கிச் சத்தை யறிகிறதற்குச் சற்குரு தரிசனமாய் அவரிடத்தில் மகா வாக்கியோப தேசம் பெற்றுக்கொண்டு வேதாந்த மகாவாக்கியார்த்த நிச்சயமான சீவ பர வைக்கியத்தை நன்றாக விசாரித்து அவைகளொன்றாகத்தக்க அனுபவம் வர விசாரிப்பதே விசாரணையாம். இது வேண்டுமென்ப தற்குத் திட்டாந்தமாவது: பசிக் கன்னம் வேண்டியவனுக்கு அதற் குச் சாதனமான இடம் விறகு பாத்திரம் சலம் அரிசி இவைக ளிருக் கினும் பசியைப் போக்கமாட்டா. இவைகளுடனே அக்கினி யொன்று கூடினால் அவ்வரிசியை யன்னமாகப் பாகபண்ணி அச்சாதனங்க ளுடனே தானும் கஷ்டமாய்ச் சாடராக்கினி ரூபமாயிருந்துகொண்டு முன் பாகம் பண்ணின அன்னத்தைப் புசித்துப் பசி நீங்கி யச்சாட ராக்கினியுந் திருத்தியாகாரமா யெப்படிச் சுகமாயிற்றோ, அப்படியே ஆத்மவிசாரமென்னும் அக்கினிபிறந்து குருவென்கிறவிடத்தில் வியா பித்து வேதாந்த சாத்திரமென்கிற விறகினாற் பிரகாசித்து மானிட ஜன்மமென்கிற பாத்திரத்திற் சாந்தகுணமென்கிற சலத்திற் சையோக மாய் அறிவென்கிற அரிசியைப் பாகம்பண்ணி அவ்விசாராக்கினியும் முன்னுள்ள சாதனங்களோடு கஷ்டமாய்த் தான் சமைத்த பூரண மான அன்னத்தைப் புசித்துச் சநந மரணமென்கிற துக்கமான பசி நீங்கி தனக்கெதிரிலாத அத்துவிதானந்த திருத்தியை யடைந்து அத்திருத்தியினாற் சலத்திலுண்டான உப்புச் சலாகார மாவதுபோல ஞானத்திலுண்டான விசாரமும் ஞானாகாரமாய் மோக்ஷ மடையவேண்டு மாதலால் அச்சாதன சதுஷ்டய முள்ளவர் இவ்வி சாரம் அவசியம் பண்ணவேண்டியது சித்தம்.

சாதனசதுஷ்டயப் பிரகரணஞ் சம்பூரணம்.

---

மூன்றாவது

# தூலப்பிரகரணம்.

---

முற்பிரகரணத்திற் சித்தசுத்திக்குச் சுதந்தரமான சாதனசதுஷ்டயத்தினுற் றிரிசியரூபமான பிரபஞ்சமனைத்தும் அநித்தியமெனவும், திருக்குரூபமான பிரமம் நித்தியமெனவும் அறிவித்து, அவ்வநித்தியத்தை நீக்கி நித்தியத்தை யடைதற்கேதுவான குணங்களோடு முத்தி விருப்பத்தை வருவித்துப் பின் இப்பூதபவுதிகமான பிரபஞ்சமுண்டான கற்பனைகளைத் தெரிவித்து அவைகளை நீக்குதற்பொருட்டு முன்பு தூலப்பிரகரணம் நிரூபிக்கிறார்.

(சுலோகம்.)

𑌮𑍃𑌗𑌤𑍃𑌷𑍍𑌣𑌾𑌯𑌾𑌮𑍁𑌦𑌕𑌂𑌶𑍁𑌕𑍍𑌤𑍌𑌰𑌜𑌤𑌂𑌭𑍁𑌜𑌙𑍍𑌗𑌮𑍋𑌰𑌜𑍍𑌜𑍍𑌵𑌾𑌂 ।
𑌤𑍈𑌮𑌿𑌰𑌿𑌕𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌯𑍁𑌗𑌵𑌦𑍍𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌂𑌨𑌿𑌖𑌿𑌲𑌂𑌜𑌗𑌦𑍍𑌰𑍂𑌪𑌂 ॥ (௩)

(இ-ள்.) கானலினிடத்திற் சலம்போலவும், கிளிஞ்சிலினிடத்தில் வெள்ளிபோலவும், பழுதையினிடத்திற் பாம்புபோலவும், சந்திரனிடத்தில் துவேத்தியம்போலவும் என்னிடத்திற் சகல பிரபஞ்சமும் பிராந்தமாகக் காண்கின்றன. இங்ஙனமிருக்கிறபடியால், மருமரீசிகையினிடத்திற் சலப்பிராந்தி யெப்படியோ, சுத்தியினிடத்தில் ரஜிதப்பிராந்தி யெப்படியோ, ரச்சுவினிடத்திற் சர்ப்பப்பிராந்தி யெப்படியோ, சந்திரனிடத்தில் துவிதப்பிராந்தி யெப்படியோ அப்படியே நிஷ்பிரபஞ்ச ஸ்வரூபமான தன்னிடத்தில் மூலப்பிரகிருதி, மகதத்துவம், அகங்கார தத்துவம், பஞ்சதன்மாத்திரை, சூட்சுமம், தூலம் இவைமுதலான சகத்பிராந்தி தோன்றுகிறது. இந்தச் சகத்பிராந்தி யாதினுற் றோற்றுகின்றதென்றால், அதிஷ்டானஞ்ஞானத்தினுற் றோற்றுகிறது. இப்படித் தோற்றுகிற சகத்பிராந்தி மருமரீசிகையினிடத்திற் சலங் காலத்திரயத்திலு மெப்படி யில்லையோ, சுத்தியினிடத்தில் வெள்ளி காலத்திரயத்திலு மெப்படி யில்லையோ, ரச்சுவினிடத்திற் சர்ப்பங் காலத்திரயத்திலு மெப்படி யில்லையோ, சந்திரனிடத்திற் றுவிதங் காலத்திரயத்திலு மெப்படி யில்லையோ அப்படியே நிஷ்பிரபஞ்ச ஸ்வரூபமான தன்னிடத்தில் அதிஷ்டானஞ்ஞானமென்கிற மூலப்பிரகிருதி, மகதத்துவம், அகங்கார தத்துவம், பஞ்சதன்மாத்திரை, சூட்சுமம், தூலமாதியான சகத்பிராந்தி காலத்திரயத்திலு மில்லவேயில்லை. அஃதில்லாமற்போவது எப்படியென்றால் கிரமமாகச் சொல்லுகிறோம். (௩)

(சுலோகம்.)

[illegible]

[illegible] ॥ (௭)

(இ-ள்.) சச்சிதானந்த ஸ்வரூபமான தன்னிடத்தில் தூலசரீரம் ஆரோபிக்கப்பட்டிருக்கிறது. அதனது ஸ்வரூபமானது நிரூபிக்கப் படுகிறது. (௭)

(சுலோகம்.)

[illegible] ।

[illegible] ॥ (௮)

(இ-ள்.) அஸ்தி மாம்சம் சர்மம் நரம்பு ரோமம் ஆகப் பிருதிவி யம்சம் ஐந்து. இதற்கு விபரம்: பிருதிவியினிடத்திற் பிருதிவி அஸ்தி, பிருதிவியினிடத்தில் அப்பு மாமிசம், பிருதிவியினிடத்தில் அக்கினி சர்மம், பிருதிவியினிடத்தில் வாயு நரம்புகள், பிருதிவியினிடத்தில் ஆகாசம் ரோமங்கள். இந்த ஐந்தும் பிருதிவியின் கூறு. (௮)

(சுலோகம்.)

[illegible] ।

[illegible] ॥ (௯)

(இ-ள்.) வாய்நீர், மூத்திரம், வியர்வை, உதிரம், சுக்கிலம் ஆக அப்புவின் அம்சம் ஐந்து. இதற்கு விபரம்: அப்புவினிடத்திற் பிருதிவி வாய்நீர், அப்புவினிடத்தில் அப்பு மூத்திரம், அப்புவினிடத்தில் அக்கினி வியர்வை, அப்புவினிடத்தில் வாயு இரத்தம், அப்புவினிடத்தில் ஆகாசஞ் சுக்கிலம். இந்த ஐந்தும் அப்புவின் கூறு. (௯)

(சுலோகம்.)

[illegible] ।

[illegible] ॥ (௧௦)

(இ-ள்.) பசி, தாகம், நித்திரை, சோம்பல், சங்கமம் ஆக அக்கினியின் அம்சம் ஐந்து. இதற்கு விபரம்: அக்கினியினிடத்திற் பிருதிவி பசி, அக்கினியினிடத்தில் அப்பு தாகம், அக்கினியினிடத்தில் அக்கினி நித்திரை, அக்கினியினிடத்தில் வாயு ஆலஸ்யம், அக்கினியினிடத்தில் ஆகாசஞ் சங்கமம். இந்த ஐந்தும் அக்கினியின் கூறு. (௧௦)

(சுலோகம்.)

[illegible] ।

[illegible] ॥ (௧௧)

(இ-ள்) ஓடுதல், சுருங்குதல், குறுகுதல், விரிதல், கிடத்தல், ஆக வாயுவின் அம்சம் ஐந்து. இதற்கு விபரம்: வாயுவினிடத்திற் பிருதிவி கிடத்தல், வாயுவினிடத்தில் அப்பு நடத்தல், வாயுவினிடத்தில் அக்கினி யிருத்தல், வாயுவினிடத்தில் வாயு ஓடல், வாயுவினிடத்தில் ஆகாசந் தத்தல். இந்த ஐந்தும் வாயுவின் கூறு. (௧௧)

(சுலோகம்.)

ராகத்வேஷபயம்லஜ்ஜாமோஹச்சைவயதாக்ரமா ।
நபஸ:பஞ்சவிதம்ப்ரோக்தம்ஸாம்ஸா:பரிகீர்த்திதா: ॥ (௧௨)

(இ-ள்.) ராகம், துவேஷம், பயம், வெட்கம், மோகம் ஆக ஆகாசத்தின் அம்சம் ஐந்து. இதற்கு விபரம்: ஆகாசத்தினிடத்திற் பிருதிவி ஆசை, ஆகாசத்தினிடத்தில் அப்பு துவேஷம், ஆகாசத்தினிடத்தில் அக்கினி பயம், ஆகாசத்தினிடத்தில் வாயு வெட்கம், ஆகாசத்தினிடத்தில் ஆகாசம் மோகம். இந்த ஐந்தும் ஆகாசத்தின் கூறு. (௧௨)

ஆக இந்த இருபத்தைந்து தத்துவங்களுங் கூடித் தூலசரீரமாம். இந்தத் தூலசரீரத்தினிடத்தில் இந்திரியங்கள் இருக்கிற அவயவஸ்தானங்களின் விபரம்: பிருதிவியினிடத்தில் ஆகாசம் அகங்காரம், ஸ்தானம் இருதயம். பிருதிவியினிடத்தில் வாயு பிராணவாயு, ஸ்தானம் இருதயம். பிருதிவியினிடத்தில் அக்கினி கிராணேந்திரியம், ஸ்தானம் நாசி. பிருதிவியினிடத்தில் அப்பு கந்ததன்மாத்திரை. பிருதிவியினிடத்திற் பிருதிவி குதேந்திரியம, ஸ்தானம் குதம்.

(சுலோகம்.)

அஹம்சப்ராணவாயுஶ்ச நாஸிகாகந்தமேவச ।
வாயு:பஞ்சவித:ப்ரோக்த:பாயுஶ்சபஞ்சகம் ॥ (௧௩)

(இ-ள்.) இந்த அகங்காரம், பிராணவாயு, கிராணேந்திரியம், கந்தவிஷயம், குதேந்திரியம் ஆக ஐந்தும் பிருதிவி பஞ்சீகிருதி. அப்புவினிடத்தில் ஆகாசஞ் சித்தம், ஸ்தானம் நாபி. அப்புவினிடத்தில் வாயு அபானவாயு, ஸ்தானங் குதம். அப்புவினிடத்தில் அக்கினி சிகுவை இந்திரியம், ஸ்தானஞ் சிகுவை. அப்புவினிடத்தில் அப்பு ரசதன்மாத்திரை. அப்புவினிடத்திற் பிருதிவி குய்யேந்திரியம், ஸ்தானம் குய்யம். (௧௩)

(சுலோகம்.)

சித்தஞ்சாபானவாயுஶ்ச ஜிஹ்வாரஸநமேவச ।
முஷ்கம்பஞ்சவிதம்ப்ரோக்தம் ஜலபஞ்சகம் ॥ (௧௪)

(இ-ள்.) இந்தச் சித்தம், அபானவாயு, சிகுவை யிந்திரியம், ரசவிஷயம், குய்யேந்திரியம் ஆக வைந்தும் அப்பு பஞ்சீகிருதி. அக்கினி

யினிடத்தில் ஆகாசம் புத்தி, ஸ்தானம் நேத்திரம். அக்கினியினிடத்தில் வாயு உதானவாயு, ஸ்தானங் கண்டம். அக்கினியினிடத்தில் அக்கினி நேத்திரேந்திரியம், ஸ்தானம் நேத்திரம். அக்கினியினிடத்தில் அப்பு ரூபதன்மாத்திரை. அக்கினியினிடத்திற் பிருதிவி பாதேந்திரியம், ஸ்தானம் பாதம். (௧௪)

(சுலோகம்.)

𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍁𑌦𑌾𑌨𑌵𑌾𑌯𑍁𑌶𑍍𑌚𑌨𑍇𑌤𑍍𑌰𑌂𑌰𑍂𑌪𑌂𑌤𑌥𑍈𑌵𑌚 |
𑌪𑌾𑌣𑌿𑌃𑌪𑌞𑍍𑌚𑌵𑌿𑌧𑌃𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌹𑍍𑌨𑌿𑌪𑌞𑍍𑌚𑌕𑌂 || (௧௫)

(இ-ள்.) இந்தப்புத்தி, உதானவாயு, நேத்திரேந்திரியம், ரூபவிஷயம், பாதேந்திரியம் ஆக ஐந்தும் அக்கினி பஞ்சீகிருதி. வாயுவினிடத்தில் ஆகாசம் மனது, ஸ்தானங் கண்டம். வாயுவினிடத்தில் வாயு வியானவாயு, ஸ்தானம் சர்வசரீரம். வாயுவினிடத்தில் அக்கினி தொக்கேந்திரியம், ஸ்தானந் தொக்கு. வாயுவினிடத்தில் அப்பு பரிசதன்மாத்திரை. வாயுவினிடத்திற் பிருதிவி பாணீந்திரியம், ஸ்தானம் அஸ்தம். (௧௫)

(சுலோகம்.)

𑌮𑌨𑌂𑌵𑍍𑌯𑌾𑌨𑌵𑌾𑌯𑍁𑌶𑍍𑌚𑌤𑍍𑌵𑌕𑍍𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌸𑍍𑌤𑌥𑍈𑌵𑌚 |
𑌪𑌾𑌦𑌃𑌪𑌞𑍍𑌚𑌵𑌿𑌧𑌃𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌾𑌯𑍁𑌪𑌞𑍍𑌚𑌕𑌂 || (௧௬)

(இ-ள்.) இந்தமனது, வியானவாயு, தொக்கேந்திரியம், பரிசவிஷயம், பாணீந்திரியம் ஆக இந்த ஐந்தும் வாயு பஞ்சீகிருதி. ஆகாசத்தினிடத்தில் ஆகாசம் ஞானம், ஸ்தானம் புருவமத்தியம். ஆகாசத்தினிடத்தில் வாயு சமானவாயு, ஸ்தானம் நாபி. ஆகாசத்தினிடத்தில் அக்கினி சுரோத்திரேந்திரியம், ஸ்தானஞ் செவி. ஆகாசத்தினிடத்தில் அப்பு சத்ததன்மாத்திரை. ஆகாசத்தினிடத்திற் பிருதிவி வாக்கிந்திரியம், ஸ்தானம் வாக்கு. (௧௬)

(சுலோகம்.)

𑌜𑍍𑌞𑌾𑌨𑌂𑌸𑌮𑌾𑌨𑌵𑌾𑌯𑍁𑌶𑍍𑌚𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌤𑌥𑍈𑌵𑌚 |
𑌵𑌾𑌕𑍍𑌪𑌞𑍍𑌚𑌵𑌿𑌧𑌃𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾𑌸𑍍𑌤𑌦𑌾𑌕𑌾𑌶𑌪𑌞𑍍𑌚𑌕𑌂 || (௧௭)

(இ-ள்.) இந்தஞானம், சமானவாயு, சுரோத்திரேந்திரியம், சத்தவிஷயம், வாக்கிந்திரியம் ஆக இந்த ஐந்தும் ஆகாச பஞ்சீகிருதி. இந்த இந்திரியங்களிருக்கிற ஸ்தானமான தூலசரீரம் பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களினாலானது. (௧௭)

(சுலோகம்.)

𑌪𑌂𑌚𑍀𑌕𑍃𑌤𑌮𑌹𑌾𑌭𑍂𑌤𑌸𑌂𑌭𑌵𑌂𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌚𑌿𑌤𑌂 |
𑌶𑌰𑍀𑌰𑌂𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌾𑌨𑌾𑌂𑌭𑍋𑌗𑌾𑌯𑌤𑌨𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 || (௧௮)

(இ-ள்.) பஞ்சீகிருத பஞ்சமகாபூதத்தினின்று முண்டாகியும், கர்மசஞ்சிதமாயும், சுகதுக்கங்களுக் கிடமாயு மிருக்கின்றது தூல சரீரமென்று ஆசாரிய சுவாமிகள் ஆத்மபோதமென்கிற கிரந்தத்தி னிரூபித்திருக்கிறாரானபடியினாலும், இவ்வாறு சுருதிகளிலுஞ் சொல் லப்பட் டிருக்கிறபடியினாலும் இதுவே பிரமாணமாம். (க௮)

தன்னிடத்தில் அத்தியஸ்தமாய்த் தோற்றுகிற இந்தப் பஞ்சீ கிருத பஞ்ச மகாபூதங்களினாற் கற்பிதமான இத்தூலசரீரந் தானல்ல. அஃதெப்படித் தானல்லவென்றால், இந்த அஸ்தி, மாமிசம், சருமம், நரம்பு, ரோமங்களாகிய இந்த ஐந்தையும் அறிந்த அறிவே தான். தன்னால் அறியப்பட்ட இந்த ஐந்துந் தன்னை யறியமாட்டா; ஆகை யால் சடம். இந்த ஐந்துந் தானல்ல; இந்த ஐந்தும் பிருதிவியின் அம்சம். இந்த ஐந்தினுடைய ஹானி விருத்திகளினால் வருகிற துக் கங்கள் தனக்கில்லை. இந்த ஐந்துமே தானானால் இந்த ஐந்தும் போனாற் றான் போகவேண்டும். இந்த ஐந்தும் போனாலுந் தான்போகவில்லை. ஆகையால் இவ்வைந்தையுஞ் சாட்சியாய் அறிகிற அறிவே தான்.

இப்படியே வாய்நீர், மூத்திரம், வியர்வை, உதிரம், சுக்கிலங்க ளாகிய இந்த ஐந்தையும் அறிந்த அறிவே தான். தன்னால் அறியப் பட்ட இந்த ஐந்துந் தன்னை யறியமாட்டா; ஆகையால் அவை சடம். இந்த ஐந்துந் தானல்ல; இந்த வைந்தும் அப்புவி னம்சம். இந்த ஐந்தினுடைய ஹானி விருத்திகளினால் வருகிற சுகதுக்கங்கள் தனக் கில்லை. இந்த ஐந்துமே தானானால், இந்த ஐந்தும் போனால் தான் போகவேண்டும். இந்த ஐந்தும் போனாலுந் தான் போகவில்லை. ஆகையால் இந்த ஐந்தையுஞ் சாட்சியாய் அறிகிற அறிவே தான்.

இப்படியே பசி, தாகம், நித்திரை, ஆலஸ்யம், சங்கமமாகிய இந்த ஐந்தையும் அறிந்த அறிவே தான். தன்னால் அறியப்பட்ட இந்த ஐந்துந் தன்னை யறியமாட்டா; ஆகையால் சடம். இந்த ஐந் துந் தானல்ல. இந்த ஐந்தும் அக்கினியின் அம்சம். இந்த ஐந்தினு டைய ஹானி விருத்திகளினால் வருகிற சுகதுக்கங்கள் தனக்கில்லை. இந்தஐந்துமே தானானால் இந்த ஐந்தும் போனாற் றான் போகவேண் டும். இந்த ஐந்தும் போனாலுந் தான் போகவில்லை. ஆகையால் இந்த ஐந்தையுஞ் சாட்சியாய் அறிகிற அறிவே தான்.

இப்படியே கிடத்தல், நடத்தல், இருத்தல், ஓடல், தத்தல்க ளாகிய இந்த ஐந்தையும் அறிந்த அறிவே தான். தன்னால் அறியப் பட்ட இந்த ஐந்துந் தன்னை யறியமாட்டா; ஆகையால் சடம். இந்த ஐந்துந் தானல்ல. இந்த ஐந்தும் வாயுவின் அம்சம். இந்த ஐந்தினு டைய ஹானி விருத்திகளினால் வருகிற சுகதுக்கங்கள் தனக்கில்லை. இந்தஐந்துந் தானானால் இந்த ஐந்தும் போனாற் றான் போகவேண்டும்.

இந்த ஐந்தும் போனாலுந் தான் போகவில்லை. ஆனபடியினால் இந்த ஐந்தையுஞ் சாட்சியாய் அறிகிற அறிவே தான்.

இப்படியே ஆசை, துவேஷம், பயம், வெட்கம், மோகங்களாகிய இவ்வைந்தையும் அறிந்த அறிவே தான். தன்னால் அறியப்பட்ட இந்த ஐந்துந் தன்னை யறியமாட்டா; ஆகையால் சடம். இந்த ஐந்துந் தானல்ல. இந்தஐந்தும் ஆகாசத்தினம்சம். இந்த ஐந்தினுடையஹானி விருத்திகளினால் வருகிற சுக துக்கங்கள் தனக்கில்லை. இந்த ஐந்துந் தானானால் இந்த ஐந்தும் போனாற்றான் போகவேண்டும். இந்த ஐந்தும் போனாலுந் தான் போக வில்லை. ஆனபடியால் இந்த ஐந்தையுஞ் சாட்சியாய் அறிகிற அறிவே தான்.

இந்தப் பிருதிவிபஞ்சகமும், அப்புபஞ்சகமும், அக்கினிபஞ்சகமும், வாயுபஞ்சகமும், ஆகாசபஞ்சகமுமாகிய இவ்வைந்துபஞ்சகமுங் கூடித் தூலசரீர மாயின. இதைத் தூலசரீரமென்றறிந்த அறிவே தான். தன்னால் அறியப்பட்ட இந்தத் தூலசரீரந் தன்னை யறியமாட்டாது; ஆகையால் சடம். இந்தத் தூலசரீரந் தானல்ல. இந்தத் தூல சரீரம் பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களினாலானது. இந்தத் தூலசரீரத்தினுடைய ஹானி விருத்திகளினால் வருகிற சுக துக்கங்கள் தனக்கில்லை. இந்தத் தூலசரீரமே தானானால் இந்தத் தூலசரீரம் போனாற் தான் போகவேண்டும். இந்தத் தூலசரீரம் போனாலுந் தான் போக வில்லை. எப்படித் தான் போகவில்லையென்னில், பூருவத்திற் றான் சரீரத்தோடே யிருந்து பண்ணின கருமத்தினாற் றனக் கிந்தச்சரீரம் வந்ததென்றும், இந்தச் சரீரத்தினாற் பண்ணின கருமத்தினாற் றனக் கினி மேற் சரீரம் வரப்போகிறதென்றும், இந்தச் சரீரத்திற்கு விலட்சணமான தன்னை யறிந்தாற் றனக் கினிமேற் சரீரம் வாராதென்றும் அநுபவ மிருக்கின்றபடியாற் பூத பவிஷ்ய வர்த்தமான காலத்திரயங்களிலும் இந்தச்சரீர மிருந்தாலும் போனாலுந் தான் போகவில்லை. ஆனபடியினால் இந்த வியஷ்டி தூலசரீரந் தானல்ல. இந்த வியஷ்டி தூலசரீரத்தைச் சாட்சியா யறிகிற அறிவே தான்.

(சுலோகம்.)

𑌨 𑌤𑍍𑌵𑍇𑌵𑌾𑌹𑌂𑌜𑌾𑌤𑍁 𑌨𑌾𑌸𑌂 𑌨 𑌤𑍍𑌵𑌂 𑌨𑍇𑌮𑍇 𑌜𑌨𑌾𑌧𑌿𑌪𑌾𑌃 ।
𑌨 𑌚𑍈𑌵 𑌨 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌵𑌯𑌮𑌤𑌃 𑌪𑌰𑌮𑍍 ॥ (௩௩)

(இ-ள்.) நான் ஒருக்காலும் இல்லாமல் இருந்தவனல்ல, நீயும் இராமல் இருந்தவனல்ல, இந்த இராஜாக்களும் இராமலிருந்தவர்களல்ல, நாமெல்லோருமே இல்லாமற் போகிறவர்களு மல்லவென்று இதையிற் பகவான் நிரூபித்திருக்கிறார். (௩௩)

4

(சுலோகம்.)

𑌘𑌟𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾 𑌘𑌟𑌾𑌦𑍍𑌭𑌿𑌨𑍍𑌨𑌃 𑌸𑌰𑍍𑌵𑌥𑌾 𑌨 𑌘𑌟𑍋 𑌯𑌥𑌾 ।
𑌦𑍇𑌹𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾 𑌤𑌥𑌾 𑌦𑍇𑌹𑍋 𑌨𑌾𑌹𑌮𑌿𑌤𑍍𑌯𑌵𑌧𑌾𑌰𑌯 ॥ (உ௦)

(இ-ள்.) கடத்தைக்காண்கிறவன் கடத்துக்கு வேறாய்க் கடமாகாததுபோலத் தேகத்தைக் காண்கிற தானுந் தேகமல்லவென்றறிக என்று ஆசாரியசுவாமிகள் வாக்கிய விருத்தி யென்கிற கிரந்தத்தில் நிரூபித்திருக்கிறார். ஆனபடியினால் இதுவே பிரமாண சித்தம். (உ௦)

இந்த வியஷ்டி தூலசரீரத்துக்குச் சாட்சியான தானே பிரமாதிபிபீலிகாந்தமான சமஷ்டி தூலசரீரங்களிலும், பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களென்கிற தூல பூதங்களிலும் அனுசூதமா யிருந்துகொண்டு சாட்சியாய் அறிகிறபடியினால், அந்தச் சமஷ்டி தூலசரீரங்களுக்குக் காரணமான பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களென்கிற தூலபூதங்களுந் தானல்ல. எப்படித் தானல்லவென்னில் தனக் கெதிரே தோற்றுகிற சமஷ்டி வியஷ்டி யாத்மகமான தூலசரீரங்களிடத்திலும், இதற்குக் காரணமான பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களென்கிற தூலபூதங்களிடத்திலும் அத்தியஸ்தமாய்த் தோற்றுகிற விசுவன் வியாவகாரிகனும் விராட்டு வைஸ்வாநரனு மென்கிற அபிமான நாமங்களும், சாக்கிராவஸ்தையும், நேத்திரஸ்தானமும், யுக்தபோகமும், அகாரமாத்திரையும், ரசோகுணமும், கிரியாசத்தியும், பிரமமூர்த்தியும், அன்னமயகோசமும், சீவத்துவமும், மனுஷியத்துவமும்; நான் கர்ப்பஸ்தனாகப் பிறந்தவன், நான் பாலன், நான் குமாரன், நான் யுவன், நான் விருத்தன், நான் சீரணித்துப்போகிறவ னென்னு மிச்சட்பாவ விகாரங்களும்; சடாதாரமென்கிற நாமங்களும், லக்ஷியத் திரயங்க ளென்கிற நாமங்களும்; நான் புருஷன், நான் ஸ்திரீ, நான் நபும்ஸக னென்கிற லிங்கத்துவமும்; நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரனென்கிற வர்ணத்துவமும்; நான் தமிழன், நான் தெலுங்கன், நான் கன்னடன், நான் மகராஷ்டன், நான் குச்சரனென்கிற பஞ்சத்திராவிடங்களும்; நான் காசிபகோத்திரம், நான் பாரத்வாசகோத்திரம், நான் போதாயனசூத்திரம், நான் ஆசிலாயனசூத்திரம், நான் ஆபஸ்தம்பசூத்திரம், நான் காத்தியாயன சூத்திரமென்கிற கோத்திரசூத்திரங்களும்; நான் பிரமசாரி, நான் கிரகஸ்தன், நான் வானப்பிரஸ்தன், நான் சந்நியாசியென்கிற ஆசிரமங்களும்; நான் கிருஷ்ணன், நான் ராமன், நான் எல்லம்பட்டன், நான் குப்பாபட்டனென்கிற குறிநாமங்களும்; நான் கறுத்தவன், நான் சிவத்தவனென்கிற ரூபங்களும்; நான் தீக்ஷிதன், நான் சோமயாகி, நான் மஹாவிரதயாகி, நான் பவுண்டரீகயாகி என்கிற சமஸ்கார நாமங்களும்; நான் மாயாவாதி, நான் தத்துவவாதி யென்கிற மதநாமங்களும்; நான் உடாத்தியாயன், நான் கர்மடன், நான் பத்தன், நான் ஞானி, நான் கவியா

ணைப் பிள்ளையென்கிற ஆசாரநாமங்களும்; நான் தச்சன், நான் தட்டான், நான் கொல்லன், நான் குசவன், நான் அம்பட்டன், நான் வண்ணான், நான் இடையனென்கிற விருத்தி நாமங்களும்; நான் சுபெய்க்காரன், நான் காஸ்தாரி, நான் மாவுத்தன், நான் மணியக்காரன், நான் கணக்கப்பிள்ளை யென்கிற கிரியா நாமங்களுமான மனுடநாமங்களும்; பிரமா விஷ்ணு மயேசுவர சூரிய நட்சத்திர தேவ கந்தருவ சித்த சாத்திய கின்னர கிம்புருஷ குய்யக அப்ஸர வித்தியாதர யக்ஷ ராக்ஷச பூதப் பிரேத பிசாச சாகினி டாகினி வேதாளாதி தாம்பிர மிருண்மய சிலாதாருரூபங்களென்கிற தேவநாமத்துவமும்; கோ இடப அசுவ கார்த்தப சிங்க சார்த்தூல சுவான மார்ச்சால மர்க்கடாதி மிருக நாமங்களும்; கருடன் மசகமாதி பட்சிநாமங்களும், பன்னகாதி ஊர்வன நாமங்களும், மச்சக் கூர்மாதி நீர்வாழ்வன நாமங்களும், கற்பகம் மந்தாரம் பாரிசாதம் நாளிகேரம் தாளி அசுவத்தாதி விருக்ஷநாமங்களும்; மகாமேரு சித்திர கூடம் திரி கூடம் சத்தகுல் பர்வதாதி பர்வத நாமங்களும்; சுவர்க்க மத்திய பாதாளாதி சதுர்த்தச புவனங்களும், நவகண்டஞ் சத்ததீபங் குருக்ஷேத்திரங் காசிக்ஷேத்திரங் துவாரகா க்ஷேத்திர முதலான புண்ணிய க்ஷேத்திராதி பிருதிவி நாமங்களும்; சத்த சமுத்திரம் கங்கை யமுனை சரஸ்வதி துங்கபத்திரா கோதாவரி கிருஷ்ணா காவேரி முதலிய புண்ணிய தீர்த்தாதி சல நாமங்களும்; வடவானலம் ஆஹவானலம் காருகபத்தியம் தக்ஷணாக்கினி அக்கினிஹோத்திரம் சடாராக்கினி யாதியான அக்கினி நாமங்களும்; மலைய மாருதம் பிரசண்ட மாருதமென்கிற வாயுநாமங்களும், அசரீர அவகாச தசதிக்குப்பஞ்சாகாசம் வெளியென்கிற ஆகாசநாமங்களும்; இந்தத் தூலப்பிரபஞ்சத்தைக் குறித்துச் சொல்லப்பட்ட சத்தசாஸ்திரம் தர்க்க சாஸ்திரம் மீமாம்ச சாஸ்திரம் யோகசாஸ்திரம் வேதாந்த சாஸ்திரங்களும், இவைமுதலான இந்த வியஷ்டி சமஷ்டி தூலப்பிரபஞ்சத்தின்மேற் றோற்றுகிற சகல வித்தியாசங்களும், இதற்காதாரமான தூலப் பிரபஞ்சமும் சசவிஷாண வந்தியா புத்திர ககனாரவிந்த மித்தியா புருஷன்போலக் காலத்திரயத்திலுந் தனக்கில்லை. அஃதெப்படியென்னில் அஸ்தி மாம்சங்களைக்குறித்துத் தூலமென்று சொல்லுவோமென்றால் அவைகட்கு வெவ்வேறு நாமங்களிருக்கிறபடியினாலும், அவயவங்களைக் குறித்துத் தூலங்களென்று சொல்லுவோமென்றால் அவயவங்களுக்கும் வெவ்வேறு நாமங்களிருக்கிறபடியினாலும், குட்டை நெட்டையைக் குறித்துத் தூலங்களென்று சொல்லுவோமென்றால் குட்டை நெட்டைகளுக்கும் வெவ்வேறு நாமங்களிருக்கிற படியினாலும், பஞ்சீகிருத பஞ்ச மகாபூதங்களைக் குறித்துத் தூலங்களென்று சொல்லுவோமென்றால் பஞ்சீகிருத பஞ்ச மகாபூதங்களுக்கும் வெவ்வேறு நாமங்களிருக்கிறபடியினாலும் அந்தப் பஞ்ச மகாபூதங்களில் சத்த தன்மாத்திரையை விட்டு ஆகாசமில்லை. சத்த பரிச தன்மாத்திரையைவிட்டு வாயுவில்லை. சத்த பரிச

ரூபதன்மாத்திரையையன்றி அக்கினியில்லை. சத்தபரிசரூபரச தன்மாத்திரையையன்றி அப்புவில்லை. சத்தபரிசரூபரசகந்த தன்மாத்திரையையன்றி பிருதிவியில்லை. ஆனபடியினால் இந்தப் பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்கள் அபஞ்சீகிருதமான பஞ்ச தன்மாத்திரையைத் தவிர இல்லை. ஆதலால் இந்த அபஞ்சீகிருதமான பஞ்ச தன்மாத்திரைகளிடத்தில் அத்தியஸ்தமாய் தனக் கெதிராகத் தோற்றுகிற பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களென்கிற தூலபூதங்களும், இதினுடைய காரியமான பிரமாதி பிபீலிகாந்தமான சமஷ்டி வியஷ்டி தூலசரீரங்களும், இதன்மேல் அத்தியஸ்தமான நாமங்களும், இதைக்குறித்துவருகிற ஆபாசங்களும் சசவிஷாண வந்தியாபுத்திர ககனாரவிந்த மித்தியா புருஷன்போலக் காலத்திரயத்திலுந் தனக்கில்லவே இல்லை.

இத்தூல சரீரத்தின்பேரில் அத்தி யஸ்தமாய்த் தோற்றுகிற பிராமணத்துவஞ் சரீரத்தைக்குறித்துச் சொல்லுவோ மென்றால் சரீரம் க்ஷத்திரியாளுக்கு மிருக்கிறபடியினாலும், குடுமிபூணூலைக் குறித்துச்சொல்லுவோ மென்றால் அக்குடுமி பூணூல் மண்ணுடையானுக்கு மிருக்கிறபடியினாலும், அவயவங்களைக் குறித்துச் சொல்லுவோமென்றால் அவ்வவயவங்களுக்கு வெவ்வேறு நாமங்க ளிருக்கிறபடியினாலும், தாய் தகப்பன் பிராமணனானபடியினால் அவர்களைக்குறித்துச் சொல்லுவோமென்றால் தாய் தகப்பனாலுண்டான நக தந்த கேச மல மூத்திரங்களுக்கும் பிராமணத்துவம் வரவேண்டும். அப்படிவரவில்லையாதலால் இந்தப்பிராமணத்துவாதி நாமங்கள் பிள்ளைகள் விளையாட்டினாற் பெயர்வைத்துக் கொண்டாற்போலச் சொல்லப்பட்டதே யல்லாமற் பரமார்த்தமாகக் காலத்திரயத்திலுந் தனக் கில்லையென்று விவேகசாரமென்கிற கிரந்தத்தில் வாசுதேவசுவாமியார் நிரூபித்திருக்கிறதும், "பூபாலகா! விருக்ஷத்திற் றாரு உண்டாயிற்று; தாருவிற் பல்லக்குண்டாயிற்று; இதற்கு விருக்ஷமென்றுந் தாரு வென்றும் பெயரில்லை. உன்னைப் பல்லக்கி லேறிவருகிறா னென்று சொல்லுவார்களே யல்லாமல் இராசா விருக்ஷத்தின்பேரி லேறிவருகிறானென்றும், தாருவின்மே லேறிவருகிறானென்றும் ஒருவருஞ்சொல்லார்கள். பல்லக்குத் தாருவினாற் பண்ணப்பட்டதே யல்லாமல் வேறல்ல. அந்தத் தாருக்களைப் பிரத்தியேகமாய் விவகரித்துப்பார்த்து அதற்குப் பல்லக்கென்கிற பேர் உண்டோ வென்று விசாரியும். அதுவுமல்லாமல் இது அனேக மூங்கில் பிளாச்சுகளினாற் குறுக்கு நெடுக்குமாகப் போட்டுக் கட்டிக் குடையென்று சொல்லப்படுகின்றது. இந்தப் பிளாச்சுகளைப் பிரத்தியேகமாயெடுத்து விவகரித்துப் பார்த்தால் அது குடையென்றெப்படிச்சொல்லலாம்? இப்படியே பஞ்சபூத பரிணாம விசேஷத்தினால் உன் சரீரமென்றும், என் சரீரமென்றும் விவகரிக்கப்படுகின்றன. பூர்வகர்ம ஜந்யமான தேகங்களிற் பிரவேசித்த சீவனை ஸ்திரீயென்றும் புருஷனென்றும் யானையென்றும் குதிரையென்றும் பசுவென்றும் பட்சியென்றும் விவகரிக்கிறார்கள். இது லௌகிக பார்வை

யினு லல்லாமற் பாரமார்த்திகமான பார்வையில் இல்லை. அறிவே ஸ்வரூபமான ஆத்மா யக்ஷராக்ஷசர்கள்முதலான தேவ மனுஷிய பிராமண க்ஷத்திரிய வைசிய சூத்திராதிகளும், பசு பட்சியாதிகளென்கிற நாமங்களும் ஆத்மாவுக்குக் கர்மஜந்யமே யல்லாமற் சுபாவமா யில்லை. ஆனபடியினால் நான் இப்படிப் பட்டவனென்றெப்படிச் சொல்லலாம்? இராசா வென்றும் சேவகனென்றும் வன்னியனென்றும் விவகரிக்கப்படுகிற வஸ்துவெல்லாம் அசத்தென்றறியவேண்டும். எந்த வஸ்து காலாந்தரத்திற் பிறவியாய்ப் பேரிடப் படுகின்றதோ, அந்த வஸ்துவைச் சத்தென்று சொல்லப்படாது. நீயொருவனே தேசத்துக் கரசனென்றும், தகப்பனுக்குப் பிள்ளையென்றும், சத்துருவுக்குப் பகையாளியென்றும், பெண்சாதிக்குப் புருஷனென்றும், குமாரனுக்குத் தகப்பனென்றும் இப்படிச் சொல்லப்படுகிறபோது உன்னை யாரென்று நிச்சயிக்கலாம்? ஓ ராஜாவே! நீ தலையோ வயிறோ கையோ காலோ இந்த அவயங்களுக்குப் புறம்பான சூட்சும புத்தியினால் உன்னை யாரென்றுவிசாரித்துப்பார். தத்துவ நிச்சயம் இப்படியிருக்க இதரவித்தையினால் ஆத்மாவை யிப்படிப்பட்டதென் றெப்படிச்சொல்லலா''மென்று விஷ்ணுபுராணத்தில் விப்பிரோத்தமரான சடபரதர் சவ்வீர இராசனுக்கு உபதேசம் பண்ணியிருக்கிறதும், சத்த தன்மாத்திரையைத் தவிர ஆகாசமில்லை, சத்த பரிச தன்மாத்திரையைத் தவிர வாயுவில்லை, சத்த பரிச ரூப தன்மாத்திரையைத் தவிர அக்கினி யில்லை, சத்த பரிச ரூப ரச தன்மாத்திரையைத்தவிர அப்புவில்லை, சத்த பரிச ரூப ரச கந்த தன்மாத்திரையைத்தவிரப் பிருதிவியில்லை என்றாத்மா நாத்ம விவேகமென்கிற கிரந்தத்திற் சங்கராசாரிய சுவாமிகள் நிரூபித்திருக்கிறதும் பிரமாணமாம். ஆகையால் இதுவே சித்தம்.

தூலப்பிரகரணஞ் சம்பூரணம்.

---

## நான்காவது

# சூட்சுமப்பிரகரணம்.



முற்பிரகரணத்திற் பஞ்சீகிருத பஞ்ச மஹாபூதங்களையும், சமஷ்டி வியஷ்டி யாத்மகயான சரீரங்களையும், இதன்மேற் கற்பிதமான ஆபாசங்களையு முடைய தூலசரீரந் தான் அன்றென வியதிரேகஞ்செய்து, இதற்குக் காரணமானசூட்சும சரீரமுந் தான் அல்லவென்று நீக்குதற்பொருட்டுத் தன்ஸ்வரூபம் நிரூபிக்கிறார்.

(சுலோகம்.)

ஸச்சிதாநந்தஸ்வரூபாத்மந்யாரோபிதம் வபு: |
ஸூக்ஷ்மம் தஸ்ய ஸ்வரூபஞ்ச தாவதத்ர நிரூப்யதே || (௨௫)

(இ-ள்.) சச்சிதானந்த ஸ்வருபமான தன்னிடத்தில் ஆரோபிக்கப்பட்டது சூட்சுமசரீரம்; அதின் ஸ்வரூபம் நிரூபிக்கப்படுகின்றது.

அஃதெப்படியென்னில், சத்த தன்மாத்திரை சாத்விகாம்சஞ் சமஷ்டியிற் கூடினது ஞானம். சத்ததன்மாத்திரை ரசோம்சஞ் சமஷ்டியிற் கூடினது சமானவாயு. சத்ததன்மாத்திரை வியஷ்டி சாத்விகாம்சஞ் சுரோத்திரேந்திரியம். சத்ததன்மாத்திரை விஷயம். சத்த தன்மாத்திரை வியஷ்டி ரசோம்சம் வாக்கிந்திரியம். இந்த ஞானம், சமானவாயு, சுரோத்திரேந்திரியம், சத்தவிஷயம், வாக்கிந்திரியமாகிய இவ்வைந்துஞ் சத்ததன்மாத்திரையைத்தவிரவில்லை. பரிசதன்மாத்திரை சாத்விகாம்சம் சமஷ்டியிற்கூடினது மனது. பரிசதன்மாத்திரை ரசோம்சஞ் சமஷ்டியிற் கூடினது வியானவாயு. பரிசதன்மாத்திரை வியஷ்டிசாத்விகாம்சந் தொக்கேந்திரியம். பரிசதன்மாத்திரைவிஷயம். பரிசதன்மாத்திரை வியஷ்டி ரசோம்சம் பாணீந்திரியம். இந்தமனது, வியானவாயு, தொக்கேந்திரியம், பரிசவிஷயம், பாணீந்திரியமாகிய இவ்வைந்தும் பரிசதன்மாத்திரையைத்தவிரவில்லை. ரூபதன்மாத்திரை சாத்விகாம்சஞ் சமஷ்டியிற்கூடினது புத்தி. ரூபதன்மாத்திரை ரசோம்சஞ் சமஷ்டியிற்கூடினது உதானவாயு. ரூபதன்மாத்திரை வியஷ்டி சாத்விகாம்சம் நேத்திரேந்திரியம். ரூபதன்மாத்திரை விஷயம். ரூபதன்மாத்திரை வியஷ்டி ரசோம்சம் பாதேந்திரியம். இந்தப்புத்தி, உதானவாயு, நேத்திரேந்திரியம், ரூபவிஷயம், பாதேந்திரியமாகிய இவ்வைந்தும் ரூபதன்மாத்திரையைத் தவிர வில்லை. ரசதன்மாத்திரை சாத்விகாம்சஞ் சமஷ்டியிற் கூடினது சித்தம். ரசதன்மாத்திரை ரசோம்சஞ் சமஷ்டியிற் கூடினது அபானவாயு. ரசதன்

மாத்திரை வியஷ்டி ரஜோம்சஞ் சிருவேந்திரியம். ரசதன்மாத்திரை விஷயம். ரசதன்மாத்திரை வியஷ்டி ரஜோம்சங் குய்யேந்திரியம். இந்தச் சித்தம், அபானவாயு, சிருவேந்திரியம், ரசவிஷயம், குய்யேந்திரிய மாகிய இவ்வைந்தும் ரசதன்மாத்திரையைத் தவிர வில்லை. கந்ததன்மாத்திரை சாத்விகாம்சஞ் சமஷ்டியிற் கூடினது அகங்காரம். கந்ததன்மாத்திரை ரஜோம்சஞ் சமஷ்டியிற் கூடினது பிராணவாயு. கந்ததன்மாத்திரை வியஷ்டி சாத்விகாம்சங் கிராணேந்திரியம். கந்ததன்மாத்திரை விஷயம். கந்ததன்மாத்திரை வியஷ்டி ரஜோம்சங் குதேந்திரியம். இந்த அகங்காரம், பிராணவாயு, கிராணேந்திரியம், கந்தவிஷயம், குதேந்திரியமாகிய இவ்வைந்தும் கந்ததன்மாத்திரையைத்தவிர வில்லை. இந்த வாக்காதி கன்மேந்திரியங்களைந்தும், சத்தாதி விஷயங்களைந்தும், சுரோத்திராதி ஞானேந்திரியங்களைந்தும், பிராணாதி வாயுக்களைந்தும் ஞானம் நீங்கலாக மனாதி யந்தக்கரணங்கள் நான்கும் ஆக விந்த விருபத்துநான்குங்கூடிச் சூட்சும சரீரமாயிற்று.

(சுலோகம்.)

𑌪𑌂𑌚𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌦𑌶𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌸𑌮𑌨𑍍𑌵𑌿𑌤𑌂 |
𑌅𑌪𑌂𑌚𑍀𑌕𑍃𑌤𑌭𑍂𑌤𑍋𑌤𑍍𑌥𑌂 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌾𑌙𑍍𑌗𑌂 𑌭𑍋𑌗𑌸𑌾𑌧𑌨𑌂 || (௨௨)

(இ-ள்) பஞ்சப்பிராணனும், மனமும், புத்தியும், ஞானேந்திரியங்களும், கன்மேந்திரியங்களும் சூட்சுமசரீரமாம். இப்படி ஆசாரிய சுவாமிகள் ஆத்மபோதமென்கிற கிரந்தத்தில் நிருபிக்கிறார். ஆனபடியினால் இதுவே பிரமாணசித்தம். (௨௨)

ஆசாரியசுவாமிகள் ஆத்மபோதமென்கிற கிரந்தத்திற் சூட்சும சரீரம் பதினேழு தத்துவமென்று நிருபித்திருக்க, இருபத்துநான்கு தத்துவமென் றெப்படிச் சொல்லப்படுமென்றால், மனதிற் சித்தத்தையும், புத்தியில் அகங்காரத்தையு மடக்கிப் பஞ்சவிஷயங்களையும் நீக்கிப் பதினேழாகக்கூறினார். யாம் சித்தம் அகங்காரம் இவைகளின் குணம் வெவ்வேறாயிருக்கின்றபடியினாலும், இவ்விரண்டுஞ் சூட்சும சரீரத்துக்குக்காரணமான பஞ்சதன்மாத்திரைகள் விஷயரூபமாகத் தோன்றுகிறபடியினாலும், விஷயரூபமாகத் தோன்றுகிற பஞ்சதன்மாத்திரைகளைத்தவிரச் சூட்சுமசரீர மிராதபடியினாலும் இந்தவிஷயங்கள் ஐந்து, சித்தம் அகங்காரம் இரண்டு ஆக யேழையுங் கூட்டிச் சூட்சுமசரீர மிருபத்துநான்கென்று சொன்னது சித்தம்.

இப்படியே தன்னிடத்தில் அத்தியஸ்தமாய்த் தோற்றுகிற பஞ்சதன்மாத்திரையிலுள்ள விந்தச் சூட்சுமசரீரந் தானல்ல. இந்தச் சூட்சுமசரீரத்தை யறிந்த ஞானமே தான். அல்லதெப்படியென்னில், வாக்கு, பாணி, பாதம், குய்யம், குதங்க ளென்கிற கன்மேந்திரியங்களுக்கு வசன, தான, கமன, ஆனந்த, விசர்க்கமான விஷயங்க

ளுண்டாயிருந்தாலும், இந்தச் சுரோத்திரேந்திரியஞ் சத்தவிஷயத்தி ளுல் வாக்கிந்திரியத்தை யறிகிறது. தன்ளு லறியப்பட்ட இந்த வாக் கிந்திரியந் தன்னையறியமாட்டா தாகையாற் சடம். இந்த வாக்கிந்திரி யந் தானல்ல. இவ்வாக்கிந்திரியஞ் சத்ததன்மாத்திரை வியஷ்டி சாத் விகாம்சத்திஞு லானது. இதன் ஹானி விருத்திகளிஞுல் வருகிற சுக துக்கங்கள் தனக்கில்லை. இந்தவாக்கிந்திரியந் தாஞுல், இந்த வாக்கிந்திரியம் போஞற் ருன் போகவேண்டும். இந்த வாக்கிந்திரியம் போஞலுந் தான் போகவில்லை. ஆகையால் இந்தவாக்கிந்திரியத்தைச் சாட்சியா யறிந்த சுரோத்திரேந்திரியமே தான்.

இப்படியே தொக்கேந்திரியம் பரிசவிஷயத்திஞற் பாணீந்திரி யத்தை யறிகிறது. தன்ஞலறியப்பட்ட இந்தப்பாணீந்திரியந் தன்னை யறியமாட்டா தாகையாற் சடம். இந்தப்பாணீந்திரியந் தானல்ல. இந்தப்பாணீந்திரியம் பரிசதன்மாத்திரை வியஷ்டி ரசோம்சத்திஞு லானது. இந்தப்பாணீந்திரியத்திஞுடைய ஹானி விருத்திகளிஞுல் வருகிற சுகதுக்கங்கள் தனக்கில்லை. இந்தப்பாணீந்திரியமே தாஞுல் இந்தப்பாணீந்திரியம் போஞற் ருன் போகவேண்டும். இந்தப்பாணீந் திரியம் போஞலுந் தான் போகவில்லை. ஆகையிஞுல் இந்தப்பாணீந்தி ரியத்தைச் சாட்சியாயறிந்த தொக்கேந்திரியமே தான்.

இப்படியே நேத்திரேந்திரியம் ரூபதன்மாத்திரையிஞுல் பாதேந் திரியத்தை யறிகிறது. தன்ஞலறியப்பட்ட பாதேந்திரியந் தன்னை யறியமாட்டாதாகையாற் சடம். இந்தப் பாதேந்திரியந் தானல்ல. இந்தப்பாதேந்திரியம் ரூபதன்மாத்திரை வியஷ்டி ரசோம்சத்திஞு லானது. இந்தப் பாதேந்திரியத்திஞுடைய ஹானி விருத்திகளிஞுல் வருகிற சுகதுக்கங்கள் தனக்கில்லை. இந்தப்பாதேந்திரியமே தாஞுல் இந்தப் பாதேந்திரியம் போஞற்ருன் போகவேண்டும். இந்தப் பாதேந் திரியம் போஞலுந் தான் போகவில்லை. ஆனபடியிஞுல் இந்தப் பாதே ந்திரியத்தைச் சாக்ஷியாயறிந்த நேத்திரேந்திரியமே தான்.

இப்படியே சிகுவேந்திரியம் ரச விஷயத்திஞற் குய்யேந்திரிய த்தை யறிகிறது. தன்ஞல் அறியப்பட்ட குய்யேந்திரியந் தன்னை யறியமாட்டாது. ஆகையாற் சடம். இந்தக் குய்யேந்திரியந் தான ல்ல. இந்தக் குய்யேந்திரியம் ரசதன்மாத்திரை வியஷ்டி ரசோம்சத் திஞு லானது. இந்தக் குய்யேந்திரியத்திஞுடைய ஹானி விருத்திகளி ஞுல் வருகிற சுகதுக்கங்கள் தனக்கில்லை. இந்தக் குய்யேந்திரியமே தாஞுல் இக்குய்யேந்திரியம் போஞற் ருன்போகவேண்டும். இந்தக் குய்யேந்திரியம் போஞலுந் தான் போகவில்லை. ஆனபடியிஞுல் இக் குய்யேந்திரியத்தைச் சாட்சியாயறிந்த சிகுவேந்திரியமே தான்.

இப்படியே கிராணேந்திரியங் கந்த தன்மாத்திரையிஞற் குதேந் திரியத்தை யறிகிறது. தன்ஞல் அறியப்பட்ட குதேந்திரியந் தன்னை

யறியமாட்டாது. ஆகையாற் சடம். இந்தக் குதேந்திரியந் தானல்ல. இந்தக் குதேந்திரியங் கந்த தன்மாத்திரை வியஷ்டி ரசோம்சத்தினு லானது. இந்தக் குதேந்திரியத்தினது ஹானி விருத்திகளினால் வருகிற சுகதுக்கங்கள் தனக்கில்லை. இந்தக் குதேந்திரியமே தானானால் இந்தக் குதேந்திரியம் போனாற் றான் போகவேண்டும். இந்தக் குதேந்திரியம போனாலுந் தான் போகவில்லை. ஆனபடியினால் இந்தக் குதேந்திரியத்தைச் சாட்சியா யறிந்த கிராணேந்திரியமே தான்.

இந்தச் சுரோத்திரம், தொக்கு, சட்சு, சிகுவை, கிராண மென்கிற ஞானேந்திரியங்கள்: சத்த, பரிச, ரூப, ரச, கந்த தன்மாத்திரைகளினால் வாக்கு, பாணி, பாதம், குய்யம், குதங்க ளென்கிற கன்மேந்திரியங்களை யறிகின்றன. தன்னா லறியப்பட்ட கன்மேந்திரியங்கள் தானல்ல. இந்தக் கன்மேந்திரியங்கள் பஞ்சதன்மாத்திரை வியஷ்டி ரசோம்சத்தினு லானவை. ஆகையால் இந்தக் கன்மேந்திரியங்களுடைய ஹானி விருத்திகளினால் வருகிற சுகதுக்கங்கள் தனக்கில்லை. இந்தக் கன்மேந்திரியங்களே தானானால் இந்தக் கன்மேந்திரியங்கள் போனாற் றான் போகவேண்டும். இந்தக்கன்மேந்திரியங்கள் போனாலுந் தான்போகவில்லை. ஆனபடியினால் இந்தக்கன்மேந்திரியங்களைச் சாட்சியா யறிந்த ஞானேந்திரியமே தான்.

இப்படியே சுரோத்திரம், தொக்கு, சட்சு, சிகுவை, கிராணம் என்கிற ஞானேந்திரியங்களுக்குச் சத்த பரிச ரூப ரச கந்த தன்மாத்திரைகளென்கிற விஷயங்க ளுண்டாயிருந்தாலும், அகங்காரம் பிராணவாயுவோடேகூடிக் கிராணேந்திரியத்தைப் பற்றிக் கந்தத்தை யறிகிறது. இப்பிராணவாயு, கிராணேந்திரியம், கந்ததன்மாத்திரையாகிய இந்தமூன்றையும் அறிந்த அகங்காரமே தான். தன்னா லறியப்பட்ட இந்தமூன்றுந் தன்னை அறியமாட்டா; ஆகையால் சடம். இந்த மூன்றுந்தானல்ல. இந்தமூன்றுஞ் சமஷ்டி ரசோம்சத்தினாலும், வியஷ்டி சாத்விகாம்சத்தினாலு மானவை. இம்மூன்றினுடைய ஹானி விருத்திகளினால் வருகிற சுகதுக்கங்கள் தனக்கில்லை. இந்தமூன்றுந் தானானால் இந்தமூன்றும் போனாற் றான்போகவேண்டும். இந்தமூன்றும் போனாலுந் தான் போகவில்லை. ஆகையால் இந்தமூன்றையும் சாட்சியா யறிந்த அகங்காரமே தான்.

இப்படியே சித்தம் அபானவாயுவோடே கூடிச் சிகுவேந்திரியத்தைப்பற்றி ரசத்தையறிகிறது. ஆகையால் இந்த அபானவாயு, சிகுவேந்திரியம், ரசதன்மாத்திரையாகிய இம்மூன்றையும் அறிந்த சித்தமே தான். தன்னால் அறியப்பட்ட இந்தமூன்றுந் தன்னை யறியமாட்டா; ஆகையாற் சடம். இந்தமூன்றுந் தானல்ல. இந்தமூன்றும் ரசோம்ச சமஷ்டியினாலும், சாத்விகாம்ச வியஷ்டியினாலு மானவை. ஆகையா லிந்தமூன்றினுடைய ஹானி விருத்திகளினால வருகிற சுகதுக்கங்கள் தனக்கில்லை. இந்தமூன்றுமே தானானால் இந்தமூன்றும்

போனாற் றான்போகவேண்டும். இந்தமூன்றும் போனாலுந் தான் போகவில்லை. ஆகையால்இந்தமூன்றையுஞ்சாட்சியாய் அறிந்தசித்தமேதான்.

இப்படியே புத்தி உதானவாயுவோடேகூடி நேத்திரேந்திரியத்தைப்பற்றி ரூபத்தை யறிகிறது. இந்த வுதானவாயு, நேத்திரேந்திரியம், ரூப தன்மாத்திரையாகிய இந்த மூன்றையும் அறிந்த புத்தியே தான். தன்னால் அறியப்பட்ட விந்தமூன்றுந் தன்னை யறியமாட்டா; ஆகையாற் சடம். இந்த மூன்றுந் தானல்ல. இந்த மூன்றும் சமஷ்டி ரஜோம்சத்தினாலும், வியஷ்டி சாத்விகாம்சத்தினாலு மானவை. ஆகையா லிந்த மூன்றினுடைய ஹானி விருத்திகளினால் வருகிற சுகதுக்கங்கள்தனக்கில்லை. இந்த மூன்றுமே தானானால் இந்த மூன்றும் போனாற் றான்போகவேண்டும். இந்தமூன்றும் போனாலுந் தான் போகவில்லை. ஆனபடியினால் இந்த மூன்றையுஞ் சாட்சியாயறிந்த புத்தியே தான்.

இப்படியே மனது வியானவாயுவுடனேகூடித் தொக்கேந்திரியத்தைப்பற்றிப் பரிசத்தை யறிகிறது. ஆகையால் இந்த வியானவாயு, தொக்கேந்திரியம், பரிசவிஷயமாகிய இந்த மூன்றையும் அறிந்த மனமே தான். தன்னால் அறியப்பட்ட இந்த மூன்றுந் தன்னை யறியமாட்டா; ஆகையாற் சடம். இந்த மூன்றுந் தானல்ல. இந்த மூன்றும் பரிசதன்மாத்திரை சமஷ்டி ரஜோம்சத்தினாலும், வியஷ்டி சாத்விகாம்சத்தினாலு மானவை. ஆகையால் இந்த மூன்றினுடைய ஹானி விருத்திகளினால் வருகிற சுக துக்கங்கள் தனக்கில்லை. இந்தமூன்றுமே தானானால் இந்தமூன்றும் போனாற்றான்போகவேண்டும். இந்தமூன்றும் போனாலுந் தான் போகவில்லை. ஆகையால் இந்த மூன்றையுஞ் சாட்சியா யறிந்த மனமே தான்.

இப்படியே ஞானம் சமானவாயுவுடனேகூடிச் சுரோத்திரேந்திரியத்தைப்பற்றிச் சத்தத்தை யறிகிறது. ஆகையால் இந்தச்சமானவாயு, சுரோத்திரேந்திரியம், சத்த விஷயமாகிய இந்த மூன்றையும் அறிந்த ஞானமே தான். தன்னால் அறியப்பட்ட இந்தமூன்றுந் தன்னை யறியமாட்டா; ஆகையாற் சடம். இந்த மூன்றுந் தானல்ல. இந்த மூன்றுஞ் சத்ததன்மாத்திரை சமஷ்டி ரஜோம்சத்தினாலும், வியஷ்டி சாத்விகாம்சத்தினாலு மானவை. ஆகையால் இந்த மூன்றினுடைய ஹானி விருத்திகளினால் வருகிற சுக துக்கங்கள் தனக்கில்லை. இந்தமூன்றுமே தானானால் இந்த மூன்றும் போனாற் றான் போகவேண்டும். இந்தமூன்றும் போனாலுந் தான் போகவில்லை. ஆனபடியினால் இந்தமூன்றையுஞ் சாட்சியா யறிந்த ஞானமே தான்.

இந்தப் பிராணாதி வாயுக்களைந்து, சுரோத்திராதி ஞானேந்திரியங்களைந்து, சத்தாதி விஷயங்களைந்து, ஆகப் பதினைந்தையும் அறிந்த ஞானம், மனது, புத்தி, சித்தம், அகங்காரங்க ளென்கிற அந்தக்கரணங்களே தான். தன்னால் அறியப்பட்ட விந்தப் பதினைந்துந் தன்னை

யறியமாட்டா; ஆகையாற் சடம். இந்தப்பதினைந்துந் தானல்ல. இந்தப் பதினைந்தும் பஞ்சதன்மாத்திரை சமஷ்டி ரசோம்சத்தினாலும், வியஷ்டி சாத்விகாம்சத்தினாலுமானவை; ஆகையால் இந்தப் பதினைந்தினுடைய ஹானி விருத்திகளினால் வருகிற சுகதுக்கங்கள் தனக்கில்லை. இந்தப்பதினைந்துந் தானானால் இந்தப்பதினைந்தும் போனாற் றான் போகவேண்டும். இந்தப்பதினைந்தும்போனாலுந்தான்போகவில்லை. ஆகையால் இந்தப் பதினைந்தையுஞ் சாட்சியாயறிந்த அந்தக்கரணங்களேதான்.

இப்படியே மனமென்றறிந்த ஞானமே தான். தன்னால் அறியப்பட்ட மனது தன்னையறியமாட்டாது; ஆகையாற் சடம். இந்த மனது தானல்ல. இந்த மனது பரிச தன்மாத்திரை சமஷ்டி சாத்விகாம்சத்தினாலானது. இந்த மனதினுடைய ஹானி விருத்திகளினால் வருகிற சுக துக்கங்கள் தனக்கில்லை. இந்த மனமே தானானால் இந்தமனது போனாற் றான் போகவேண்டும். இந்த மனது போனாலுந் தான் போகவில்லை. ஆகையால் இந்தமனதைச் சாட்சியா யறிந்த ஞானமே தான்.

இப்படியே புத்தி யென்றறிந்த ஞானமே தான். தன்னால் அறியப்பட்ட புத்தி தன்னை யறியமாட்டாது; ஆகையாற் சடம். இந்தபுத்தி தானல்ல. இந்தப்புத்தி ரூபதன்மாத்திரை சமஷ்டி சாத்விகாம்சத்தினாலானது. ஆகையால் இந்தப்புத்தியினுடைய ஹானி விருத்திகளினால் வருகிற சுகதுக்கங்கள் தனக்கில்லை. இந்தப்புத்தியே தானானால் இந்தப்புத்தி போனாற் றான் போகவேண்டும். இந்தப்புத்தி போனாலுந் தான் போகவில்லை. ஆகையால் இந்தப் புத்தியைச் சாட்சியா யறிந்த ஞானமே தான்.

இப்படியே சித்தமென்றறிந்த ஞானமே தான். தன்னால் அறியப்பட்ட சித்தந் தன்னை யறியமாட்டாது; ஆகையாற் சடம். இந்தச் சித்தந் தானல்ல. இந்தச்சித்தம் ரசதன்மாத்திரை சமஷ்டி சாத்விகாம்சத்தினாலானது. ஆகையால் இந்தச் சித்தத்தினுடைய ஹானி விருத்திகளினால் வருகிற சுகதுக்கங்கள் தனக்கில்லை. இந்தச் சித்தமே தானானால் இந்தச் சித்தம்போனாற் றான் போகவேண்டும். இந்தச் சித்தம் போனாலுந் தான் போகவில்லை. ஆகையால் இந்தச் சித்தத்தைச் சாட்சியாயறிந்த ஞானமே தான்.

இப்படியே அகங்காரமென் றறிந்த ஞானமே தான். தன்னால் அறியப்பட்ட அகங்காரந் தன்னையறியமாட்டாது; ஆகையாற் சடம். இந்த அகங்காரந் தானல்ல. இந்த அகங்காரங் கந்தன்மாத்திரை சமஷ்டி சாத்விகாம்சத்தினாலானது. ஆகையால் இந்த அகங்காரத்தினுடைய ஹானி விருத்திகளினால் வருகிற சுக துக்கங்கள் தனக்கில்லை. இந்த அகங்காரமே தானானால் இந்த அகங்காரம் போனாற் றான் போகவேண்டும். இந்த அகங்காரம் போனாலுந் தான் போகவில்லை. ஆனபடியினால் இந்த அகங்காரத்தைச் சாட்சியா யறிந்த ஞானமேதான்.

இந்த மனம், புத்தி, சித்தம், அகங்காரங்களின் சமுசய, நிச்சய, சாஞ்சல்ய, அபிமானங்களை யறிந்த ஞானமே தான். தன்னால் அறியப்பட்ட இந்நான்குந் தன்னை யறியமாட்டா; ஆகையாற் சடம். இந்த நான்குந் தானல்ல. இந்நான்கும் பரிச, ரூப, ரச, கந்த தன்மாத்திரைகளினுடைய சமஷ்டி சாத்விகாம்சத்தினா லானவை. இந்த நான்கினுடைய ஹானி விருத்திகளினால் வருகிற சுக துக்கங்கள் தனக்கில்லை. இந்நான்குமே தானானால் இந்நான்கும் போனாற் றான் போகவேண்டும். இந்நான்கும் போனாலுந் தான்போகவில்லை. ஆகையால் இந்த நான்கையுஞ் சாட்சியா யறிந்த ஞானமே தான். வசன, தான, சமன, ஆநந்த, விசர்க்கம் இவைகளைப் பண்ணுகிற கிரியாசத்தியான கன்மேந்திரியங்களைந்தும், சத்தாதி விஷயங்களைந்தும், இந்த விஷயங்களைக் கிராசத்தியான ஞானேந்திரியங்களைந்தும், உசுவாச ரூபமான பிராணவாயுவும், நிசுவாசரூபமான அபானவாயுவும், முழங்கப்படுகிறதுந் தும்முகிறதும் இருமுகிறதுங் கண் திறக்கிறதும் மூடுகிறதுமான வுதானவாயுவும், புசித்த அன்னத்தை வியாபிக்கப்பண்ணுகிற வியானவாயுவும், புசித்த பதார்த்தத்தைச் சமானமாகப்பண்ணுகிற சமானவாயுவும், இப்படிப்பட்ட கிரியாசத்தியான பிராணாதிவாயுக்களைந்தும், இவைகளை அறிகிற அந்தக்கரணங்கள் நான்கும் ஆக விருபத்துநான்குந் தன்னை யறியமாட்டா ஆகையாலும், பிறவற்றை அறியாவிட்டாலும் தமமையேனுந் தாம் அறியுமோவெனில் அப்படியும் அறியாதபடியினாலும் கிராகசத்தி கிரியாசத்திகளா யிருக்கிறபடியினாலும், சடங்களானபடியினாலும் இந்த விருபத்துநான்கு தத்துவங்களுந் தானல்ல. இந்த இருபத்துநான்கு தத்துவங்களும் பஞ்சதன்மாத்திரையினுடைய சமஷ்டி வியஷ்டி ராஜச சாத்விகாம்சத்தினாலானவை. இந்த இருபத்துநான்கு தத்துவங்களினுடையஹானி விருத்திகளினால் வருகிற சுக துக்கங்கள் தனக்கில்லை. இந்த விருபத்துநான்கு தத்துவமுந் தானானால் இந்த விருபத்துநான்கு தத்துவமும் போனாற் றான்போகவேண்டும். இந்த விருபத்துநான்கு தத்துவம்போனாலுந் தான் போகவில்லை. எப்படிப் போகவில்லையென்றால் நித்திரையில இந்த விருபத்துநான்கும் இல்லாமற்போனாலுந் தான் காரணாத்மகமா யிருந்துகொண்டு திரும்பவும் விருத்திவந்து விழித்தவுடன் இந்த விருபத்துநான்கு தத்துவமுமில்லாமற் சுகமாயிருந்தேனென்று தானிருந்த அனுபவஞ் சொல்லுகிறானபடியினாலும்,இந்த விருபத்துநான்கு தத்துவமுந் தானல்ல; இந்த விருபத்துநான்கு தத்துவங்களும் க்ஷேத்திரம்; இந்த விருபத்துநான்கு தத்துவங்களையு மறிந்த ஞானமே க்ஷேத்திரக்ஞன். இந்த விருபத்துநான்கு தத்துவங்களும் அநாத்மா; இந்த விருபத்துநான்கு தத்துவங்களை யறிந்த அறிவே ஆத்மா. இந்த விருபத்துநான்கு தத்துவங்களும் பிரகிருதி; இந்த விருபத்துநான்கு தத்துவங்களையு மறிந்த அறிவே புருஷன்.

(சுலோகம்.)

𑌰𑍂𑌪𑌂𑌦𑍃𑌶𑍍𑌯𑌂𑌲𑍋𑌚𑌨𑌂𑌦𑍃𑌕𑍍𑌤𑌦𑍍𑌦𑍃𑌶𑍍𑌯𑌂𑌦𑍃𑌕𑍍𑌤𑍁𑌮𑌾𑌨𑌸𑌂 |
𑌦𑍃𑌶𑍍𑌯𑌾𑌧𑍀𑌵𑍃𑌤𑍍𑌤𑌯𑌃𑌸𑌾𑌕𑍍𑌷𑍀𑌦𑍃𑌗𑍇𑌵𑌨𑌤𑍁𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 || (௨௯)

(இ-ள்) ரூபந் திரிஸ்யம்; கண் திருக்கு. அக்கண் திரிஸ்யம்; மனந் திருக்கு. அம்மனந் திரிஸ்யம்; ஆத்மா திருக்கு. அவ்வாத்மா திரிஸ்ய மாகமாட்டாது (௨௯)

என்று வித்தியாரண்ணிய சுவாமிகள் சொல்லியிருக்கிறபடியினாலும், சுருதிகளிலும் இவ்வாறேசொல்லியிருக்கிறபடியினாலும் இதுவே பிரமாணசித்தம்.

இந்தக்ஷேத்திரஞ்ஞனை தானே சமஷ்டி சூட்சும சரீரங்களிலும், இவைகளுக்குக் காரணமான அபஞ்சீகிருதமான பஞ்சதன்மாத்திரைகளிலும் அநுசூதமாயிருந்துகொண்டு சாட்சியாய் அறிகிறானபடியினாலும், இந்தச் சமஷ்டி வியஷ்டியான சூட்சுமசரீரங்களும், இவைகளுக்குக் காரணமான அபஞ்சீகிருத பஞ்சதன்மாத்திரைகளுந் தானல்ல; தனக் கெதிராய்த் தோற்றுகிற விந்தச் சமஷ்டி வியஷ்டியான சூட்சுமசரீரங்களிடத்திலும், இவைகட்குக் காரணமான பஞ்சதன்மாத்திரைக ளிடத்திலும் அத்தியஸ்தமாய்த் தோற்றுவதைத் தைசதனென்றும், சொப்பன கற்பிதனென்றும, பிராதிபாதிகனென்றும, இரணிய கர்ப்பனென்றும், மஹாப்பிராணனென்றும், சூத்திராத்மாவென்றும், அபிமானத்துவமும், சொப்பனுவத்தையும், கண்டஸ்தானமும், சுயேச்சாபோகமும், உகாரமாத்திரையும், சாத்விக குணமும், இச்சாசத்தியும், விஷ்ணு மூர்த்தியும், பிராணமயகோசமும, மனோமயகோசமும், விஞ்ஞானமய கோசமும், நான் வார்த்தைசொல்லுகிறவன், நான் தாதா, நான் நடக்கிறவன், நான் சலவிசர்ச்சனம் பண்ணுகிறவன், நான் ஊமை, நான் நொண்டி, நான் மூடவன், நான் பத்தன், நான் பண்டகனென்கிற கன்மேந்திரியங்களுடைய கிரியா அத்தியாசங்களும்; நான் கேட்கிறவன், நான் பரிசிக்கிறவன், நான் பார்க்கிறவன், நான் ருசியறிகிறவன், நான் வாசனையறிகிறவன், நான் செவிடன், நான் மரத்துப்போயிருக்கிறவன், நான் குருடன், நான் ருசியறியாதவன், நான் மூக்கறையனென்கிற ஞானேந்திரியங்களுடைய கிராகாத்தியாசங்களும்; நான் சீவிக்கிறவன், நான் சஞ்சரிக்கிறவன், நான் சத்தியுடையவன், நான் வீரியமுடையவன், நான் பசித்தவனென்றும், நான் தாகித்தவனென்றும், நான் வாயுவேகனென்றும், நான் பலமுடையவனென்றும், நான் அம்பரையான சித்தன், நான் அடயோகி, நான் லயயோகியென்றும், நான் கண்மூடிறந்து மூடுகிறவன், நான் நிர்மிக்கிறவன், நான் தும்முகிறவன், நான் கொட்டாவி விடுகிறவன்,' நான் விழுங்குகிறவனென்றும், நான் வாந்தி பண்ணுகிறவன், நான் சீரணம் பண்ணிக்கொள்ளுகிறவன், நான் எப்ப

மிடுகிறவனென்றும் இவை முதலாகிய பஞ்சப்பிராணங்களுடைய கிரியாத்தியாசங்களும்; நான் சங்கற்பவர்த்தன், நான் மனோவேகி, நான்போகி, நான் மந்திரயோகி, நான் சோகி, நான் ராகி, நான்மோகி, நான் துவேஷி, நான் காமி, நான் சமுசயமுள்ளவனென்றும், நான் புத்திவந்தன், நான் விவேகி, நான் மகாபுத்தியுள்ளவன், நான் ஏகசந்தக்கிராகி, நான் கர்த்தா, நான் நிச்சயவந்தன், நான் விருத்தன், நான் பண்டிதன், நான் லோகாந்தரகாமியென்றும், நான் சஞ்சலன், நான் சபலன், நான் சிந்தகனென்றும், நான் அகங்காரி, நான் உக்கிரன், நான் வீரன, நான் சூரன், நான் அபிமானியென்கிற இவைமுதலான அந்தக்கரணங்களுடைய கிராகாத்தியாசங்களும்; உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதங்களென்கிற வேதசுரங்களும், சத்தசுரங்களும், ராககீதங்களும், பேரி, மிருதங்க, சங்க, பணவ, கோமுகாதி வாத்தியங்களும், சதுர்வித பேத சத்தங்களும், விலாப, பிரலாப, அர்லாப, பருஷாலாப, காடின்னியாலாப சோகாதி துக்கசத்தங்களும், அஷ்டாதச பாஷைகளும், இன்னும் இவைமுதலான சத்தங்களுடைய அத்தியாசங்களும், சீத உஷ்ண மிருது கடின தாரதம்மியாதி பரிசத்தினுடைய அத்தியாசங்களும், நீல பீத சுவேத ரக்த அரிசன முதலான தாரதம்மியாதி ரூபத்தினுடைய அத்தியாசங்களும், உப்பு புளிப்பு கைப்பு தித்திப்பு துவர்ப்பு முதலான ரச தாரதம்மியமான ருசியினுடைய அத்தியாசங்களும், சுகந்த துர்க்கந்த மிஸ்ரகந்த தாரதம்மியாதி வாசனைகளினுடைய அத்தியாசங்களும், இந்தச்சூட்சமப் பிரபஞ்சத்தைக்குறித்துச் சொல்லப்பட்ட சப்தசாஸ்திர தர்க்கசாஸ்திர மீமாம்ச சாஸ்திரங்களும், இன்னுஞ் சமஷ்டி வியஷ்டியாயுண்டான அநேக அத்தியாசங்களும், இன்னும் இவைமுதலான இந்தச்சூட்சமப் பிரபஞ்சத்தின்பேரிற்றோற்றுகிற சகல அத்தியாசங்களும், இதற்காதாரமான சூட்சமப்பிரபஞ்சமும் சசவிஷாண வந்தியாபுத்திர ககனாரவிந்த மித்தியா புருஷன்போலக் காலத்திரயத்திலுந் தன்னிடத்தி லில்லை. இந்த இருபத்துநான்கு தத்துவங்களைக் குறித்துச் சூட்சம சரீரமென்று சொல்லுவோமென்றால், இந்த இருபத்துநான்கு தத்துவங்களும் விருத்திரூபமாய் வெவ்வேறு நாமங்களா யிருக்கிறபடியினாலும், ஞானம் சமானவாயு சுரோத்திரேந்திரியம் வாக்கிந்திரியம் ஆகிய இந்த நான்கு விருத்தியும் சத்த தன்மாத்திரையைத் தவிர இல்லாதபடியினாலும், மனது வியானவாயு தொக்கேந்திரியம் பாணீந்திரியம் ஆகிய இந்நான்கு விருத்தியும் பரிசதன்மாத்திரையைத்தவிர இல்லாதபடியினாலும், சித்தம் அபானவாயு ஜிகுவேந்திரியம் குய்யேந்திரியம் ஆகிய இந்நான்குவிருத்தியும் ரச தன்மாத்திரையைத்தவிர இல்லாதபடியினாலும், அகங்காரம்பிராணவாயுகிராணேந்திரியம் குதேந்திரியம் ஆகிய இந்நான்குவிருத்தியும் கந்ததன்மாத்திரையைத்தவிர இல்லாதபடியினாலும், இந்தப்பஞ்சதன்மாத்திரைகளைப் பிரத்தியேகமாய் விவகரித்துப்பார்க்குமிடத்தில், அகங்கார தத்துவமென்கிற அவஸ்தையில்

அத்தியஸ்தமாய்த் தன்னிடத்தில் எதிராய்த் தோற்றுகிற அபஞ்சீகிருதமான பஞ்சதன்மாத்திரைகளும், இவைகளுக்குக் காரியமான சூட்சுமப்பிரபஞ்சமும், இதனிடத்தில் அத்தியஸ்தமாய்த் தோற்றுகிற நாமங்களும, இதைக்குறித்துவந்த ஆபாசங்களும் சசவிஷாண வந்தியாபுத்திர ககனாரவிந்த மித்தியாபுருஷன்போலக் காலத்திரயத்திலுந் தனக்கில்லை.

(சுலோகம்.)

[illegible] |
[illegible] || (௨௪)

(இ-ள்.) பஞ்சபூத ஸ்வரூபமான பிரபஞ்சங் கானற்சலத்துக் கொப்பானது. நானே யெங்கும் பரிபூரணமாயிருக்கிறேன் யாருக்கு நமஸ்காரம்? (௨௪)

என்றும்,

(சுலோகம்.)

[illegible] | [illegible] || (௨௫)

(இ-ள்.) சித் ஸ்வரூபமாயும், சர்வேசுவரனாயும், சாசுவதமாயுமிருக்கின்ற ஆத்மஸ்வரூபத்தை மனதும், புத்தியும், அகங்காரமும், பஞ்ச தன்மாத்திரையும், பஞ்சமகாபூதங்களும், சரீரமும் அடையமாட்டாது (௨௫)

என்றும் அவதூதகீதை முதலியசாஸ்திரங்களில் தத்தாத்திரயயோகீசுவர முதலிய பெரியோர்கள் சொல்லியிருக்கிறபடியாலும் இதுவே பிரமாண சித்தம்.

சூட்சுமப்பிரகரணஞ் சம்பூரணம்.

---

ஐந்தாவது

# காரணப்பிரகரணம்.



முற்பிரகரணத்திற் சங்கற்ப ரூபமான சூட்சும சரீரத்தையும், அதற் காதாரமான பஞ்ச தன்மாத்திரைகளையும் நியதிகளைந்து அவை கட் காதாரமான அவித்தையை நியதிகளைதற்பொருட்டு அதன்மய மான காரணசரீர ஸ்வரூபம் நிரூபிக்கிறார்.

(சுலோகம்.)

𑌸𑌚𑍍𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌰𑍋𑌪𑌿𑌤𑌂 𑌵𑌪𑍁𑌃 ।
𑌕𑌾𑌰𑌣𑌂 𑌤𑌤𑍍𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌤𑍁 𑌤𑌾𑌵𑌦𑌤𑍍𑌰 𑌨𑌿𑌰𑍂𑌪𑍍𑌯𑌤𑍇 ॥ (உசா)

(இ-ள்.) சத்சிதானந்த ஸ்வரூபமான தன்னிடத்திலாரோபிக்கப் பட்ட காரணசரீர ஸ்வரூபமானது நிரூபிக்கப்படுகிறது. (உசா)

காரணசரீரமாவது பஞ்சதன்மாத்திரைகள் பிரத்தியேகம் பிரத்தியேகமாய் விவகரித்துப் பார்க்குமிடத்திற் சசவிஷாண வந்தியாபுத்திர ககனாவிந்த மித்தியா புருஷன்போலவே ஒன்றுமில்லாமற் போனபடியினால் இதுவும் ஒன்றுமில்லையென்றறிக. இந்தக்காரணசரீரத்துக்கு அகங்காரத்துவமென்றும், அவித்தையென்றும், தமசென்றும், தூல சூட்சும சரீரங்களுக்குக் காரணமென்றும், ஒன்றுந் தெரியாமையென்றும், ஒன்றுந் தோன்றாமையென்றும், பிராந்தியென்றும் இவை முதலான பரியாய நாமங்கள் இடப்பட்டிருக்கின்றன.

(சுலோகம்.)

𑌅𑌨𑌾𑌦𑍍𑌯𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌚𑍍𑌯𑌯𑌾 𑌕𑌾𑌰𑌣𑍋𑌪𑌾𑌧𑌿𑌰𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌉𑌪𑌾𑌧𑌿𑌤𑍍𑌰𑌯𑌾𑌦𑌨𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌵𑌧𑌾𑌰𑌯𑍇𑌤𑍍 ॥ (உஎ)

(இ-ள்.) அநாதியாயும், அநிர்வாச்சியமாயு மிருக்கின்றபடியாற் காரணோபாதியென்று சொல்லப்பட்டது. இம்மூன்று உபாதிகளுக்கும் அன்னியமாய் ஆத்மாவை யறியவேண்டியது (உஎ)

என்று ஆசாரியசுவாமிகள் ஆத்மபோதமென்கிற கிரந்தத்தில் நிரூபித்திருக்கிறார். ஆனபடியினால் இதுவே பிரமாணசித்தம்.

தன்னிடத்தில் அத்தியஸ்தமாய்த் தோற்றுகிற இந்தக் காரண சரீரந் தானல்ல. அதெப்படித் தானல்லவென்றால், தன்னால் அறியப்பட்ட இந்தக் காரணசரீரந் தன்னை யறியமாட்டாது; ஆகையாற்

சடம். இந்தக்காரணசரீரந் தானல்ல. இந்தக் காரணசரீரத்தினுடைய ஹானி விருத்திகளினால் வருகிற சுக துக்கங்கள் தனக்கில்லை. இந்தக் காரணசரீரமே தானானால் இந்தக்காரணசரீரம்போனாற் றான் போகவேண்டும். இந்தக் காரணசரீரம் போனாலுந் தான் போகவில்லை. அதெப்படிப் போகவில்லையென்றால் சமாதியவஸ்தையிற் காரணசரீரம் போனாலுந் திரும்பவும் விருத்தி வந்தபின்பு சுகமா யிருந்தேனென்று சொல்லுகிறா னபடியினால் இந்தக் காரணசரீரந் தானல்ல. இந்தக் காரணசரீரத்தைச் சாட்சியாயறிகிற ஞானமே தான். இந்தக் காரணசரீரத்துக்குச் சாட்சியாய்ச் சமஷ்டி காரணசரீரங்களிலேயும் அநுசூதமாயிருந்து அறிகிற ஞானமே தான். தன்னால் அறியப்பட்ட இந்தச் சமஷ்டி காரணசரீரந் தன்னை யறியமாட்டாது; ஆகையாற் சடம். இந்தச் சமஷ்டி காரணசரீரந்தானல்ல. இப்படித்தனக் கெதிராய்த்தோற்றுகிற சமஷ்டி வியஷ்டியான காரணசரீரத்தின்பேரில் அத்தியஸ்தமாய்த் தோற்றுகிற பிராஞ்ஞன், பாரமார்த்திகன், அவச்சின்னன், அவ்வியாகிருதனென்கிற அபிமானித்துவமும், சுழுத்தியவஸ்தையும், ஆனந்தமயகோசமும், தாமசகுணமும், ஆத்மானந்தபோகமும், ஞானசத்தியும், ருத்திரமூர்த்தியும், இருதயஸ்தானமும், மகாரமாத்திரையும்; நான் போத்துரு, நான் சந்துஷ்டன், நான் சாத்விகன், நான் ராசசன், நான் தாமசன், நான் சடன், நான் அனுர்தன், நான் அஞ்ஞானி, நான் மூடன், நான் சந்தன், நான் சுண்டன், நான் மோகி, நான் விவேகி, நான் பிராந்தன், நான் பாபிஷ்டன், நான் சோம்பன், நானொன்றுக்கும் ஆகாதவன், நானெறிந்துபோடப்பட்டவன், நான்கெட்டுப்போனவன், நான் வெறியன், நான்கையாலாகாதவ னென்கிற பிராந்திஜந்தியாத்தியாசத்துவமும்; இந்தக் காரணசரீரத்தைக் குறித்துச் சொல்லப்பட்ட தத்தசாஸ்திரம், யோகசாஸ்திரம் வேதாந்தசாஸ்திர முதலிய சாஸ்திரங்களும், சமஷ்டி வியஷ்டியென்கிற அத்தியாசங்களும், இன்னும் இவை முதலான இந்தக் காரணப் பிரபஞ்சத்தின்பேரிற் றோற்றுகிற சகல அத்தியாசங்களுந் சசவிஷாண வந்தியாபுத்திர ககனாரவிந்த மித்தியாபுருஷன்போலவே காலத்தியத்திலுந் தனக்கில்லை. அதெப்படித் தனக்கில்லையென்றால் அதனைத் திருஷ்டாந்த பூர்வகமாகச் சொல்லுகிறோம். கடத்தைக் குறித்து வந்த கடாபாவங் கடத்தைத்தவிர எப்படி யில்லையோ, அப்படியே பிரபஞ்சத்தைக் குறித்துவந்த பிரபஞ்சாபாவமும் பிரபஞ்சத்தைத் தவிர வில்லை. ஆகையால் இதனிடத்தில் அத்தியஸ்தமாய்த் தோற்று

கிற பிராந்தி ஜந்நிய நாமங்களும், இதைக்குறித்துவந்த ஆபாசங்களும் சசவிஷாண வந்தியாபுத்திர ககனாரவிந்த மித்தியா புருஷன் போலவே காலத்திரயத்திலுந் தன்னிடத்தில் இல்லை சித்தம்.

(சுலோகம்.)

தேஹேந்த்ரியமநோபுத்திப்ரக்ருதிப்யோ விலக்ஷணம் |
தத்வ்ருத்திஸாக்ஷிணம் வித்யாதாத்மாநம் ராஜவத்ஸதா || (உஅ)

(இ-ள்.) தேகம், இந்திரியம், மனது, புத்தி, பிரகிருதி இவைகளுக்கு விலக்ஷணமாயும், அவைகளின் விருத்திகளுக்குச் சாட்சியாயும், இராசாவைப்போல எங்குஞ் சம்பந்தமில்லாததாயும் இருக்கிற ஆத்மாவை யறியவேண்டியது (உஅ)

என்று ஆசாரியசுவாமிகள் ஆத்மபோதமென்கிற கிரந்தத்தில் நிரூபித்திருக்கிறார்; ஆனபடியினால் இதுவே பிரமாணசித்தம்.

காரணப்பிரகரணஞ் சம்பூரணம்.

## ஆருவது

# மகாகாரணப்பிரகரணம்.



முற்பிரகரணத்தில் அவித்தியாமயமான காரண சரீரத்தை நியதிகளைந்து அதற்காதாரமான வித்தையை நியதி களைதற்பொருட்டு அதன்மயமான மஹாகாரணசரீர ஸ்வரூபம் நிரூபிக்கிருர்.

(சுலோகம்.)

ஸச்சிதாநந்தஸ்வரூபே ஸ்வாத்மந்யாரோபிதம்வபு: |
மஹாகாரணஸம்ஜ்ஞம் தத்ஸ்வரூபம் நிரூப்யதே || (௨௯)

(இ-ள்.) சச்சிதானந்த ஸ்வரூபமானதன்னிடத்தில் ஆரோபிக்கப்பட்டது மகாகாரண சரீரம். அதனுடைய ஸ்வரூபமானது நிரூபிக்கப்படுகிறது. (௨௯)

அதெப்படியெனில் தமோகுணப்பிரதானமான அகங்கார தத்துவமென்கிற காரணசரீரம் போனபின்பு சுத்த சத்துவகுணப் பிரதானமான பிரத்தியகாத்மாவுக்கே மகாகாரண சரீரமென்றுபேர். இந்தப்பிரத்தியகாத்துமா வென்கிற மகாகாரண சரீரத்துக்கே சித்தென்றும், சைதன்யமென்றும், போதமென்றும், கூடஸ்தனென்றும், ஞானமென்றும், சாக்ஷியென்றும், திருக்கென்றும், கிரிசியானுவித்தமென்றும் இன்னும் இவை முதலான பரியாய நாமங்கள் சொல்லப்படுகின்றன.

(சுலோகம்.)

மாயோபாதிர்ஜகத்ஹேது: ஸர்வஜ்ஞத்வாதிலக்ஷண: |
பரோக்ஷ: ஸபலோ ஸத்யஸ்தத்பதார்த்த ஈஶ்வர: || (௩௰)

(இ-ள்.) மாயோபாதிகனும், சகத்துக்குக் காரணனும், சர்வஞ்ஞத்துவம் முதலான லக்ஷணங்களோடு கூடினவனும், பரோக்ஷனும், சபளனுமாயிருக்கின்ற ஈசுவரனே தத்பதார்த்தமாம் ( )

என்று ஆசாரியசுவாமிகள் வாக்கியவிருத்தி யென்கிற கிரந்தத்தில் நிரூபித்திருக்கிருர்; ஆனபடியினால் இதுவே பிரமாண சித்தம். பின்னும் இந்தப்பிரத்தியகாத்துமாவான சாக்ஷியே சாட்சியமான சகத்ரூபமாய்த்தோற்றுகிறபடியினால் இந்தச்சகத்து ரூபமாய்த் தோற்றுகிற மகாகாரணசரீரமான பிரத்திய காத்மாவுக்கே அகண்டாகார விருத்தியென்றும், ஆனந்தவிருத்தியென்றும், சம்பிரஞ்ஞாத சமாதியென்றும், சத்தானுவித்தமென்றும், ஓங்காரமென்றும், பிரணவமென்றும், போதாங்குரமென்றும், தோணலென்றும், கிரியாசத்தி

யென்றும், சிற்சத்தியென்றும், பிரதமாபாசமென்றும், அசங்க சச்சிதானந்த சொப்பிரகாச நித்த சுத்த புத்த நின்மல நிராகார நிருபத்திரவ நிர்ச்சங்க நிர்விகார நிர்விகற்ப நிராலம்ப அகண்டானந்த பரிபூரணாநந்த நித்தியாநந்த நிருவிசேஷானந்த ஸ்வரூப பாவமென்கிற சத்தானுவித்த சவ்விகற்பசமாதியென்றும் இன்னும் இவைமுதலாய மகத்தான பரியாயநாமங்கள் சொல்லப்படுகின்றன.

(சுலோகம்.)

[illegible] |
[illegible] || (௫-௧)

(இ-ள்.) சிதாகாசஸ்வரூபமாயும், சர்வஸ்வரூபமாயும், அகண்டாகாரமாயும், நிரந்தரமாயும், நிராகாரமாயும், ஏகமாயு மிருக்கின்ற பிரமத்தைப் பாவனம் பண்ணு (௫-௧)

என்று வாசிட்ட ராமாயணமென்கிற கிரந்தத்தில் ஸ்ரீராமரைப் பார்த்து வசிட்டர் உபதேசம் பண்ணியிருக்கிறா ரானபடியினாலும் இவ்வாறு சுருதிகளிலும் சொல்லப்பட்டிருக்கிறபடியினாலும் இதுவே பிரமாண சித்தம்.

இவை முதலான வியஷ்டி சமஷ்டி அகண்டாகார விருத்திகளுடைய பரியாய நாமங்களோடு கூடியிருக்கிறதே மூலப்பிரகிருதியென்கிற மகாகாரணசரீரம். தன்னிடத்தில அத்தியஸ்தமாய்த் தோற்றுகிற இந்த மகாகாரணசரீரந் தானல்ல. எப்படித் தானல்லவென்றால், தூஷ்ணீம் பூதாவத்தையில் இந்த மகாகாரணசரீர மில்லாமற் போனாலுந் தானென்கிற பிரதீதி யில்லாமற் றான் யிருக்கிறபடியினால் இந்தமகாகாரணசரீரந் தானல்ல. இந்த மகாகாரண சரீரத்தின்மேரில் அத்தியஸ்தமாய்த் தோற்றுகிற சர்வஞ்ஞனென்றும், திரிகாலவேதியென்றும், தானே சர்வமென்றும், தன்னுடைய கற்பனையே சகத்தென்றும், தன்னிடத்திற் சகத்துற்பத்தி ஸ்திதி சங்காரங்களாகின்றன வென்றும், தானே சகத்துக்குக் காரணமென்றும், தானே சர்வசத்திவந்தனென்றும், தானே சர்வத்திலும அநுசூதமா யிருக்கிறவனென்றும், தானே சுவர்க்க மத்திய பாதாள பிரமலோகாதி சகலலோகங்களிலும் இருக்கிறபேர்களுடைய விர்த்தாந்தங்க ளெல்லாவற்றையுந் தெரிகிறவனென்றும், பின்னுந் தான் துரியாவத்தையென்றும், மூர்த்தன்ய ஸ்தானமென்றும், ஆனந்தபோகமென்றும், பிந்துவென்றும், இந்த மகாகாரண சரீரத்தைக்குறித்துச் சொல்லப்பட்ட சத்தசாஸ்திரம் தர்க்க சாஸ்திரம் மீமாம்ச சாஸ்திரம் யோகசாஸ்திரம் வேதாந்தசாஸ்திர மிவைமுதலிய சகல சாஸ்திரங்களும், இந்தச் சாஸ்திரங்களுக் கேதுவான சூக்குமை பைசந்தி மத்திமை வைகரி வாக்குகள் முதலான சகலாத்தியாசங்களும் சசவிஷாண வந்தியாபுத்திர ககனாரவிந்த மித்தியாபுருஷன்போலவே காலத்திரயத்திலுங்

தனக்கில்லை. இப்படித் தன்னிடத்தில் அத்தியஸ்தமாய்த் தோற்றுகிற இந்தச் சாட்சித்துவமென்கிற மகாகாரணசரீரம் சாட்சியமென்னப் பட்ட பிரபஞ்சத்தைக்குறித்து வந்ததானபடியினால் இந்தச் சாட்சியமா யிருக்கப்பட்ட பிரபஞ்சங் காலத்திரயத்திலுந் தன்னிடத்தி லில்லை; ஆனபடியினால் இந்தச் சாட்சியத்தைக் குறித்துவந்த சாட்சித்துவமென்கிற மகாகாரணசரீரமும், இதனிடத்தில் அத்தியஸ்தமாய்த் தோற்றுகிற சர்வஞ்ஞத்துவாதி நாமங்களும், இதைக்குறித்து வந்த ஆபாசத்துவமும் சசவிஷாண வந்தியாபுத்திர ககனாரவிந்த மித்தியாபுருஷன்போலவே காலத்திரயத்திலுந் தனக்கில்லை; ஆனபடியினால் இந்தச் சாட்சி சாட்சிய ரகிதமாயும், நினைப்பு மறைப்பில்லாமலும், தியானத் தியேய மில்லாமலும், தூஷ்ணீம் பூதனா யிருக்கப்பட்ட சுகஸ்வரூபமே குருவாக்கியத்தினாற் றானென்றறிந்து நின்றதே மூலப்பிரகிருதி ரகிதமான தன்னுடைய ஸ்வரூபம். இதற்குத் திருஷ்டாந்தம் ஆறுகடந்து பத்துப்பேர்போக, ஒருவன் மற்ற வொன்பது பேரையு மெண்ணித் தன்னையெண்ணாமற் பத்தாவான் றானாயிருந்துந் தன்னைப் பத்தாவானென் றறியாமற்போனதே அதிஷ்டானஞ்ஞானமான மூலப்பிரகிருதி. ஆபத் வாக்கியத்தினாற் பத்தாவான் றானென்றறிந்து நின்றதே மூலப்பிரகிருதி ரகிதமான தன்னுடைய ஸ்வரூபம்.

ஞானஞ் சூனுவுமாம், பழுவுமாம்; எப்படி யென்னில், தானென்றறிந்த அறிவைத்தானெனல் சூனு, அதுதான் அன்றென்ற மறதியே பழு வென்று உலோக குருவாயிருக்கப்பட்ட வேதவியாசபகவான் ஸ்ரீராமஸ்தவ ராஜமென்கிற நிபந்தத்தில் நிரூபித்திருக்கிற படியினாலும்; அறிந்தே னென்கிற நினைப்பும், அறியே னென்கிற மறைப்பும இவ்விரண்டுமின்றி யிருக்கிறதே நிரதிசயானந்தமென்று அவதூதகீதையில் தத்தாத்திரயயோகீசுவரர் நிரூபித்திருக்கிறபடியினாலும்; ஆசிரியர், சீடன் இவர்களுடைய பிரசினோத்தரத்தில் ஆலம்பழத்தைக் கொண்டுவா, ஸ்வாமி, இதோ கொண்டுவந்தேன், அதைப் பிள, பிளந்தேன், அதி லென்னகண்டாய், ஒன்றுங் காணவில்லை, பரமாணுக்களைக்கண்டேன், அப்பரமாணுக்களி லொன்றைப் பிள, பிளந்தேன், அதி லென்னகண்டாய், ஒன்றுங் காணவில்லை, இப்படிப்பட்ட அணுவான விரையில் இலை, பணை, விழுது, பொந்துகள் முதலான விகாரங்களோடுங்கூடிய ஆலமரமானது எப்படி அடங்கியிருந்ததோ, அப்படியே யுன்னிடத்தில் நாமரூபமான பிரபஞ்சமும் அடங்கி யிருக்கின்றது என்று சாந்தோக்கிய உபநிடதத்திற் சொல்லியிருக்கிறபடியினாலும் இதுவே பிரமாணசித்தம்.

மகாகாரணப்பிரகரணஞ் சம்பூரணம்.

---

## ஏழாவது

# நிசானந்தாநுபூதிப்பிரகரணம்.

முற்பிரகரணத்தில் வித்தியாரூபமான மஹாகாரண சரீரத்தை நியதிகளைந்து இதற்காதாரமான சச்சிதானந்த வொருமையின்கணுள்ள நிரதிசயானந்தம் அனுபவமாம்பொருட்டு அதற்கங்கமான நிசானந்தானுபூதிப் பிரகரணம் நிரூபிக்கிறார்.

(சுலோகம்.)

நிர்கு³ணோ நிஷ்க்ரியோ நித்யோ நிர்விகல்போ நிரஞ்ஜந꞉ |

நிர்விகாரோ நிராகாரோ நித்யமுக்தோऽஸ்மி நிர்மல꞉ || (௧௦)

(இ-ள்.) ஒருகுணமு மில்லாதவனாய், ஒரு கர்மமு மில்லாதவனாய், ஒரு விகற்பமு மில்லாதவனாய், ஒருகளங்கமு மில்லாதவனாய், ஒரு விகாரமு மில்லாதவனாய், ஒருருவமு மில்லாதவனாய், நித்திய முத்தனாய், மலரகிதனா யிருக்கிறேன். (௧௦)

அஃதாவது மூலப்பிரகிருதி ரகிதமான தன்னுடைய ஸ்வரூப வர்ணனீய நாமங்களெப்படியென்னில் சத்தே சுயமாய்த் தோன்றுகிறபடியினாற் சித்தாயிற்று, சித்தே சுயமா யிருக்கிறபடியாற் சத்தாயிற்று. இதற்கிரண்டாம்வஸ்து இல்லாதபடியினால் ஆனந்தமாயிற்று. ஆகவே சச்சிதானந்த ஸ்வரூபமாய், அகண்டானந்த ஸ்வரூபமாய், பரிபூரணானந்த ஸ்வரூபமாய், நித்தியானந்த ஸ்வரூபமாய், நிர்விசேஷானந்த ஸ்வரூபமாய்; நிரூப, நிரூபத்திரவ, நின்மல, நிரவயவ, நிரந்தர, நித்ய, நிராகார, நிபத்த, நிஷ்கர்ம, நிர்ச்சங்க, நிர்விகார ஸ்வரூபமாய்; நிர்க்குண, நிஷ்கிரிய, நிர்விகற்ப, நிரஞ்சன, நிர்லக்ஷிய, நிராலம்ப, நிரதிசயானந்த ஸ்வரூபமாய்; நிரீச, நிர்லேப, நிர்ச்சித்திய, நிர்வசன, நிரூபானந்த ஸ்வரூபமாய்; நிர்வேதத்திய, நிச்சல, நிச்சேஷ, நிர்ச்சத்த, நிச்சீவ, நிர்ச்சலானந்த ஸ்வரூபமாய்; நிர்ப்பின்ன, நிர்ப்போத, நிர்காம, நிர்வியாச்சிய, நிர்ப்பாவ, நிஷ்பிரபஞ்ச ஸ்வரூபமாய்; அச்சேத்திய, அக்கிலேத்திய, அசோஷிய, அதாகிய, அகிராகிய, அதியந்த ரகிதானந்த ஸ்வரூபமாய்; அக்ஷர, அமல, அப்பிரமேய, அநாசிரய, ஆனந்தகந்தஸ்வரூபமாய்; அநாதார, அமிர்த, அவிதர்க்கிய, அநாமய, அதிரிசிய, அத்துவிதானந்த ஸ்வரூபமாய்; அபாகிய, அக்கிய, அபாசிய, அநிர்வாச்சிய, அதீந்திரிய, அபோத்திய, அருணிய, அக்ரூபோத, அபரோக்ஷானந்த ஸ்வரூபமாய் இன்னும் இவைமுதலாகச்சொல்லப்பட்ட வர்ணனீய நாமங்களாகச் சொல்லப்படுகின்றது.

(சுலோகம்.)

ஸதா³நந்த³ஸ்வரூபேண ஸ்வாத்மநாத்மஸ்வரூபத꞉ |

ஸந்துஷ்டஸ்ஸர்வதா³ திஷ்டேத்ஸ்வாத்மநா நிர்வ்ருதேந து || (௧௧)

(இ-ள்.) சச்சிதானந்த ஸ்வரூபமான ஆத்மாவென்னும் அமிர்த சாகரத்தில் நித்திய சாசுவதமான முத்தி யிருக்கிறது. அதனுடைய ஸ்வரூபமானது நிரூபிக்கப்படுகிறது. (௫௩)

இப்படி ஆசாரியசுவாமிகள் ஆத்மபோதமென்கிற கிரந்தத்தில் நிரூபித்திருக்கிறார்; ஆனபடியினாலும் வேத சாஸ்திரங்களிலும் இப்படிச் சொல்லியிருக்கிறபடியினாலும் இதுவே பிரமாண சித்தம்.

இந்த ஸ்வரூபத்தினுடைய வர்ணனீய நாமங்கள் பிரபஞ்சத்தைக் குறித்து வந்ததே யல்லாமல் வேறல்ல. எப்படி யென்னில், அசத்தைக்குறித்துச் சத்தென்றும், சடத்தைக்குறித்துச் சித்தென்றும், துக்கத்தைக்குறித்து ஆனந்தமென்றும், சகுணத்தைக்குறித்து நிர்க்குணமென்றும், ஆவரணத்தைக்குறித்து நிராவரணமென்றும், சாகாரத்தைக்குறித்து நிராகார மென்றும், விஷயானந்தத்தைக்குறித்து நிர்விஷயானந்தமென்றும், பேதத்தைக்குறித்து அபேதமென்றும், பரோக்ஷத்தைக்குறித்து அபரோக்ஷமென்றும், துவைதத்தைக்குறித்து அத்வைதமென்றும், விகாரத்தைக்குறித்து நிர்விகாரமென்றும், ஆலம்பத்தைக்குறித்து நிராலம்ப மென்றும், சங்கத்தைக்குறித்து நிர்ச்சங்கமென்றும், அப்பிரகாசத்தைக்குறித்துப் பிரகாசமென்றும், கண்டத்தைக்குறித்து அகண்டமென்றும், நாமத்தைக்குறித்து நிர்நாமமென்றும், சூனியத்தைக்குறித்துப் பூரணமென்றும், வாச்சியத்தைக்குறித்து அநிர்வாச்சியமென்றும், சத்தத்தைக்குறித்து நிச்சத்தமென்றும், அஞ்சனத்தைக் குறித்து நிரஞ்சன மென்றும், வேத்தியத்தைக்குறித்து நிர்வேத்தியமென்றும், சலனத்தைக்குறித்து நிச்சலன மென்றும், மிர்தத்தைக்குறித்து அமிர்தமென்றும், ஆதியந்த சகிதத்தைக் குறித்து ஆதியந்த ரகிதமென்றும், பிரபஞ்சத்தைக் குறித்து, நிஷ்பிரபஞ்ச மென்றும், சித்த நிரோதத்தைக் குறித்து யோகமென்றும், லட்சியத்தைக் குறித்து நிர்லட்சிய மென்றும் பெயர்களாம். பின்னுஞ் சர்வம் பிரமமென்றுஞ் சர்வஞ் சூனியமென்றும் இவைமுதலான தன் ஸ்வரூபத்தினுடைய வர்ணனீயநாமங்கள் பிரபஞ்சத்தைக் குறித்து அத்தியாசமாய்த் தோற்றினவேயல்லாமற் சுதாவாக இந்த நாமங்கள் சசவிஷாண வந்தியாபுத்திர ககனாரவிந்த மித்தியா புருஷன்போலவே காலத்திரயத்திலுந் தனக்கில்லை. ஆனபடியினால் பேதாபேத ரகிதமாய், புண்ணியா புண்ணிய ரகிதமாய், த்வைதாத்வைத ரகிதமாய், பாவாபாவ ரகிதமாய், ஞானாஞ்ஞான ரகிதமாய், காரியகாரண ரகிதமாய், மாயாயோக ரகிதமாய், பந்தமோக்ஷ ரகிதமாய், சுகதுக்க ரகிதமாய், காமியாகாமிய ரகிதமாய், கம்மியாகம்மிய ரகிதமாய், சனனமரண ரகிதமாய், விருத்திக்ஷய ரகிதமாய், உதயாஸ்தமன ரகிதமாய், திவாராத்திர ரகிதமாய், இவைமுதலா யிருக்கப்பட்ட தொந்த ரகிதமாய், தூஷ்ணீம்பூதனா யிருக்கப்பட்ட தன்னுடைய ஸ்வரூபத்தில் அதிஷ்டானமுஞ்ஞானமென்கிற

ஆவரணமான மூலப்பிரகிருதி, விக்ஷேபகாரணமான மகத்தத்துவம், அகங்காரதத்துவம், பஞ்சதன்மாத்திரை, சூட்சும தூலாதிப் பிரபஞ்சம் இவை எப்படித் தோற்றுகின்றனவென்றால் திருஷ்டாந்த பூர்வகமாய் நிரூபிக்கிறோம்.

மூலப்பிரகிருதியென்கிற மித்தியா புருஷன் அகங்காரதத்துவமென்கிற இல்லாத சித்திரக்கோலைக் கையிற் பிடித்துக்கொண்டு பஞ்சதன்மாத்திரையென்கிற இல்லாத பஞ்சவன்னங்களினாற் றூல சூட்சுமமென்கிற பொய்யான சித்திரத்தைச் சூனியமென்கிற வாகாசத்திலெழுதினாற்போல விருக்கிறதென்று வசிட்டபகவான் வாசிட்டமென்கிற கிரந்தத்தி னிரூபித்திருக்கிறார். ஆனபடியினால் இந்தத் தூஷணீம பூதனாயிருக்கப்பட்ட தன்னுடைய ஸ்வரூபத்தில் அதிஷ்டானஞ்ஞானமான ஆவரணமென்கிற மூலப்பிரகிருதியும், விக்ஷேபகாரணமான மகத்தத்துவம் அகங்காரதத்துவமும், பஞ்சதன் மாத்திரை சூட்சும தூலப் பிரபஞ்சமும், சாக்கிர சொப்பன சுழுத்தி துரியாவத்தைகளும், விசுவ தைசத பிராஞ்ஞ பிரத்தியக் கைதன்னியமும், விராட்டு இரணியகர்ப்ப அவ்வியாகிருத சருவசாட்சித்துவம் ராஜச தாமச சத்துவமான சுத்த சத்துவ குணங்களும், யுக்த பரியுக்த ஆனந்த ஆத்மானந்த போகங்களும், சிற்சத்தி பராசத்தி ஆதிசத்தி இச்சாசத்தி கிரியாசத்திகளும், பிரமா விஷ்ணு ருத்திரன் மகேசுவர சதாசிவ மூர்த்திகளும், நேத்திரம் கண்டம் இருதயங்களான மூர்த்தன்னிய ஸ்தானங்களும், அகார உகார மகார பிந்து மாத்திரைகளும், இதைக்குறித்துவந்த அத்தியாச நாமங்களும், இதைக்குறித்துச் சொல்லப்பட்ட சாஸ்திரங்களும், இதைக்குறித்துவந்த அபவாதங்களும், இதைக்குறித்துவந்த ஸ்வரூபவர்ணனீய நாமங்களும், இந்த ஸ்வரூப வர்ணனீயமாய்ப் பிரதிபாதிக்கிற மகாவாக்கியங்களை யுபதேசம் பண்ணிக்கொண்ட சீடர்களும், இந்தச் சீடர்களுக்கு உபதேசம் பண்ணின சற்குருக்களும், இந்தச் சற்குருக்களுடைய வுபதேசங்களும், இந்த வுபதேசத்தினால் வந்த சிரவண மனன நிதித்தியாசனங்களும், கர்ம பத்தி வைராக்கிய யோகத் தியானங்களும், சாம்பவிமுத்திரை கேசரிமுத்திரை அமனஸ்கமுத்திரை மவுனமுத்திரைகளும், இந்தப் பிரபஞ்சம் அஞ்ஞானத்தினாற் றோற்றிற்றென்றும், ஞானத்தினாலில்லாமற் போயிற்றென்றும், யோகத்தினாற் றன்னைத் தான் பார்க்க வேண்டுமென்றும், பிரகாசமாகக் கண்டேனென்றும், ஞானத்தினாற் றன்னைத் தான் அறியவேண்டுமென்றும், இப்போ தறிந்துகொண்டேனென்றும் சொல்லப்பட்ட இவை முதலான சகல சங்கற்பப் பிராந்திகளும் மருமரீசிகையினிடத்திற் சலங் காலத்திரயத்திலும் எப்படியில்லையோ, சுத்தியினிடத்தில் ரசிதங் காலத்திரயத்திலும் எப்படியில்லையோ, ரச்சுவினிடத்திற் சர்ப்பங் காலத்திரயத்திலும் எப்படியில்லையோ அப்படியே அதிஷ்டானஞ்ஞானமென்கிற மூலப்பிரகிருதி முதலான சகல பிராந்திகளும் நிசானந்தானுபூதி ஸ்வரூபமாய்த்

தூஷணீம்பூதனான தன்னிடத்திற் சசவிஷாண வந்தியாபுத்திர கந்தர்வநகர மித்தியாபுருஷன்போலக் காலத்திரயத்திலு மில்லை.

(சுலோகம்.)

ஸர்வஶாஸ்த்ரார்த்தஸம்பத்த்யா ஸ்வரூபம் பாவயேத் |
ஸர்வஶூந்யம் மந: ஶூந்யம் ஸத்யாஸத்யவிவர்ஜிதம் || (௧௪)

(இ-ள்.) சாஸ்திர சம்பத்தி பூர்வமாக ஸ்வரூபத்தைப் பாவிக்கின், எல்லாஞ் சூனியமாய் மனதுஞ் சூனிமாய்ச் சத்தியாசத்தியங்களில்லாமற் பூரணமா யிருக்கிறதென்று சொல்லப்படுகிறது. (௧௪)

(சுலோகம்.)

ஜீயதே ந ச ஜீயதே யஸ்ய ஸர்வம் ப்ரவர்த்ததே |
ஸர்வம் ஸர்வம் யதாத்மைவ ஸோऽவதூதோ ஹி கேவல: || (௧௫)

(இ-ள்.) வயிக்கிறதும் வயிக்காததுமாயிருக்கிற பிரபஞ்சம் எவனுக்கு எவ்விதமாகப் பிரவர்த்தித் திருக்கிறது, எவனுக்கு எல்லாமுண்டாயிருந்தும் உண்டாகவில்லை, எவனுக்கு எல்லாம் ஆத்ம ஸ்வரூபமா யிருக்கிறது என்று தத்தாத்திரய யோகீசுவரர் அவதூதகீதையென்கிற கிரந்தத்தில் நிரூபித்திருக்கிறார். (௧௫)

(சுலோகம்.)

அவ்யக்தோயமசிந்த்யோயமவிகார்யோயமுச்யதே || (௧௫ ௨)

(இ-ள்.) இவ்வாத்மா அவ்வியத்தன், அசிந்தியன், அவிகாரன் எனச்சொல்லப்படுவனென்று கீதையிற் பகவான் நிரூபித்திருக்கிறார்.

(சுலோகம்.)

க்வ ப்ரவ்ருத்திர்நிவ்ருத்திர்வா க்வ முக்தி: க்வ ச பந்தநம் |
கூடஸ்தநிர்விகாரஸ்ய ஸர்வதா ஸ்வஸ்தசேதஸ: || (௧௬)

(இ-ள்.) நிர்விகாரியான கூடஸ்தனிடத்தில் எப்போதுஞ் சொஸ்தனாயிருக்கிற எனக்குப் பிரவிர்த்தி யெங்கே, நிவிர்த்தி யெங்கே, முத்தி யெங்கே, பந்தம எங்கே என்று அஷ்டாவக்கிர கீதையில் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. (௧௬)

(சுலோகம்.)

அப்ராணோ ஹ்யமநா: ஶுப்ர இதி ஶ்ருதிவசோ யத: |
அஸ்த்ராண்ஸ்தரா... தஸ்மாத் ஶ்ரூ... திஶாஸநாத் || (௧௭)

(இ-ள்.) அப்பிராணனென்றும், அமனஸ்கனென்றும், சுப்பிரனென்றும், வேதஞ் சொல்லுகிறபடியே எனக்கு மனதில்லாதபடியினால் துக்கமும், ராகமும், துவேஷமும், பயமுங் கிடையாதென்று ஆத்மபோதமென்கிற கிரந்தத்தில் ஆசாரிய சுவாமிகள் நிரூபித்திருக்கிறார். (௧௭)

(சுலோகம்.)

𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌕𑌂 𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌪𑌰𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌦𑍀𑌪𑌕𑌮𑍍 ।
𑌅𑌸𑌂𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌤𑌨𑌾𑌮𑌾𑌯𑌂 𑌸𑌮𑌾𑌧𑌿𑌰𑍍𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 ॥ (௩௮)

(இ-ள்.) சகல சங்கற்பங்களும் உபசாந்தியடைந்து பரமானந்த மேலிட்டால் அசம்பிரஞ்ஞாத சமாதியானது யோகிகளுக்குப் பிரியமானது. (௩௮)

(சுலோகம்.)

𑌸𑍍𑌵𑌾𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌰𑌸𑌾𑌵𑍇𑌶𑌾𑌦𑍍𑌦𑍃𑌶𑍍𑌯𑌶𑌬𑍍𑌦𑌾𑌵𑌨𑌪𑍇𑌕𑍍𑌷𑌿𑌤𑌮𑍍 ।
𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌸𑌮𑌾𑌧𑌿𑌸𑍍𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌨𑌿𑌵𑌾𑌤𑌸𑍍𑌥𑌪𑍍𑌰𑌦𑍀𑌪𑌵𑌤𑍍 ॥ (௩௯)

(இ-ள்.) சுவானுபவ மென்கிற அமிர்த ரசத்தின் ஆவேசத்தால், திரிசியத்தை விரும்பாதிருக்கின் நிவாதஸ்தல தீபம்போல இருப்பதே நிஸ்சலமான நிர்விகற்ப சமாதி என்று வித்யாரண்ய சுவாமிகள் நிரூபித்திருக்கிறார். (௩௯)

(சுலோகம்.)

𑌸𑌂𑌶𑌾𑌨𑍍𑌤𑌸𑌰𑍍𑌵𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌾 𑌯𑌾 𑌶𑌿𑌲𑌾𑌵𑌦𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 ।
𑌜𑌾𑌗𑍍𑌰𑌨𑍍𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌵𑌿𑌨𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌾 𑌸𑌾 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 𑌪𑌰𑌾 ॥ (௪௦)

(இ-ள்.) சகல சங்கற்பங்களும்உபசாந்தமாய்ச்சாட்டிய நித்திரை நீங்கச் சிலையைப்போல நிஸ்சலமாயிருப்பது உத்தமமான ஸ்வரூப ஸ்திதியென்று வசிட்டபகவான் வாசிட்டமென்கிற கிரந்தத்தில் நிரூபித்திருக்கிறார். (௪௦)

(சுலோகம்.)

𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌸𑍍𑌤𑌮𑌿𑌤𑌭𑍇𑌦𑌂 𑌯𑌤𑍍𑌸𑌤𑍍𑌤𑌾𑌮𑌾𑌤𑍍𑌰𑌮𑌗𑍋𑌚𑌰𑌮𑍍 ।
𑌵𑌚𑌸𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌸𑌂𑌵𑍇𑌦𑍍𑌯𑌂 𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌸𑌂𑌜𑍍𑌞𑌿𑌤𑌮𑍍 ॥ (௪௧)

(இ-ள்.) பேதமிறந்ததாயும், சத்தாமாத்திரமாயும், வாக்குக்கு அகோசரமாயும், தன்னால் அறியத்தக்கதாயு மிருக்கின்ற தெதுவோ அதுவே பிரமமெனப் பெயரையுடையது. (௪௧)

(சுலோகம்.)

𑌵𑌿𑌭𑍇𑌦𑌜𑌨𑌕𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌨𑌾𑌶𑌮𑌾𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌿𑌕𑌂 𑌗𑌤𑍇 ।
𑌆𑌤𑍍𑌮𑌨𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌭𑍇𑌦𑌮𑌸𑌨𑍍𑌤𑌂 𑌕𑌃 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 ॥ (௪௨)

(இ-ள்.) பேதத்தை யுண்டுபண்ணுகிற அஞ்ஞானமானது முழு நாசமடைந்தால் ஆத்மாவுக்கும் பிரமத்துக்கும் இல்லாத பேதத்தை யெவன் செய்வான்? (௪௨)

நிசானந்தானுபூதிப் பிரகரணஞ் சம்பூரணம்.

ஆக் சுலோகங்கள் ௪௨.

சத்தப்பிரகரணஞ் சம்பூரணம்.

---

ஓம்.

பரப்ரம்மணேநம:.

# வாசுதேவமனனம்

என்று வழங்குகிற

# விவேகசாரம்.



இஃது

பாரிப்பாக்கம்

முனியப்பமுதலியாரால்

அச்சிடப்பட்ட பிரதிக்கிணங்க,

ஸ்ரீ சச்சிதானந்தசுவாமிகளின்

தருமபரிபாலன சபையாருத்திரவின்படி,

காரியதரிசி

ப. முத்துகிருஷ்ணரெட்டியாரவர்களால்


சை. இரத்தினசெட்டியாரவர்களது

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.



துர்முகி௵ ஆவணிமீ

# புத்தக விளம்பரம்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| பிரபுலிங்கலீலை உரையுடன் ... ... ... ... | 2 | 8 |
| கைவல்லிய நவநீதவிருத்தியுரை ... ... ... | 1 | 4 |
| வேதாந்த சூளாமணி விருத்தியுரை ... ... ... | 1 | 4 |
| தத்துவநிஜாநுபோகசாரம் ... ... ... ... | 1 | 0 |
| சர்வமதசித்தாந்த விளக்கவினாவிடை ... ... ... | 0 | 12 |
| திருக்குதிருசிய விவேகம் உரையுடன் ... ... ... | 0 | 12 |
| வாசுதேவமனனம் ... ... ... ... | 0 | 14 |
| பிரத்தியட்சாநுபூதிவிளக்கம் ... ... ... ... | 0 | 8 |
| வேதாந்த இலக்கணம் ... ... ... ... | 0 | 8 |
| சசிவன்னபோதம் உரையுடன் ... ... ... | 0 | 8 |
| தசகாரியமகாவாக்கியம் உரையுடன் ... ... ... | 0 | 8 |
| ஜீவகாருண்ய விளக்கம் சுவாநுபூதிவிளக்கம் ... ... | 0 | 6 |
| சொரூபசாரம் உரையுடன் ... ... ... ... | 0 | 6 |
| சத்தப்பிரகரணம் ... ... ... ... ... | 0 | 6 |
| உபநிடத விருத்தியுரை ... ... ... ... | 0 | 5 |
| எதார்த்தவாதம் ... ... ... ... ... | 0 | 4 |
| ஞானவாசிட்டத்திரட்டு ... ... ... ... | 0 | 3 |
| சுகர் கைவல்லியம் ... ... ... ... ... | 0 | 2 |

விற்கிறவர்
ப. முத்துகிருஷ்ணசெட்டியார்,
6, ஜெனரல் காலின்ஸ்ரோட்டு,
வேப்பேரி, சென்னை.

வெளிநாட்டார் V. P. Post மூலமா யிவரிடம் பெற்றுக் கொள்ளலாம்.

(ஈரூர். சச்சிதானந்தசுவாமிகள் தருமபரிபாலன சபையார் உத்திரவின்படி)
ப. முத்துகிருஷ்ணசெட்டியார்,
காரியதரிசி.

சென்னை,
செப்டம்பர்மீ
1896.

ஓம்.

# பிரகரண அட்டவணை.

உ

ஸ்ரீசற்குருவே நம:

# வாசுதேவமனனம்

என்று வழங்குகிற

# விவேகசாரம்.

---

முதலாவது

## அத்தியாரோப நிரூபகம்.

---

சங்கை: சுருதியாதிகளில் சொல்லப்பட்ட அத்தியாரோப யுத்தி யாவது எப்படிப்பட்டது ?

உத்தரம்: ஒருவஸ்து அன்னியவஸ்துவாய்த் தோற்றப்படுவது.

ச. அது எப்படி ?

உ. திருஷ்டாந்தத்தில் சிப்பியினிடத்தில் வெள்ளியும், பழுதையினிடத்திற் பாம்பும், கட்டையினிடத்திற் கள்ளனும், கானலினிடத்தில் சலமும், ஆகாயத்தினிடத்தில் நீலமும் எப்படி யாரோபிக்கப்பட்டனவோ, அப்படியே தார்ஷ்டாந்தத்திலும் நிஷ்பிரபஞ்சசொரூபமான ஆத்மாவினிடத்தில் பிரபஞ்சம் ஆரோபிப்பதே அத்தியாரோபமாம்.

ச. அது எதினால் வந்தது ?

உ. அதிஷ்டானாஞ்ஞானத்தினால் வந்தது. ஆனால் அதன் சொரூபத்தைப் பின்னால் விஸ்தாரமாகச் சொல்லுகிறோம். இப்போது சம்க்ஷேபமாகச் சொல்லுகிறோம்.

ச. அது எப்படி ?

உ. ஒரு அஞ்ஞானமே பிரகிருதியென்றும், மாயையென்றும், அவித்தையென்றும், தமசென்றும் அநேகவிதமாய்ச் சொல்லப்படும்.

ச. இவற்றில் பிரகிருதியாவது எது ?

உ. குணங்களுடைய சாமானியாவஸ்தைகளுக்குப் பிரகிருதியென்றும், பிரளயாவஸ்தையென்றும், மகாசுழுத்தியவஸ்தையென்றுஞ் சொல்லப்படும்.

ச. அது எப்படி?

உ. வெள்ளைநூலும், சிவப்புநூலும், கறுப்புநூலும் ஒன்றாய் முறுக்கினாலெப்படி யிருக்குமோ, அப்படிப்போல இந்தப் பிரகிருதியில் அநேக கோடி ஜீவர்கள் தங்களுடைய கர்மமும், வாசனைகளுமாகிய பலத்துடனே கூடிப் பொருந்தி யிருப்பார்கள்.

ச. இதற்குத் திருஷ்டாந்த மெப்படி?

உ. மெழுக்குண்டையில் நவலோக ரவைக ளெப்படி இலீனப்பட்டிருக்குமோ, அப்படிப்போலப் பிரகிருதியில் ஜீவர்கள் இலீனமாயிருக்கிறார்கள்.

ச. இது ஏகதேச திருஷ்டாந்தம், ஆயினும் சர்வத்திர பிராணிகளின் அனுபவம் எப்படி?

உ. சுழுத்தியில் ஜீவர்கள் வெகுகாலம் இலீனமாயிருக்கத் தெய்வகதியாய் ஒருசமயத்தில் அந்தச் சீவர்களுடைய கர்மபலம் பக்குவப்படும். அப்போது திரிகுணாத்மகமான பிரகிருதியாகிற சத்துவகுணம் விச்ரிம்பிக்கும். அங்ஙனம் விச்ரிம்பிக்கிற சத்துவகுணத்தை மாயையென்று சொல்லப்படும். இந்த மாயையிற் பிரதிவிம்பித்த சைதன்யமும், மாயையும், இதற்கதிஷ்டான சைதன்யமும் இம்மூன்றுங்கூடி ஈசுவரனென்று சொல்லப்படும். இந்த ஈசுவரனுக்கே அந்தரியாமி யென்றும், அவ்வியாகிருதனென்றும் இரண்டுபெயர். இவரே ஜகசிருஷ்டிகர். இந்தச் சிருஷ்டிக்கிரமத்தில் உபாதானகாரணம், நிமித்தகாரணமென்கிற இரண்டு காரணமும் வேண்டுமென்று உலகத்திற் கண்டிருக்கிறோம்.

ச. அது எப்படி?

உ. கடமுதலிய பாண்டங்களுற்பவிக்கிறதற்கு மண் உபாதானமும், குயவனும் அவனாயுதங்களும் நிமித்தமாகவும், புடைவை யுண்டாகுகிறதற்கு நூல் உபாதானமும், நெய்யக்காரனும் நாடாமுதலிய அவனாயுதங்களும் நிமித்தமாகவும் எப்படி உலகத்தில் இரண்டு காரணங்களினாலும் கடபடாதிகள் உற்பத்தி யாகின்றனவோ, அப்படியே, இரண்டு காரணங்களினாலும் சகத்துற்பத்தியாகின்றது.

ச. அது எப்படி?

உ. மாயை உபாதானமும், ஈசுவரன் நிமித்தமுமென்று சொல்லுவோமாயின், சுருதிகளுக்கு விரோதம்வரும். இதுமாத்திரமல்ல; உபாதானகாரணம் சத்பதார்த்தமா யிருக்கவேண்டும். அப்படி யிருக்குமாயின், மாயையும் ஆத்மாவு மிரண்டுபதார்த்த மாகின்றமைபற்றி அத்வைதத்திற்கு ஹானி வரும். ஆதலால் இப்போது சொன்னபட்சங் கூடாது. பட்சாந்தரமாய்ச் சொல்லவேண்டும். மாயை நிமித்தமென்றும், ஈசுவரன் உபாதானமென்றுஞ் சொல்லுவோமாயின், முன்போல அத்வைத விரோதம்வரும். உலகத்தில் சேதனனையே நிமித்தகாரணமாகக் கண்டோம். அசேதனமான மாயை நிமித்தகாரணமாகமாட்டாது. அதனாலும் அத்வைதஹானி வரும். இந்தத் தோஷங்களிருக்கிறபடியினால் கேவலமான மாயை உபாதானமு மாகாது; நிமித்தமுமாகாது. ஆதலால் உபாதானமும், நிமித்தமும் ஈசுவரனென்றே சொல்லவேண்டும்.

ச. உலகத்தில் இரண்டுகாரணம் ஒன்றினிடத்திற் காணோம்; ஆதலால் அவ்வாறு எப்படிச் சொல்லுகிறது?

உ. சொல்லலாம்; உலகத்தில் நூலை யுண்டாக்குகிற சிலந்திப்பூச்சியினிடத்தில் இரண்டுகாரணமும் இருக்கின்றன. அந்தப்பூச்சியே சரீரப்பிரதானத்தினால் உபாதானமும், புத்திப்பிரதானத்தினால் நிமித்தமுமா யிருக்கக் கண்டோம். அப்படிப்போல ஈசுவரனும் சத்துவகுணப் பிரதானமான மாயையுடனேகூடி நிமித்தகாரணமானார்; தமோகுணப் பிரதானமான மாயையுடனேகூடி உபாதானகாரணமானார். இந்த உபயகாரணரான ஈசுவரனால் ஜகத்துண்டாயிற்று.

ச. அது எப்படி ?

உ. ஈசுவரன் சத்துவகுணப் பிரதானமான மாயையுடனே கூடிக்கொண்டு தமோகுணப் பிரதானமான மாயையை வீக்ஷித்தபோது அந்தத் தமோகுணப் பிரதானமான மாயையோடுகூடின சைதன்யத்தினால் திரிகுணாத்மகமான ஆகாசமும், அந்த ஆகாச விசிஷ்ட சைதன்யத்தினால் திரிகுணாத்மகமான வாயுவும், அந்த வாயுவின் விசிஷ்ட சைதன்யத்தினால் திரிகுணாத்மகமான தேயுவும், அந்தத் தேஜோ விசிஷ்ட சைதன்யத்தினால் திரிகுணாத்மகமான ஜலமும், அந்த ஜலவிசிஷ்டசைதன்யத்தினால் திரிகுணாத்மகமான பிருதிவியு முண்டாயின. இது அபஞ்சீகிருத பூதங்களென்றும், சூக்ஷ்மபூதங்களென்றும், தன்மாத்திரைகளென்றுஞ் சொல்லப்படும். இந்தப் பூதங்களினால் சமஷ்டி வியஷ்டி யாத்மகமாகிற இலிங்கசரீர முண்டாயிற்று. இந்தச் சமஷ்டி வியஷ்டி சொரூபத்தை முன்னே நிரூபிக்கிறோம். இந்த இலிங்கசரீரமும் பதினேழு தத்துவங்களுடனே கூடியிருக்கும்.

ச. அந்தப் பதினேழு தத்துவங்கள் எவை ?

உ. ஞானேந்திரியம் ௫, கன்மேந்திரியம் ௫, வாயுக்கள் ௫, மனம் புத்தி ௨, ௰௭ கள.

ச. இவைகளின் உற்பத்தி யெப்படி?

உ. ஆகாசத்தின் சாத்துவீகாம்சத்தில் சுரோத்திரேந்திரியமும், வாயுவின் சாத்வீகாம்சத்தில் தொக்கிந்திரியமும், தேயுவின் சாத்வீகாம்சத்தில் சட்சு இந்திரியமும், அப்புவின் சாத்வீகாம்சத்தில் சிங்குவை யிந்திரியமும், பிருதிவியின் சாத்வீகாம்சத்தில் கிராணேந்திரியமுமாக இந்தப்படிச் சாத்வீகாம்சத்தில் வியஷ்டியான ஞானேந்திரியங்கள் பிறந்தன. இந்தச் சாத்வீக சமஷ்டியினால் அந்தக்கரணங்கள் பிறந்தன. அது விருத்தி பேதத்தினால் மனம் புத்தி சித்தம் ஆங்காரமென்று நான்குவிதமாயிற்று. அந்தப் பதினேழுகணக்குக்கு மனமுஞ் சித்தமு மொன்றாயின; புத்தியும் ஆங்காரமு மொன்றாயின. ஆகாசத்தினுடைய ரஜோம்சத்தில் வாக்கும், வாயுவின் ரஜோம்சத்திற் பாணியும், தேயுவின் ரஜோம்சத்திற் பாதமும், அப்புவின் ரஜோம்சத்திற் குய்யமும், பிருதிவியின் ரஜோம்சத்திற் குதமும் இந்தப்படி ரஜோம்சத்தில் வியஷ்டியான கன்மேந்திரியங்கள் பிறந்தன. இந்த ராஜத சமஷ்டியினால் பிராணவாயு பிறந்தது. அது விருத்திபேதத்தினால் பிராண அபான உதான வியான சமானனென்கிற பஞ்சவாயுக்களாயிற்று. உபவாயுக்களும் இவைகளுக்குள்ளே அந்தர்ப்பூதமாகும். இந்தப் பதினேழுங்கூடிச் சமஷ்டி வியஷ்டியாகிற இலிங்கசரீரமென்று சொல்லப்படும். அந்த ஈசுவரனே இந்த இலிங்க சரீரத்தை அபிமானித்து இரணியகர்ப்பரானார். அவருக்கே

சூத்திராத்மாவென்றும், பிராணனென்று மிரண்டுபெயர். இதுவே சூட்சும சரீர சிருஷ்டி.

ச. இனி ஸ்தூலசரீர சிருஷ்டியாவது எது?

உ. அந்த மாயாசகித ஈசுவர வீக்ஷணியத்தினால் தமோம்சப் பிரதானமான அபஞ்சீகிருத பஞ்சபூதங்களில்ஆகாயமுதலிய ஸ்தூலபூதங்களுண்டாய், அவை ஒவ்வொன்றும் இரண்டுபாக மாயின. அதில் ஒருபாக நிற்க, மற்ற ஒருபாகமும் ஒவ்வொன்றும் நன்னான்காகி அந்தந்தப்பாகங்களின் நிஜாம்சத்தைவிட்டு இதர பூதங்களுடனே கூடினது பஞ்சீகிருத ஸ்தூல பூதங்களென்று சொல்லப்படும். இந்த ஸ்தூலபூதங்களினிடத்தில் ஈசுவர வீக்ஷணியத்தினால் ஸ்தூலப்பிரபஞ்ச முண்டாயிற்று.

ச. அது எப்படி?

உ. பஞ்சீகிருதபஞ்ச மகாஸ்தூல பூதங்களினால் அண்டமும் அந்த அண்டத்தில் கீழேழுலகமும், மேலேழுலகமும், அந்தந்த உலகங்களுக்கு உசிதமான நால்வகை யோனிகளும் பிறந்தன. இந்தவையுங்கூடி ஸ்தூலப் பிரபஞ்ச மென்னப்படும். இதை அபிமானித்த ஈசுவரனுக்கு விராட்டென்று பெயர். அவருக்கே வைசுவாநரன், வைராஜனென் றிரண்டு பெயர். இதுவே சமஷ்டி.

ச. இனி வியஷ்டிசொரூபமாவது எப்படிப்பட்டது?

உ. வியஷ்டியானது சமஷ்டியில் அந்தர்ப்பூதமானாலும் அதையுஞ் சொல்லவேண்டும்; எப்படியென்றால் சாக்கிராவஸ்தையில் ஸ்தூலசரீர அபிமானியாயிருக்கிற சீவனுக்கு விசுவனென்று பெயர். அவனுக்கே வியவகாரிகன், சிதாபாசனென் றிரண்டுபெயர். சொப்பனாவஸ்தையில் சூக்ஷ்ம சரீர அபிமானியாயிருக்கிற சீவனுக்குத் தைசதனென்றுபெயர். அவனுக்கே பிராதிபாதிகன், சொப்பனகற்பிதனென் றிரண்டுபெயர். சுழுத்தியவஸ்தையில் காரணசரீர அபிமானியாயிருக்கிற சீவனுக்குப் பிராக்ஞனென்றுபெயர். அவனுக்கே பாரமார்த்திகன், அவிச்சின்னனென் றிரண்டு பெயர். இதுவே வியஷ்டி. இந்தப்பிரபஞ்சத்தின் அனாதி சிருஷ்டி ஸ்திதி லயங்களுக்காகவே அவ்வீசுவரன் திரிமூர்த்தி சொரூபமானார்.

ச. அது எப்படி?

உ. சத்துவகுணத்துடன்கூடி ரட்சிக்கிறதற்கு விஷ்ணுவாகவும், ராசதகுணத்துடன்கூடிச் சிருஷ்டிக்கிறதற்குப் பிரமாவாகவும், தமோகுணத்துடன் கூடிச் சங்கரிக்கிறதற்கு ருத்திரனாகவு மிருக்கிறார். இவர்களில் பிரமா விராட்டில் அந்தர்ப்பூதன்; விஷ்ணு இரணியகர்ப்பத்தில் அந்தர்ப்பூதன்; உருத்திரன் பிரபஞ்சகாரணமான அவ்வியாகிருதத்தில் அந்தர்ப்பூதன். இதுவே யத்தியாரோப யுத்தி என்று சொல்லப்படும். இந்த அத்தியாரோபத்திற்கு மூலமான அஞ்ஞானத்தை ஸ்ரீசற்குருகடாட்சத்தினால் சங்கையற எவன் அறிகிறானோ, அவனே ஜீவன் முத்தனென்று சுருதி ஸ்மிருதியாதிகளிற் சொல்லுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

முதலாவது அத்தியாரோப நிரூபகம் முற்றிற்று.

இரண்டாவது

# அபவாத நிரூபகம்.

சங்கை: அபவாத யுத்தியாவது எது?

உத்தரம்: காரணத்துக்கு அன்னியமாய்க் காரிய மில்லையென்பது.

ச. அது எப்படி?

உ. மண்ணினால் உண்டாக்கப்பட்ட கடமுதலிய பாண்டங்கள் மண்ணுக் கன்னியமா யெப்படிக் காணவில்லையோ, நூலினால் உண்டாக்கப்பட்ட புடவைகள் நூலுக்கன்னியமா யெப்படிக் காணவில்லையோ, சொர்ணத்தா லுண்டாக்கப்பட்ட ஆபரணங்கள் சொர்ணத்திற் கன்னியமா யெப்படிக் காணவில்லையோ, இரும்பினா லுண்டாக்கப்பட்ட ஆயுதங்க ளிரும்புக் கன்னியமா யெப்படிக்காணவில்லையோ, அப்படியே, ஆத்மாவினா லுண்டாக்கப்பட்ட பிரபஞ்சங்கள் ஆத்மாவையன்றி வேறில்லை யென்பதாம்.

ச. அதை யறிகிறவித மெப்படி?

உ. பஞ்சீகிருத பஞ்சமகாஸ்தூலபூதங்களினாற் பிறக்கப்பட்ட அண்டமும், அவ்வண்டத்திலிருந் துண்டான பதினாலு உலோகமும், அந்தந்த உலோகங்களுக்கு உசிதமான நால்வகை யோனிகளும், அவைகட்குக் காரணமான பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களுமன்றி வேறில்லையென்றும், அந்தப்பூதங்களுஞ் சமஷ்டி வியஷ்டி யாத்மகமான இலிங்கசரீரமும், அவைகட்குக் காரணமாகிய அபஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களுமன்றி வேறில்லையென்றும், அந்தப்பூதங்களும் அதன்காரணத்தையன்றி வேறில்லையென்றும் அறியவேண்டியது.

ச. அது எப்படி?

உ. அப்புவினா லுண்டாக்கப்பட்ட பிருதிவி அப்புவையன்றி யெப்படி வேறில்லையோ, அக்கினியினா லுண்டாக்கப்பட்ட ஜலம் அக்கினியை யன்றி யெப்படி வேறில்லையோ, வாயுவினா லுண்டாக்கப்பட்ட அக்கினி வாயுவையன்றி யெப்படி வேறில்லையோ, ஆகாசத்தினா லுண்டாக்கப்பட்ட வாயு ஆகாசத்தையன்றி யெப்படி வேறில்லையோ, மாயையினாலுண்டாக்கப்பட்ட ஆகாசம் மாயையையன்றி எப்படி வேறில்லையோ அப்படியேயாம்.

ச. அந்த மாயாசொரூப மெப்படிப்பட்டது?

உ. அது திரிகாலத்திலு மில்லாதபடியினால் சத்தென்றுஞ் சொல்லப்படாது; அகம் அஞ்ஞானியென்ற அனுபவமிருக்கிறபடியினால் அசத்தென்றுஞ் சொல்லப்படாது; பரஸ்பர விருத்தமானபடியினால் சதசத்தென்றுஞ் சொல்லப்படாது.

ச. மற்றென்னவென்று சொல்லப்படும்?

உ. அனிர்வசனீயமென்று சொல்லப்படும்.

ச. அனிர்வசனீயமாவது யாது?

உ. மித்தையா சொரூபமாம்.

ச. அது எப்படி ?

உ. சசவிஷாண வந்தியாபுத்ர ககனாரவிந்த சுத்திகாரசிதம்போ லிருக்கிற படியினால், சின்மாத்திரத்துக் கன்னியமா யொருவஸ்துவு மில்லையென் றறியவேண்டும். இவ்வகைப்பட்ட சின்மாத்திரசொரூபமே தானென்று கொண்டு ஸ்ரீ சற்குருவினால் பிரதானுதிதோற்றமும், அஞ்ஞானமும் சங்கையறக் கேட்டு, அத்தியாரோபநீங்கி அன்னியபதார்த்த மில்லாமல் அபவாதமாய்த் தான் யாவுமென்று சாட்சாத்கரித்து எவனறிகின்றனோ, அவனே சீவன்முத்தனென்று சுருதி ஸ்மிருதி யாதிகளிற் சொல்லுகின்றது. இதிற் சம்சய மில்லை சித்தம்.

இரண்டாவது அபவாத நிரூபகம் முற்றிற்று.

---

மூன்றாவது

# சாதனசதுஷ்டயநிரூபகம்.

சங்கை: வேதாந்த விசாரத்திற்கு அதிகாரி யார் ?

உத்தரம்: சாதனசதுஷ்டய முள்ளவனே யதிகாரி.

ச. அது எப்படி ?

உ. பிரகஸ்பதி சவனமென்கிற யாகத்தில் பிராமண னெப்படி யதிகாரியோ, க்ஷத்திரியர் வைசியர் எப்படி யதிகாரிகளல்லரோ, ராஜசூய யாகத்தில் க்ஷத்திரிய னெப்படி யதிகாரியோ, பிராமணர் வைசிய ரெப்படி யதிகாரிக ளல்லரோ, ஸ்தோமமென்கிற யாகத்தில் வைசிய னெப்படி யதிகாரியோ, பிர்ம்ம க்ஷத்திரிய ரெப்படி யதிகாரிக ளல்லரோ, அப்படிப் போல வேதாந்தவிசாரத்திற்குச் சாதன சதுஷ்டய சம்பன்னத்துவ முண்டானவனே யதிகாரியாம்.

ச. சாதனசதுஷ்டயமாவது யாது ?

உ. நித்தியாநித்தியவஸ்துவிவேகம், இகவுத்திரார்த்த பலபோக விராகம், சமாதிஷட்கசம்பத்தி, முமூட்சுத்துவமாம்.

ச. இதில் நித்தியாநித்தியவஸ்து விவேகமாவது யாது ?

உ. பிரமமே நித்தியமென்றும், பாஞ்சபூதபௌதிக முதலிய ஜகத்தெல்லாம் அநித்தியமென்றும் சுருதியாதிகளைக் குருமுகமாய் விசாரித்தறிவது.

ச. இகவுத்திரார்தத பலபோக விராகமாவது யாது ?

உ. இந்தலோகத்திற் கன்மத்தினால் ஜனித்து வரப்பட்ட அநித்தியமான சிந்தன வனிதாதி விஷய போகத்தினிடத்திலும், பரலோகத்திற் கன்மஜன்னியத்தினால் வரப்பட்ட அநித்தியமான ரம்பாசம்போக அமிர்தாதிகளிடத்திலும் வாந்திசெய்த அசன மல மூத்திராதிகள்போல இச்சை யில்லாமல் இந்த ஜகத்திற்குக் காரணகர்த்தாவாகிய ஈசுவரனிடத்தில் பிரீதியாயிருப்பது.

ச. சமாதி ஷட்க சம்பத்தியாவது யாது ?

உ. சமை தமை உபரதி திதிட்சை சமாதி சிரத்தை என்றறுவகையாம்.

ச. இதிற் சமையாவது யாது?

உ. மனதைப் பாஹ்ய விஷயத்திற் செல்ல வொட்டாமல் திருப்பிச் சிரவணத்தில் நிறுத்துவது.

ச. தமையாவது யாது?

உ. ஞானேந்திரிய கன்மேந்திரியங்களை விஷயத்திற் செல்லவொட்டாமற் றிருப்பிச் சிரவணத்தில் நிறுத்துவது.

ச. உபரதியாவது யாது?

உ. விகிதமான கன்மங்களைப் புத்தி பூர்வகமாய் விடுகிறது. அதைச் சந்நியாசமென்றுஞ் சொல்லுவார்கள். அப்படியல்ல. விகிதமான கன்மங்களில் கர்த்தத்துவாபிமான பலாபேட்சையின்றிச் சகலபாவகன்மங்களையும்விட்டு, சகல புண்ணியகன்மங்களைச் செய்து பகவத்பிரீதியாக்குவது.

ச. திதிட்சையாவது யாது?

உ. சீதோஷ்ணங்களைப் பொறுப்பது. அப்படியானால் பனியிலிருந்து குளிரையும், வெய்யிலிலிருந்து சுடுகையையும் பொறுக்கிறதல்ல. பிராரத்தவசத்தினாலெந்தவேளைக்கு எது வருமோ, அதை யனுபவித்துத் தீரவேண்டுமென்றுகருதி, சகலமும் போவதைப்பற்றி வாட்டமும், சகலமும் வருவதைப்பற்றி மகிழ்ச்சியுமில்லாமல் சமபுத்தியுடனே யிருப்பது.

ச. சமாதியாவது யாது?

உ. திருப்பினமனமும் இந்திரியங்களும் வாசனைவசத்தாய் வரப்பட்ட விஷயத்தினிடத்திற் போம். அவைகளைச் சிரவணத்திற்கு விரோதமான விஷயங்களிற் செல்லவொட்டாமற் றிருப்பிச் சிரவணத்தில் நிறுத்துவது.

ச. சிரத்தையாவது யாது?

உ. பூர்வம் யாதொன்றினிடத்திலிருந்த விசுவாசமெல்லாம் குரு வேதாந்தவாக்கியங்களிடத்தில் வைப்பது.

ச. இனி முமுட்சுத்துவமாவது யாது?

உ. மோட்சத்தை அடையவேண்டுமென்கிற அதி தீவிரமான மனதுடனே கூடியிருக்கிறது. அதற்கே மோக்ஷ விச்சையென்று பெயர்.

ச. சகல பிராணிகளும் மோட்சம் வேண்டுமென்றுசொல்லுகிறார்களே; அது மோட்சவிச்சை யல்லவா?

உ. அல்ல.

ச. ஏன் அல்ல?

உ. கிரகம் பற்றிக்கொண்டெரிகிறபோது அவ்வீட்டுக்குள் அகப்பட்ட புருஷன் தனது புத்திர மித்திர களத்திராதிக ளென்னமாய்ப் போனார்களோ வென்ற விசாரத்துடன்கூடி, அக்கினியில் தபிக்கப்பட்டவனாய், அந்தப் புத்திர மித்திர களத்திராதிகளை விட்டுவிட்டுக் குளிர்ந்த ஜலத்திற் பிரவேசித்ததுபோல, சம்சார தாபத்திரயமென்கிற அக்கினியில் தபிக்கப்பட்ட புருஷன் இந்தச் சம்சார தாபத்தைப் போக்குகின்ற குருநாதன் எங்கே யிருக்கிறாரோ, இதற்கு என்னசாதனம் வேண்டுமோ வென்று தாபங்கொண்டு தேடுகின்ற தேட்டரவாகிய சித்தவிருத்திக்கு மோக்ஷ

விச்சையென்று பெயர். இந்நான்கு சாதனமும் யாரிடத்திலுண்டோ, அவர்களே யதிகாரி. சிரவணத்திற்குமுன்பே சாதன சதுஷ்டயங்களைச் சம்பாதித்துக்கொண்டு சிரவணத்திற்கு ஆரம்பிக்கவேண்டும். அப்படியன்றி ஞானங் கிடைக்கமாட்டாது. சற்குருவும் அனதிகாரிகளுக்கு உபதேசிக்கமாட்டார்.

ச. ஏன் உபதேசிக்கமாட்டார்?

உ. சூத்திரனுக்கு யாகம்பண்ணிவைத்தால் சொர்க்காதிபோகங்கள் அவனுக்கெப்படிச் சித்தியாதோ, சூத்திரனுக்கு உபநயனம் பண்ணிவைத்தால் அவனுக்குப் பிராமணத்துவ மெப்படிச் சித்தியாதோ, அப்படியே சாதனசதுஷ்டய மில்லாதவனுக்குச் சிரவணம்பண்ணிவைத்தால் அவனுக்கு ஞானபலஞ் சித்தியாது.

ச. ஆனால் இந்தச் சிரவணம் வீணாய்ப் போமோ?

உ. போகாது; அதனாலொரு அதிர்ஷ்ட முண்டாம். இந்தச் சாதன சதுஷ்டயஞ் சிரவணத்திற்கு முன்னில்லாதிருந்தாலும் சிரவணகாலத்திலாவது குருமுகமாய் அதை விசாரித்தறியவேண்டியது அவசியம்.

ச. அதிகாரிகளுக்கு இந்நான்கு சாதனமும் வேண்டுமோ? ஒருநித்தியாநித்தியவஸ்து விவேகமாத்திரம் போதாதோ?

உ. போதாது; உலகத்தில் சாஸ்திரிகளுக்கு நித்தியாநித்திய வஸ்துவிவேக முண்டாயிருந்தும் அவர்கள் விஷயத்தினிடத்தில் ஆசத்தியுண்டாய், காமிய கன்மங்களைச் செய்கிறபடியினால் அதிகாரிகளல்லர்; ஆகையால் இரண்டாஞ் சாதனமும் வேண்டும்.

ச. இந்த விரண்டு சாதனமும் போதாவோ?

உ. போதா; சிலர் நித்தியாநித்திய வஸ்துவிவேகமும், இகவாமுத்திரார்த்த பலபோக விராகமு முண்டாயிருந்தும் சமாதிஷட்க சம்பத்தியில்லாமை பற்றிக் கோபாதிகளில் தபிக்கப்படுகிறபடியினால் அதிகாரிக ளல்லர். ஆகையால் மூன்றுஞ்சாதனமும் வேண்டும்.

ச. இந்த மூன்றுசாதனமுந்தான் போதாவோ?

உ. போதா; சிலர் இம்மூன்று சாதனங்களுமுண்டாயிருந்தும் ஒருவிருஷ்ணு சலத்தைக் கக்கத்தில் இடுக்கிக்கொண்டு சடைமுடியுடையவர்களாய் யோகீஸ்வரரென்னும் பெயர்தரித்து, சம்சாரபந்தங்களைத் துறந்து விரத்தராய் உபசாந்தியுடையவர்களாய் ஒருவர்கையில் ஒருவஸ்துவும் வாங்காதவர்களா யிருக்கிறார்கள். அவர்களும் சிரவணத்தினிடத்திற் பிரியம் வைக்காதபடியினால் அதிகாரிகளல்லர். ஆகையால் நான்காம் சாதனமும் வேண்டும். இந்நான்கு சாதனமு முடையவர்களே வேதாந்தசிரவணத்திற் கதிகாரிகள். இந்தச் சாதனசதுஷ்டய சம்பத்துள்ளோர்க்குக் காயக வாசக இந்திரிய வியாபாரமின்றி மனோவியாபார ரூபமாத்திரமானபடியினால் விஷயத்தினிடத்தில் தோஷதிருஷ்டியுடையவர்கள் சுவயத்திற் சம்பாதித்துக் கொள்ளலாமென்று சுருதி ஸ்மிருதியாதிகளிற் சொல்லுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

மூன்றாவது சாதனசதுஷ்டயநிரூபகம் முற்றிற்று.

நான்காவது

# உபயபதார்த்தநிரூபகம்.

சங்கை: இந்தப்பிரபஞ்ச மெத்தனைவித பதார்த்தமா யிருக்கிறது?

உத்தரம்: இரண்டுவித பதார்த்தமா யிருக்கின்றது.

ச. அது எப்படி?

உ. ஆத்மாவென்றும், அனாத்மாவென்றுமாம்.

ச. பிரபஞ்சத்திற் கதீதமாயிருக்கப்பட்ட ஆத்மாவைப் பிரபஞ்சத்திற் குள்ளாக்கிச் சொல்லலாமோ?

உ. சொல்லலாம்.

ச. எப்படிச் சொல்லலாம்?

உ. பிரபஞ்சஞ் சேதனுசேதனமாய்த் தோன்றுகையினுல் பிரபஞ்சாதீதமாகிய ஆத்மாவைப் பிரபஞ்சத்திற் குள்ளாக்கிச் சொல்லலாம்.

ச. பிரபஞ்சஞ் சேதனுசேதனமாய்த் தோற்றப்பட்டாலும் பிரபஞ்சாதீதமாகிய வாத்மாவைப் பிரபஞ்சத்திற்குள்ளாக்கிச் சொல்லவேண்டுமோ?

உ. சொல்லவேண்டும்.

ச. அதெப்படிச் சொல்லவேண்டும்?

உ. ஆத்மாவென்றுற் சேதனமாயிற்றே. அந்தச் சேதனமாகிய ஆத்மா பிரபஞ்சத்துடன் கூடாவிட்டால், பிரபஞ்சம் சேதனமென்றும் அசேதனமென்றும் தோற்றுது; தோற்றுகிறபடியினுல், பிரபஞ்சாதீதமாகிய ஆத்மாவைப் பிரபஞ்சத்திற்குள்ளாக்கிச் சொல்லலாம்.

ச. அப்படியானுல் பிரபஞ்சத்தில் சேதனம் எது? அசேதனம் எது?

உ. நடக்கிறது, ஓடுகிறது, பறக்கிறது, குதிக்கிறது, ஊருகிறது இவை முதலானவைகள் சேதனம்; பிருதிவி, அப்பு, பர்வதம், விருக்ஷங்கள் இவை முதலானவைகள் அசேதனம்.

ச. பிரபஞ்சம் இப்படி யனேக பதார்த்தமாய்த் தோற்றிக்கொண்டிருக்க இரண்டு பதார்த்தமென்கிற தெப்படி?

உ. பிரபஞ்சத்தில் ஆத்மாவென்றும் அனாத்மா வென்றும் இரண்டு பதார்த்தங்க ளிருக்கின்றன. இவற்றில் ஒரு அனாத்மாவே காரியரூபமாய்ப் பரிணமித்து அனேக பதார்த்தங்களாயிற்று. இப்பதார்த்தங்களோடுங்கூடியாத்மாவும் அனேகமாகவே தோற்றப்படுகின்றது.

ச. அனாத்மாக்களோடே கூடித் தோற்றப்படுகிற ஆத்மா எத்தனை விதமாய்த் தோற்றப்படுகிறது?

உ. சீவனென்றும், ஈசுவரனென்றும் இரண்டுவிதமாய்த் தோற்றப்படுகின்றது.

ச. இந்தச் சீவேசுவரர்களெத்தனை விதமாய்த் தோற்றப்படுகிறார்கள்?

உ. சீவனும் அனேகவிதமாய்த் தோற்றப்படுகின்றது; ஈசுவரனும் அனேகவிதமாய்த் தோற்றப்படுகிறார்.

ச. சீவர்கள் அனேகவிதமாய்த் தோற்றட்டும்; ஒருவரா யிருக்கிற ஈசுவரனெப்படி யனேகவிதமாய்த் தோற்றுகிறார்?

உ. புண்ணிய க்ஷேத்திரங்களிலும், பட்டணங்களிலும், கிராமங்களிலும், வீடுகளிலும் ஈசுவரன் அனேகவிதமாய்த் தோற்றுகிறார்.

ச. அங்கங்கே தோற்றுகின்றவைகளெல்லாம் மண் சிலை தாறு தாம்பிராதிப் பிரதிமைகளல்லவோ? அவைகளை ஈசுவரனென்றெப்படிச் சொல்லலாம்?

உ. அந்த மண் சிலை தாறு தாம்பிராதிப் பிரதிமைகளிடத்தில் எல்லாருக்கும் ஈசுவரபுத்தியேயன்றி, பிரதிமைபுத்தி சர்வாத்மனாயில்லை. அல்லாமலும் அவைகளில் பிரதிமைபுத்தி தோற்றி யீசுவரபுத்தி யில்லாவிட்டால் பூசை அபிஷேக நைவேத்திய நிமித்தம் லட்சம் லட்சமாய்ச் செலவு செய்யார்கள். இப்படிச் செலவுசெய்கிறபடியினால் பிரதிமைகளிடத்திலும் ஈசுவரபுத்தி வரலாம்.

ச. அனாத்மசொரூபமான பிரதிமைகளிடத்தில் ஈசுவரபுத்தி வரலாமோ?

உ. வரலாம்.

ச. எப்படி வரலாம்?

உ. மிகுதியும் நிஷேதமான தேகேந்திரியாதிக்கூட்டமே நானென்று தேகேந்திரிய கூட்டத்தில் ஆத்மபுத்தி வந்தவனுக்கு அந்தப் பிரதிமைகளிடத்திலும் ஈசுவரபுத்தி வரலாம்.

ச. இந்தத் தேகேந்திரியம் எப்படி நிஷேதபதார்த்தம்?

• சுக்கில சோணிதத்தினாலுண்டானபடியினாலும், மாமிச மலமூத்திரங்களினால் நிருமிக்கப்பட்டிருக்கிறபடியினாலும், சற்சந்தனாதிகளினால் அந்தச் சரீரத்தைச் சுகந்தப்படுத்துவோமாயின் அந்தச் சரீர பரிசத்தினால் அந்தச்சந்தனமும் துர்க்கந்தமாயும் நிஷேதமாயும் போகிறபடியினாலும், சரீர நஷ்டமாய்ப் போனபோது அழுகி நாறிக் கரைந்துபோகையினாலும், இருக்கிறபேர்களுக்குத் திரவிய விரயமும் துக்கக் கிலேசமுங் கொடுக்கிறபடியினாலும் இந்தச் சரீரம் நிஷேதபதார்த்தமென்பதற்குச் சந்தேகமில்லை. இவ்வகைப்பட்ட தோஷங்கள் அந்தப் பிரதிமைகளிடத்தில்லை. அவைகளிடத்திற் சமர்ப்பித்த சற்சந்தனாதிகள் யாருக்குமுபயோகமாகிறபடியினாலும், அவைகளுக்கு ஒருஹானி வந்தபோதும் மற்றொன்றுக் குபயோகமாகிறபடியினாலும் அந்தப் பிரதிமைகளிடத்தில் ஈசுவரபுத்தி வருகிறது உசிதமேயாம்.

ச. ஆனால் ஒரு அனாத்ம பதார்த்தமே காரியரூபமாய்ப் பரிணமித்து அனேகம் பதார்த்தமாய்த் தோற்றப்படும் என்பதற்குத் திருஷ்டாந்தம் எப்படி?

உ. பிருதிவி யொன்றே காரியரூபமாய்ப் பரிணமித்துப் பர்வதங்கள் விருக்ஷங்கள் வனங்கள் கோபுரங்கள் பிரகாரங்கள் மண்டபங்கள் சுவர்கள் முதலான கடசாரரூபமாய் எப்படித் தோற்றப்படுகின்றதோ அப்படிப்போலவும், ஆகாசம் ஒன்றே பலவற்றிற்கூடிக் கடாகாசமென்றும், மடாகாசமென்றும், பர்வதாகாசமென்றும், விருக்ஷாகாசமென்றும், வனாகாசமென்றும், கோபுராகாசமென்றும், பிரகாராகாசமென்றும், சுவராகாசமென்றும் இப்படி நானாவித ஆகாசங்களா யெப்படித் தோற்றப்படுகின்றதோ, அப்படிப்போலவும் ஆத்மாவும் காரியரூபமாய்ப் பரிணமிக்கப்பட்ட அனாத்ம பதார்த்தங்களுடன் கூடித் தேவதத்தனென்றும், யக்ஞதத்தனென்றும், ராமனென்றும், கிருஷ்ணனென்றும், கோபாலனென்றும், கோவிந்தனென்றும் அனேகவிதமாய்த் தோற்றப்படுகிறது. இந்தப் பிருதிவி ஆகாச திருஷ்டாந்தம் அவிச்சின்ன பக்ஷத்திற்குத் திருஷ்டாந்தமென்று சொல்லப்படும். இனிப் பிரதிபிம்ப பக்ஷ திருஷ்டாந்தமுஞ் சொல்லுகின்றோம். ஒருஜலமே உபாதிவசத்தினால் சமுத்திரமென்றும், நதியென்றும், ஏரி யென்றும், தடாகமென்றும், கால்வாயென்றும், நடபாவியென்றும், பாண்டஜலமென்றுஞ் சொல்லப்படும். அந்தச் சலத்தில் ஒரு சூரியனே பிரதிபிம்பித்து அனேகவிதமாய் எப்படித் தோற்றப்படுகிறானோ, அப்படியே ஆத்மாவும் அனாத்மகாரியமாயிருக்கப்பட்ட அந்தக் கரணங்களிற் பிரதிபிம்பித்து அனேகரூபமாய்த் தோற்றுகிறது. அப்படித்தோற்றப்பட்டாலும் அனாத்மகாரியமான அந்தக்கரண தர்மங்கள் ஆத்மாவைக் காலத்திரயத்திலும் ஸ்பரிசிக்கவில்லை.

ச. எப்படி ஸ்பரிசிக்கவில்லை?

உ. ஜலத்திலுள்ளசீதளமும், ஜலவிகார அலையும், அந்தச்சலத்தில் பிரதிபிம்பித்த சூரியனை யெப்படி ஸ்பரிசிக்கவில்லையோ, அப்படியே அந்தக்கரண விகாரங்களும் அந்தக்கரணத்திற் பிரதிபிம்பித்த சிதாபாசனையே ஸ்பரிசிக்கவில்லையென்றால், அவ்வந்தக்கரணத்திற் கதிஷ்டானமான பிரத்தியகாத்மாவை ஸ்பரிசிக்காதென்று சொல்லவும்வேண்டுமோ? இதுமாத்திரமல்ல;பிருதிவி விகாரங்களும்பிருதிவியின்காரியவிகாரங்களும்பிருதிவிக் காதாரபூதமான ஆகாசத்தை எப்படி ஸ்பரிசிக்க வில்லையோ, அப்படியே அனாத்மாவான அஞ்ஞானமும் அஞ்ஞானகாரியமான தேகேந்திரியாதிப் பிரபஞ்சதர்மமும் அஞ்ஞானத்திற்கும் அஞ்ஞானகாரியத்திற்கும் ஆதாரபூதமான பிரத்தியகாத்மாவை ஸ்பரிசிக்கவில்லை. இப்படி ஆத்மானாத்ம விவேகம்பண்ணி ஆத்மசொரூபமே நானென்று ஸ்ரீசற்குரு கடாட்சத்தினால் அனாத்ம அஞ்ஞான அகங்காரத்தை வேறுபடுத்தி, வேறுபடுத்தின அனாத்ம அஞ்ஞான அகங்காரமும் காரணமன்றிக்காரியமில்லாததுபோலச் சச்சிதானந்தமன்றி வேறில்லையென்று அனுபவரூபமாய்ச் சங்கையற எவனறிகிறானோ, அவனே சீவன் முத்தனென்று சுருதி ஸ்மிருதியாதிகளிற்சொல்லுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

நான்காவது உபயபதார்த்தநிரூபகம் முற்றிற்று.

ஐந்தாவது

# துக்காரோப நிருபகம்.

---

சங்கை: பிராணிகளுக்குத் துக்கம் ஆகந்துகமா? சுபாவிகமா?

உத்தரம்: ஆகந்துகமே.

ச. சுபாவிகமென்று சொல்லக்கூடாதோ?

உ. சொல்லக்கூடாது.

ச. ஏன் சொல்லக்கூடாது?

உ. சுபாவிகமாயின் துக்கநிவிர்த்திக்கு எவர்களும் எத்தனம்பண்ணாமலிருக்க வேண்டும். எத்தனம் பண்ணுகிறபடியினால் சுபாவிகமென்று சொல்லக் கூடாது.

ச. சுபாவிகமும் ஆகட்டும்; துக்கநிவிர்த்திக்கு எத்தனமும் பண்ணட்டுமே?

உ. சுபாவிகமென்றால் சொரூபமாகையினால் சொரூபத்துக்கு ஹானிவரும்.

ச. வந்தால் வரட்டுமே?

உ. துக்கநிவிர்த்தியானவர்கள் ஒருவரும் இல்லாமற் போகவேண்டும். இருக்கிறபடியால் துக்கஞ் சுபாவிகமென்பது கூடாது.

ச. துக்கம் சுபாவிகமானாற் போகாதோ?

உ. போகாது. திருஷ்டாந்தத்தில் வேப்பிலைக்குக் கசப்புச் சுபாவம். கசப்புப் போய் வேப்பிலை யுண்டென்பது கூடாது. ஏனென்னில் கசப்பே வடிவமா யிருக்கையினால் கூடாது. அதுபோல ஆத்மாவினிடத்திலுந் துக்கஞ் சுபாவிகமானாற் போகாது. ஆதலால் ஆத்மாவுக்குத் துக்கம் சுபாவிகமென்பது கூடாது. ஆகந்துகமென்றே சொல்லவேண்டும்.

ச. சுபாவிகமும் ஆகட்டும்; துக்கநிவிர்த்தியும் வரட்டுமே?

உ. அப்படிக் கூடாது.

ச. அக்கினிக்கு உஷ்ணம் சுபாவம். சுபாவமான உஷ்ணத்திற்கு மணிமந்திரங்களால நிவிர்த்தியும், சைத்தியத்துக்கு அபிவிருத்தியுங் கண்டோம்; பின்னும் ஜலத்திற்குச் சைத்தியம் சுபாவம். சுபாவமான சைத்தியத்திற்கு அக்கினிக்கூட்டரவினால் நிவிர்த்தியும், உஷ்ணத்திற்கு அபிவிருத்தியும் கண்டோம். அதுபோல ஆத்மாவுக்குத் துக்கஞ் சுபாவமானாலும் உத்கிருஷ்ட கர்மவுபாசனைகளால் துக்கநிவிர்த்தியும், சுகத்திற் பிரவிருத்தியும் வருமென்று சொல்லப்படாதோ?

உ. துக்கத்திற்குத் தற்காலம் உபசமனமேயல்லாமல் அத்தியந்த நிவிர்த்தி கூடாது. அக்கினியாதிகளுக்கு மணிமந்திரங்களினால் தற்காலம் உபசமனமாயிருந்து காலாந்தரத்தில் உஷ்ணாதிகளுக்கு எப்படி யபிவிருத்தியுண்டாகின்றதோ, அப்படிப்போல ஆத்மாவுக்கு உத்கிருஷ்ட கர்மவுபாசனைகளினால் பலரூபமான சுகத்திற்கு நாசம் வரும்போது திரும்ப

வும் துக்கத்திற்கு அபிவிருத்தி யுண்டாகும். அத்தியந்த நிவிர்த்தியே யில்லை. இதுமாத்திர மல்ல; மோக்ஷத்திற்கு உற்பத்தியும் அநித்தியத் துவமும் வரும்.

ச. வந்தால் வரட்டுமே.

உ. இந்த அர்த்தமெவர்களுக்குஞ் சம்மதமாகாது. ஆத்மாஆனந்தசொரூபனென்று சொல்லப்பட்ட சுருதிஸ்மிருதி இதிகாச புராண ஆகமாதிகளுக்கும் விருத்தம் வரும். இதுமாத்திர மல்ல; சுழுத்தி யவஸ்தையில் சகல பிராணிகளுக்கும் நான் துக்கத்தை யடைந்திருந்தேனென்ற அனுபவ மில்லாமையினாலும், சுகமாயிருந்தேனென்ற வனுபவ மிருக்கிறபடியினாலும் ஆத்மாவுக்குத் துக்கஞ் சுபாவீகமென்று அங்கீகரிக்கக்கூடாது. அப்படி யங்கீகரிப்போமாயின்இந்தச் சுவானுபவத்திற்கு விருத்தம் வரும். ஆதலால் ஆத்மாவுக்குத் துக்கஞ் சுபாவீகமென்பது கூடாது.

ச. பின்னை யென்னவென்று சொல்லவேண்டும்?

உ. துக்கம் ஆகந்துகமென்றே சொல்லவேண்டும்.

ச. துக்கம் எதனால் வந்தது?

உ. சரீர முண்டானபடியினால் வந்தது. ஆகையால் எங்கெங்கே சரீர முண்டோ, அங்கங்கே துக்க வியாப்தி யுண்டு.

ச. இப்படிச் சொல்லாமா? ராஜப்பிரபுக்கள் சுகத்தையே யனுபவித்துக் கொண்டிருக்கச் சரீரமுண்டான விடங்கடோறுந் துக்க முண்டென் றெப்படிச் சொல்லலாம்?

உ. ராஜப்பிரபுக்களுக்குத் தேகத்தினிடத்தில் ரோகத்தினாலும் சத்துரு பலத்தினாலும், பிள்ளையில்லாமையினாலும், பிள்ளை யுண்டாயிருந்தும் அவைகளுக்கு வித்தை புத்தி வரவில்லை யென்பதினாலும், அவைகள் சொன்ன சொற்கேளாமையினாலும், பிரியமான பிள்ளை இறந்துபோவதினாலும், ராஜ்ஜியத்தில் மழை யில்லாமையினாலும், அதிக மழை பெய்வதினாலும், ஸ்திரீகள் ஒருவருக்கொருவர் செய்கிற விரோதத்தினாலும், முதுமையினாலும், நாம் நசித்துப்போவோமென்கிற பயத்தினாலும், இன்னும் இவைபோல அனேககாரணங்களினாலும் அவர்களைச் சுகசொரூப ரென்றுசொல்லக்கூடாது; துக்க சொரூபிகளென்றே சொல்ல வேண்டும். சுகசொரூபிகளெனச் சொல்வது மோகத்தினாலன்றி வேறல்ல.

ச. மோகத்தினால் துக்கம் சுகமாய் எப்படித் தோற்றும்?

உ. மூட்டை யெடுக்கிறவனுக்குக் கூலி கிடைத்தால் மூட்டை சுமக்கிற துக்கம் அவனுக்கில்லை. போயிகள் தங்கள் துரைக்குப் பிரயாண முண்டானால் சந்தோஷிக்கிறார்கள். இல்லாவிட்டால் துக்கப்படுகிறார்கள். வேலை செய்கிறவர்கள் தங்களுக்கு வேலை யகப்பட்டால் சந்தோஷிக்கிறார்கள். இல்லாவிட்டால் துக்கப்படுகிறார்கள். வழிப் பிரயாணக்காரர் தங்களுக்குப் பிரயாண முண்டானால் சந்தோஷப்படுகிறார்கள்; இல்லாவிட்டால் துக்கப்படுகிறார்கள். மாவுத்தர்கள் தங்களுக்குப் புதிதாய் யானை யகப்பட்டால் சந்தோஷிக்கிறார்கள். இல்லாவிட்டால் துக்கப்படுகிறார்கள். இவை முதலானவைகளினா லுண்டாகுந் துக்கம் இவர்களுக்கு

எப்படிச் சுகமாய்த் தோற்றுகின்றதோ, அப்படியே ராஜப்பிரபுக்களுக்குந் துக்கம் சுகமாய்த்தோற்றுகின்றது. மோகத்தினாலுண்டான துக்கம் ராஜப்பிரபுக்களிடத்திற் சேர்ந்தபேருக்கும் உண்டென்பதைக் குறித்துக் கேட்கவே வேண்டியதில்லை.

ச. ஆனால் விவேகிகளுக்குந் துக்கமுண்டோ?

உ. உண்டு.

ச. விவேகியென்றால் சரீரம் உண்டானவனோ? இல்லாதவனோ?

உ. சரீரமில்லாதவனுக்கு விவேகியென்ற வியவகாரங் கூடாது. சரீரமுள்ளவனே விவேகியென்று சொல்லவேண்டும், ஆதலால் விவேகிக்குந் துக்கமுண்டு.

ச. எப்படித் துக்க முண்டு?

உ. பசியும் தாகமும் சீதோஷ்ண முதலிய துக்கங்களும், வயிற்றுநோய் தலைநோய் புலி பாம்பாதிகளினால் வரப்பட்ட பயங் கிலேசம் நடுக்க முதலானவையு முண்டாயிருக்கையினால் விவேகிக்குந் துக்கமுண்டு.

ச. விவேகிக்கும், அவிவேகிக்கும் பேதம் எப்படி?

உ. விவேகியானவன் சர்வதுக்கங்களும் அந்தக்கரண சுபாவமென்றும், சாக்ஷியான தனக் கில்லையென்றும் விவகரிப்பான். அவிவேகியானவன் சர்வதுக்கங்களையுந் தன்னிடத்திற் சுமத்திக்கொண்டு, புத்திரன் சுகமாயிருந்தால் தான் சுகமாகவும், புத்திரன் இறந்தால் தானிறந்து போகிறதாகவும் நினைந்து தாபாக்கினியினால் தபிப்பான். இந்தவகையினால் விவேகிக்கும் அவிவேகிக்கும் பேதமில்லையென்பது கூடாது.

ச. ஆனால் தேவர்களுக்குந் துக்கமுண்டோ? வில்லையோ?

உ. உண்டு.

ச. தேவர்களுக்குஞ் சரீரமுண்டோ? வில்லையோ?

உ. உண்டு.

ச. சரீரமுண்டென்று எதினால் அறியப்படுகிறது?

உ. சாஸ்திரங்களால் அறியப்படுகின்றது.

ச. ஆனால் அவர்களுக்குத் துக்கமுண்டாவது எப்படி?

உ. அன்னியோன்னிய யுத்தத்தினாலும், குரூரமான அன்னியோன்னிய சாபங்களினாலும், பலாபலத்தினால் ஒருவரைசுவரியத்தை ஒருவர் பறித்துக்கொள்ளுகிறபடியினாலும், ஒருவர் பெண்சாதியை யொருவர் அபகரிக்கிறபடியினாலும், ராக்ஷதர் அவர்கள் பட்டணத்தைப் பிடித்துக்கொண்டு அவர்களைத் துரத்துகிறபடியினாலும், ராக்ஷதர் பிடித்து விலங்கு பூட்டி, அவர்களை அடிமைத்தனஞ் செய்விக்கிறபடியினாலும், புண்ணிய கர்ம க்ஷயத்தினால் நாசம் வருமென்கிற கிலேசத்தினாலும், தேவர்களுக்கும் துக்கம் உண்டென்பது நிச்சயம்.

ச. தேவர்களுக்குந் துக்கமுண்டென்றால் அவர்கள் நமக்கு எப்படியுபாசகராவார்கள்? இஷ்டசித்திகளை யெப்படிக் கொடுப்பார்கள்?

உ. ராஜப்பிரபுக்கள் தாங்கள் துக்கமுண்டானவர்களானாலும் ஐசுவரிய சம்பத்தினால் நம்மால் போற்றப்படுபவராயிருந்து நமக்கு இஷ்டபலன்களை

யெப்படிக்கொண்டிக்கிறார்களோ, அப்படியே தேவர்களுந் தாங்கள் துக்கிகளானாலும் யோகாயிசுவரியாதி சம்பத்தினால் நமக்கு உபாசகரும் இஷ்டசித்திகளைக் கொடுக்கின்றவரு மாவார்கள்.

ச. தேவர்கள் ஆனந்த சொரூபிகளென்று சாஸ்திரங்களிற் சொல்லுகின்றதே; அதற்குத் தாற்பரியம் என்ன ?

உ. விவேகியானவன் சரீரத்தில் கூடியிருக்கிறபடியினால் துக்கமுண்டாயிருந்தாலும் துக்கம் அந்தக்கரண சுபாவமென்றெப்படிக் காண்கிறானோ, அப்படியே உத்கிருஷ்டமான தேவர்களும் துக்கத்தை அந்தக்கரண சுபாவமாய்க் காண்கிறார்கள். ஆதலால் அவர்களை யானந்த சொரூபரென்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன.

ச. தேவர்களுக்குந் துக்கமுண்டென்கிற சாஸ்திரங்களின் தாற்பரியம் என்ன ?

உ. எங்கே யெங்கே சரீரமுண்டோ, அங்கே யங்கே துக்கமுண்டு. அதாவது இரணியகர்ப்ப சரீரமட்டுந் துக்கமுண்டு. ஆனபடியினால் சரீரமுத்தியர்த்தமா யெத்தனஞ் செய்யக்கூடாது; அசரீர முத்திக்கே எத்தனஞ் செய்யவேண்டுமென்றந்தச் சாஸ்திரங்களின் தாற்பரியம்.

ச. சரீரமுத்திபோல அசரீரமுத்தியென்றொன்றுண்டானா லல்லவா அசரீரமுத்தி நிமித்த மெத்தனம் பண்ணவேண்டும்? அப்படி அசரீரமுத்தியென்றொன்றுண்டோ ?

உ. உண்டு.

ச. சரீரமுத்தி யுண்டென்பதற்கும், அசரீரமுத்தி யில்லையென்பதற்கும் பிரமாணமுண்டா?

உ. உண்டு. சரீரமுத்தியுடையபேர் நக்ஷத்திர ரூபத்தோடுபிரத்தியக்ஷமாய்த் தெரிகிறதுபோல், அசரீரமுத்தியுடைய பேர் தெரியவில்லை. அன்றியும் யோகீசுவரர்கள் யோகமகிமையினால் லோகாந்தரங்களுக்குப் போய்ச் சரீர முத்தியுடையவர்களைக் கண்டு வந்தார்களென்று சாஸ்திரங்களிற் சொல்லுகின்றபடி, அசரீர முத்தியுடையவர்களைக்கண்டுவந்தோமென்று சொல்லாதபடியினாலும், சரீரமுத்தியுள்ளவர்கள் நான் அனேககால மிருந்துவந்தேனென்று சாஸ்திரங்களிற் சொல்லப்பட்டதுபோல, அசரீர முத்தியுள்ளவர்கள் நான் அனேககாலம் அசரீர முத்தியா யிருந்துவந்தேனென்று சொல்லாமையினாலும் சரீரமுத்தியுண்டு; அசரீரமுத்தி யில்லையென்று சொல்லலாம். ஆனாலும் அப்படிச் சொல்லக்கூடாது.

ச. ஏன் சொல்லக்கூடாது ?

உ. சுழுத்திசுகம் சமஸ்தபிராணிகளுக்கும் எப்படிப் பிரத்தியட்சமோ, அப்படியே அசரீரமுத்தியும் பிரத்தியட்சம்.

ச. சுழுத்திச் சுகந்தான் பிரத்தியட்சம்; முத்திச் சுகமும் பிரத்தியட்சமோ ?

உ. சுகசொரூபமாயிருத்தல் சர்வ சுழுத்தியிலும் சமனாயிருக்கிறபடியினாலும், உனக்குச் சுழுத்திச்சுகம் பிரத்தியட்சமாகும்போது முத்திச்சுகமும் பிரத்தியக்ஷமேயாம்.

ச. சுகப்பிரத்தியட்சம் சுழுத்தியிற் சமனுயிருக்கிறபடியினுல் சுழுத்தியே முத்தியென்று சொல்லலாமோ ?

உ. சுழுத்தியினிடத்தில் அஞ்ஞானமும், உற்பத்திக்கு ஸ்தானமும் இருக்கிறபடியினுலும் முத்தியில் அஞ்ஞானமும் உற்பத்திக்குக் காரணபீசமும் இல்லாதபடியினுலும் சுழுத்தியே முத்தியென்பது கூடாது. ஆகையால் சுழுத்திச் சுகத்தைப்போல முத்திச்சுகமும் பிரத்தியக்ஷமானபடியினுல் சரீரமுத்தியைப்பார்க்கிலும் அசரீரமுத்தியே பிரத்தியட்சம். யோகியானவன் அசரீர முத்தனைக் கண்டு வந்து சொல்லாதபடியினுலும், அசரீரமுத்தியுடையவன் நான் அசரீரமுத்தியாயிருந்து வந்தேனென்று சொல்லாதபடியினுலும், சரீரமுத்தி யுண்டென்கிறதில் எந்தநட்சத்திராதிகள் பிரமாணமாய்ச் சொல்லப்படுகின்றனவோ, அவைகளெல்லாஞ் சொர்க்கலோகவிஷயமாய் அநித்தியமாய்ப் பிரத்தியக்ஷமாய்க் கண்டபடியினுலும், இதுபோலப் பிரமலோகாதிகள் விஷயமாகாதபடியினுலும் இந்த நட்சத்திரங்கள் சரீரமுத்தியுண்டென்றதில் பிரமாணமாகா; சாஸ்திரமாத்திரமே பிரமாணம். சாஸ்திரமன்றிப் பிரமாணுந்தரமில்லாமையினுலும், அசரீரமுத்தியுண்டென்றதில் சாஸ்திர யுத்தி யனுபவமொத்திருக்கிறபடியினுலும் அசரீர முத்திநிமித்தமே யெத்தனம் பண்ணவேண்டும். சரீர முத்திநிமித்த மெத்தனம் பண்ணவேண்டியதில்லை. அப்படி எத்தனித்தாலும் துக்கம் போகாதென்று சாஸ்திரங்களாலும் யுத்தியினுலும் தெரிகின்றது.

ச. இதற்கு அனுபவ மேது ?

உ. சுழுத்தியிற் சரீரமில்லாதபடியால் துக்கமில்லை ; சாக்கிர சொப்பனத்தில் சரீரமிருக்கிறபடியால் துக்கம் அனுபவிக்கப் படுகின்றது. ஆதலால் சரீர மெங்கேயுண்டோ, அங்கே யெல்லாந் துக்கமுண்டு; சரீர மெங்கே யில்லையோ, அங்கே யெல்லாந் துக்கமில்லையென்று அன்வய வெதிரேக வியாபகத்தினுல் சித்தம். இப்படியே ஆத்மாவுக்குத் துக்கம் சரீரத்தினுலேயே வருகின்றபடியால், துக்கம் சுபாவிகமென்பது கூடாது. ஆகந்துகமென்றே சொல்லவேண்டும்.

ச. ஆனுல் இந்தச்சரீரம் எதினுல் வருகிறது ?

உ. கர்மத்தோடுங்கூடிய பஞ்சீகிருத பஞ்ச மகாபூதங்களினுல் வருகின்றது.

·. அப்படி யேன் சொல்லவேண்டும்? கேவலம் பஞ்சீகிருத பஞ்ச மகா பூதங்களினுலேயே சரீரம் வருகிறதென்று சொல்லக் கூடாதோ ?

சொல்லக்கூடாது. எங்கும் பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்க ளிருக்கிறபடியினுல் அங்கங்கே சரீரம் பிறக்கவேண்டும். அப்படி யில்லாதபடியினுல், கேவலம் பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களினுல் சரீரம் வருமென்பது கூடாது.

பஞ்சமகாபூதங்கள் சுக்கில சோணிதாகாரமாய் எங்கே பரிணமிக்கின்றதோ, அங்கே சரீரம் பிறக்குமென்று ஏன் சொல்லக் கூடாது ?

உ. நித்தியமும் ஸ்திரீ புருஷர்களுக்குச் சையோகத்தினால் சுக்கில சோணிதம் பிறக்கின்றது. அங்கே சரீரமுண்டாகவில்லை. ஆகையால் அப்படிச் சொல்லக்கூடாது.

ச. அங்கே சுக்கில சோணித மில்லையென்று சொல்லுவோமே?

உ. அப்படியானால் ஸ்திரீ புருஷர்களுக்கு ரதியில்லாமற் போகவேண்டும்.

ச. அப்படியானால் சுக்கில சோணிதமே தேசகாலங்களை யபேக்ஷித்துச் சரீராகாரமாகிறதென்று சொல்லுவோமே?

உ. அப்படியுஞ் சொல்லக்கூடாது. சொன்னால் பிராணிகளுக்கு வைசித்திரிய மில்லாமற் போகவேண்டும்.

ச. ஆனால் பிராணிகளுக்கு வைசித்திரியமுண்டோ?

உ. ஒருசரீரத்தைப்போ லொருசரீர மில்லாதபடியினா லுண்டு.

ச. ஆனால் வைசித்திரியம் தேசகாலங்களினால் வருகிறதென்று சொல்லக்கூடாதோ?

உ. தேசகாலங்கள் சர்வப்பிராணிகளுக்குஞ் சாதாரண காரணமா யிருக்கிறபடியினால், தேசகாலங்களினால் ஜகத்து வைசித்திரியம் வருகிறதென்பது கூடாது.

ச. தேசகாலங்களுஞ் சாதாரணகாரணமாகட்டும்; அது களினால் ஜகத்துக்கு வைசித்திரியமும் வரட்டுமே?

உ. சாதாரண காரணமான தேசகாலங்களினால் கடாதிகளுக்கு வைசித்திரிய மில்லாத படியினால் தேசகாலங்களால் வருமென்பது கூடாது.

ச. எதை யபேக்ஷித்துக் கடாதிவைசித்திரியம் வருகிறது?

உ. சாதாரண காரணமான குலாலாதி வியாபார வைசித்திரியத்தினால் வருகின்றது. அதுபோலப் பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களும் சுக்கில சோணிதாகாரமாகப் பரிணமித்துச் சாதாரணகாரணமான தேசகாலங்களை யபேக்ஷித்திருந்தபோதிலும் அசாதாரண காரணமான காரணாந்தரத்தை யபேக்ஷித்து விசித்திர சரீராதி யாகாரமாகப் பரிணமிக்கின்றன.

ச. அந்தக் காரணாந்தரமாவது யாது?

உ. கர்மமே.

ச. கர்மத்துக் கிவ்வகைப்பட்ட சாமர்த்திய மிருக்கிறபடியினால், கேவலம் கர்மத்தினாலேயே சரீரம் வந்ததென்று சொல்லுவோமே?

உ. கர்மம் நிராதாரமாயிருப்பதாலும், ரூபமில்லா திருப்பதாலும், அசைவுமாத்திரமாயிருக்கிறபடியினாலும், திருஷ்ணாவஸ்தையா யிருக்கிறபடியாலும் அதனால் சரீரம்வந்ததென்பது கூடாது. கர்மத்துடன்கூடிய பஞ்சீகிருத பஞ்ச மகாபூதங்களினாலேயே சரீரம் வந்ததென்று சொல்லவேண்டும்.

ச. சரீர வைசித்திரியம் எதனால் வருகின்றது?

உ. நிமித்தகாரணமான கர்ம வைசித்திரியத்தினாலேயே சரீர வைசித்திரியம் வருகின்றது.

ச. இதற்குத் திருஷ்டாந்த முண்டோ?

உ. உண்டு. கடத்தை யுண்டாக்கு மிடத்துக் கேவலம் உபாதான காரணமான மண்ணினால்மாத்திரமும், கேவலம் நிமித்தகாரணமான குலால வியாபாரத்தினால் மாத்திரமும் காரிய மெப்படிப் பிறக்கவில்லையோ, குலாலவியாபாரமான து மண்ணை யாசரித்தபடியினால் காரிய மெப்படிப் பிறக்கின்றதோ, மண் ஏகரூபமாயிருந்தாலும் குலாலவியாபாரத்தினால் காரியத்தில் எப்படி வைசித்திரியம் பிறக்கின்றதோ, அப்படியே கேவலம் பஞ்சீகிருத பஞ்ச மகாபூதங்களினாற் சரீர முண்டாகவில்லை; கேவலம் கர்மத்தினாலுஞ் சரீர முண்டாகவில்லை. கர்மத்துடன்கூடிய பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களினாலேயே சரீர முண்டாகிறபடியால், கர்ம வைசித்திரியத்தினாலேயே சரீர வைசித்திரியம் வருமென்பது நிச்சயம். உபாதான காரணமான மண்ணிருந்தபோதும் நிமித்தகாரணமான குலாலவியாபார மில்லா விட்டால் கடம் எப்படிப் பிறக்கவில்லையோ, அப்படியே உபாதானகாரணமும் ஈசுவர சிருட்டியுமான பஞ்சபூதங்களும் அதன் காரியமான பவுதிகப்பிரபஞ்சமும் எப்படி நிலைபெற்றிருந்தாலும் அத்து விதமான ஆத்மாவே நானென்கிற ஞானத்தினால் யாருக்குக் கர்மம் நசிக்கின்றதோ, அவர்களுக்குச் சரீரம்வாராது. பிரபஞ்சம் காலத்திரயத்திலு மில்லாமலிருந்துந் தோற்றுகின்றது. தோற்றினாலு மில்லையென்கிற நிச்சயம் யாருக்கு வருகின்றதோ, அவர்களுக்குச் சரீரம் வராதென்பது அன்வய வெதிரேகத்தினால் சுதசித்தம்.

ச. அன்வய வெதிரேகமாவன யாவை?

உ. கர்மமுண்டானாற் சரீரமுண்டென்கிறது அன்வயம்; கர்ம மில்லாவிட்டாற் சரீர மில்லையென்கிறது வெதிரேகம்.

ச. அது எங்கே யனுபவிக்கப்படுகின்றது?

உ. சாக்கிர சொப்பனத்தில் ஸ்தூல சூட்சும போகப் பிரதானமான கர்ம மிருக்கிறபடியினால் சரீர மிருக்கின்றது. சுழுத்தியில் ஸ்தூல சூட்சுமப் பிரதானமான கர்ம மில்லாதபடியினால் சரீரமில்லை. கர்ம முண்டானால் சரீரமுண்டு; கர்ம மில்லாவிட்டாற் சரீர மில்லையென்று தெளிந்து ஸ்ரீ சற்குருவினால் சுருதி யுத்தி யனுபவமாய்ச் சங்கையில்லாம லெவன் அறிகிறானோ, அவனே சீவன்முத்தனென்று சுருதி ஸ்மிருதி யாதிகளிற் சொல்லுகின்றது. இதிற் சம்சய மில்லை சித்தம்.

ஐந்தாவது அத்யாரோப நிருபகம் முற்றிற்று.

---

ஆறாவது

# கர்மத்திரய நிரூபகம்.

கக: கர்மம் எத்தனைவிதம்?

கஉ: புண்ணியமென்றும், பாவமென்றும், மிசிரமென்றும் மூன்றுவிதம். இதில் உத்க்ருஷ்ட மத்திம சாமானியமென ஒவ்வொன்றும் மூன்று விதமாம்.

ச. புண்ணிய வுத்க்ருஷ்ட பலம் யாது ?

உ. இரணியகர்ப்பாதி சரீரப் பிராப்தி.

ச. புண்ணிய மத்திம பலம் யாது ?

உ. தேவேந்திராதி சரீரப் பிராப்தி.

ச. புண்ணிய சாமானிய பலம் யாது ?

உ. யக்ஷ ராக்ஷச கின்னர கிம்புருஷ பிசாசாதி சரீரப் பிராப்தி.

ச. பாப வுத்க்ருஷ்ட பலம் யாது ?

உ. பிராணிகளுக்குத் துக்கத்தை யுண்டாக்கப்பட்ட தேள், பாம்பு, கொசுகு, மூட்டை, புலி, கரடி முதலிய சரீரப் பிராப்தி.

ச. பாப மத்திம பலம் யாது ?

உ. புளியமரம், மாமரம், பலாமரம், தென்னமரம், எருமை, பருந்து முதலிய சரீரப் பிராப்தி.

ச. பாப சாமானிய பலம் யாது ?

உ. பசு, ஆனை, குதிரை, அரசு, துளசி முதலிய சரீரப் பிராப்தி.

ச. மிச்ர வுத்க்ருஷ்ட பலம் யாது ?

உ. நிஷ்காமபுண்ணிய கர்மபலத்தினால் சித்தசுத்திவந்து, சித்தசுத்தித்துவாரா சாதனசதுஷ்டய சம்பத்தி வந்து, சாதனசதுஷ்டய சம்பத்தித் துவாரா சற்குருலாப முண்டாய், சற்குருலாபத் துவாரா சிரவண மனன நிதித்தியாசன முண்டாய், சிரவண மனன நிதித்தியாசனத் துவாரா அபரோட்ச ஞானம் வந்து, அபரோட்ச ஞானத்துவாராச் சீவன் முத்தி சுகத்தைப் பெறப்பட்ட சரீரப் பிராப்தி.

ச. மிச்ர மத்திம பலம் யாது ?

உ. சுயஆசிரமத்திற்கு உசிதமான காமியகர்ம யோக்கியமானசரீரப்பிராப்தி

ச மிச்ர சாமானிய பலம் யாது ?

உ. சண்டாள பாண்ட குஷ்ட பெருவியாதிமுதலிய சரீரப் பிராப்தி. விவேகியானவன் கர்மபல தாரதம்மியங்களை விசாரித்துணர்ந்து மிச்ர வுத்க்ருஷ்ட கர்மஞ் செய்வதற்கே யெத்தனம் பண்ணவேண்டும்.

ச. இந்தப் புண்ணிய பாப மிச்ரமான மூன்றுகர்மமும் எவைகளினாற் செய்யப்படுகின்றன ?

உ. திரிவிதகரணங்களாற் செய்யப்படுகின்றன.

ச. சமஸ்தபிராணிகளும் நான் இந்தக் கர்மம் பண்ணினேனென்று சொல்லுகிறார்கள். அவர்களுக்கு ஆத்மசுபாவமாய்க் கர்த்துருத்துவந் தோற்றுகிறபடியினால் கர்த்துருத்துவம் ஆத்மசுபாவமாகச் சொல்லலாமே?

உ. ஆத்மா நிர்விகாரியாகையால் கர்த்ருத்வஞ் சொல்லக்கூடாது.

ச. ஆனால் இந்தக் கர்த்ருத்வம் ஆத்மாவிடத்திற் றோற்றுகின்றதே; இதற்குக் கதி என்ன?

உ. அன்னிய சுபாவமான கர்த்ருத்வம் ஆத்மாவிடத்திற் றோற்றுகிறபடியினால், ஆகந்துகமென்றே சொல்லவேண்டும்.

ச. அன்னிய சுபாவமான கர்த்ருத்வந் தோற்றுகிறதென்று ஏன் சொல்லவேண்டும்? ஆத்மாவுக்குச் சுபாவமென்று ஏன் சொல்லக் கூடாது?

உ. கர்த்ருத்வம் போகும்நிமித்தம் எவர்களு மெத்தனஞ் செய்யாமலிருக்க வேண்டும். முமூட்சுக்கள் எத்தனஞ் செய்கிறபடியினால் சுபாவமென்று சொல்லக்கூடாது.

ச. கர்த்ருத்வமுஞ் சுபாவமாகட்டும்; போகும் நிமித்தம் எத்தனமும் பண்ணட்டுமே?

உ. சுபாவமென்றால் சொரூபமாகையினால் சொரூபநாசத்திற்கு எத்தனம் பண்ணுகிறதாகும். சொரூபநாசமாக எவரும் எத்தனம் பண்ணமாட்டார்கள். ஆதலால் சுபாவீக கர்த்ருத்வ நிவிர்த்தியர்த்தமாய் எத்தனிக்கிறார்களென்று சொல்லக்கூடாது. சுபாவமான கர்த்ருத்வத்துக்கு நிவிர்த்தி வருகிறபோது சொரூபமே நாசமாய்ப்போகிறபடியினால் கர்த்ருத்வம் விட்டு அகர்த்தாவானவர் யாருமில்லாமற் போகவேண்டும். ஆதலால் கர்த்ருத்வஞ் சுபாவமென்று சொல்லக்கூடாது.

ச. ஆனால்கர்த்ருத்வமுஞ் சுபாவமாகட்டும்;நிவிர்த்தியும் வரட்டுமே?

உ. அப்படிக் கூடாது.

ச. அக்கினிக்கு உஷ்ணத்வஞ் சுபாவம்; சுபாவமான உஷ்ணத்திற்கு மணி மந்திர அவுஷதங்களினால் எப்படி நிவிர்த்தி வருகின்றதோ, அப்படியே ஆத்மாவுக்குங் கர்த்ருத்வஞ் சுபாவமென்றும், அது உத்க்ருஷ்டமான கர்மோபாசனையினால் நிவிர்த்தியாமென்றும் சொல்லுவோமே?

உ. அக்கினியில் மணி மந்திராதிகளால் ஸ்தம்பித்த உஷ்ணம் காலாந்தரத்திலெப்படி யபிவிர்த்தியாகின்றதோ, அதுபோல ஆத்மாவின் நிவிர்த்தியான கர்த்ருத்வமும் உத்க்ருஷ்ட கர்ம வுபாசனுபலத்துக்கு நாசம்வரும்போது, திரும்பவும் அபிவிர்த்தியாம். அதனால் கர்த்ருத்வ நிவிர்த்தி ரூபமான முத்திக்கு அன்னியத்துவமும், அநித்யத்துவமும் வரும். ஆத்மா அகர்த்தாவென்று சொல்லப்பட்ட சுருதிகளுக்கு விரோதமும் வரும். சுழுத்தியிலும் ஆத்மா விருக்கிறபடியினால் அவ்விடத்திலுங் கர்த்ருத்வந் தோற்றவேண்டும். தோற்றாமையினால் சுபாவமென்பது கூடாது.

ச. சுழுத்தியில் ஆத்மாவுக்குக் கர்த்ருத்வம் தோற்றவேண்டிய அவசியமில்லை. தச்சர் முதலானவர்களுக்குச் சுயகாரியாதிகளைக் குறித்துக் கர்த்ருத்வ மிருந்தாலும், ஸ்நான போஜன சயன விவகாரகாலங்களில் வாச்சி முதலிய காரணசையோக மில்லாமையினால் அவர்களுக் கெப்படிக் கர்த்ருத்வந் தோற்றவில்லையோ,

வாக்கு முதலிய கரணசையோகம் வந்தபோது கர்த்ருத்வ மெப்படித் தோற்றுகின்றதோ, அதுபோல ஆத்மாவுக்குச் சுழுத்தியில் கர்த்ருத்வ மிருந்தாலும் திரிவிதகரண சையோக மில்லாமையினாலே கர்த்ருத்வந் தோற்றவில்லை. சாக்கிர சொப்பனத்தில் அவை யிருக்கிறபடியினால் கர்த்ருத்வந் தோற்றுகின்றதென்று சொல்லுவோமே?

உ. ஒன்றுந் தோற்றாவற்ற சுழுத்தியவத்தையிலும் கரணசையோக மிருக்கிறபடியினால் அங்கேயுங் கர்த்ருத்வந் தோற்றவேண்டும். தோற்றாமையினால் சுபாவமென்பது கூடாது. ஆகந்துகமென்றே சொல்லவேண்டும்.

ச. ஆகந்துகமென்பது எப்படிப்பட்டது?

உ. அன்னிய சுபாவமான தர்மம் தன்சுபாவமாகத் தோற்றுவது.

ச. அது எப்படித் தோற்றும்?

உ. ஓடத்திற் போகிற புருஷனுக்கு அஞ்ஞானத்தினால் ஓடத்தின் சஞ்சல சுபாவமாகிற வோட்டம் ஸ்திரசுபாவமாகிற விருக்ஷத்தினிடத்திலும், கரையினுடைய விருக்ஷசுபாவமான நிலை யோடத்தினிடத்திலும் எப்படித் தோற்றுகின்றனவோ, அப்படியே, திரிவித கரணசுபாவமான கர்த்ருத்வம் அஞ்ஞானத்தினால் ஆத்மசுபாவமாகவும், ஆத்மசுபாவமான அகர்த்ருத்வம் திரிவிதகரணசுபாவமாகவுந் தோற்றுகின்றன. இன்னும சந்திரனைப் பார்க்கும் புருஷனுக்கு மேக சஞ்சலமான சுபாவம் சந்திர சுபாவமாகவும், சந்திரசுபாவமான நிலை மேக சுபாவமாகவும் எப்படித் தோற்றுகின்றனவோ, அப்படியே திரிவிதகரண சுபாவமான கர்த்ருத்வம் ஆத்மசுபாவமாய்த் தோற்றுகின்றது. ஆதலால் கர்த்ருத்வம் ஆத்மாவுக்கு ஆகந்துகமென்றே சொல்லவேண்டும்.

ச. ஆனால் திரிவிதகரணங்களுக்குங் கர்த்ருத்வ மிருந்தாலல்லவோ ஆத்மாவினிடத்திற் றோற்றுமென்று சொல்லலாம. அவை அசேதனமான ஜடமாகையினால் அவைகளுக்குக் கர்த்ருத்வங்கூடாது. உலகத்திற் சேதனமானவர்களுக்கே கரண சாபேட்சையாகக் கர்த்ருத்வங் காண்கின்றபடியால், அசேதனமான திரிவித கரணங்களுக்குக் கர்த்ருத்வஞ் சொல்லக்கூடாது. அப்படிச் சொன்னால் சேதனத்துவமும கரணாந்தரமுங் கற்பிக்கவேண்டும். அப்படிக் கற்பிக்கக் கூடாமையினால், திரிவிதகரணங்களுக்குங் கர்த்ருத்வங் கூடாதென்று சொல்லுவோமே?

உ. உலகத்தில் அசேதனத்துக்கே கர்த்ருத்வங் காண்கின்றபடியினால் திரிவித கரணங்களுக்குங் கர்த்ருத்வஞ் சொல்லலாம்.

ச. எப்படிச் சொல்லலாம்?

உ. அசேதனமான வாயு: கரணத்தையுஞ் சேதனத்துவத்தையும் அபேக்ஷியாமலே விருக்ஷாதிகளை யொடிக்கிறது; அசேதனமான பிரவாக ஜலம் கரணத்தையுஞ் சேதனத்துவத்தையும் அபேக்ஷியாமலே விருக்ஷாதிகளைப் பிடுங்குகிறது. ஆதலால் அசேதனமான திரிவிதகரணங்களுக்கும் சேதனத்துவத்தையும், கரணாந்தரத்தையும் கற்பியாமலே திரிவித கர்மத்தைக்குறித்துக் கர்த்ருத்வ முண்டெனச் சொல்லலாம்.

ச. ஆனால் திரிவிதகரணங்களினாற் செய்கின்ற புண்ணிய பாவ மிச்ர கர்மங்களில் மனத்தினாற் செய்கிற புண்யகர்மங்கள் யாவை ?

உ. சகுணப்பிரயோசனசிந்தை, நிர்க்குணப்பிரயோசனசிந்தை, பரலோகப் பிரயோசனசிந்தை, பிறருக்கு இதப்பிராப்தியானசிந்தை, பத்திஞான வயிராக்கியசிந்தை இவைமுதலானவைகளாம்.

ச. மனத்தினாற் செய்கிற பாபகர்மங்கள் யாவை ?

உ. சார்வதா விஷயசிந்தை, பிறருக்கு அகிதசிந்தை, வேதசாஸ்திரங்களில் அப்பிரமாணமானசிந்தை, பரலோக அபாவசிந்தை, தர்மஅபாவசிந்தை இவை முதலனவாம்.

ச. மனத்தினாற் செய்கிற மிச்ர கர்மங்கள் யாவை ?

உ. சகுண நிர்க்குணப் பிரயோசன தியான காலங்களிற் செய்கின்ற விஷயாதி சிந்தை முதலியவைகளாம்.

ச. வாக்கினாற் செய்கிற புண்ணிய கர்மங்கள் யாவை ?

உ. வேதாத்தியயனம், சாஸ்திரபாடம், காயத்திரி, பஞ்சாட்சரமுதலிய ஜபங்கள், பகவந் நாம கீர்த்தனைகள், பரோபகார வார்த்தை முதலியனவாம்.

ச. வாக்கினாற் செய்கிற பாப கர்மங்கள் யாவை ?

உ. சார்வதா பெரியோர்களைத் தூஷித்தல், பிறரைச் சொல்லாதவார்த்தை சொல்லுதல், அசத்தியம்பேசுதல், ஒன்றைச்சாட்டி யொன்றைச் சொல்லுதல் முதலனவாம்.

ச. வாக்கினாற் செய்கிற மிச்ர கர்மங்கள் யாவை ?

உ. வேதாத்தியயன சாஸ்திரபாட ஜபாதிகாலங்களில் இலவுகிகவார்த்தை பேசுதல் முதலனவாம்.

ச. காயத்தினாற் செய்கிற புண்ணிய கர்மங்கள் யாவை ?

உ. புண்ணிய தீர்த்தஸ்நானம், குருதேவதாதரிசனம், அங்கப்பிரதட்சணம், பிறரை வருத்தாமை முதலனவாம்.

ச. காயத்தினாற் செய்கிற பாப கர்மங்கள் யாவை ?

உ. சார்வதா பிறரைவருத்துதல், பரஸ்திரீகளைக்கூடுதல், பரதிரவியந் திருடுதல், அஷ்டசாவகாசமாய்த் திரிதல் முதலனவாம்.

ச. காயத்தினாற் செய்கிற மிச்ர கர்மங்கள் யாவை ?

உ. பிராமணபோஜனநிமித்தம் பிராமணரைப்பிடித்தல், பர திரவியத்தை யபகரித்துத் தண்ணீர்ப்பந்தல்வைத்தல், பரதிரவியத்தைக் கிரகித்துக் கோயில் குளம் மட முதலானவைகட்டுதல், அமிஞ்சியாளைப் பிடித்துக் குளம்வெட்டுதல், பிறருடைய பூமியைக்கிரகித்துக் கோயில் மடங்களுக்கு விடுதல் முதலனவாம்.

ச. இந்த விசாரத்திற்குப் பலம் எத்தனைவகை ?

உ. முக்கியமென்றும், அவாந்தரமென்றும் இரண்டுவகை.

ச. முக்கிய பலமாவது யாது?

உ. இந்தத் திரிவிதகர்மங்களையுந் திரிவிதகரணங்களே செய்கின்றனவென்றும், அகர்த்தாவாகிய ஆத்மசொரூபம் யாதொருகிரியையுஞ் செய்யவில்லையென்றுங்கொண்டு, அந்தஆத்மாவே நானென்னும் திடநிச்சயம் உண்டாவதே முக்கியம்.

ச. அவாந்தர பலமாவது யாது?

உ. அப்படிப்பட்ட நிச்சயம் வந்தும் திரிவிதகரணங்களைப் புண்ணியகர்மத்தில் விடவேண்டுமென்றும், அசட்டையினால் புண்ணியகர்மத்தில் விடக்கூடாமற்போனாலும் மிச்ர கர்மத்திலாயினும் விடவேண்டுமென்றும், சார்வதா பாபகர்மத்தில் விடக்கூடாதென்றும் சிந்திக்கின்றதே அவாந்திரம்.

ச. ஒன்றினிடத்திலேயே யிரண்டு பல முண்டோ?

உ. உண்டு. வாழைநட்டவன் தனக்குவேண்டியமட்டும் வாழைப்பழத்தை விநியோக மாக்கிக்கொள்ளுகிற தெப்படியோ, அப்படியே முக்கியபலமும்; இலை பூ தண்டு கட்டைகளை உபயோகமாக்கிக்கொள்ளுகிற தெப்படியோ, அப்படியே அவாந்திரபலமுமாம்.

ச. ஆனால் திரிவிதகரணங்களும் ஒன்றினாற் பிரேரிக்கப்பட்டுத் திரிவித கர்மங்களைச் செய்கின்றனவோ? தாமே செய்கின்றனவோ?

உ. தாமே செய்கின்றனவென்பது கூடாது. பரசுவாதிகளும் ஆயுதகரணங்களாகையினால் அவைகளுக்கும் பிரேரகனை யபேட்சியாமல் கர்த்ருத்வம் வரவேண்டும். அப்படி யில்லாமையினால் ஒன்றினால் பிரேரிக்கப்பட்டுச் செய்கின்றனவென்றே சொல்லவேண்டும்.

ச. ஆனால் சேதனனாற் பிரேரிக்கப்பட்டுச் செய்கின்றனவென்று சொல்லுவோமே?

உ. சேதனனான ஆத்மா நிர்விகாரியாகையால் அப்படிச் சொல்லக்கூடாது.

ச. அசேதனத்தினாலே பிரேரிக்கப்பட்டதென்று சொல்லலாமோ?

உ. சொல்லக்கூடாது; அப்படிச் சொன்னால் கடமானது கடத்தினால் பிரேரிக்கப்பட்டுச் சல மெடுக்கவேண்டும். அப்படிக் காணவில்லை. நான் கோயில் கட்டுவித்தேன், மடங் கட்டுவித்தேன், சகஸ்ரபோசனம் பண்ணுவித்தே னென்னுமிடத்திற் கர்த்ருத்வம் ஆத்ம சுபாவமாகத் தோற்றுகின்றது. ஆத்மா நிர்விகாரியாகையினால் அதற்குக் கர்த்ருத்வஞ் சொல்லக்கூடாது.

ச. ஆனால் இந்தக் கர்த்ருத்வ அனுபோகத்திற்குக் கதிதா னென்னை?

உ. அன்னியசுபாவமான கர்த்ருத்வம் ஆத்ம சுபாவமாகத் தோற்றுகின்றபடியினால் ஆகந்துகமென்றே சொல்லவேண்டும்.

ச. அப்படி யேன் சொல்லவேண்டும்? ஆத்மசுபாவமென்றுதான் சொல்லுவோமே?

உ. அப்படி ஆத்மசுபாவ மென்றுசொன்னால் கர்த்ருத்வம் போகும் நிமித்தம் எவர்களும் எத்தனம் பண்ணாதிருக்கவேண்டும். முமூட்சுக்கள் கர்த்ருத்வம் போகும்நிமித்தம் எத்தனம் பண்ணுகிறபடியினால் அப்படிச்சொல்லக்கூடாது.

ச. கர்த்ருத்வமும் சுபாவமாகட்டும், போகும்நிமித்தம் எத்தனமும் பண்ணட்டுமே?

உ. சுபாவமென்றால் சொரூபமாகையினால் சொரூபநாசார்த்தமாய் எவரும் எத்தனம் பண்ணமாட்டார்களென்று முன்னமே சொல்லியிருக்கின்றோம். அதுவுமன்றி ஆத்மா அகர்த்தாவென்கிற சுருதியாதிகளுக்கும் விருத்தம்வரும். சுழுத்தியிலும் ஆத்மா விருக்கிறபடியினால் அவ்விடத்திலுங் கர்த்ருத்வந் தோற்றவேண்டும்.

ச. உபாத்தியாயரிடத்திற் கல்வி யிருந்தாலும் கற்கப்பட்ட பிள்ளைகளில்லாவிடில் அந்தக்கல்வி எப்படிப் பிரகாசிக்காதோ, பிள்ளைகளிருந்தா லெப்படிப் பிரகாசிக்குமோ, அப்படிப்போலவும். ராஜப்பிரபுக்களிடத்தில் ஆக்கினை சுபாவமாயிருந்தாலும் மந்திரிபிரதானிமுதலான சேனைசமுகங்களில்லாவிடில் அந்த ஆக்கினை எப்படிப் பிரகாசிக்காதோ, அவர்களிருந்தா லெப்படிப் பிரகாசிக்குமோ, அப்படிப்போலவும் ஆத்மாவுக்குக் கர்த்ருத்வம் சுபாவமாயிருந்தாலும் சுழுத்தியவத்தையில் நியமிதமான திரிகரணக் கூட்டரவில்லாதபடியினால் தோற்றவில்லை. சாக்கிர சொப்பனங்களில் அவை இருக்கின்றமையினால் கர்த்ருத்வம் தோற்றுகின்றதென்று சொலவோமே?

உ. அப்படியானால் தோற்றரவற்ற சுழுத்தியவத்தையிலுங் கரணக்கூட்டரவிருக்கின்றமையினால் அங்குங் கர்த்ருத்வந் தோற்றவேண்டும். தோற்றாமையினால் கர்த்ருத்வம் ஆத்ம சுபாவமென்பது கூடாது. ஆகந்துகமென்றே சொல்லவேண்டும்.

ச. அன்னியவஸ்துவின் சுபாவந் தற்சுபாவமாகத் தோற்றுமா?

உ. குசுமப்புஷ்பத்தின் சிவப்புநிறம் படிகத்திற் றோன்றுவதுபோலவும், அக்கினியின் உஷ்ணமும் பிரகாசமும் இரும்பினிடத்திலும், இரும்பின் நிகளங் கன முதலியன அக்கினியினிடத்திலுந் தோன்றுவனபோலவும் ராகத்துவேஷ சுபாவமான கர்த்ருத்வம் ஆத்மசுபாவத்திலும், ஆத்ம சுபாவமான அகர்த்ருத்வம் ராகத்துவேஷசுபாவத்திலும் அஞ்ஞானத்தினால் தோற்றுகின்றன. ஆனாலும் அசேதனங்களுக்குக் கர்த்ருத்வங் கூடுமென்பது கூடாது.

ச. கூடுமென்றுதான்சொல்லுவோமே?

உ. அப்படியானால் கடமுங் கடத்தினாற் பிரேரிக்கப்படுமென்று முன்னமே சொல்லியிருக்கின்றோமே; ஆதலால் அப்படிச் சொல்வது கூடாது.

ச. ஆனால் அதற்கு உத்தரவுதான் யாது?

உ. அங்கே யோக்கிதை யில்லாமையினால் பிரேரகத்வங் கூடாது. எங்கே யோக்கியதை யுண்டோ, அங்கே பிரேரகத்வம் உண்டு.

ச. யோக்கிதையானவிடத்தில் எங்கே பிரேரகங் காணப்படுகிறது?

உ. அக்கினியானது மருந்தோடு கூடிய பீரங்கிகுண்டுகளினால் சதுரங்க சேனைகளையுஞ் சங்கரிக்கிறது.

ச. அசேதனமான அக்கினி அசேதனமான மருந்துடன்கூடி அசேதனமான கல்லுகளைப் பிரோகத்துவஞ் செய்கின்றது; அல்லாமலும் பிணமான சரீரத்துக்குச் சுய பந்துக்களாற் செய்யப்பட்ட கிரியைகளைக்குறித்துக் கர்த்ருத்வங் தோற்றுகின்றது. இவைபோல அசேதனமான ராகத்துவேஷாதிகளுக்கும் திரிவித கரணங்களாற் செய்கின்ற திரிவிதகர்மங்களைக்குறித்துக் கர்த்ருத்வஞ் சொல்லவேண்டும். அப்படிச்சொன்னால் ஆத்மாவுக்குச் சர்வாந்திரியாமித்வஞ் சொல்லப்பட்ட சுருதி ஸ்மிருதியாதிகளுக்குத் தாற்பரியம் யாது?

உ. ஆத்மா நிர்விகாரி யாகையினால் அஸ்மதாதிகளைப்போலக் கர்த்ருத்வஞ் சொல்லக்கூடாது. ஆதித்த சந்நிதானத்தில் சமஸ்தபிராணிகளுஞ் சர்வ காரியத்திலும் எப்படிப் பிரவிர்த்திக்கிறார்களோ, காந்தசந்நிதானத்தில் இரும்பு எப்படிச் சேஷ்டிக்கின்றதோ, அப்படியே ஆத்ம சந்நிதானத்திலும் சமஸ்தமான ஜகத்துஞ் சேஷ்டிக்கின்றனவெனச் சுருதி ஸ்மிருதியாதிகளுடைய தாற்பரியம்.

ச. இப்படிச் சொன்னால் ஆத்மாவுக்கு நிர்விகாரஞ் சித்தித்ததா?

உ. சித்தித்தது.

ச. எப்படிச் சித்தித்தது?

உ. ஆதித்தசந்நிதானத்தில் சமஸ்தபிராணிகளும் விவகாரம் பண்ணினாலும் பிராணிகளின்சுபாவமான விவகாராதிகள் ஆதித்தனை எப்படி ஸ்பரிசிக்கவில்லையோ, காந்தசந்நிதானத்தில் இரும்பு சேஷ்டித்தாலும்இரும்பின் விகாரங்கள் காந்தத்தை எப்படி ஸ்பரிசிக்க வில்லையோ, அப்படியே ஆத்மசந்நிதானத்தில் சேஷ்டிக்கப்பட்ட ஜகத்விகாரங்கள் ஆத்மாவைப் பரிசிக்கமாட்டா. ஆதலால் நிர்விகாரத்வங் கூடும்.

ச. ஆனால் இந்தவிசாரத்திற்குப் பலம் யாது?

உ. தேரோட்டும் விஷயத்தில் தேரையோட்டுகிறவர்கள் ஓட்டினாலும் ஓட்டுவைக்குந் தர்ம்மம் எஜமானனது சுபாவமாய் எப்படித் தோற்றுகின்றதோ, அப்படியே ராகத்துவேஷ சுபாவமான கர்த்ருத்வமும் அத்தியாசத்தினால் ஆத்மசுபாவமாய்த் தோற்றுகின்றது. விசாரிக்கு மிடத்தில் ஆத்மாவுக்குச் சர்வாத்மனுயில்லை. ஆகையால் நிராகார நிர்விகாரனை ஆத்மாவே தானென்று ஸ்ரீ சற்குருகடாக்ஷத்தினால் தெளிந்து, ஆத்ம சந்நிதானத்தில் திரிவிதகரணத்தில் உண்டான கர்த்தவ்வியமும் அதனால் விளைகிற வினையும் முக்கியபலமும் அவாந்தரபலமும் சுவபட்சமாய்ச் சங்கையற வெவனறிகிறானோ, அவனே சீவன் முத்தனென்று சுருதி ஸ்மிருதியாதிகளிற் சொல்லுகின்றது. இதிற் சம்சய மில்லை சித்தம்.

ஆறுவது கர்மத்திரய நிருபகம் முற்றிற்று.

---

ஏழாவது

# இராகத்துவேஷநிரூபகம்.

சங்கை: திரிவிதகரணங்களும் எந்த ராகத் துவேஷாதிகளால் பிரேரிக்கப்பட்டு, திரிவித கர்மங்களைச் செய்கின்றன? அவைகள் எத்தனை விதமாயிருக்கும்?

உத்தரம்: இராகம், துவேஷம், காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மச்சரம், இரீஷை, அசூயை, டம்பம், தர்ப்பம், அகங்காரம், இச்சை, பத்தி, சிரத்தை எனப் பதினாறுவிதமா யிருக்கும்.

ச. அவைகளின் இலக்கணம் என்னை?

உ. ஸ்திரீவிஷயமான சித்தவிருத்திக்கு ராகமென்றும், ஒருவன் அபகாரம் பண்ணினால் அவ்வபகாரத்திற்குப் பிரதி யபகாரம் பண்ணவேண்டுமென்கிற சித்தவிருத்திக்குத் துவேஷமென்றும், கிரகக் கிராம க்ஷேத்திர தன தான்யாதிகள் மேலுமேலுஞ் சம்பாதிக்கவேண்டுமென்று வருகிற சித்தவிருத்திக்குக் காமமென்றும், தான் சம்பாதிக்கின்ற ஒருவஸ்துவை எவனொருவன் விக்கினம் பண்ணுகிறானோ அவன்பேரில் வியாக்கிர ரூபமாய்ச் சீறிவருகிற சித்தவிருத்திக்குக் குரோதமென்றும், அங்ஙனம் பிரயாசை யடைந்து சம்பாதித்தபொருள்களை எந்தவிஷயத்திலுஞ் செலவு பண்ணப்படாதென்றுவருகிற சித்தவிருத்திக்கு லோபமென்றும், தான் சம்பாதித்த பதார்த்தங்களிடத்தில் பிரிய மோதப் பிரமோதமாய் வருகிற சித்தவிருத்திக்கு மோகமென்றும், ஐசுவரியகோலாகலத்தினாற் கர்வித்துக் கிர்த்தியாகிர்த்தியங்கள் அறியாமல் விகற்பித்துவருகிற சித்தவிருத்திக்கு மதமென்றும், ஒருவன் தன்னிலும் அதிக பாக்கியவந்தனா யிருந்தால் அவன் செல்வத்தைப் பார்க்கச் சகிக்காமல் வருகிற சித்தவிருத்திக்கு மச்சரமென்றும், பிறருக்குத் துக்கம் வரவேண்டுமென்றும் தனக்கு வரக்கூடாதென்றும் எண்ணுகிற சித்த விருத்திக்கு இரீஷையென்றும், தனக்குச் சுகம்வந்ததுபோல மற்றொருவருக்கு வரக்கூடாதென்று விகற்பித்துவருகிற சித்தவிருத்திக்கு அசூயையென்றும், தான் செய்கிற தான தருமங்களைப் பலபேரும் அறிந்து தன்னைச் சபா சென்று மெச்சவேண்டுமென்று வருகிற சித்தவிருத்திக்கு டம்பமென்றும், நானே தெட்டவான் மற்றவர்களெல்லாம் எனக்குச் சரியாவார்களாவென் றெண்ணுகிற சித்த விருத்திக்குத் தர்ப்பமென்றும், ஆ! என்னை யறியாயா! நீயா என்னைத் தண்டிக்கிறவன்! நான் பிடித்த காரியத்தை விடுகிறதில்லையென்று விகற்பித்து வருகிற சித்தவிருத்திக்கு அகங்காரமென்றும், உண்ணுதல் மலஜலம்விடுதல் முதலிய அவசியமான கிரியைகளைச் செய்யவேண்டுமென்று வருகிற சித்தவிருத்திக்கு இச்சையென்றும், குருதேவதைகளிடத்தில் வருகிற பிரீதிக்குப் பத்தியென்றும், குரு வேதாந்த வாக்கியாதிகளிடத்தில் வருகிற விவகாரத்திற்குச் சிரத்தை யென்றுஞ் சொல்லப்படும்.

ச. இங்ஙனம் விசாரிக்கு முறைமை எப்படி?

உ. இந்த ராகத் துவேஷாதிகள் நிரேதுகமாய் எத்தனம் பண்ணாமலே வரும். ஆயினும் இராகமுதல் அகங்கார மீறான பதின்மூன்றின் வசத்த

ளுய் ஒரு புருஷன் திரிவிதகரணங்களினாலும் திரிவிதகர்மங்களைச் செய்வானாயின் அவனுக்கு நரகத்திலிருந்து நிவிர்த்தியெந்தக்காலத்திலு மில்லவே யில்லை. ஆதலால், இராகத் துவேஷாகாரமான சித்தவிருத்திகளைத் திருப்பிச் சர்வப்பிரகாரத்தினாலேயுஞ் சிரத்தா பத்திருபமாகச் செய்வானாயின், அவன் கிரமத்தில் சீக்கிரமாகச் சமுசாரபந்தத்திலிருந்து விடுபட்டு முத்தனாவான். ஆகையினால் சிரத்தாபத்திகளை யவசியஞ் சம்பாதிக்கவேண்டும். இச்சையினாற்செய்யப்பட்ட பசி தாக நிவிர்த்தியும், மலமூத்திர விசர்ச்சனமுஞ் செய்யாமற்போனால், தற்காலத்தில் வாதை வரும்; செய்தால் தற்காலத்தில் உபாதி நிவிர்த்தியாம். இவைகளால் சொர்க்க நரகப் பிராப்தி யில்லை.

ச. இப்படி விசாரித்ததற்குப் பலம் யாது?

உ. சுழுத்தி யவஸ்தையிலும், தூஷணீம் பூதாவஸ்தையிலும், சமாதி யவஸ்தையிலும் இராகத் துவேஷாதிக ளில்லாதபடியினால் கர்மமில்லை; சாக்கிர சொப்பனங்களில் அவைகளுண்டாயிருக்கிறபடியினால் கர்மமுண்டு. ஆதலால் இராகாதிக ளீங்கின விடத்திற் கர்மமில்லை. அவைகளுண்டானவிடத்திற் கர்மமுண்டென்று அன்வய வெதிரேகத்தினால் அறியவேண்டியது.

ச. இந்த ராகத் துவேஷாதிகள் எதனால் வருகின்றன?

உ. அபிமானத்தினால் வருகின்றன.

ச. சமஸ்தமான பேர்களுக்கும் அபிமான பூர்வகமாகப் பிரவிர்த்தி வருமா?

உ. வரும்.

ச. எப்படி வரும்?

உ. ஸ்திரீஜனங்களுக்கு நான் ஸ்திரீ யென்று எப்போது அபிமானம் வருகின்றதோ, அப்போதே ராகாதி பூர்வகமாய்ப் புருஷனிடத்தில் சிசுருஷைகளிலும், கிரக சவரட்சணைகளிலும், பாகாதிக் கிரியைகளிலும், தன தன்யாதி யார்ச்சிதங்களிலும் பிரவிர்த்தி உண்டாகின்றது. அதுபோலப் புருஷர்களுக்கும் நான் புருஷனென் றெப்போ தபிமானம் வந்ததோ, அப்போதே ராகாதிபூர்வகமாய்த் தாராதி கிரகக் கிருஷியாதிகளிலும், தன தன்யாதி யார்ச்சனைகளிலும் பிரவிர்த்தி யுண்டாகின்றது. அப்படியேசமஸ்தபிராணிகளுக்கும் வர்ணாச்சிரம தர்மாபிமானத்தினாலும் சுயவுசித வியாபாரங்களினாலும் ராகாதிக ளுண்டாகின்றன. இவை யுண்டாவதற்கு அபிமானமே காரணம். ஆகையினால் முமூட்சுவானவர்கள்: சாதி யாசிரம நாம ரூபக் கிரியைகளாகிற விஷயங்கள் தாமல்லாதபடியினால் சகல வஸ்துக்களினிடத்திலும் ரூடமான அபிமானத்தை விடவேண்டும். அப்படி விட்டால் துக்கத்தினிடத்தி லிருந்து விடுபடுவார்களென் றறிகிறதே இந்த விசாரத்திற்குப் பலம். அபிமான முண்டானால் ராகாதிகளுண்டு; இல்லாவிட்டால் ராகாதிக ளில்லை யென்று சுழுத்தி சமாதி தூஷணீம் பூதாவஸ்தைகளிற் பார்த்துக்கொள்ளவேண்டியது.

ச. அபிமானம் எதனால் வருகிறது?

உ. அவிவேகத்தினால் வருகிறது.

ச. அது எப்படி ?

உ. சமஸ்தமான பேர்களுக்கும் நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரனென்று பிராமணத்வாதி யபிமானம் அவிவேகமாய் வருகின்றது. இவ்வபிமான மெதைப்பற்றி வருகிறதென்று யாவரும் விவேகிக்காதபடியினால், இவ்வபிமானமே மேலீடாய்வருகின்றது.

ச. இதற்கு ஆசிரய மில்லையா ?

உ. இல்லை.

ச. சரீரத்தைப்பற்றி வருகிறதென்று சொல்லுவோமே ?

உ. க்ஷத்திரியருக்குஞ் சரீரஞ் சாதாரணமாயிருக்கிறபடியினால் அவர்களுக்கும் நான் பிராமணனென்கிற அபிமானம் வரவேண்டும். அப்படிவராமையினால், பிராமணத்வம் சரீரத்தைப்பற்றி வருகிறதென்று சொல்லப்படாது.

ச. சிகை பூணநூலைப்பற்றி வருகிறதா ?

உ. சிகை பூணநூல் குசவனுக்குஞ் சாதாரணமா யிருக்கிறபடியினால் அவனுக்கும் பிராமணத்வம் வரவேண்டும். அப்படி வராமையால் சிகை பூணநூலைப்பற்றி வருகிறதென்று சொல்லப்படாது.

ச. அவயவங்களுக்குப் பிராமணத்வஞ் சொல்லுவோமே ?

உ. ஒவ்வொரு அவயவங்களுக்கும் பேர் வெவ்வேறாயிருக்கிறபடியினால் அவயவங்களுக்கும் பிராமணத்வ மில்லை.

ச. ஆனால் விசிட்டமான மதா பிதாக்களுக்குப் பிறந்த அவயவங்களுக்குப் பிராமணத்வங் கற்பிக்கலாமா ?

உ. விசிட்டமான மாதா பிதாக்களினாற் கழிக்கப்பட்ட கேச நக தந்த மலமூத்திராதிகளுக்கும் பிராமணத்துவம் வரவேண்டும். அப்படி வராதபடியினால் ஒன்றுக்கும் பிராமணத்துவ மொருவராலுஞ் சொல்லக்கூடாது.

ச. ஆனால் இந்தப் பிராமணத்துவத்திற்குக் கதிதா னென்னை ?

உ. சோபனமென்றும் உற்சவமென்றும் சந்தையென்றும் அனேகவஸ்து சமுகத்திற்கு அந்தந்தப் பெயர் எப்படி வந்ததோ, அதுபோலத் தேகேந்திரியாதி சங்கத்திற்குத் தொழில் விவகாரத்தினிடத்தில் ஐதீகமே பிராமணனென்றுபெயர். அதுபோல க்ஷத்திரியனென்றும், வைசியனென்றும், சூத்திரனென்றும், ஸ்திரீயென்றும், புருஷனென்றும், தீட்சிதனென்றும், சாஸ்திரியென்றும்; புராணிகனென்றும், அவதானியென்றும், ஜீயரென்றும், பாகவதனென்றும், தமிழனென்றும், கர்னாடகனென்றும், தத்துவாதியென்றும், மாராஷ்டகனென்றும், குச்சிலியனென்றும் இவைமுதலான சமஸ்த நாமங்களுந் தேகேந்திரியாதிக் கூட்டத்திற்கே ஐதீகமாக வருகிறபடியினால் பிராமணத்வம் தேகேந்திரியாதிக் கூட்டத்திற்கே யல்லாமல் ஆத்மாவுக்குக் காலத்திரயத்திலுமில்லை. இப்படிப் பகுத்தறியாமலிருக்கிறதே யவிவேகம். இந்த அவிவேகத்தினாற்றான் அபிமானம் வருகின்றது.

ச. இப்படி விசாரித்ததற்குப் பலம் யாது ?

உ. ஆத்மாவுக்குக் காலத்திரயத்திலும் பிராமணத்வாதிக ளில்லையென்றும், தேகேந்திரியாதிகளுக்கே ஐதீகமாகப் பிராமணத்வாதிகளுண்டென்றும் அறிவதே பலம்.

ச. இந்த அவிவேகம் எதனால் வந்தது ?

உ. அஞ்ஞானத்தினால் வந்தது.

ச. அஞ்ஞான சொரூபமாவது யாது ?

உ. தன்னைத் தான் அறியாமலிருக்கிறதே யஞ்ஞானம்.

ச. தன்னைத் தான் அறியார்களென்று சொல்லலாமா ?

உ. நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான்சூத்திரன், நான் இந்தக் குலத்தான், நான் இன்னகோத்திரத்தானென்று இந்தச் சரீரத்தையே யாத்மாவாக அறிகிறார்களே யல்லாமல் சரீர அன்னிய மான ஆத்மாவை யாரும் அறியாமையால் சொல்லலாம்.

ச. சாஸ்திரிமார்கள் சரீர அன்னியமான ஆத்மா வுண்டென்று சொல்லியிருக்க, யாரும் அறியார்களென் றெப்படிச் சொல்லலாம்?

உ. கர்த்தா போக்தாவாயும், பரிச்சின்னனாயுமிருக்கிற ஜீவனை யாத்மாவாக அறிகிறார்களே யல்லாமல்; அகர்த்தா, அபோக்தா, அபரிச்சின்னன், அசங்கன், அசம்சாரி, அத்துவிதனென்னப்பட்டவேதாந்த வேத்தியனான பிரத்தியேகாத்மாவை யாரும் அறியாமையினால் சொல்லலாம். அதை யறியாம லிருந்ததே யஞ்ஞானம். அவ் வஞ்ஞானத்தினாற்றான் அவிவே கம் வருகின்றது.

ச. அந்த அஞ்ஞானம் எதனால் வருகிறது ?

உ. அஞ்ஞானம் அனாதியாகையால் ஒன்றினால் வருகிறதென்று சொல்லக் கூடாது.

ச. அதன் சொரூபம் எப்படிப்பட்டது ?

உ. சத்து, அசத்து, சதசத்து, சாவயவம், நிரவயவம், சாவயவநிரவயவம், பின்னம், அபின்னம், பின்னாபின்னமென் றொன்பது பிரகாரமாயிருக் கும்.

ச. சத்தென்று சொல்லலாமே.

உ. தத்துவஞானத்தினால் பாதிக்கப்படுகிறபடியால் சத்தெனப்படாது.

ச. அசத்தென்று சொல்லலாமே.

உ. அசத்தானால் சசவிஷாணாதிகள்போ லில்லாமற் போகவேண்டும். நான் அஞ்ஞானியென்னும் அனுபவ மிருக்கிறபடியினால் அசத்தெனவுங் கூடாது.

ச. சதசத்தென்று சொல்லலாமே.

உ. ஒரு வஸ்துவிற் கிரண்டுபட்சஞ் சொன்னால் விருத்தம் வரும். ஆதலால் சதசத்தெனவுங் கூடாது.

ச. சாவயவமென்று சொல்லலாமே ?

உ. மூலகாரணமான அத்துவிதவஸ்து இல்லாமற் போகவேண்டும். இருக்கிறபடியினால் சாவயவமென்று சொல்லப்படாது.

ச. நிரவயவமென்று சொல்லலாமே ?

உ. ஜகதாகாரமாய்ப் பரிணமிக்காம லிருக்கவேண்டும். பரிணமிக்கிறபடியினால் நிரவயவமென்றுஞ் சொல்லப்படாது.

ச. சாவயவ நிரவயவ மென்று சொல்லலாமே ?

உ. விருத்தமானபடியால் அந்தப்பட்சமுங் கூடாது.

ச. பின்னமென்று சொல்லலாமே?

உ. அத்துவிதத்திற்கு ஆனிவரும்.

ச. வந்தால் வரட்டுமே?

உ. ஆத்மா அத்துவிதனென்று சொல்லப்பட்ட சுருதிகளுக்கு விரோதம் வரும். அதுமாத்திர மல்ல; மாயைக்கு ஆத்மசத்தை யல்லாமல் வெதிருத்தமானசத்து வேறில்லாதபடியினால், ஆத்மாவையன்றி வேறே பின்னமான பதார்த்தமென்று சொல்லக்கூடாது; அன்றியும் ஆத்மசத்தி யில்லாமற்போகவேண்டும்.

ச. போனால் போகட்டுமே ?

உ. ஆத்மசத்தியைப் பிரதிபாதிக்கிற சுருதிகளுக்கு விரோதம் வரும்.

ச. ஆனால் அபின்னமென்று சொல்லலாமே?

உ. மாயைக்குச் சேதனத்துவமுண்டாகி அசேதனத்துவம் நீங்கிவிடும். ஆத்மாவுக்குச் சேதனுசேதன சொரூபம் வரும். அப்போது மாயையை மாயையென்று சொல்லாமல் ஆன்மாவென்று சொல்லவேண்டும்.

ச. அப்படிச் சொல்லலாமோ ?

உ. மாயை, பிரகிருதி, பிரதானம், அவித்தை, பிரளயம், தமசு, மகாசுழுத்தி, அஞ்ஞானமென்று ஆத்மப்பிரதிபாதகத்திற் கன்னியமான சத்தத்தினாற் சொல்லுகிறபடியால் ஆத்மாவென்று சொல்லக்கூடாது.

ச. ஆனால் பின்னு பின்னமென்று சொல்லலாமோ ?

உ. அப்படியும் சொல்லப்படாது.

ச. பின்னை எப்படித்தான் சொல்லலாம் ?

உ. இன்னதெனக் கணிக்கப்படாதெனப் பொருள்கொள்ளும் அநிர்வசனீயமென்று சொல்லவேண்டும்.

ச. இவ்வநிர்வசனீயமான அஞ்ஞானத்தினால் என்ன வருகின்றன ?

உ. அஞ்ஞானத்தினால் அவிவேகமும், அதனால் அபிமானமும், அதனால் ராகத்துவேஷாதிகளும், அவைகளினாற் கன்மமும், அதனாற் சரீரமும், அதனால் துக்கமும் ஆன்மாவுக்கு வருகின்றன.

ச. அந்தத் துக்கத்திற்கு அத்தியந்த நிவிர்த்தி யெப்போது வரும்?

உ. சர்வாத்மனுய்ச் சரீரபரிக்கிரக மில்லாமற்போனுல் வரும்.

ச. சரீர பரிக்கிரகஞ் சர்வாத்மனுய் எப்போது போம்?

உ. ராகத் துவேஷங்கள் போனுல் போம்.

ச. அவை யெப்போது போம்?

உ. அபிமானம் போனுற் போம்.

ச. அது எப்போது போம்?

உ. அவிவேகம் போனுற் போம்.

ச. அது எப்போது போம்?

உ. அஞ்ஞானம் போனுற் போம்.

ச. அது எப்போது போம்?

உ. சர்வாத்மனுய் அத்துவிதப் பிரமாயிக்கப் பிரத்தியக்ஷ ஞானம் வந்தாற் போமன்றி மற்ற எந்த உபாயத்தினுலும் போகாது.

ச. கன்மத்தினுல் அஞ்ஞானம் போமென்று சொல்லக்கூடாதோ?

உ. கன்மத்திற்கும்அஞ்ஞானத்திற்கும் விரோதமில்லாதபடியினுற்போகாது. கன்மம் மேலுமேலும் அஞ்ஞானத்தை விருத்தியே பண்ணும்.

ச. எப்படி விருத்தி பண்ணும்?

உ. திருஷ்டாந்தமாகக் கேள்; அமாவாசை யிருளுக்கு விரோதமில்லாத மேகாவரணம் அந்தகாரத்தைக் கெடுக்காமல் மேலுமேலும் அதை அபிவிருத்தி செய்விப்பதுபோல, கன்மமும் அஞ்ஞானத்தைக் கெடுக்காமல் மேலு மேலும் அபிவிர்த்தியே செய்விக்கும். அல்லாமல்சூரியப்பிரகாசத்தினுல் அந்தகாரங் கெடுவதுபோல,அத்துவிதப் பிரமாயிக்கம் பிரத்தியக்ஷ ஞானப்பிரகாசத்தினுல் அஞ்ஞானங் கெடுமென்றி வேறு எதனுலுங் கெடாது.

ச. இந்தப் பிரமாயிக்கிய ஞானம் எதனுல் வரும்?

உ. ஆத்மானுத்ம விசாரத்தினுல் வரும்.

ச. கன்ம வுபாசனையினுலுங் கிரியாயோகங்களினுலும் வருமென்று சுருதியாதிகள் சொல்லுகின்றனவே. அதன் கருத்து என்ன?

உ. புருஷதந்திரமான கன்ம வுபாசனைகளாலும், ஜப தப தியானங்களினுலும், யோகங்களாலும் அந்தக்கரணசுத்தி வருமேயன்றி, ஞானம் வஸ்து தந்திரமா யிருக்கிறபடியினுல் வராது. மானசக் கிரியைகளான வுபாசனைகளாலும், ஒன்றையும் நினையாம லிருக்கிறதினுலும் ஏகாக்கிரசித்தம் வருமே யன்றி, அப்பிரமாண ஜன்யமான ஞானம் வராது. யோகமும் மானசக்கிரியாரூப மானபடியினுல், அது அணிமாதி ஐசுவரியஞ் சம்பாதித்துக் கொடுத்து ஞானபலமாகிய கிருதகிருத்தியங்களுக்கு விக்கினம் பண்ணுமேயன்றி ஞானத்தையுண்டாக்கமாட்டாது. ஆனுல் ஞானத்துக்குக் கர்மோபாசனுதிகள் பரம்பரா சாதனமாயிருக்கின்றமையினுல் ஞானசாதனமெனச் சொல்லப்பட்டது. ஞானத்துக்கு நேர்சாதனம் ஆத்மானுத்ம விசாரமேயாம்.

ச. அது எப்படி?

உ. காயத்திரி சாளக்கிராமம் ரத்தினாதிகளுடைய யதார்த்தஞானம் அதனின் பரீட்சை யறிந்தவன் சொல்லக்கேட்பதினாலெப்படித் தெரிகின்றதோ, ஸ்நான சந்தியானுஷ்டான ஜப தப ஹோமப் பிராணாயாமங்களினாலெப் படித் தெரியமாட்டாதோ, அப்படியே ஆத்மஞானமும் குரு சந்நிதானத்திற்செய்கிற ஆத்மானாத்ம விசாரத்தினாலே யுண்டாமன்றிக் கன்ம வுபாசனைகளினாலுண்டாகாது. ஆதலால் முமுட்சுவானவர்கள் சர்வப் பிரகாரத்தினாலும் அனுபவியான ஞானாசிரியரிடத்திற்பழகிச் சார்வதா ஆத்மானாத்ம விசாரம் பண்ணவேண்டும். அப்படியில்லாமல் சம்சய விபரீத பாவனைகளை நீக்காதவரும், தத்துவத்தைப் பிரித்து நிர்க்குணபாவத்தை அறிவிக்கமாட்டாதவரும், நிஷ்களத்திற் செல்ல வழி காட்டமாட்டாதவரும், டம்ப வேஷமுடையவரும், கொக்கைப்போலசையாதிருந்து காரியநிமித்தம் பரிசம்பண்ணுகிறவரும், மந்திர லய அடயோகங்களி லொரு லக்ஷியத்தைச்சொல்லி அதில் பழகப்பழக அந்தக்கரண விருத்தி சூனியமும் உபசாந்தமயக்கமு முண்டாதலையே பொருளென்றறிவிப்பவருமாகிய ஆசிரியரை நம்பினால், கழுதைவாலைப்பிடித்துக் காவேரிக்கரை யேறக்கூடாததுபோலவும், செல்லாதகாசு நோட்டக்காரரிடத்தில் செல்லாததுபோலவும், சித்திரசூரியனா லந்தகாரம் போகாததுபோலவும், அனுபவமே திருமேனியாகாத வாசா ஞான குரு சேவையினால் அஞ்ஞானம் போகாது, சம்சயமு நீங்காது என்று சகல வேதாந்தங்களுஞ் சொல்லுகின்றன. ஆகையினால் சொப்பிரகாசசொரூபமே திருமேனியாகிய காரணகுருவை நம்பினால் அவர் அப்படி நம்பின சிஷனை வீட்சித்து அவனுடைய அஞ்ஞானமும் அதனால் வரும் அவிவேகமும் அதனால்வரும் கன்மமும் அதனால்வரும் சரீரமும் அதனால் வருந் துக்கமும் அத்தியாசத்தினா லாரோபிதமாயினவென்று சந்தேக விபரீத மற உள்ளங்கை நெல்லிக்கனிபோல அனுபவமா யெடுத்தறிவிப்பார். அப்படி யறிவித்தவிடத்தில் அவன் சமுசாரத்திலிருந்து விடுபட்டுச் சீக்கிரமாகச் சீவன் முத்திச் சுகத்தைப் பெறுவானென்று சகல சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாதிகள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

ஏழாவது இராகத்துவேஷ நிரூபணம் முற்றிற்று.

---

எட்டாவது

## ஆத்மானாத்மவிசார நிரூபணம்.

சங்கை: ஆத்மாவாவது எப்படிப்பட்டது?

உத்தரம்: சரீரத்திரயத்திற்கும் பஞ்சகோசத்திற்கும் அன்னியமாய் அவஸ்தாத்திரயத்திற்குச் சாட்சியாயிருக்கிற சச்சிதானந்தசொரூபமே யாத்மாவென்று சொல்லப்படும்.

ச. அனாத்மாவாவது எப்படிப்பட்டது?

உ. சமஷ்டி வியஷ்டி யாத்மகமாகிய சரீரத்திரயங்களே யனாத்மாவாம்.

ச. இதற்கு லட்சணம் என்ன ?

உ. அசத்து, சடம், துக்கங்களாம்.

ச. சமஷ்டி வியஷ்டி எப்படிப்பட்டவை ?

உ. திருஷ்டாந்தத்தில் வெகுஜனமென்பது சமஷ்டி; ஒரு புருஷனென்பது வியஷ்டி. தோப்பென்பது சமஷ்டி; ஒரு விருக்ஷமென்பது வியஷ்டி. கிராமமென்பது சமஷ்டி; ஒரு கிரகமென்பது வியஷ்டி. இப்படியே யனேக பதார்த்தங்கள் கூடினது சமஷ்டி; ஒரு பதார்த்தமென்பது வியஷ்டி. இப்படியே தாஷ்டாந்தத்திலும் சமஸ்தபிராணிகளுடைய சரீரங்கள் சமஷ்டி; ஒரு பிராணியினுடைய சரீரம் வியஷ்டி. அவையும் ஸ்தூல சூட்சும காரணமென மூன்றுவிதமாயிருக்கும். அவற்றுள் சகல பிராணிகளுடைய ஸ்தூல சரீரம் சமஷ்டி ஸ்தூல சரீரம்; சகல பிராணிகளுடைய சூட்சும சரீரம் சமஷ்டி சூட்சும சரீரம்; சகல பிராணிகளுடைய காரண சரீரம் சமஷ்டி காரண சரீரம். ஒவ்வொரு பிராணிகளுடைய ஸ்தூல சூட்சும காரண சரீரம் வியஷ்டி யென்று சொல்லப்படும்.

ச. இப்படி சமஷ்டி வியஷ்டிகளா யேன் சொல்லவேண்டும் ?

உ. ஆத்மாவுக்கு ஈசுவரத்துவமுஞ் ஜீவத்துவமுஞ் சொல்லுவதின்பொருட்டுச் சொல்லவேண்டும்.

ச. ஈசுவரத்துவமுஞ் ஜீவத்துவமும் இனிமேலா வரப்போகின்றன ?

உ. ஈசுவரத்துவமுஞ் ஜீவத்துவமும் உபாதியினால் அநாதியாய் வந்திருக்கின்றன. ஆயினும் ஈசுவரத்வமும் ஜீவத்வமும் உபாதியினால் வந்தனவென எவரும் அறியார்கள்.

ச. பின்னை எப்படி யறிகிறார்கள் ?

உ. ஈசுவரத்வமுஞ் ஜீவத்வமும் நித்தியமென்றே யறிகிறார்கள்.

ச. அப்படி யறிந்தால் தோஷம் என்ன ?

உ. எந்தமட்டும் இப்படி நித்தியமென் றறிகிறார்களோ, அந்தமட்டும் அவர்களுக்குச் சமுசாரத்திலிருந்து நிவிர்த்தி வராது. ஆகையினால் சர்வப் பிராணிகளுக்குந் தாயாயிருக்குஞ் சுருதிகள் ஈசுவரத்வமுஞ் ஜீவத்வமும் உபாதியினால் வந்தனவென்று சொல்லுகிறநிமித்தம் சமஷ்டி வியஷ்டிகளாகப் பகுத்துச் சொல்லுகின்றன.

ச. எந்தவுபாதியினால் ஈசுவரத்வமும் எந்தவுபாதியினாற் ஜீவத்வமும் வருகின்றன ?

உ. சமட்டி சரீர வுபாதித் திரயத்தினால் ஈசுவரத்வமும், வியட்டி சரீர வுபாதித் திரயத்தினும் ஜீவத்துவமும் வருகின்றன.

ச. ஈசுவரனுக்குச் சமட்டி காரண சரீரமாத்திரம் போதாதோ ? சமட்டி ஸ்தூல சூட்சுமசரீரங்களும் ஏன் சொல்லவேண்டும் ?

உ. உபாசனை நிமித்தம் சொல்ல வேண்டும்.

ச. அது எப்படி ?

உ. முக்கிய அதிகாரியானவர்களுக்குச் சமட்டி காரண சரீர வுபாசகரான ஆத்மாவையே யுபாசிக்கப்படுமென்று சொல்லப்படும். இவருக்கே ஈசுவரனென்றும், அந்தரியாமியென்றும், அவ்வியாகிருதனென்றும் பெயர்.

ச. இவருக்குச் சமட்டி காரண சரீரத்தில் அபிமானம் உண்டா? இல்லையா?

உ. அபிமானம் அகங்கார தர்மமானபடியினாலும் அவ்வவஸ்தையில் அகங்கார மில்லாதபடியினாலும் அபிமான முண்டென்று சொல்லக்கூடாது.

ச. பின்னை எப்படி?

உ. ஆத்மாவுக்குச் சமட்டிகாரணசரீர விசிட்டமாத்திரத்துவமே யீசுவரத்வமென்று சொல்லவேண்டும். இந்த ஈசுவரனை யுபாசிக்க வல்லமை யில்லாதவர்களுக்கு அவ்வீசுவரனது அந்தர்க்கதமான சமட்டி சூட்சும சரீர வுபாதிகளையே யீசுவரனென்று உபாசிக்கும்படி சுருதி சொல்லுகின்றது. அவ்வீசுவரனுக்கு இரணியகர்ப்ப னென்றுஞ் சூத்திராத்மா வென்றும் பிராணனென்றும் பெயர்.

ச. இவருக்குச் சூட்சும சரீரத்தில் அபிமானமுண்டா? இல்லையா?

உ. அபிமானத்திற்கு ஆசிரயமான ஸ்தூல சரீர மில்லாதபடியினால் அபிமான முண்டென்று சொல்லக்கூடாது.

ச. பின்னை என்ன சொல்லவேண்டும்?

உ. சமஷ்டி சூட்சும சரீர விசிட்ட மாத்திரத்துவமே இரணிய கர்ப்பத்வம் என்று சொல்லவேண்டும். இவரை யுபாசிக்க வல்லமை யில்லாதவர்களுக்கு அந்த ஈசுவரனது அவத்தாந்தர்க்கதமான சமஷ்டி தூல சரீர வுபாதிகளையே யீசுவரனென்று உபாசிக்கும்படி சுருதி சொல்லுகின்றது. அந்த ஈசுவரனுக்கு விராட்டென்றும் வைஸ்வானரனென்றும் வைராசனென்றும் பெயர்.

ச. இவருக்குச் சமஷ்டி ஸ்தூல சரீரத்தில் அபிமானம் உண்டா? இல்லையா?

உ. நிர்ணயமான ஒரு சரீர மில்லாதபடியினால் அபிமானம் உண்டென்று சொல்லப்படாது.

ச. பின்னை என்ன சொல்லவேண்டும்?

உ. சமஷ்டி ஸ்தூல சரீர விசிட்ட மாத்திரத்துவமே யீசுவரத்துவமென்று சொல்லவேண்டும். அந்த அந்தரியாமியே சாத்துவீகாதி குணங்களிற் கூடி, சிருட்டி திதி சங்கார கர்த்தாவாய், பிரம விஷ்ணு ருத்திரரென்று பேர்வந்தவிடத்திலும் துட்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலன நிமித்தமாய் ராம கிருஷ்ணாதிஅவதாரங்க ளெடுக்குமிடத்திலும் அந்த ஈசுவரனுக்குஅந்தந்தச்சரீரங்களிடத்திற் சிருட்டித்துவாரா அபிமானங்களுண்டு.

ச. அவ்வபிமானமும் இல்லையென்று சொல்லுவோமே?

உ. அப்படியானாற் சிருஷ்டி திதி சங்காரங்கள் நடவா. ஆகையால் அபிமான முண்டென்றே சொல்லவேண்டும்.

ச. ஆனாற் சீவர்களுக்கும் ஈசுவரனுக்கும் என்ன பேதம்?

உ. ஜீவர்களுக்குத் தானென்ற அபிமான அகம் உண்டாயிருக்கிறபடியினாலும், ஈசுவரனுக்கு அப்படிப்பட்ட அபிமான மில்லாதபடியினாலும், லோகசம்ரட்சணார்த்தமாகவே யபிமானமிருக்கிறபடியினாலும், சீவர்களு

க்கும் ஈசுவரனுக்கும் பேதலக்ஷண முண்டு. இந்த ஈசுவரனையே பிரதிமையாதிகளிடத்தி லுபாசிக்கவேண்டுமென்று சாஸ்திரஞ்சொல்லுகிறது.

ச. அப்படி யேன் சொல்லவேண்டும்?

உ. விராட்டை யுபாசிக்கப் பக்குவமில்லாதவர்கள் திரிமூர்த்திகளை யுபாசிக்கவேண்டும்; அந்தத் திரிமூர்த்திகளை யுபாசிக்கப் பக்குவமில்லாதவர்கள் ராம கிருஷ்ணாதி அவதாரங்களை யுபாசிக்கவேண்டுமென்று சுருதியாதிகள் சொல்லுகின்றன. சர்வஜனங்களும் எந்தெந்த மூர்த்திகளை யுபாசிக்கின்றார்களோ, அந்தந்த மூர்த்திகளின் வழியாக அந்தரியாமியான ஈசுவரனையே யுபாசிக்கிறவர்க ளாவார்கள்.

ச. இந்த மூர்த்திகளை யுபாசிக்கவேண்டுமென்று சொல்லுகிற சுருதிகளுக்குத் தாற்பரியம் என்ன?

உ. துவாராத் துவாரா அந்தரியாமியான சொரூபத்தை யறியலாமென்பதே தாற்பரியம். இப்படியே யாத்மாவுக்குச் சமட்டி சரீரத்திரய வுபாதியினால் ஈசுவரத்துவமும், வியஷ்டி சரீரத்திரய வுபாதியினாற்சீவத்துவமும் வந்தன.

ச. சீவத்துவத்துக்குச் சரீரத்திரயம் வேண்டுமோ?

உ. அந்தக்கரண பிரதிவிம்பனாகையினால் சீவனுக்குச் சூட்சும சரீரம் வேண்டும். ஸ்தூல சரீர மில்லாவிட்டால் கர்த்ருத்வங் கூடாததுபற்றி ஸ்தூல சரீரமும் வேண்டும். காரியமான ஸ்தூல சூட்சும சரீரங்கள் காரணத்தை விட்டிராதபடியினால் இவ்விரண்டுக்குங் காரணமான காரண சரீரமும் வேண்டும்.

ச. சீவனுக்குச் சரீரத்திரயத்தில் அபிமான முண்டா? இல்லையா?

உ. அபிமான மில்லாமற் கர்த்ருத்வங் கூடாதபடியினால் உண்டு.

ச. ஆனால் இந்தச் சீவனுக்கு எத்தனை பேர்?

உ. சாக்கிராவத்தையில் வியட்டி தூலசரீரத்தில் அபிமான கர்த்தாவான சீவனுக்கு விசுவன், வியவகாரிகன், சிதாபாசனென்று மூன்று பெயர். சொப்பனாவத்தையில் வியஷ்டி சூட்சும சரீரத்தில் அபிமான கர்த்தாவான சீவனுக்குத் தைசதன், பிராதிபாதிகன், சொப்பனகற்பிதனென்று மூன்றுபெயர். சுழுத்தியவத்தையில் வியஷ்டி காரண சரீரத்தில் அபிமான கர்த்தாவான சீவனுக்குப் பிராஞ்ஞன், பாரமார்த்திகன், அவிச்சின்ன னென்று மூன்று பெயர்.

ச. ஒரு ஆத்மாவுக்கே யீசுவரத்வ மென்றும், சீவத்துவ மென்றும் இரண்டுரூப மெப்படிச் சொல்லப்படும்?

உ. திருஷ்டாந்தத்தில் ஒரு தேவதத்தனுக்கே புத்திரனை யபேட்சித்துத் தகப்பனென்றும், பேரனை யபேட்சித்துப் பாட்டனென்றும் பெயர் வந்ததுபோல, ஒரு ஆத்மாவுக்கே வியட்டி யுபாதியை யபேட்சித்துச் சீவனென்றும் சமட்டி யுபாதியை யபேட்சித்து ஈசுவரனென்றுஞ் சொல்லப்படும். ஆதலால் கூடும்.

ச. தகப்பன் பாட்டனென்று சொல்லுகிற தர்மத்தையுடைய தேவதத்தனிடத்திற் கிஞ்சிக்ஞத்வ சர்வக்ஞத்வ வுபாதிகள்காணோம்.

சீவத்வ ஈசுவரத்வ தர்மங்களுடன் கூடியிருக்கிற ஆத்மாவினிடத்தில் கிஞ்சிக்ஞத்வ சர்வக்ஞத்வ வுபாதிகள் காணப்படுகிறபடியினால், அந்தத் திருஷ்டாந்த மெப்படிக் கூடும்?

உ. ஒரு ஆத்மாவுக்கே யிரண்டு உபாதியினால் ஈசுவரத்வமுஞ் சீவத்துவமும் வருமென்பதற்காகத் தேவதத்த திருஷ்டாந்தஞ் சொன்னோம். இனி மகத்வ வுபாதியினால் ஆத்மாவுக்குச் சர்வக்ஞத்துவமும் அணுத்வ வுபாதியினால் கிஞ்சிக்ஞத்துவமும் வரலாமென்பதற்கு வேறொரு திருஷ்டாந்தஞ் சொல்லுகிறோம். விஸ்தாரமான ஜலத்திற்கு ஏரியென்ற வுபாதியினால் அனேக தானிய முதலானவைகளை விளைவிப்பதற்கும், சமஸ்த பிராணிகளுக்கும் ஸ்நானபானாதிக் கிரியைகளைச் செய்விப்பதற்குஞ் சாமர்த்திய முண்டு. அற்பமான ஜலத்திற்குக் கடமென்ற வுபாதியினால் தாக பாகாதி முதலான கிரியைகளுக்கு மாத்திரம் உபயோகப்படுஞ் சாமர்த்திய முண்டு. பின்னும் ஒரு அக்கினிக்கே தீவட்டியென்ற வுபாதியினால் தூரமாயிருக்கிற பதார்த்தங்களைத் தெரியச் செய்கிற சாமர்த்தியமும், விளக்கென்ற வுபாதியினால் சமீபத்திலிருக்கிற பதார்த்தங்களைத் தெரியச்செய்கிற சாமர்த்தியமு முண்டு. அதுபோல ஒரு ஆத்மாவுக்கே மகத்வமாகிய சமஷ்டி சரீர வுபாதியினால் சர்வக்ஞத்வமும், அணுத்வமாகிய வியஷ்டி சரீர வுபாதியினால் கிஞ்சிக்ஞத்துவமும் வரும். அதனால் ஈசுவரத்வம் ஜீவத்வமென்கிற பேதம் வந்தது. பாரமார்த்திகத்தில் சீவேசுவரர்களுக்கு அபேதமேயன்றிப் பேத மில்லையென்று சுருதியாதிகளிற் சொல்லுகின்றது.

ச. விருத்த தர்மத்திற் கூடியிருக்கிற சீவேசுவரர்களுக்கு எப்படி அபேதங் கூடும்?

உ. பூர்வதிருஷ்டாந்தத்தில் விருத்த தர்மத்துடன் கூடிய ஏரியென்ற வுபாதியோடு சேர்ந்திருக்கிற ஜலத்திற்குங் கடமென்கிற வுபாதியோடு சேர்ந்திருக்கிற ஜலத்திற்கும் விருத்தாமிசைகளான ஏரிகடமென்ற வுபாதிகளைவிட்டு,அவிருத்தாமிசைகளான ஜலத்தினால் ஏகத்துவஞானம் வருகிறது போலும், விருத்த தர்மத்துடன் கூடிய தீவட்டியென்ற வுபாதியோடு சேர்ந்திருக்கிற அக்கினிக்கும், விளக்கென்ற வுபாதியோடு சேர்ந்திருக்கிற அக்கினிக்கும் விருத்தாமிசைகளான பெரிய வர்த்தி சின்ன வர்த்தியென்ற வுபாதிகளைவிட்டு, அவிருத்தாமிசைகளான அக்கினிமாத்திரத்தினால் ஏகத்துவஞானம் வருகிறதுபோலும் விருத்த தர்மமான சர்வக்ஞத்வாதிகளுடன் கூடியிருக்கிற ஈசுவரனுக்கும் விருத்த தர்மமான கிஞ்சிக்ஞத்வாதிகளுடன்கூடியிருக்கிற சீவனுக்கும் விருத்தாமிசைகளான சர்வக்ஞத்வ கிஞ்சிக்ஞத்வ வுபாதிகளைவிட்டு, அவிருத்தாமிசைகளான சைதன்ய மாத்திரத்திற்கு ஏகத்துவஞானங் கூடும். இந்த அர்த்தமே சகல சாஸ்திரங்களிலும் சுயம் தேவதத்தகா என்கிற திருட்டாந்த பூர்வகமாய் மகாவாக்கியத்திற்கு ஜகர்லட்சணை, அஜகர்லட்சணை, ஜகதஜகர்லட்சணைகளால் சுருதியாதிகளில் அர்த்தஞ் சொல்லப் படுகின்றது. ஆதலால் இந்தப்படிச் சொப்பிரகாசமேதிருமேனியான சற்குருவினால் விசாரித்து உபாதியான அகம்பாவ மில்லாமல் நானே பிரமமென யார் அறிகின்றார்களோ, அவர்களே சீவன் முத்தரென்று சுருதி ஸ்மிருதியாதிகளிற் சொல்லப்படுகிறது. இதிற் சம்சய மில்லை சித்தம்.

எட்டாவது ஆத்மானாத்மவிசார நிரூபகம் முற்றிற்று.

ஒன்பதாவது

# சரீரத்திரயவிலக்ஷண நிரூபகம்.

சங்கை: சரீரத்திரய சொரூபமாவது யாது?

உத்தரம்: ஸ்தூல சூட்சும காரணமெனமூன்று சரீரங்களாம்.

ச. இவற்றுள் ஸ்தூல சரீரமாவது யாது?

உ. கர சரண அவயவங்களாய் ஸ்தம்பம்போற் றோற்றப்படுவது.

ச. சூட்சும சரீரமாவது யாது?

உ. பதினேழு அவயவங்களுடன் கூடியிருப்பது.

ச. காரண சரீரமாவது யாது?

உ. அஞ்ஞானமே காரண சரீரம்.

ச. இவைகளுக்குச் சரீரமென்று எதனால் பெயர் வந்தது?

உ. சீரணித்துப் போகிறபடியினால் சரீரமென்று பெயர் வந்தது.

ச. ஸ்தூல சரீரம் எப்படிச் சீரணிக்கிறது?

உ. இந்த ஸ்தூலசரீரம் இளமையினாலும், நோயில்லாமையினாலும், அன்னஞ் சமமானதினாலும் விருத்தியாகின்றது; அன்னம் இல்லாமையினாலும், அன்னம்அதிகமானதினாலும், வியாதியினாலும், முதுமையினாலும் சீரணமாகின்றது.

ச. சூட்சும சரீர மெப்படி ஜீரணிக்கிறது?

உ. ராகத்துவேஷாகாரமாய்ப் பரிணமிக்கிறது விருத்தி; அவற்றின் சங்கோசமே சீரணத்துவம்.

ச. காரண சரீர மெப்படி ஜீரணிக்கிறது?

உ. அக மமதாதி யான் எனதென்கிற அபிமானத்தினாற் பரிணமிக்கிறது விருத்தி; அவற்றின் சங்கோசமே சீரணத்துவம்.

ச. சூட்சுமகாரண சரீரத்திற்கு விருத்தியும் சீரணத்துவமும் எங்கே காணப்படுகின்றன?

உ. அஞ்ஞானிகளிடத்தில் விருத்தியும், முமூட்சுக்களிடத்திற் சங்கோசமுங் காணப்படுகின்றன.

ச. தேகமென்று ஏன் பெயர் வந்தது?

உ. தகிக்கப்படுகின்றபடியினால் தேகமென்று பேர்வந்தது.

ச. எப்படித் தகிக்கப்படுகின்றது?

உ. அக்கினியில் பஸ்மாகாரமாகத் தகிக்கப்படுகின்றது.

ச. ஸ்தூல சரீரமல்லவோ தகிக்கப்படுகின்றது? சூட்சும காரண சரீரங்கள் தகிக்கப்படுகின்றனவா?

உ. அவைகளுந் தகிக்கப்படுகின்றன.

ச. எப்படித் தகிக்கப்படுகின்றன?

உ. சார்வதா தாபத்திரயங்களினால் தகிக்கப்படுகிற சூட்சுமகாரணசரீரங்கள் ஞானாக்கினியினால் தகிக்கப்படுகின்றன. ஆகையினால் இம்மூன்று சரீரத்திற்குந் தேகமென்று பெயர் வந்தது.

ச. மூன் சரீரத்திற்கு ஸ்தூல சரீரமென்று ஏன் பெயர் வந்தது?

உ. மயிர் தோல் நரம்பு தசை எலும்பு கொழுப்பு இந்த ஆறும் ஸ்தம்பம் போற் பிரத்தியக்ஷத்தில் ஸ்தூலமாய்த் தோற்றுகிறபடியினால் ஸ்தூல சரீரமென்று பெயர் வந்தது.

ச. மத்திய சரீரத்திற்குச் சூட்சும சரீரமென்று ஏன் பெயர்வந்தது?

உ. பூர்வ சரீரம்போல் ஸ்தூலமாய்த் தோற்றாதபடியினால் சூட்சும சரீரமென்று பேர் வந்தது.

ச. இதற்கு இலிங்க சரீரமென்று ஏன் பெயர் வந்தது?

உ. ஈனமான சத்தாதி விஷயங்களை யறியப்பண்ணுகிறபடியினாலும், ஆத்மாவை லட்சணத்தினால் அறியப்பண்ணுகிறபடியினாலும் இலிங்க சரீரமென்று பெயர் வந்தது.

ச. பச்சிம சரீரத்திற்குக் காரண சரீரமென்று ஏன் பெயர் வந்தது?

உ. இவ்விரண்டு சரீரங்களையும் பிறப்பிக்கிறபடியினால் அதற்குக் காரண சரீரமென்று பெயர் வந்தது.

ச. ஸ்தூலசரீரம்பிரத்தியக்ஷமாய்த் தெரிகிறபடியினால்உண்டென்று சொல்லலாம். அதுபோல் சூட்சும சரீரம் பிரத்தியக்ஷமாய்த் தெரியாதபடியினால் ஸ்தூலத்திற் கன்னியமான சூட்சும சரீரத்தை எப்படி யுண்டென்று சொல்லுகிறது?

உ. பதினேழுவிதமான காரியத்தைக் குறித்துச் சூட்சும சரீரமும் உண்டென்று சொல்லலாம்.

ச. இந்தப் பதினேழுவிதமான காரியங்களுந் ஸ்தூல சரீரத்தினாலேயே செய்யப்படுகின்றனவென ஏன் சொல்லப்படாது?

உ. சுழுத்தி மூர்ச்சை மரணம் வந்தபோது இந்த ஸ்தூல சரீரத்தினாற் பதினேழுவித காரியமும் பண்ணவேண்டும். பண்ணாதபடியினால் ஸ்தூல சரீர காரியமென்று சொல்லக்கூடாது. ஸ்தூலத்திற் கன்னியமான சூட்சும சரீர காரியமென்றே சொல்லவேண்டும்.

ச. ஸ்தூலத்தைவிட்டுச் சூட்சும சரீரஞ் சுதந்தரமா யொரு காரியமுஞ் செய்யாதபடியினால் சூட்சும சரீர காரியமென் றெப்படி யறிகிறது?

உ. அக்கினியானது கட்டையைச் சுட்டுத் தன்னுருவமாக்கிக்கொண்டு தாக பாகாதிக் கிரியைகளைப் பண்ணினாலும் அந்தத் தாக பாகாதிக் கிரியைகள் கட்டையின் காரியமல்லாததுபோல சூட்சுமசரீரமும் ஸ்தூலத்தை யாசிரயித்துப் பதினேழுவிதமான காரியங்களைப்பண்ணினாலும் கேவலமான ஸ்தூலத்திற் கன்னியமான சூட்சும சரீரத்தின் காரியமென்றே யறியவேண்டும்.

ச. ஆனால் பதினேழுவிதமான காரியமாவது யாது?
உ. அதைக் காரண முன்னிலையா யறியவேண்டும்.
ச. காரணமாவது யாது?
உ. பதினேழுவித அவயவங்களான சூட்சும சரீரமே காரணம்.
ச. அது எப்படி?
உ. ஞானேந்திரிய பஞ்சகமும், கன்மேந்திரிய பஞ்சகமும், பிராணாதி பஞ்சகமும், சித்தத்தோடு கூடின மனதும், ஆங்காரத்துடன் கூடின புத்தியுமாகிய இந்தப்பதினேழுங் கூடிச் சூட்சும சரீரமென்னப்படும்.
ச. ஞானேந்திரிய பஞ்சகமாவது யாது?
உ. சுரோத்திரம், தொக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணம் ஆக ரு.
ச. சுரோத்திராதிகளுக்கு ஞானேந்திரிய மென்று ஏன் பெயர் வந்தது?
உ. சத்தாதி விஷயங்களைக் கிரகிக்கிறபடியினால் ஞானேந்திரியமெனப்பெயர் வந்தது.
ச. இதற்கு ஞானோற்பத்தி யெப்படி வந்தது?
உ. சத்துவ குணத்தில் உற்பத்தி யாகையினால் ஞானம் வந்தது.
ச. கன்மேந்திரிய பஞ்சகமாவது யாது?
உ. வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபத்தம் ஆக ரு.
ச. இதற்குக் கன்மேந்திரியமென்று ஏன் பெயர் வந்தது?
உ. வசனாதிக் கிரியைகளைப் பிறப்பிக்கிறபடியினால் கன்மேந்திரிய மென்று பெயர் வந்தது.
ச. இதற்குக் கிரியா வுற்பத்தி யெப்படி வந்தது?
உ. ராசதகுணத்தி லுற்பத்தியாகையினால் கிரியா வுற்பத்தி வந்தது.
. பிராணாதி பஞ்சகமாவது யாது?
உ. பிராணன் அபானன் வியானன் உதானன் சமானன் ஆக ரு.
ச. இதற்குப் பிராணாதியென்று ஏன் பேர் வந்தது?
உ. ஸ்தூல சரீரத்தைச் சீவிக்கப் பண்ணுகிறபடியால் பிராணாதியெனப் பேர் வந்தது.
ச. மனம் புத்தியாவன யாவை?
உ. அந்தக்கரண விருத்தி விசேஷங்களே மனம் புத்தி யென்னப்படும்.
ச. ஆனால் சுரோத்திரேந்திரிய மெவ்வகைப்பட்டது?
உ. சத்தங்களெல்லா மெதனாற் கிரகிக்கப்படுகின்றனவோ, அதுவே சுரோத்திரேந்திரியம்.
ச. அந்தச்சத்த மெத்தனை வகைப்படும்?
உ. லௌகிகம் வைதிகமென் றிரண்டு வகைப்படும்.
ச. லௌகிகமாவது யாது?
உ. பிராகிருத ரூபமான பதினெண் பாஷைகளும் லௌகிகம்.

ச. வைதிகமாவது யாது ?

உ. அப்பிராகிருத ரூபமான வேதசாத்திரங்கள் அனைத்தும் வைதிகம்.

ச. இந்த லௌகிக மெத்தனை விதம் ?

உ. அனந்தவிதமா யிருக்கும்.

ச. வைதிக மெத்தனை விதம் ?

உ. அதுவும் அனந்தவிதமாயிருக்கும். அன்றிப் பஞ்சீகிருத பேதத்தில் சத்த மிருபத்தைந்து விதம். இத்தனைவித சத்தங்களு மெதனாற் கிரகிக்கப்படுகின்றனவோ, அதுவே சுரோத்திரேந்திரியம்.

ச. இந்தச் சுரோத்திரேந்திரிய மெங்கே யிருக்கிறது ?

உ. கர்ண ஷட்குள்ய அவிச்சின்ன நபோதேசத்தை யாசிரயத்திருக்கின்றது.

ச. அந்த நபோதேசமே சுரோத்திரேந்திரியமென்று சொல்லலாமா?

உ. சுழுத்தி மூர்ச்சை மரணமடைந்த சரீரங்களிலு மிருக்கிற நபோதேசத்தினாலுஞ் சத்தத்தைக் கிரகிக்கவேண்டும். அங்ஙன மில்லாதபடியினால் அந்த நபோதேசத்திற் கன்னியமாய்ச் சத்தக்கிராகியசத்தாய்ச் சூட்சுமமான ஒரு வஸ்து நபோதேசத்தை யாசிரயித்துக் கொண்டிருக்கிறது. அதற்கே சுரோத்திரேந்திரியமென்று பெயர். அதற் கதிட்டான தேவதை திக்கு. அவ்வதிட்டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட சுரோத்திரேந்திரியஞ் சத்தமெல்லாமறிந்து பஞ்சீகிருத பேத சத்த மிருப்பதையு மறிந்து கொண்டேயிருக்கும்.

ச. தொக்கிந்திரியமாவது யாது ?

உ. பரிசமெல்லா மெதனாற் கிரகிக்கப்படுகின்றனவோ, அதுவே தொக்கிந்திரியம்.

ச. அந்தப் பரிச மெத்தனை விதம்?

உ. சீத உஷ்ண சீதோஷ்ண மிருது கடின மென் றைந்துவிதம்; அவற்றுள் ஒவ்வொன்றும் அனந்தவிதமா யிருக்கும்.

ச. இந்தத் தொக்கிந்திரிய மெங்கே யிருக்கும் ?

உ. தொக்கைச் சர்வத்திரா வியாபித்துக்கொண்டிருக்கும்.

ச. ஆனால் தொக்கையே தொக்கிந்திரியமென்று சொல்லலாமோ ?

உ. சுழுத்தி மூர்ச்சை மரண சரீரத்தி லிருக்கிற தொக்கினாற் பரிசத்தைக் கிரகிக்கவேண்டும். அங்ஙனம் கிரகியாதபடியினால், அந்தத் தொக்குக்கு அன்னியமான ஸ்பரிசக் கிராகியசத்திமத்தாய்ச் சூட்சுமமான ஒருவஸ்து சிரசுநடுவில் நபோதேசத்திலிருந் திரண்டுகேவராய்த் தொக்கைப்பரிசித்துக்கொண்டிருக்கிறது. அதற்கே தொக்கிந்திரியமென்று பெயர். அதற்கு அதிட்டான தேவதை வாயு. அவ்வதிட்டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட தொக்கிந்திரியம் பரிசத்தை யெல்லாமறிந்து பஞ்சீகிருத பேத பரிச மிருப்பதையும் அறிந்துகொண்டிருக்கும்.

ச. சட்சு இந்திரியமாவது யாது ?

உ. ரூபமெல்லா மெதனாற் கிரகிக்கப்படுகின்றனவோ, அதுதான் சட்சு இந்திரியம்.

ச. அந்த ரூபம் எத்தனை வகைப்படும் ?

உ. வெள்ளை சிவப்பு பச்சை மஞ்சள் கறுப்பு ஊதா மிசிரம் அகலம் நிகளம் உயர்ச்சி தாழ்ச்சி இவற்றுள் ஒவ்வொன்று மனேகவிதமா யிருக்கும். இத்தனை ரூபங்களு மெதனால் தெரியப்படுகின்றனவோ, அதுவே சட்சு இந்திரியம்.

ச. அது எங்கே யிருக்கும் ?

உ. கருவிழியை யாசிரயித்துக்கொண் டிருக்கும்.

ச. ஆனால் கருவிழியே சட்சு இந்திரியமென்று சொல்லலாமோ ?

உ. சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களி லிருக்கிற கருவிழியினால் ரூபத்தை யறியவேண்டும். அங்ஙனம் அறியாதபடியினால், கருவிழிக்கு அன்னியமான ரூபத்தைக் கிரகிக்கிறசத்திமத்தாய்ச் சூட்சுமமாய் ஒருவஸ்து சிரசு நடுவே நபோதெ சத்திலிருந்து இரண்டுகவராய்க் குவளைமுன் னிலையில் அந்தக் கருவிழியை யாசிரயித்துக்கொண் டிருக்கிறது. அதற்கே சட்சு இந்திரியமென்று பெயர். அதற் கதிட்டான தேவதை சூரியன். அவ்வதிட்டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட சட்சு இந்திரியம் ரூபமெல்லாமறிந்து பஞ்சீகிருத பேதரூப மிருப்பதையுங் கிரகித் தறிந்துகொண் டிருக்கும்.

ச. சிங்குவை யிந்திரியமாவது யாது ?

உ. ரசமெல்லா மெதனாற் கிரகிக்கப் படுகின்றனவோ, அதற்கே சிங்குவை யென்று பெயர்.

ச. அந்த ரச மெத்தனை விதமா யிருக்கும் ?

உ. உப்பு புளிப்பு கார்ப்பு கசப்பு துவர்ப்பு தித்திப்பு என் றாறுவிதம். அவற்றுள் ஒவ்வொன்றும் அனேக விதமா யிருக்கும். இத்தனையு மெதனாற் கிரகிக்கப்படுகின்றனவோ, அதுவே சிங்குவேந்திரியம்.

ச. அது எங்கே யிருக்கும் ?

உ. நுனி நாவை யாசிரயித்துக்கொண் டிருக்கும்.

ச. ஆனால் நுனிநாவையே சிங்குவேந்திரியமென்று சொல்லலாமோ?

உ. சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களிலிருக்கிற நுனிநாவினால் ரசங்களெல்லாங் கிரகிக்கப்படல்வேண்டும். அப்படிக் கிரகிக்காதபடியினால் அந்த நுனிநாவுக் கன்னியமாய், ரசகிராகியசத்திமத்தாய்ச் சூட்சுமமாய் ஒரு வஸ்து கபாலநடுவில் நபோதெ சத்திலிருந்து இரண்டு கவராய்த் தந்த தாலோஷ்டத்தைப்பற்றி அந்தநுனிநாவை யாசிரயித்துக் கொண்டிருக்கும். அதற்கே சிங்குவேந்திரியமென்று பெயர். அதற் கதிட்டான தேவதை வருணன். அவ்வதிட்டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட சிங்குவேந்திரியம் ரசங்களையெல்லா மறிந்து பஞ்சீகிருத பேத ரசங்களையுங் கிரகித்துக்கொண்டிருக்கும்.

ச. ஆக்கிராணேந்திரியமாவது யாது ?

உ. சுகந்த துர்க்கந்த மெல்லா மெதனாற் கிரகிக்கப்படுகின்றனவோ, அதற்கே ஆக்கிராணேந்திரியமென்று பெயர்.

ச. அது எத்தனைவிதமா யிருக்கும் ?

உ. சுகந்த துர்க்கந்த மிசிரகந்தமென மூன்றுவிதம். அவற்றுள் ஒவ்வொன்றும் அனேகவிதமா யிருக்கும். இத்தனையு மெதனாற் கிரகிக்கப்படுகின்றனவோ, அதுவே ஆக்கிராணேந்திரியம்.

ச. அது எங்கே யிருக்கும் ?

உ. நுனி மூக்கை யாசிரயத்துக்கொண்டிருக்கும்.

ச. ஆனால் நுனிமூக்கையே கிராணேந்திரியமென்றுசொல்லலாமோ?

உ. சுழுத்தி மூர்ச்சை மரணசரீரங்களிலிருக்கிற நுனிமூக்கினாற் கந்தம்அறியப்படல் வேண்டும். அங்ஙன மறியாதபடியினால் நுனிமூக்குக் கன்னியமாய்க் கந்தக் கிராக்யசத்திமத்தாய்ச் சூட்சுமமாய் ஒருவஸ்து கபாலத்திலிருந்து முகாரவிந்த வழியாய் இரண்டுகவராய் மூக்குத்தண்டெலும்பைப்பற்றி அந்த நுனிமூக்கை யாசிரயித்துக் கொண்டிருக்கும். அதற்கே ஆக்கிராணேந்திரியமென்று பெயர். அதற் கதிஷ்டான தேவதை அசுவினி. அவ்வதிட்டான தேவதையாற் பிரேரிக்கப்பட்ட ஆக்கிராணேந்திரியம் கந்தங்களை யெல்லாங் கிரகித்துப் பஞ்சீகிருத பேதங்களையும் அறிந்துகொண்டிருக்கும்.

ச. கன்மேந்திரியங்களில் வாக்கிந்திரியமாவது யாது ?

உ. சத்தமெல்லா மெதனால் உச்சரிக்கப்படுகின்றனவோ, அதுவே வாக்கிந்திரியம்.

ச. அது எங்கே யிருக்கிறது ?

உ. நுனிநா தாலுமூலம் மேலுதடு கீழுதடு பல் கண்டம் இருதயம் பிரமரந்திர மென்கிற அஷ்ட தானங்களையும் ஆசிரயித்துக்கொண்டிருக்கும்.

ச. ஆனால்அந்தஅஷ்டதானங்களையே வாக்கிந்திரியமென்று சொல்லலாமோ ?

உ. சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களிலிருக்கிறஅந்தஅஷ்டதானங்களினாற் சத்தங்கள் உச்சரிக்கப்படல்வேண்டும். அங்ஙன மில்லாதபடியினால் அவ்வஷ்டதானங்களுக்கும் அன்னியமாய்ச் சத்த முச்சரிக்கிற சத்தி மத்தாய்ச் சூட்சுமமாய் ஒருவஸ்து முகாரவிந்தத்திலிருந்து அஷ்ட தானங்களையும் ஆசிரயித்துக் கொண்டிருக்கும். அதற்கே வாக்கிந்திரிய மென்று பெயர். அதற் கதிஷ்டான தேவதை அக்கினி. அவ்வதிஷ்டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட வாக்கிந்திரியஞ் சத்தமெல்லாம் உச்சரித்துக் கொண்டிருக்கும்.

ச. பாணீந்திரியமாவது யாது?

உ. கொடுக்கல் வாங்கல் முதலான கிரிகைகள் எதனாற் செய்யப்படுகின்றனவோ, அதற்குப் பாணீந்திரியமென்று பெயர்.

ச. அது எங்கே யிருக்கும் ?

உ. உள்ளங்கையை ஆசிரயித்துக்கொண்டிருக்கும்.

ச. ஆனால் உள்ளங் கையே பாணீந்திரிய மென்னலாமோ ?

உ. சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களி லிருக்கிற வுள்ளங்கையினாலுந் தானாதிக் கிரியைகளைப் பண்ணவேண்டும். பண்ணா திருக்கிறபடியால் உள்ளங்கைக் கன்னியமாய்த் தானாதிக் கிரியாசத்திமத்தாய்ச் சூட்சுமமாய் ஒரு

வஸ்து முகாரவிந்தத்திலிருந்து உள்ளங் கையை யாசிரயித்துக்கொண்டிருக்கும். அதற்கே பாணீந்திரிய மென்று பெயர். அதற் கதிஷ்டான தேவதை இந்திரன். அவ்வதிஷ்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்ட பாணீந்திரியங் கொடுக்கல் வாங்கலாகிற கிரியைகளைச் செய்யும்.

ச. பாதேந்திரியமாவது யாது?

உ. கமனுதிக் கிரியைகள் எதனுற்செய்யப்படுகின்றனவோ, அதற்குப் பாதேந்திரியமென்று பெயர்.

ச. அது எங்கே யிருக்கும்?

உ. உள்ளங்காலை யாசிரயித்துக்கொண்டிருக்கும்.

ச. ஆனுல் உள்ளங்காலையே பாதேந்திரியமென்று சொல்லலாமோ?

உ. சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களிலிருக்கிற வுள்ளங்காலினுல் கமனுதிக் கிரியைகள் பண்ண வேண்டும். பண்ணுதபடியினுல் உள்ளங் காலுக் கன்னியமாய்க் கமனுதிக் கிரியாசத்திமத்தாய்ச் சூட்சுமமாய் ஒருவஸ்து முகாரவிந்தத்திலிருந்து இரண்டுகவராய் உள்ளங் காலை யாசிரயித்துக் கொண்டிருக்கும். அதற்கே பாதேந்திரியமென்று பெயர். அதற் கதிஷ்டான தேவதை உபேந்திரன். அவ்வதிஷ்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்ட பாதேந்திரியங் கமனுதிக் கிரியைகளைப் பண்ணும்.

ச. பாயுரிந்திரியமாவது யாது?

உ. மலவிசர்ச்சனுதிக் கிரியைகள் எதனுற் செய்யப்படுகின்றனவோ, அதற்குப் பாயுரிந்திரியமென்று பெயர்.

ச. அது எங்கே யிருக்கும்?

உ. குதத்தை யாசிரயித்துக் கொண்டிருக்கும்.

ச. ஆனுல் குதத்தையே பாயுரிந்திரிய மென்னலாமோ?

உ. சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களிலிருக்கிற குதத்தினுலும் விசர்ச்சனுதிக்கிரியைகளைச் செய்யவேண்டும். அப்படிச் செல்லாதபடியினுல் குதத்திற் கன்னியமாய் மலவிசர்ச்சனுதிக் கிரியாசத்திமத்தாய்ச் சூட்சுமமாய் ஒருவஸ்து முகாரவிந்தத்திலிருந்து குதத்தையாசிரயித்துக்கொண்டிருக்கும். அதற்கே பாயுரிந்திரியமென்று பெயர். அதற் கதிஷ்டானதேவதை மிருத்தியு. அவ்வதிஷ்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்ட குதேந்திரியம் மல விசர்ச்சனுதிக் கிரியைகளைப் பண்ணும்.

ச. உபஸ்தேந்திரியமாவது யாது?

உ. சுக்கில மூத்திர விசர்ச்சனுதிக் கிரியைகள் எதனுற் செய்யப்படுகின்றனவோ, அதற்கு உபஸ்தேந்திரியமென்று பெயர்.

ச. அது எங்கே யிருக்கும்?

உ. யோனி லிங்கங்களை யாசிரயித்துக்கொண்டிருக்கும்.

ச. யோனிலிங்கங்களையே யுபஸ்தேந்திரியமென்றுசொல்லலாமோ?

உ. சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களிலிருக்கிற யோனி லிங்கங்களினுலும் சுக்கில மூத்திர விசர்ச்சனுதிக் கிரியைகள் பண்ணவேண்டும். பண்ணுத

படியினால் யோனி லிங்கங்களுக் கன்னியமாய்ச் சுக்கில மூத்திர விசர்ச் சனாதிக் கிரியாசத்திமத்தாய்ச் சூட்சுமமாய் ஒருவஸ்து முகாரவிந்தத்தி லிருந்து யோனி லிங்கங்களை யாசிரயித்துக்கொண்டிருக்கும். அதற்கு உபஸ்தேந்திரியமென்று பெயர். அதற் கதிஷ்டான தேவதை பிரஜாபதி. அவ்வதிட்டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட உபஸ்தேந்திரியம் சுக்கில மூத்திர விசர்ச்சனாதிக் கிரியைகளைப் பண்ணும்.

ச. பிராணாதி பஞ்சகத்தில் பிராண வாயுவாவது யாது ?

உ. உசுவாசம் எதனாற் பண்ணப் படுகின்றதோ, அதற்குப் பிராணவாயு என்று பெயர். அதற்கு ஸ்தானம் இருதயம். அதற் கதிட்டான தேவதை விசிட்டன். அவ்வதிட்டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட பிராணவாயு உசுவாசம் பண்ணிக்கொண்டிருக்கும்.

ச. அபான வாயுவாவது யாது?

உ. நிசுவாசம் எதனாற் பண்ணப்படுகிறதோ, அதற் கபானவாயு வென்று பெயர். அதற்கு ஸ்தானங் குதம். அதற் கதிட்டான தேவதை விசுவ கர்த்தா. அவ்வதிட்டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட அபான வாயு நிசுவாசம் பண்ணிக்கொண்டிருக்கும்.

ச. வியான வாயுவாவது யாது ?

உ. சரீரத்தைப் பலப்படநிறுத்தி யிந்திரியங்களுக்குப் பலனைக் கொடுத்துக் கொண்டிருக்கிறது எதுவோ, அதற்கு வியான வாயுவென்று பெயர். அதற்கு ஸ்தானம் சர்வ சரீரம். அதற் கதிட்டான தேவதை விசுவயோனி. அவ்வதிட்டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட வியானவாயு இந்திரியங்களுக்குப் பலனைக்கொடுத்துச் சரீரமெல்லாம் வியாபித்திருக்கும்.

ச. உதான வாயுவாவது யாது ?

உ. சுழுத்திகாலம் வந்தபோது சகல இந்திரியங்களையும் ஒடுக்கிக்கொண்டு தனக்குக் காரணமான அஞ்ஞானத்தில் எது லயிக்கப் பண்ணுகிறதோ, சாக்கிராவஸ்தையில் அந்தந்த இந்திரியங்களை யந்தந்த விடத்தில் எது நிறுத்துகிறதோ, மரணகாலம்வந்தபோது சகல இந்திரியங்களையுங் கிரகி த்துக்கொண்டு லோகாந்தரத்திற்கு எது போகிறதோ, அதுவே யுதான வாயு. அதற்கு ஸ்தானங் கண்டம். அதற் கதிட்டான தேவதை பிரம தேவன். அவ்வதிட்டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட உதான வாயு இத்தியாதித் தொழில்களை நடத்தும்.

ச. சமான வாயுவாவது யாது ?

உ. உண்டல் குடித்தல் உறிஞ்சல் நக்க லென்கிற நாலுவித வுண்டிகளைச் சாடராக்கினியோடுகூடி எது உபசமனம் பண்ணிச் சரீரத்திற்குப் புஷ்டி செய்விக்கிறதோ, அதற்குச் சமானவாயு வென்று பெயர். அதற்கு ஸ்தானம் நாபி. அதற் கதிட்டான தேவதை க்ஷயன். அவ்வதிட்டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட சமானவாயு மேற்சொல்லிய கிரியைகளைச் செய்யும். இதுவன்றி உப வாயுக்க ளைந்தும் இதற்குள் அந்தர்ப் பூதமா யிருக்கின்றது. தொழில் மாத்திரம் வேறு. அதிதேவதையும் ஸ்தானமு மொன்றாயிருக்கும்.

ச. அந்த வாயுக்களாவன யாவை?

உ. நாகன் கூர்மன் கிரிகரன் தேவதத்தன் தனஞ்சயன் என்று பஞ்சவாயுக்களாம். அவற்றுள் வாந்தி செய்விப்பது நாகன்; விக்கல் ஏப்பம் இமைப்பு விழிப்புகளைச் செய்விப்பது கூர்மன்; தும்ம லிருமலைச் செய்விப்பது கிரிகரன்; சிரித்தல் வசனித்தலைச் செய்விப்பது தேவதத்தன்; தூர்க்கந்தமாக்கிச் சரீரத்தை வீங்கப்பண்ணித் தலையை வெடிக்கச்செய்வது தனஞ்சயனும்.

ச. அந்தக்கரண சதுட்டயத்தில் மனமாவது யாது?

உ. சங்கற்ப விகற்பம் எதனுற் பண்ணப்படுகின்றனவோ, அதுவே மனம்.

ச. அது எங்கே யிருக்கும்?

உ. கண்டத்தின் கீழே இருக்கும். அதற் கதிட்டான தேவதை சந்திரன். அவ்வதிஷ்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்ட மனஞ் சங்கற்ப விகற்பம் பண்ணிக்கொண்டிருக்கும்.

ச. புத்தியாவது யாது?

உ. எதனுல் நிச்சயஞ் செய்யப்படுகிறதோ, அதுவே புத்தி.

ச. அது எங்கே யிருக்கும்.

உ. முகத்தி லிருக்கும். அதற் கதிட்டான தேவதை சதுர்முகன். அவ்வதிஷ்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்ட புத்தி நிச்சயம் பண்ணிக்கொண்டிருக்கும்.

ச. அகங்காரமாவது யாது?

உ. எதனுல் அபிமானம் செய்யப்படுகிறதோ, அதுவே அகங்காரம்.

ச. அது எங்கே யிருக்கும்?

உ. இருதயத்திலிருக்கும். அதற் கதிஷ்டானதேவதை ருத்திரன், அவ்வதிஷ்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்ட அகங்காரம் அபிமானம் பண்ணிக்கொண்டிருக்கும்.

ச. சித்தமாவது யாது?

உ. எதனுல் சிந்தனை செய்யப்படுகிறதோ அதுவே சித்தம்.

ச. அது எங்கே யிருக்கும்?

உ. நாபிப் பிரதேசத்தி லிருக்கும். அதற் கதிஷ்டான தேவதை விஷ்ணு. அவ்வதிஷ்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்ட சித்தம் சிந்தனை பண்ணிக்கொண்டிருக்கும். அதுவுமன்றி இந்த இலிங்க சரீரம் ஷோடசாத்மகனென்று ஒருசுருதியிற் சொல்லுகிறது. அந்தப்பட்சத்தில் அந்தக்கரணம் ஐந்துள் ஒன்றுமாத்திரமேயாகும். பதினேழென்று ஒரு சுருதியிற் சொல்லுகின்றது. அந்தப்பட்சத்தில் மனமுஞ் சித்தமும் ஒன்றென்றும், புத்தியும் அகங்காரமும் ஒன்றென்றுமாகும். பத்தொன்பதென்று ஒருசுருதியிற்சொல்லுகிறது. அந்தப்பட்சத்தில் அந்தக்கரணங்கள் நாலையுஞ்சொல்லுவதாகும். அப்படி எத்தனைவிதமாகச் சொன்னாலும் விரோதமில்லை. இப்படிப் பதினேழுவித காரியங்களினுற் பதினேழு அவயவமான இலிங்க சரீர முண்டென்று நிச்சயிக்கப்பட்டது.

ச. காரண சரீர முண்டென் றெப்படி யறிகிறது?

உ. காரியமான ஸ்தூல சூட்சும சரீரங்கள் காணப்படுகிறபடியினால், இவைகளுக்குக் காரண மொன் றுண்டென்று யூகித்தறிய வேண்டியது.

ச. காரியத்தினால் காரணத்தை யூகித்தறியலாமோ?

உ. காரியமான புகையினாற் காரணமான அக்கினி யுண்டென்று யூகித்தறிவதுபோல, காரியமான ஸ்தூல சூட்சும சரீரங்களினாற் காரணமான சரீரமுண்டென்று யூகித் தறியலாம். அல்லாமலும் அகம் அஞ்ஞானி யென்று பிரத்தியட்சமாய் அனுபவிக்கிறபடியினாற் காரண சரீர முண்டென்று நிச்சயிக்கலாம்.

ச. இப்படி நிச்சயம் பண்ணினபிறகு என்ன செய்யவேண்டும்?

உ. ஆத்மாவுக்குச் சரீரத்திரய விலட்சணத்துவம் எப்படி யென்று விசாரிக்க வேண்டும்.

ச. ஆத்மாவுக்குச் சரீரத்திரய விலட்சணமாவது யாது?

உ. ஆத்மலட்சணஞ் சரீரத்திரயத்திலும், சரீரத்திரயலட்சணம் ஆத்மாவிலு மில்லாதிருக்கிறதே சரீரத்திரய விலட்சணமாம்.

ச. ஆனால் ஆத்ம லட்சணமாவது யாது?

உ. சத்து சித்து ஆனந்தமே யாத்ம லட்சணம்.

ச. அனாத்ம லட்சணமாவது யாது?

உ. அசத்து சடம் துக்கமே யனாத்ம லட்சணம்.

ச. இந்த லட்சணங்களுக் கன்னியோன்னிய விலட்சண முண்டோ?

உ. உண்டு. திருஷ்டாந்தத்தில் ஸ்திரீலட்சணம் புருஷனிடத்திலும், புருஷலட்சணம் ஸ்திரீயினிடத்திலு மில்லாததுபோற் சத்துலட்சணம் அசத்திலும், அசத்துலட்சணஞ் சத்திலுமில்லை. பிரகாசலட்சணம் அந்தகாரத்திலும், அந்தகார லட்சணம் பிரகாசத்திலு மில்லாததுபோலச் சித்துலட்சணஞ் சடத்திலுஞ் சடலட்சணஞ் சித்திலுமில்லை. சந்திரலட்சணஞ் சூரியனிலும், சூரியலட்சணஞ் சந்திரனிலு மில்லாததுபோல ஆனந்தலட்சணந் துக்கத்திலும், துக்கலட்சணம் ஆனந்தத்திலு மில்லை. இப்படிச் சச்சிதானந்தத் துக்கும், அசத்து சடந் துக்கத்துக்கும் அன்னியோன்னிய விலட்சணத்துவமாகச் சத்துலட்சணமும், அசத்துலட்சணமும்; சித்துலட்சணமும், சடலட்சணமும்; ஆனந்தலட்சணமும், துக்கலட்சணமு முள்ளன. இவைகளை விசாரித்தறியாமல் ஆத்மாவின் அன்னியோன்னிய விலட்சணத்துவத்தை அறியக்கூடாது.

ச. சத்து லட்சணமாவது யாது?

உ. ஒன்றினாலும் வாதிக்கப்படாமல் பூத பவிஷ்ய வர்த்தமான காலங்களிலும் ஏகரூபமா யிருக்கிற தெதுவோ அதுவே சத்து லட்சணம்.

ச. அசத்து லட்சணமாவது யாது?

உ. காலத்திரயத்திலும் இல்லாததாயிருந்துந் தோற்றிக்கொண்டு, ஒன்றினால் வாதிக்கப்பட்டுப் போகிறது எதுவோ, அதுவே அசத்து லட்சணமாம்.

ச. இதற்குத் திருஷ்டாந்தம் எப்படி?

உ. பழுதையும், பழுதையினிடத் தாரோபிக்கப்பட்ட பாம்புமேயாம். பழுதையினிடத் தாரோபிக்கப்பட்ட சர்ப்பமுதலான பய பீதிகளாகிற ஒன்றினுலும் அந்தப் பழுதை வாதிக்கப்படாமல், பிராந்திகாலத்திலும் பிராந்திக்குப் பூர்வகாலத்திலும் பிராந்தி போனகால்த்திலும் ஏகரூபமாயிருந்ததே சத்துலட்சணம். தானில்லாதிருந்துந் தோற்றிக்கொண்டு ஒன்றினுல் வாதிக்கப்பட்டுப் போகிறதே அசத்துலட்சணம். இது சர்ப்பத்தினிடத்தி லுண்டு. பழுதை லட்சணம் பாம்பினிடத் தில்லாதபடியினுலும், பாம்புலட்சணம் பழுதையினிடத் தில்லாதபடியினுலும் அந்தப் பாம்பு பழுதைகளுக்குச் சத்தத்தினுலும் அர்த்தத்தினுலும் லட்சணத்தினுலும் உபமானத்தினுலும் விவகாரத்தினுலும் பேதலட்சண முண்டாயிருப்பதுபோலச் சத்துலட்சணம் தேகேந்திரியாதிப் பிரபஞ்சத்தினிடத்தி லில்லாதபடியினுலும், அசத்துலட்சணஞ் சத்தான ஆத்மாவினிடத்தி லில்லாதபடியினுலும் சத்துக்கும் அசத்துக்கும் சத்தத்தினுலும் அர்த்தத்தினுலும் லட்சணத்தினுலும் உபமானத்தினுலும் விவகாரத்தினுலும் பேதமுண்டு.

ச. இதனுல் என்ன சித்தித்தது?

உ. சத்தென்ற சத்தம் அசத்தென்ற சத்த மாகாது; அசத்தென்ற சத்தம் சத்தென்ற சத்தமாகாது. சத்தினுடைய சத்தார்த்தம் அசத்தினுடைய சத்தார்த்தமாகாது. அசத்தினுடைய சத்தார்த்தம் சத்தினுடைய சத்தார்த்த மாகாது. சத்தினுடைய லக்ஷணம் அசத்தினுடைய லட்சணமல்ல; அசத்தினுடைய லட்சணம் சத்தினுடைய லட்சண மல்ல. சத்தினுடைய வுபமானம் அசத்தினுடைய வுபமானமல்ல; அசத்தினுடைய வுபமானம் சத்தினுடைய வுபமானமல்ல. சத்தினுடைய விவகாரம் அசத்தினுடைய விவகாரமல்ல; அசத்தினுடைய விவகாரம் சத்தினுடைய விவகாரமல்ல. ஆகையினுல் சத்துரூபமான ஆத்மாவுக்கும், அசத்துருபமான தேகேந்திரியாதிப் பிரபஞ்சத்திற்கும் பழுதையும் பாம்பும்போல ஐந்துவகையினுலுங் காலத்திரயத்திலும் அன்னியோன்னிய பேத லக்ஷணஞ் சித்தித்தது.

ச. சித்து லட்சணமாவது யாது?

உ. ஒருசாதனத்தையும் அபேட்சியாமல் தானுந் தோற்றிக்கொண்டு, தன்னிடத்தில் ஆரோபிக்கப்பட்ட பதார்த்தங்களையுந் தோற்றிவைக்கிறது எதுவோ, அதுவே சித்து லட்சணம்.

ச. சட லட்சணமாவது யாது?

உ. தானுந் தோற்றுமல் அன்னிய வஸ்துவையுந் தோற்றிவையாமல் இருப்பது எதுவோ, அதுவே சடலட்சணமாம்.

ச. இதற்குத் திருட்டாந்தம் எப்படி?

உ. ஆதித்தன் பிரகாசாந்தரங்களை யபேட்சியாமல் தானுந் தோற்றிக்கொண்டு, தற்பிரகாசத்தைச் சம்பந்தித்திருக்கிற கடங்களையுந் தோற்றிவைப்பதே திருஷ்டாந்தம். தானுந் தோன்றுமல் அன்னியவஸ்துவையுந் தோற்றிவைக்க மாட்டாதபடியினுல், கடத்தினிடத்தில் அப்பிரகாச லட்சண முண்டு. ஆதித்த லட்சணங் கடத்தி லில்லாதபடியினுலுங்

சடலட்சணம் ஆதித்தனிடத்தி லில்லாதபடியினாலும் ஆதித்தனுக்குங் கடத்துக்குஞ் சத்தம் அர்த்தம் லட்சணம் உபமானம் விவகாரமென்கிற ஐவகையினாலும் பேத லட்சண முண்டானதுபோல, சித்துலட்சணம் சடமான தேகேந்திரியாதிப் பிரபஞ்சத்தினிடத்திலும், சடலட்சணஞ் சித்தாகிற ஆத்மாவினிடத்திலு மில்லை. ஆனபடியினால் சித்துக்குஞ் சடத்துக்கும் முன்சொன்ன ஐவகையினாலும் பேத லட்சண முண்டு.

ச. இதனா லென்ன சித்தித்தது?

உ. அப்பிரகாச சுபாவமான சடவிகாரத்தினால் சொப்பிரகாச சித்தாகிய ஆத்மாவுக்குக் காலத்திரயத்திலும் சம்பந்த மில்லையென்று அன்னியோன்னிய பேத லட்சணஞ் சித்தித்தது.

ச. அது எப்படி?

உ. பிரகாசத்தினால் விளங்கப்பட்ட கட சுபாவமான விகாரங்கள் சித்திர அசித்திரத்தினாலும், நஷ்டலாபத்தினாலும், உற்பத்தி அனுற்பத்தியினாலும், அற்புதம் அனற்புதத்தினாலும், பிரத்திவாய அப்பிரத்திவாயத்தினாலும், உத்தம மத்திமத்தினாலும், இன்ப துன்பத்தினாலும், சமானம் அசமானத்தினாலும், அதிசயம் அனதிசயத்தினாலும் பிரகாசனான ஆதித்தனை யெப்படி பரிசிக்கவில்லையோ அப்படிப்போல அப்பிரகாச தேக சுபாவமான விகாரங்களும், குண தர்ம சாதி நாம வர்ணாசிரமாதிக் கிரியைகளும், கர்த்துருத்வபோக்துருத்வங்களும், காமக்குரோதங்களுந் தேகேந்திரியாதிகளுக்கே யல்லாமல் தேகேந்திரியாதிகளுக்குச் சாட்சியான சித்துருபஆத்மாவை லேசமும் பரிசிக்கவில்லையென்று சித்தித்தது.

ச. ஆனந்த லட்சணமாவது யாது?

உ. சுக சொரூபமே யானந்த லட்சணம்.

ச. துக்க லட்சணமாவது யாது?

உ. தாபத்திரயாத்மகமே துக்க லட்சணம்.

ச. இதற்குத் திருஷ்டாந்தம் எப்படி?

உ. புதுப்பானையிலிருக்கிற குளிர்ந்த ஜலமும், வெண்கலப்பானையிலிருக்கிற புளிய நெருப்புமே திருஷ்டாந்தம்.

ச. ஜலத்தி லானந்த லட்சண மிருக்கின்றதா?

உ. வெய்யிலி லடிபட்டுத் தபிக்கப்பட்ட புருஷன் அந்தக் குளிர்ந்த நீர்ப் பானையைத் தொட்டுக் கண்ணி லொற்றிக் கொண்டமாத்திரத்தில் அவனுடைய தாபம் நிவிர்த்தியாகின்றது. அது சாட்சாத் ஜலமல்ல. அந்தஜலத்தின் ஆவேச மாத்திரத்துக்கே தாபம் நிவிர்த்தியாவது பிரத்தியட்சமாகக் கண்டோம். அந்தஜலத்தையே பானம் பண்ணினாற் சகல தாபங்களும் போமென்பதிற் சந்தேகமில்லை. ஆகையினால் அந்தஜலத்தினிடத்தில் ஆனந்த லட்சணம் இருக்கிறது.

ச. புளிய நெருப்பில் துக்க லட்சணம் இருக்கிறதா?

உ. தாக தாபாதிக ளில்லாதவன் புளியநெருப்போடு கூடியிருக்கிற வெண்கலப் பானையைத் தொட்டமாத்திரத்தில் அந்தப் பானையின் உஷ்ணம் சுபாவத்தினால் அதைத் தொட்டவனுக்குத் தாபாதிகளைக்கொடுத்துக் கையெல்லாம் கொப்புளிக்கச் செய்கின்றது. அது சாட்சாத் நெருப்பல்ல. நெருப்பினுடைய ஆவேசமாத்திரமே தாபாதிகளைக் கொடுக்

இன்றதென்று பிரத்தியட்சமாகக் கண்டோம். அந்த நெருப்பையே தொட்டாற் சமஸ்தத்தையும் பஸ்பமாக்கு மென்பது சர்வானுபவ சித்த மாகையினால் அந்தப் புளிய நெருப்பினிடத்தில் துக்க லட்சணம் இருக்கிறது. இதுவுமன்றி வேறு திருஷ்டாந்தமு மிருக்கின்றது.

ச. அஃது யாது ?

உ. அமிர்தமுங் காளகூட விஷமுமே.

ச. அமிர்தத்தில் ஆனந்த லட்சண முண்டோ ?

உ. தான் சுகசொரூபமா யிருந்துகொண்டு தன்னைப் பானம் பண்ணினவர்களுக்கு நிரதிசயமான சுகத்தைக் கொடுக்கிறபடியினால் அமிர்தத்தினிடத்தில் ஆனந்த லட்சண முண்டு.

ச. காளகூடவிஷத்தில் துக்க லட்சண முண்டோ?

உ. தான் தாபாத்மகமா யிருந்து கொண்டு தன்சமீபத்தில் வந்தவர்களை மிகுந்த துக்க ரூபமான பிராணஹானி செய்கிறபடியினால் காளகூட விஷத்தி னிடத்தில் துக்கலட்சண முண்டு. அமிர்த லட்சணங் காள
கூடவிஷத்தி லில்லாதபடியினாலும், காளகூட விஷலட்சணம்அமிர்த...
வில்லாதபடியினாலும், அமிர்தத்திற்குங் காளகூடவிஷத்திற்கும் மு...
சொன்ன ஐந்துவித லட்சணத்தினால் பேத லட்சண மிருக்கிறது.
லட்சணம் நெருப்பினிடத்தில் இல்லாதபடியினாலும், நெருப்புலட்...
ஜலத்தினிடத்தி லில்லாத படியினாலும் ஜலத்துக்கும் நெருப்...
முன்சொன்ன ஐந்துவித லட்சணத்தினால் பேதலட்சண மிருக்...
இப்படியே ஆனந்தலட்சணம் துக்காத்மகமான தேகேந்திரிய...
பாரியாதிப் பிரபஞ்சத்தினிடத்தி லில்லாதபடியினாலும்...
ணம் சுகசொரூபமான ஆத்மாவினிடத்தி லில்லாதபடி...
த்திற்குந் துக்கத்திற்கும் முன்சொன்ன ஐவகையினா...
முண்டு.

ச. இதனா லென்ன சித்தித்தது ?

உ. காளகூட சுபாவமான தாபங்கள் அமிர்தத்தைப் பரிசி...
அக்கினி சுபாவமான தாபங்கள் ஜலத்தைப் பரிசி...
கேந்திரியாதிப் பிரபஞ்ச சுபாவமான தாபத்திரயங்...
ஆத்மாவைப் பரிசிக்கவில்லையென்கிற அன்னிே...
னன்று சித்தித்தது.

ச. ஆனால் இந்த விசாரத்திற்குப் பலம் யாது ?

உ. பழுதையைப்போற் சத்து ரூபனும் ஆதித்தனை
ஜலாமிர்தத்தைப்போல் ஆனந்தசொரூபனுமான
அனுர்த்தமும் கடத்தைப்போற் சடமும் அக்கின...
போல் துக்கசொரூபமுமான தேகேந்திரியாதி...
ட்சணமென் றறிகிறதே பலம். இதுவல்லாம...
திரயத்தினிடத்தில் ஈசுவரனிருந்து கன்மத்தை...
தெரிந்து தன்னுடைய அஞ்ஞானத்தையும் போ...
மேனியா யெழுந்தருளிய சற்குருவினால் சகல...
தன்னை யெப்போதும் நிருமலனாய்ச் சர்வே...

கடலட்சணம் ஆதித்தனிடத்தி லில்லாதபடியினாலும் ஆதித்தனுக்குங் கடத்துக்குஞ் சத்தம் அர்த்தம் லட்சணம் உபமானம் விவகாரமென்கிற ஐவகையினாலும் பேத லட்சண முண்டானதுபோல, சித்துலட்சணம் சடமான தேகேந்திரியாதிப் பிரபஞ்சத்தினிடத்திலும், சடலட்சணஞ் சித்தாகிற ஆத்மாவினிடத்திலு மில்லை. ஆனபடியினால் சித்துக்குஞ் சடத்துக்கும் முன்சொன்ன ஐவகையினாலும் பேத லட்சண முண்டு.

ச. இதனா லென்ன சித்தித்தது?

உ. அப்பிரகாச சுபாவமான சடவிகாரத்தினால் சொப்பிரகாச சித்தாகிய ஆத்மாவுக்குக் காலத்திரயத்திலும் சம்பந்த மில்லையென்று அன்னியோன்னிய பேத லட்சணஞ் சித்தித்தது.

ச. அது எப்படி?

உ. பிரகாசத்தினால் விளங்கப்பட்ட கட சுபாவமான விகாரங்கள் சித்திர அசித்திரத்தினாலும், நஷ்டலாபத்தினாலும், உற்பத்தி அனுற்பத்தியினாலும், அற்புதம் அனற்புதத்தினாலும், பிரத்தியாய அப்பிரத்தியாயத்தினாலும், உத்தம மத்திமத்தினாலும், இன்ப துன்பத்தினாலும், சமானம் அசமானத்தினாலும், அதிசயம் அனதிசயத்தினாலும் பிரகாசனான ஆதித்தனை யெப்படி பரிசிக்கவில்லையோ அப்படிப்போல அப்பிரகாச தேக சுபாவமான விகாரங்களும், குண தர்ம சாதி நாம வர்ணாசிரமாதிக் கிரியைகளும், கர்த்துருத்வபோக்துருத்வங்களும், காமக்குரோதங்களுந் தேகேந்திரியாதிகளுக்கே யல்லாமல் தேகேந்திரியாதிகளுக்குச் சாட்சியான சித்துருபஆத்மாவை லேசமும் பரிசிக்கவில்லையென்று சித்தித்தது.

ச. ஆனந்த லட்சணமாவது யாது?

உ. சுக சொரூபமே யானந்த லட்சணம்.

ச. துக்க லட்சணமாவது யாது?

உ. தாபத்திரயாத்மகமே துக்க லட்சணம்.

ச. இதற்குத் திருஷ்டாந்தம் எப்படி?

உ. புதுப்பானையிலிருக்கிற குளிர்ந்த ஜலமும், வெண்கலப்பானையிலிருக்கிற புளிய நெருப்புமே திருஷ்டாந்தம்.

ச. ஜலத்தி லானந்த லட்சண மிருக்கின்றதா?

உ. வெய்யிலி லடிபட்டுத் தபிக்கப்பட்ட புருஷன் அந்தக் குளிர்ந்த நீர்ப் பானையைத் தொட்டுக் கண்ணி லொற்றிக் கொண்டமாத்திரத்தில் அவனுடைய தாபம் நிவிர்த்தியாகின்றது. அது சாட்சாத் ஜலமல்ல. அந்தஜலத்தின் ஆவேச மாத்திரத்துக்கே தாபம் நிவிர்த்தியாவது பிரத்தியட்சமாகக் கண்டோம். அந்தஜலத்தையே பானம் பண்ணினால் சகல தாபங்களும் போமென்பதிற் சந்தேகமில்லை. ஆகையினால் அந்தஜலத்தினிடத்தில் ஆனந்த லட்சணம் இருக்கிறது.

ச. புளிய நெருப்பில் துக்க லட்சணம் இருக்கிறதா?

உ. தாக தாபாதிக ளில்லாதவன் புளியநெருப்போடு கூடியிருக்கிற வெண்கலப் பானையைத் தொட்டமாத்திரத்தில் அந்தப் பானையின் உஷ்ணம் சுபாவத்தினால் அதைத் தொட்டவனுக்குத் தாபாதிகளைக்கொடுத்துக் கையெல்லாம் கொப்புளிக்கச் செய்கின்றது. அது சாட்சாத் நெருப்பல்ல. நெருப்பினுடைய ஆவேசமாத்திரமே தாபாதிகளைக் கொடுக்

கின்றதென்று பிரத்தியட்சமாகக் கண்டோம். அந்த நெருப்பையே தொட்டாற் சமஸ்தத்தையும் பஸ்பமாக்குமென்பது சர்வானுபவ சித்த மாகையினால் அந்தப் புளிய நெருப்பினிடத்தில் துக்க லட்சணம் இருக் கிறது. இதுவுமன்றி வேறு திருஷ்டாந்தமு மிருக்கின்றது.

ச. அஃது யாது ?

உ. அமிர்தமுங் காளகூட விஷமுமே.

ச. அமிர்தத்தில் ஆனந்த லட்சண முண்டோ ?

உ. தான் சுகசொரூபமா யிருந்துகொண்டு தன்னைப் பானம் பண்ணினவர் களுக்கு நிரதிசயமான சுகத்தைக் கொடுக்கிறபடியினால் அமிர்தத்தினி டத்தில் ஆனந்த லட்சண முண்டு.

ச. காளகூடவிஷத்தில் துக்க லட்சண முண்டோ?

உ. தான் தாபாத்மகமா யிருந்து கொண்டு தன்சமீபத்தில் வந்தவர்களை மிகுந்த துக்க ரூபமான பிராணஹானி செய்கிறபடியினால் காளகூட விஷத்தி னிடத்தில் துக்கலட்சண முண்டு. அமிர்த லட்சணங் காள கூடவிஷத்தி லில்லாதபடியினாலும், காளகூட விஷலட்சணம்அமிர்தத்தி லில்லாதபடியினாலும், அமிர்தத்திற்குங் காளகூடவிஷத்திற்கும் முன் சொன்ன ஐந்துவித லட்சணத்தினால் பேத லட்சண மிருக்கிறது. ஜல லட்சணம் நெருப்பினிடத்தில் இல்லாதபடியினாலும், நெருப்புலட்சணம் ஜலத்தினிடத்தி லில்லாத படியினாலும் ஜலத்துக்கும் நெருப்புக்கும் முன்சொன்ன ஐந்துவித லட்சணத்தினால் பேதலட்சண மிருக்கிறது. இப்படியே ஆனந்தலட்சணம் துக்காத்மகமான தேகேந்திரியாதி புத்திர பாரியாதிப் பிரபஞ்சத்தினிடத்தி லில்லாதபடியினாலும், துக்க லட்ச ணம் சுகசொரூபமான ஆத்மாவினிடத்தி லில்லாதபடியினாலும் ஆனந்த த்திற்குந் துக்கத்திற்கும் முன்சொன்ன ஐவகையினாலும் பேதலட்சண முண்டு.

ச. இதனா லென்ன சித்தித்தது ?

உ. காளகூட சுபாவமான தாபங்கள் அமிர்தத்தைப் பரிசியாததுபோலும் அக்கினி சுபாவமான தாபங்கள் ஜலத்தைப் பரிசியாததுபோலும் தே கேந்திரியாதிப் பிரபஞ்ச சுபாவமான தாபத்திரயங்கள் சுகசொரூபமான ஆத்மாவைப் பரிசிக்கவில்லையென்கிற அன்னியோன்னிய பேத லட்ச ணஞ் சித்தித்தது.

ச. ஆனால் இந்த விசாரத்திற்குப் பலம் யாது ?

உ. பழுதையைப்போற் சத்து ரூபனும் ஆதித்தனைப்போற் சித்து ரூபனும் ஜலாமிர்தத்தைப்போல் ஆனந்தசொரூபனுமான நான்:பாம்பைப்போல் அனுர்தமும் கடத்தைப்போற் சடமும் அக்கினி காளகூட விஷத்தைப் போல் துக்கசொரூபமுமான தேகேந்திரியாதிப் பிரபஞ்சத்திற்கு வில ட்சணனென் றறிகிறதே பலம். இதுவல்லாமல் முன்சொன்ன சரீரத் திரயத்தினிடத்தில் ஈசுவரனிருந்து கன்மத்தை யசைப்பிக்கிற விதமுந் தெரிந்து தன்னுடைய அஞ்ஞானத்தையும் போக்கடித்து, அருளே திரு மேனியா யெழுந்தருளிய சற்குருவினால் சகல வுபாதிகளையுங் கழித்துத் தன்னை யெப்போதும் நிருமலனாய்ச் சர்வோபாதி ரகிதனாய்ச் சகல

வுபாதிகளுக்குஞ் சாட்சி மாத்திரமாய் எவன் விசாரித் தறிகிறானோ, அவனே சீவன்முத்தனென்றும் பரமுத்தனென்றும் சகல சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்களும் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

ஒன்பதாவது சரீரத்திரய விலக்ஷண நிரூபகம் முற்றிற்று.

பத்தாவது

# அவஸ்தாத்திரயசாட்சித்வ நிரூபகம்.

சங்கை: அவஸ்தாத்திரயமாவது யாது?

உத்தரம்: சாக்கிர சொப்பன சுழுத்தியாம்.

ச. சாக்கிராவஸ்தையாவது யாது?

உ. சகல இந்திரியங்களிலும் கர்த்ருத்வ போக்த்ருத்வ பாகியார்த்த ஞான மெம்மட்டிருக்கிறதோ, அம்மட்டுஞ் சாக்கிரமாம்.

ச. சொப்பனாவஸ்தையாவது யாது?

உ. இந்திரியங்களினால் பாகியார்த்தஞானம் வராமல் மனமே விஷயாகார மாகப் பரிணமித்துக் கர்த்ருத்வாகாரமா யெந்தமட்டுந் தோற்றுகிறதோ அந்தமட்டுஞ் சொப்பனமாம்.

ச. சுழுத்தி யவஸ்தையாவது யாது?

உ. இந்திரியங்களிற் பாகியார்த்தஞானமும் வாராமல், மனது கர்த்ருத்வா காரமாய்ப் பரிணமித்து விஷயாகாரமாயுந் தோற்றாமல் எந்தமட்டு மிருக்கிறதோ அந்தமட்டுஞ் சுழுத்தியாம்.

ச. ஆத்மாவுக் கவஸ்தாத்திரய சாட்சித்வமாவது யாது?

உ. அவஸ்தாத்திரயங்களிற் கூடியிருந்துங் கூடாமல் அவஸ்தாத்திரயத்தை யும், அவஸ்தாத்திரய வியாபாரத்தையும், அவஸ்தா வாசனையையு மறிந்து கொண்டிருப்பதே சாட்சித்வமாம்.

ச. இந்தச் சாட்சித்வத்திற்குத் திருஷ்டாந்தம் எப்படி?

உ. கோயிலிற் சபம் பண்ணிக் கொண்டிருக்குந் தேவதத்தனுடைய சந்நி தானத்தில் கடன் கொடுத்து வாங்கிக்கொண்ட புருஷரிருவரும் வந்து ஒரு முகூர்த்தஞ் சடம் பண்ணிக்கொண்டிருந்து, பிற்பாடு சற்றுநேரங் கழித்து அவ்விருவரில் கடன் கொடுத்தவன் வாங்கினவனைக் கேட்க, அவன் காலாந்தரங் கொடுக்கிறேனென்று சொல்ல, இப்படி யன்னி யோன்னியமா யொரு முகூர்த்தமட்டுஞ் சம்வாதம் பண்ணி, பிற்பாடு அந்தக் கடன்கொடுத்தவன், வாங்கினவனைக் கடினமாய்க்கேட்க, அவ னில்லையென்றுசொல்ல,இப்படி யொருமுகூர்த்தமட்டும் அன்னியோன் னிய கலகம் பண்ணிப், பிற்பாடு அவர்களிருவருமாய் அரசனிடத்திற் போய்“கடன்கேட்டாலடித்தா”னென்று பிரியாது செய்ய “அவனே யடித்தா” னென்று கடன்வாங்கினவன்சொல்ல, இந்த அந்நியோன்

ளிய வெதிருத்தவாக்கியங்களை யாசன்கேட்டு, இதற்குச்சாட்சியுண்டோ
வென்றும் இவ்விருவர் சம்வாதத்திற்கு எவன் சாட்சியா யிருந்தானோ
அவனு மிவர்கள் சம்வாதம் வெளிப்படுமென்றுங் கண்டிருந்ததுபோல
அவஸ்தாத்திரய சாட்சித்வ மிருக்கின்றது.

ச. அதெப்படி?

உ. அந்தச் சம்வாதிக ளிருவரு மெந்தமட்டு மவுனமா யிருந்தார்களோ, அந்த
மட்டுஞ் சுழுத்தி யவஸ்தைக்குத் திருஷ்டாந்தம். அவ் வவஸ்தையில்
வியாபாரத் திரயங்களில்லை. மௌனமாயிருந்த விருவரும் அவஸ்தாவா
சிகளா யெந்தமட்டுஞ் சவுசன்னியமாய்ச் சம்வாதம் பண்ணினார்களோ,
அந்தமட்டுஞ் சொப்பனவவஸ்தைக்குத் திருஷ்டாந்தம். அவ்வவஸ்தையில்
வியாபாரத்திரயங்க ளுண்டு.

ச. வியாபாரத்திரயமாவது யாது?

உ. அஸ்த சலனங் காயக வியாபாரம்; அன்னியோன்னிய சம்பாஷணை
வாசக வியாபாரம்; உத்தரப்பிரத்யுத்தர சிந்தனையே மானசவியாபாரம்;
மிருது பாஷிகளாகிய விருவருமே யவஸ்தா வாசிகள். இவர்க ளெந்த
மட்டுங் கலகம் பண்ணிக்கொண்டிருந்தார்களோ அந்தமட்டுமே சொப்ப
னவஸ்தை.

ச. சாக்கிராவஸ்தைக்குத் திருட்டாந்தம் யாது?

உ. அன்னியோன்னிய அடிகள் காயக வியாபாரம். அன்னியோன்னிய
பவுருஷ வசனங்கள் வாசகவியாபாரம். அன்னியோன்னிய மர்மசிந்தை
கள் மானச வியாபாரம். இப்படிக் கலகம் பண்ணின இருவருமே
யவஸ்தாவாசிகள். மத்தியஸ்தனாகிய தேவதத்த னிவர்கள் கலகத்தைப்
பார்த்துக் கொண்டிருந்தவனானபடியால் அவஸ்தாத்திரயங்களுடன் கூடி
யுங் கூடாமலிருந்துகொண்டு அவஸ்தாத்திரயத்தையும் அவஸ்தாத்திரய
வியாபாரத்தையும் அவஸ்தாத்திரய வாசகரையு மறிந்தபடியால் அந்த
மத்தியஸ்த தேவதத்தனிடத்திற் சாட்சித்வ மிருக்கின்றது.

ச. சாட்சித்துவத்திற் கித்தனை விசேஷம் வேண்டுமா?

உ. வேண்டும்.

ச. ஆனால், தாஷ்டாந்தத்தில் சாட்சியான ஆத்மாவினிடத்திலும்
இத்தனை விசேட முண்டோ?

உ. அவஸ்தாத்திரயத்துடன் கூடியுங் கூடாம லிருப்பதும், அவஸ்தாத்திரய
வியாபாரமும், அவஸ்தாத்திரய வாசகரை யறிந்திருப்பதுமாகிய விசேடம்
சாட்சியாகிய ஆத்மாவினிடத்தி லுண்டு.

ச. தாஷ்டாந்தத்தில் அவஸ்தாத்திரயமாவது யாது?

உ. சாக்கிர சொப்பன சுழுத்திகளே யவஸ்தாத்திரயமாம்.

ச. சாக்கிரமாவது யாது?

உ. நித்திரைவிட் டெழுந்ததுமுதல் நித்திரை வருகிறபரியந்தமுஞ் சாக்கிர
மென்று சொல்லப்படும்.

ச. இதற்குத் திருட்டாந்தம் எப்படி?

உ. விசாலமாகிய பட்டணத்தைப்போற் சாக்கிராவஸ்தை; அந்தப் பட்ட
ணத்திற் பிராமண க்ஷத்திரிய வைசிய சூத்திர வீதிகள்போற் காயக வாசக

மானச வியாபாரங்கள்; அப்பட்டணத்தில் வரப்பட்ட ஆனி விருத்திகளுக்கு அபிமானியாகிய பிரபுவைப்போற் சுக துக்கத்திற் றபிக்கின்ற சாக்கிராவஸ்தா வாசனுன விசுவன்.

ச. சொப்பனமாவது யாது?

உ. நித்திரை காலத்திற் சாக்கிர வாசனை மயமாகிய மனதினுற் கற்பிக்கப்பட்ட பிரபஞ்சத்தினிடத்திற் பிராதிபாதிக சீவன் எம்மட்டும் விவகரிக்கிருனே அம்மட்டுஞ் சொப்பன மென்னப்படும்.

ச. இதற்குத் திருஷ்டாந்த மெப்படி?

உ. மேற்சொல்லிய பட்டணத்திலிருக்குங் கோட்டையைப்போற் சொப்பனம்; அக்கோட்டையிலிருக்கும் பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திர வீதிகள்போல் காயக வாசக மானச வியாபாரம்; அக்கோட்டையில் வரப்பட்ட ஆனி விருத்திகளுக் கபிமானியாகிய பிரபுவைப்போல் சுக துக்கத்திற் றபிக்கின்ற சொப்பனுவஸ்தா வாசனுகிய தைசதன்.

ச. சுழுத்தியாவது யாது?

உ. பாகிய வியாபாரமும், அந்தர் வியாபாரமும், தேகேந்திரிய வியாபார பிரஞ்ஞையுமில்லாமல் சீவன் நிர்ச்சேஷ்டிதனுகி யெந்தமட்டும் நித்திரை செய்கிருனே, அந்தமட்டுஞ் சுழுத்தியவஸ்தையென்று சொல்லப்படும்.

ச. இதற்குத் திருட்டாந்தம் எப்படி?

உ. கோட்டையி லிருக்கிற வீட்டைப்போற் சுழுத்தி யவஸ்தை; அந்த வீட்டில் பிரம க்ஷத்திரியாதி வீதிக ளெப்படி யில்லையோ, அப்படியே காயக வாசக மானச வியாபாரங்க ளில்லை. அந்தவீட்டில் வருகிற ஆனி விருத்திகளுக் கபிமானியாகிய பிரபுவைப்போல் நிசானந்தத்தை யனுபவிக்கப்பட்ட சுழுத்தி யவஸ்தா வாசனுகிய பிராஞ்ஞன்.

ச. ஆனு லிவ்வவஸ்தைகளைக்குறித்து ஆத்மாவுக்குச் சாட்சித்துவ மெப்படி?

உ. நேற்றைய ஜாக்கிராவத்தையையும், அதிற் செய்யுங் காயக வாசக மானச வியாபாரங்களையும், அவ்வவத்தா வாசனையையும், நேற்றைய சொப்பனுவத்தையையும், அதிற் செய்யுங் காயக வாசக மானச வியாபாரங்களையும், அவ்வவத்தா வாசனையையும், நேற்றைய சுழுத்தி யவஸ்தையையும், அதிற் சர்வாத்மனு யொருவியாபாரமும் பண்ணவில்லையென்பதையும், அவ்வவத்தா வாசனையும் இன்றைக்கு நாம்காணுகிறபடியினுல், ஆத்மாவுக்குச் சாட்சித்வ முண்டென்பதிற் சந்தேக மில்லை.

ச. ஆனுல் இது ஸ்மரணையோ? அல்லது அனுபவமோ?

உ. ஸ்மரணை யென்றே சொல்லவேண்டும்.

ச. அனுபவ மென்று ஏன் சொல்லக்கூடாது?

உ. இப்போது அந்தவிஷய ஜன்னீகரிஷ்ண மில்லாதபடியினுல் அனுபவ மென்று சொல்லக்கூடாது. ஸ்மரணை யென்றே சொல்லவேண்டும்.

ச. ஆனுல் இந்த ஸ்மரணை அனுபூத வத்து விஷயமாய் வருகிறதோ, அனனுபூத வத்து விஷயமாய் வருகிறதோ?

உ. அனனுபூத வத்து விஷயமாகவே வருகிறது.

ச. அநுபூத வஸ்துவிஷயமாய் வருகிறதென்று ஏன்சொல்லப்படாது?

உ. பிரபஞ்ச வியாபாரமெல்லாம் நம்மாலேயே ஸ்மரிக்கப் படவேண்டும்; அங்ஙன மில்லாமையினுல் ஸ்மரணையெல்லாம்அனநுபூத வஸ்து விஷயமென்றே சொல்லவேண்டும்.

ச. ஆனுல் இது யாரால் அநுபவிக்கப்படுகிறது ?

உ. நம்மால் அநுபவிக்கப்படுகிறது.

ச. ஆனுல் நாம் கூடி யிருந் தநுபவித்தோமோ ? கூடாதிருந் தநுபவித்தோமோ ?

உ. கூடியிருந்தே யநுபவித்தோம்.

ச. கூடாதிருந் தநுபவித்தோமென்று ஏன் சொல்லப்படாது?

உ. சொர்க்காதிகளிலிருக்கும் விஷயத்தையும் நாமெப்போதும் அநுபவிக்க வேண்டும். அங்ஙன மில்லாதபடியால் அப்படிச் சொல்லக் கூடாது. கூடியிருந்தே யவத்தைகளையும், அவத்தா வியாபாரங்களையும், அவத்தா வாசரையும் அநுபவித்தோமென்று சொல்லவேண்டும்.

ச. ஆனுற் கூடாம லிருப்ப தெப்படி ?

உ. நேற்றைய ஜாக்கிர சொப்பன சுழுத்திகளும், அவ்வவ்வவத்தா வியாபாரங்களும், அவத்தாவாசிகளும் நசித்துப்போயும் நாமிருப்பதினுல் நாம் அவ்வவஸ்தைகளிற் கூடவில்லை. கூடினுமே யாயின் நாமும் நசித்துப் போகவேண்டும்.

ச. கூடியிருந்தால் நசித்துப் போகவேண்டு மென்பது எப்படி ?

உ. வஸ்திராதிகளிற் கூடியிருக்கிற சித்திராதிகள்: வஸ்திராதிகள் நசித்துப் போனுற் சித்திராதிகளும் நசித்துப் போவதுபோல, நாமுங் கூடி யிருந்தால் நசித்துப் போகவேண்டும். ஆகையால் நாம் அவத்தாத்திரயங்களுடன் கூடாமலிருந்து அவ்வவஸ்தைகளையும், அவத்தா வியாபாரங்களையும், அவத்தாவாசிகளையும் அறிகிறோம். ஆதலால் சாக்ஷித்துவம் நம்மிடத்தி லிருக்கின்றது.

ச. ஆனுல் நாமே யவத்தாத்திரயங்களுக்குச் சாட்சியானுல் தேவரீர் வாக்கியப்படியே யவஸ்தாதிகளை யறிகிறவன் சாட்சியாமே. அவத்தாவாச னல்லவோ அவத்தாதிகளையும் அவத்தா வியாபாரங்களையும் அறிகிறுன். ஆதலால் அவ்வவஸ்தா வாசனுக்கே சாட்சித்வஞ் சித்தித்திருக்கிறது. இப்படியிருக்க அவஸ்தா வாசனுக்குச் சாட்சித்வமில்லை, அவனுக் கன்னிய வெதிருத்தனுக்கே சாட்சித்வ முண்டென் றெப்படிச் சொல்லலாம் ?

உ. பாஹ்யமான விருட்சாதிகளைப்போலும், அந்தரான தேகாதிகளைப்போலும் அவஸ்தா வாசன் விகாரியா யிருக்கிறுன். ஆதலால் விருக்ஷாதிகளுக்குந் தேகாதிகளுக்கும் அன்னிய பதார்த்த அவபாசக ரூபமாகிய சாட்சித்துவமில்லாததுபோல விகாரியாகிய அவஸ்தா வாசனுக்கும் அவஸ்தைக்கும் அவஸ்தா வியாபாரங்களுக்கும் அவபாசக ரூபமான சாட்சித்வ மில்லை.

ச. ஆனால் இவன் விகாரியா யிருக்கிறானே ?

உ. ஆம்; விகாரியாகவே நேற்றைக் கெந்தச் சுக துக்கத்துடன் தபித்தானே, அப்படியே யின்றைக் கிராமல் அதைப்பார்க்கிலும் அதிகங் குறைச்சலாகிய சுக துக்கங்களுடன் கூடித் தபிக்கிறா னாதலால் விகாரத்துவமே யிருக்கிறது.

ச. இவனுக்கன்னியமாக ஒன்றையும் காணேமே. சாட்சியுண்டென எப்படி அறிகிறது ?

உ. இந்த அவஸ்தாவாசன் நேற்றைக் கெந்தச் சுகத்துடன் கூடியிருந்தானோ அப்படியே யிராமல், இன்று நூதனமாகிய சுக துக்கங்களுடன் கூடி யனுபவித்தானென்று எவன் அந்த அவஸ்தாவாசனது விகாரங்களை யறிகிறானோ, அவனே அவஸ்தாவாசனுக் கன்னியமான சாட்சியென் றறியலாம்.

ச. ஆனால் நிர்விகாரனாகிய ஆத்மா நான் என்றும், சாட்சியென்றும் அறிய வில்லையே; விகாரியான அவஸ்தா வாசனல்லவோ அறிகிறான்? ஆதலால் நிர்விகாரனாகிய ஆத்மாவே சாட்சியென் றெப்படி யறிகிறது ?

உ. கண்ணாடியைப் பார்க்கிறபோது சுபாவமான முகம் அதிற் பிரதிபிம்பித்து அந்தப் பிரதிபிம்பவழியாகவே தனது சுபாவ முகத்தின் சவுந்தரிய ரூபாதிகளை யறிவதுபோல, நிர்விகாரமாகிய ஆத்மாவும் அந்தக்கரணத்திற் பிரதிபலித்து அந்தப் பிரதிபலன வழியாகவே கர்த்தாவாயிருந்து சுருதி சாஸ்திராதி விசாரஞ்செய்து, விகாரமாகிய பிரதிபலனந் தானல்லவென்று நிச்சயித்து, அந்தப் பிரதிபலனவழியே தான் நிருவிகாரனாகிய பரிபூரணனென்றும், தான் பிரமமென்றும், தான் சாட்சியென்றும், தனது விலட்சணாதிகளை யறிகிறான். இந்தத் திருஷ்டாந்தத்திற் றிரிசியமான கண்ணாடியும் அதிற் றிரிசியமாய்ப் பிரதிபலித்த ஆபாச முகமும் சுபாவமுகத்தின் சவுந்தரிய ரூபாதிகளை எப்படி யறிய வில்லையோ, அப்படியே திரிசிய விகாரமான அந்தக்கரணமும் அதிற் பிரதிபலித்த திரிசிய விகாரியாகிய சிதாபாசனுந் தனது சொரூபமான அதிட்டான ஆத்ம சுபாவ சாட்சித்வ நிர்விகார பரிபூரணத்வ சொரூபத்தை யறிய வில்லை. ஆகையினால் நிர்விகார ஆத்மா சுதாவாய் நான் சாட்சி யென் றறியாதிருந்தபோதும் விகார அவஸ்தாவாசன் நான் சாட்சியென் றறிந்தவனைப் போன் றிருந்தபோதும் விகாரியாகிய அவஸ்தாவாசனுக்குச் சாட்சித்வங் கூடாது. நிர்விகார ஆத்மாவுக்கே சாட்சித்வங் கூடும். அந்தச் சாட்சித்வ லட்சணம் நம்மிடத் திருப்பதால் நாம் சாட்சி யென்பதிற் சந்தேக மில்லை.

ச. நமக்கு இந்தச் சாட்சித்வம் பூர்வமே சித்தித்திருக்கிறதோ ? இப்போது சாதனங்களினாற் சித்தித்ததோ ?

உ. பூர்வம் விவாத கர்த்தர்களுக்குச் சாட்சியா யிருந்தவருடைய சாட்சித்வம் சாதனங்களினாற் சித்தியாமற் பூர்வமே சித்தித் திருப்பதுபோல, நம்மிடத்தி லிருக்கப்பட்டவருடைய சாட்சித்வமுஞ் சாதனங்களாற் சித்தித்த தல்ல; பூர்வமே சித்தித்திருக்கிறது.

ச. ஆனால் ஏன் தோற்ற வில்லை?

உ. விசாரியாமையினால் தோற்ற வில்லை. ஆகையினாற் சிரவணமே முக்கிய மென்று உபநிஷத்துகள் சொல்லுகின்றன. மல பரிபாகத் தெல்லையி னின்றும் நீங்கித் தெளிந்த சற்குருவினால் விசாரித்தபோது நமதுசாட்சாத் கார அனுபவத்திற்கும் நாமே சாட்சித்வமெனல் நித்தியமாயிருக்கின்றது. அப்படி நித்தியமாயிருப்பது சுவானுபவத்திற்குச் சித்தியாகாமல் விபரீத சந்தேக மிருக்குமானால் அந்தக்கரண நிர்மலமாய் ஏகாக்கிர சித்தம் வருமாறு சாட்சாத்கார சாட்சித்வம் வரப் பண்ணிக்கொள்ளவேண்டும்.

ச. இந்த விசாரத்திற்குப் பலம் யாது?

உ. பூர்வ விவாத கர்த்தருடைய சாட்சியாகிய தேவதத்தனுக்கு அன்னிய மான விவாதிகளுடைய அவஸ்தைகளும், அவஸ்தா வியாபாரங்களும், அவஸ்தா வியாபாரிகத்வமும் அவனை யெப்படிப் பரிசிக்க வில்லையோ, அவன் இவ்வவஸ்தாதிகளை யெல்லா முதாசீனமாய்ப் பார்த்துக்கொண் டே யிருந் தவ்வவஸ்தாதிகளுக்குச் சாட்சியா யெப்படி யிருந்தானோ, அப்படியே, நமக் கன்னியமான அகங்காராதி யவஸ்தாத்திரயங்களும், அவஸ்தா வியாபாரங்களும், அவஸ்தா ஆசிரயங்களும், அவஸ்தா விகா ராதிகளும் நமக்கில்லவுமில்லை; சாட்சியாகிய நம்மை அவை பரிசிக்கவு மில்லை. இந்த அவஸ்தாதிகளை யெல்லாம் நாமுதாசீனமாய்ப் பார்த்துக் கொண்டு காலத்திரயத்திலும் இந்த அவஸ்தாதிகளுக்குச்சாட்சியா யிரு க்கிறோமென் றறிகிறதே இந்த விசாரத் திற்குப் பலம். ஆகையினால் ஆன ந்தமே திருமேனியாகிய ஸ்ரீசற்குருவினால் இவ்விஷயங்களை நன்றாய் விசாரித்துத் நானே சாட்சியென் றெவனறிகிறானோ, அவனே கிருதகிருத் தியனாகிய சீவன் முத்தனென்று சுருதியாதிகள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

பத்தாவது அவஸ்தாத்திரய சாட்சித்வ நிரூபகம் முற்றிற்று.

---

பதினோராவது

# பஞ்சகோசவிலட்சணநிரூபகம்.

---

சங்கை: பஞ்சகோசமாவது யாது?

உத்தரம்: அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்த மயமென் றைந்து கோசங்களாம்.

ச. அன்னமய கோசமாவது யாது?

உ. அன்னத்தினாற் பிறப்பாய் ஸ்தம்பம்போல் தூலமாய்க் கர சரண அவய வாகாரமாய் ஷட்பாவ விகாரமத்தாய ஷட்கோசத்துவமாய்த் தோற்றப் படுகிற தூலசரீரமே யன்னமயகோசம்.

ச. பிராணமய கோசமாவது யாது?

உ. கர்மேந்திரிய பஞ்சகமும், பிராணாதி பஞ்சகமுங் கூடினது பிராணமய கோசம்.

ச. மனோமய கோசமாவது யாது?

உ. மனதும் ஞானேந்திரிய பஞ்சகமுங் கூடினது மனோமயகோசம்.

ச. விஞ்ஞானமய கோசமாவது யாது?

உ. புத்தியும் ஞானேந்திரிய பஞ்சகமுங் கூடினது விஞ்ஞானமயகோசம்.

ச. ஆனந்தமய கோசமாவது யாது?

உ. பிரியம் மோதம் பிரமோதமாகிய விருத்திமத்தாய்ப் பிரதானமாகிய அஞ்ஞானம் ஆனந்தமய கோசம்.

ச. பிரிய மோதப் பிரமோதமாவன யாவை?

உ. இஷ்டமான வஸ்துவைப் பார்த்தமாத்திரத்தில் வருகிற சந்தோஷத்திற்குப் பிரியமென்றும், அந்தவஸ்து லபித்தபிறகு வருகிற சந்தோஷத்திற்கு மோதமென்றும், அந்த வஸ்துவை யநுபவிக்கும்போது வருகிற சந்தோஷத்திற்குப் பிரமோதமென்றும் பெயர்.

ச. இவைகளுக்குக் கோசமென்று பெயர் ஏன் வந்தது?

உ. கோசம்போலவே யாத்மாவை யறியவொட்டாமல் மறைக்கிறபடியாற் கோசமென்று பேர் வந்தது.

ச. அது எப்படி?

உ. உறையானது கத்தியை மூடிக்கொண்டதுபோலவும், கௌபீனையானது வீணையை மூடிக்கொண்டதுபோலவும், பரிசக்காய்ப்பையானது புழுவை மூடிக்கொண்டதுபோலவும், புளியமோடானது பழத்தை மூடிக்கொண்டதுபோலவும், சட்டையானது புருஷனை மூடிக்கொண்டதுபோலவும் பஞ்சகோசங்களும் ஆத்மாவை மூடிக்கொண்டிருக்கிறபடியினால் அவைகளுக்குக் கோசமென்று சொல்லப்படுகிறது.

ச. திருஷ்டாந்தத்தில் உறையுங் கத்தியும் கௌபீனையும் வீணையும் பரிசக்காயும் புழுவும் புளியமோடும் பழமும் சட்டையும் புருஷனுமாகிய இவைகள் பரிச்சின்னமாகையினால் ஒன்றை யொன்று உபசீவித்துக்கொண்டிருக்கவில்லை. ஆனதால் உறை முதலிய பதார்த்தங்கள் கத்தி முதலிய பதார்த்தங்களை மூடுகிறதற்குச் சாமர்த்தியமுண்டு. தார்ஷ்டாந்தத்தில் சமான சத்தல்லாதபடியினால் ஆத்ம சத்தையை யுபசீவித்துக்கொண்டு தோற்றப்பட்ட பஞ்சகோசங்களுக்கு அவ்வாத்மாவை மூடுவதற்கு எப்படிச் சாமர்த்தியம் உண்டு?

உ. ஆதித்தன் சத்தையை யுபசீவித்துக்கொண்டே தோற்றின மேகம் அவ்வாதித்தனை மூடிக்கொள்வதுபோலும், அக்கினியினுடைய சத்தையை யுபசீவித்துக்கொண்டே தோற்றிய புகை அவ்வக்கினியை மூடிக்கொள்வதுபோலும், பழுதையின் சத்தையை யுபசீவித்துக்கொண்டே தோற்றியபாம்பு அந்தப் பழுதையை மூடிக்கொள்வதுபோலும், மண்ணின் சத்தையை யுபசீவித்துக்கொண்டே தோற்றிய கடம் அந்த மண்ணை மூடிக்கொள்வதுபோலும், பொன்னின் சத்தையை யுபசீவித்துக்கொண்டே தோற்றிய ஆபரணம் பொன்னை மூடிக்கொள்வதுபோலும் ஆத்மசத்தையை யுபசீவித்துக்கொண்டே தோற்றிய பஞ்சகோசங்களுக்கும் ஆத்மாவை மூடும்படியான சாமர்த்திய முண்டு.

ச. ஆனால் ஆத்மாவுக்குப் பஞ்சகோச வெதிருத்வம் எப்படி?

உ. பூர்வ திருஷ்டாந்தத்திற் கத்தியும் உறையும் கவுசினையும் வீணையும் பசரிக்காய்ப் பையும் புழுவும் புளியமோடும் பழமும் புருஷனுஞ் சட்டையுமாகிய இவைகள் ஏகமாய் விவகரிக்கப்படத் தோற்றினாலும்அந்தக் கத்தி முதலானவையும் உறை முதலானவைகளுக்கு வேருகத் தோற்றுவன போல, ஆத்மாவும் பஞ்ச கோசங்களும் ஏகமாய் விவகரிக்கப்படத் தோற்றினாலும் அந்த ஆத்மா காலத்திரயத்திலும் பஞ்சகோசங்களுக் கன்னியமாய்த் தோற்றியதே வெதிருத்வம்.

ச. பஞ்ச கோசங்களுடன் சேர்ந்திருக்கும் ஆத்மாவுக் கல்லவோ வெதிருத்வஞ் சொல்லவேண்டும்? அப்படி யாத்மாவுக்குப் பஞ்ச கோசங்களுடன் கூட்டரவுண்டோ? உண்டானால் அந்தக் கூட்டரவு எதனால் வந்தது?

உ. அன்னியோன்னிய அத்தியாசத்தினால் வந்தது.

ச. அந்த அன்னியோன்னிய அத்தியாசமாவது யாது?

உ. இந்த வஸ்துவின் தர்மம் அந்த வஸ்துவினிடத்தும், அந்த வஸ்துவின் தர்மம் இந்த வஸ்துவினிடத்துமாகத் தோற்றப்பட்டதே யன்னியோன்னிய அத்தியாசமாம்.

ச. இந்த அன்னியோன்னிய அத்தியாசங்களினால் ஆத்மாவுக்கும் பஞ்சகோசங்களுக்குங் கூட்டரவுண்டோ? உண்டானால் அந்தக் கூட்டரவு எப்படி வந்தது?

உ. அன்னமய கோசத்திற்கும் ஆத்மாவுக்கும் ஜீவத்துவாரா, சாமானிய ஜாதித்துவாரா, விகாரத்துவாரா, அங்கத்துவாரா, வர்ணத்துவாரா, விசேஷஜாதித்துவாரா, ஆசிரமத்துவாரா, நாமத்துவாரா, சமஸ்காரத்துவாரா, வேஷத்துவாரா, கிரியையாதித்துவாரா கூட்டரவு வந்தது.

ச. அது எப்படி?

உ. நான் சீவன், நான் மனுஷனென்பது சீவத்துவாரா சாமானிய அத்தியாசம்; நான் பிறந்தேன், நான் இருக்கிறேன், நான் வளர்ந்தேன், நான் பருத்தேன், நான் இளைத்தேன், நான் நசித்துப் போகிறேன் என்பது விகாரத்துவாரா அத்தியாசம்; நான் புருஷன், நான் ஸ்திரீ, நான் அலியென்பது அங்கத்துவாரா அத்தியாசம்; நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திர னென்பது வர்ணத்துவாரா அத்தியாசம்; நான் தெலுங்கன், நான் தமிழன், நான் கணக்கன், நான் வேலிநாட்டான், நான் வேகிநாட்டான், நான் கொங்குநாட்டான், நான் கோசலநாட்டான், நான் சூச்சிலியன், நான் மகாராஷ்டன், நான் காசிய கோத்திரன், நான் பரத்துவாசகோத்திரன், நான் ஆஸ்வலாயசூத்திரன், நான் ஆபஸ்தம்ப சூத்திரன், நான் போதாயன சூத்திரன், நான் காத்தியாயன சூத்திரன் என்பது விசேஷ ஜாதித்துவாரா அத்தியாசம்; நான் பிரமசாரி, நான் கிரகஸ்தன், நான் வானப்பிரஸ்தன், நான் சந்நியாசி யென்பது ஆசிரமத்துவாரா அத்தியாசம்; நான் கிருஷ்ணன், நான்

ராமன், நான் எல்லாபட்டன், நான் திப்பாபட்டன், நான் கறுப்பன், நான் சிவப்பன் என்பது நாமத்துவாரா அத்தியாசம்; நான் தீட்சிதன், நான் சோமயாசி, நான் மகாவிரதயாசி, நான் பவுண்டரீக யாசி என்பது சமஸ்காரத்துவாரா அத்தியாசம்; நான் மாயாவாதி, நான் தத்துவாதி, நான் பாகவதன், நான் சைவன், நான் வீரசைவன், நான் சாஸ்திரி, நான் புராணிகன், நான் யோகீசுவரன் என்பது வேஷத்துவாரா அத்தியாசம்; நான் உபாத்தியாயன், நான் சீஷன், நான் பத்தன், நான் சுரோத்திரிகன், நான்ஞானி, நான் கலியாணமாப்பிள்ளை, நான் தச்சன், நான் கருமான், நான் தட்டான், நான் குசவன், நான்அம்பட்டன், நான் வண்ணான், நான் இடையன், நான் குதிரைக்காரன், நான் மணியக்காரன், நான் கணக்கப்பிள்ளை யென்பது கிரியாத்துவாரா அத்தியாசம். இவை முதலான அன்னமயகோச சுபாவ தர்மம் ஆத்மாவினிடத்திலும், ஆத்மாவினுடைய சச்சிதானந்த சுபாவதர்மமானது அன்னமயகோசத்தினிடத்திலுந் தோற்றப்படுவதால், இந்த அன்னியோன்னிய அத்தியாசத்தினால் அன்னமய கோசத்திற்கும், ஆத்மாவுக்கும் மித்தியாத்தியாசக் கூட்டரவு வந்தது.

ச. பிராணமய கோசத்திற்கும் ஆத்மாவுக்குங் கூட்டர வெப்படி வந்தது?

உ. அத்தியாச பூர்வகமாய் நான் பசியையுடைத்தானவன், நான் தாகமுண்டானவன், நான் சத்தி யுண்டானவன், நான் வீரிய முண்டானவன், நான் பல முண்டானவன், நான் கிரியை யுண்டானவன், நான் வாயுண்டானவன், நான் தாதா, நான் ஊமை, நான் கையில்லாதவன், நான் சப்பாணி, நான் கூனன், நான் காலுண்டானவன் என்கிற இவை முதலான பிராணமய கோச தர்மங்கள் ஆத்ம சுபாவமாகவும், ஆத்ம சுபாவமான சச்சிதானந்தங்கள் பிராணமயகோச சுபாவமாகவுந் தோற்றுகிறபடியினால், இந்த அன்னியோன்னியாத் தியாசத்தினால் பிராணமய கோசத்திற்கும், ஆத்மாவுக்கும் இதராத்தியாசக் கூட்டரவு வந்தது.

ச. மனோமய கோசத்திற்கும், ஆத்மாவுக்குங் கூட்டரவு எப்படி வந்தது?

உ. நான் சங்கற்பவான், நான் விகற்பவான், நான் சோகி, நான் மோகி, நான் ரோகி, நான் போகி, நான் குரோதி, நான் துவேஷி, நான் இச்சாவந்தன், நான் பிரஷ்டன், நான் சற்சனன், நான் கிராதகன், நான் செவிடன், நான் குருடன் என்கிற இவைமுதலான மனோமயகோச சுபாவங்களான சங்கற்பாதி தர்மங்கள் ஆத்மசுபாவமாகவும், ஆத்ம சுபாவ தர்மமாகிய சச்சிதானந்தங்கள் மனோமயகோச சுபாவமாகவுந் தோற்றுகிறபடியினால் இந்த அன்னியோன்னியாத்தியாசத்தினால் மனோமய கோசத்திற்கும், ஆத்மாவிற்கும் இதரேதராத்தியாசக் கூட்டரவு வந்தது.

ச. விஞ்ஞானமய கோசத்திற்கும், ஆத்மாவுக்குங் கூட்டர வெப்படி வந்தது?

உ. நான் கர்த்தா, நான் நிச்சயவான், நான் பந்திமான், நான் யுத்தி புத்தி சாதுரிய முண்டானவன், நான் யோக சாதகன், நான் விரதன், நான் பண்டிதன், நான் லோகாந்தரத்திற்குப் போகிறவனென்கிற இவை முத

லான விஞ்ஞானமய கோச சுபாவதர்மங்கள் ஆத்ம சுபாவமாகவும், ஆத்ம சுபாவமான சச்சிதானந்தங்கள் விஞ்ஞானமய கோச சுபாவமாகவுந் தோற்றுகிறபடியினால், இந்த அன்னியோன்னியாசத்தினால் விஞ்ஞானமயகோசத்திற்கும், ஆத்மாவிற்கும் இதரேதராத்தியாசக் கூட்டரவு வந்தது.

ச. ஆனந்தமய கோசத்திற்கும் ஆத்மாவுக்குங் கூட்டரவு எப்படி வந்தது?

உ. நான் போக்தன், நான் சந்துஷ்டன், நான் சுகி, நான் சாந்தன், நான் ராசதன், நான் தாமதன், நான் சடன், நான் அனூர்தன், நான் துக்கன், நான் அசந்துஷ்டன், நான் மூடன், நான் அஞ்ஞானி, நான் துஷ்டன், நான் குண்டன், நான் மோகிதன், நான் விவேகி, நான் பிராந்தனென்கிற இவைமுதலான ஆநந்தமயகோச சுபாவதர்மங்கள் ஆத்ம சுபாவமாகவும், ஆத்ம சுபாவ தர்மமான சச்சிதானந்தங்கள் ஆனந்தமய கோச சுபாவமாகவும் தோற்றுவதால், இந்த அன்னியோன்னிய அத்தியாசத்தினால் ஆனந்தமய கோசத்திற்கும் ஆத்மாவிற்கும் சத்தியாத்தியாசக் கூட்டரவு வந்தது.

ச. பஞ்ச கோசங்களுக்கு அன்னியமாய் ஆத்மாவை எப்படி வேறு படுத்தி அறிகிறது?

உ. திருஷ்டாந்தத்தில் என்பசு, என்கன்று, என்பிள்ளை, என்பெண், என் பெண்சாதி யென்று தன்னைச் சம்பந்தித்துக்கொண்டு தோற்றப்பட்ட பசுமுதலானவைகள் தானல்லாததுபோல, தாஷ்டாந்தத்திலும் என் சரீரம், என்பிராணன், என்மனம், என்புத்தி, என் அஞ்ஞானமென்று தன்னைச் சம்பந்தித்துக் கொண்டு தோற்றுகிற பஞ்சகோசங்களுந் தானல்ல; அந்தப் பஞ்ச கோசங்களுக்கு விலட்சணமான ஆத்மாவே தானென்றறியலாம். இன்னும் பசு வராதிருக்கிறதென்றும், கன்று இளைத்துப் போயிற்றென்றும், அது பிழைக்கமாட்டாதென்றும், பிள்ளை துர்ப்பலனென்றும், அவன் சொற்படி கேட்கவில்லையென்றும், மகள் மூடமாயிருக்கிறாளென்றும், தண்டித்தால் அசல் வீட்டுக்குப் போகிறாளென்றும்; என்பிள்ளை, என்குட்டி, என்வீடு, என்னுடைமை, என்னுப்பரிகையென்றும்; என்பெண்சாதி வீட்டுக்குச் சுதந்தரமுடையவளாயிருக்கவில்லையென்றும், பத்திரமாயொன்றுஞ் செலவழிக்காமலிருவென்று சொன்னாலுங் கேட்கவில்லையென்றும், எனக் கிதமாயொரு காரியமுஞ் செய்யவில்லையென்றுஞ் சொல்வதுபோலவே, அன்னமய கோசமாகிய ஸ்தூலதேக விகாரங்களும், பிராணமயகோச சுபாவமாகிய பசி தாக விகாரங்களும், மனோமய கோசமான சங்கற்பாதி விகாரங்களும், விஞ்ஞானமயகோசமான கர்த்ருத்வாதி விகாரங்களும், ஆனந்தமய கோசமான போக்த்ருத்வாதி விகாரங்களும் உண்டாகின்றன. இந்தப் பஞ்சகோச தர்மங்களும், சாட்சியாகிய நம்மைப் பரிசிவில்லையென்று வேறு படுத்தி யறிகின்றதே பஞ்சகோச வெதிரேக ஞானம்.

ச. ஆனால் திருஷ்டாந்தத்திற் பசுவாதிகள் தன்னுடன் கூடாமை தனக் கன்னியமாயிருப்பதினால் அப்பசு வாதிகளுக்குத் தான் வேறென்ற வெதிரேக ஞானம் வரலாம்; தாஷ்டாந்தத்திற் பஞ்ச

கோசங்கள் தன்னுடன் கூடியிருப்பதால் பஞ்சகோசங்களுக்குத் தான் அன்னியனென்ற வெதிருத்த ஞானம் எப்படி வரும்?

உ. திருஷ்டாந்தத்தில் அத்தியயனகாலத்தில் அத்தியயனம் பண்ணப்பட்ட புருஷர்களா லுச்சரிக்கப்பட்டுக் கூடப்பிறந்த சப்தங்களைக் கேட்டு இது இன்னசப்தம், இது இன்னார் சப்த மென்று பிரத்தியேகிக்க வசமில்லா திருந்தபோதிலும் விசாரித்து விவேக யுத்தமாகிய புத்தியினால் இது இன்னசப்தம், இது இன்னார் சப்தமென்று பிரத்தியேகித்து அறிவது போலும், சலத்தோடுங் கூடியிருக்கிற சுடுகையைப் பகுக்க வசமில்லாமற் போனாலும் தொக்கிந்திரியத்தினால் பரிசித்து விவேகயுத்தமாகிய புத்தியினால் சலத்தையும் உஷ்ணத்தையும் பிரத்தியேகித்து அறிவதுபோலும், சுவரி லெழுதியிருக்கிற சித்திரங்கள் கறுப்பு வெள்ளை சிவப்பு ரூபத்தினாற் பகுக்க வசமில்லாமற் போனாலுங் கண்ணினாற் பார்த்து விவேக யுத்தமாகிய புத்தியினால் இது சுவர், இது சித்திரம், இது கறுப்பு, இது வெளுப்பு, இது சிவப்பென்று பிரத்தியேகித்து அறிவதுபோலும், ஜலத்திற் கலந்திருக்கும் தித்திப்புமுதலானருசியைப் பகுக்க வசமில்லாதிருந்த போதிலும் ரசனேந்திரியத்தினால்அனுபவித்துவிவேகமாகிய யுக்தி புத்தியினால் இதுதித்திப்பு, இதுபுளிப்பு, இதுகசப்பு, இதுதுவர்ப்பு, இதுகார்ப்பு, இது உவர்ப்பென்று பிரத்தியேகித் தறிவதுபோலும், வஸ்திரத்தை யாசிரயித்திருக்குங் கந்த விசேஷங்களைப் பகுக்க வசமில்லாதிருந்தபோதிலும் கிராணேந்திரியத்தால் ஆக்கிராணித்து விவேக புத்தியினால் இது துர்க்கந்தம், இதுநற்கந்தம், இதுமிசிரகந்தமென்று பிரத்தியேகித்தறிவது போலும் தாஷ்டாந்தத்தில் பஞ்சகோசங்களையும், பஞ்சகோசங்களுடன் கூடியிருக்கும் ஆத்மாவையும் பகுக்க வசமில்லாதிருந்தாலும் நன்றாய் விசாரித்தறிந்து விவேகயுக்தமாகிய புத்தியினால் அனுபூதி விசாலமுள்ள ஸ்ரீ சற்குரு சந்நிதானத்தில் பஞ்சகோச ஸ்வரூபம் இப்படிப்பட்டதென்றும், ஆத்மசொரூபம் இப்படிப்பட்டதென்றும், பஞ்சகோசங்களுக்கும் ஆத்மாவுக்கும் சம்பந்த மில்லையென்றும் பிரத்தியேகமாய்ப் பகுத்தறியலாம். இந்தமட்டும் விவகார நிமித்தம் பஞ்சகோசங்களை யொரு பொருட் படுத்தி ஆத்மாவைப் பஞ்சகோசங்களுக் கன்னிய மென்று விவேகித்தறியும்படி சொன்னோம். இனி வஸ்துவாக விசாரிக்கும்போது பழுதையினிடத்தில் ஆரோபித்த சர்ப்பாதிகள் பழுதையன்றி வேறில்லாததுபோல, ஆத்மாவி னிடத்தில் ஆரோபித்த பஞ்ச கோசங்களும் அதிஷ்டானமாகிய ஆத்மாவை யன்றி வேறில்லை.

ச. திருஷ்டாந்தத்திற் பழுதை யென்ற ஞானம் வந்த பிறகு சர்ப்பாதி யுபாதிகள் தோற்றாமைபோல, தாஷ்டாந்தத்திலும் ஆத்மஞானம் வந்தபிறகு பஞ்சகோசங்களின்பிரவர்த்தி வராமற்போக வேண்டும். அப்படிப் போகாதபடியினால் ஆரோபமான பஞ்ச கோசங்கள் அதிஷ்டானமான ஆத்மாவையன்றி வேறில்லையென் றெப்படிப் புத்தியிலேறும்?

உ. கானலினிடத்திற் ஜலப்பிராந்தி வந்தபிறகு அந்தச் சலத்தில் ஸ்நான பானாதிக் கிரியை பண்ணவேண்டு மென்று போன புருஷன், அதை விசாரித்து இதுஜலமல்லவே, நாம் கானலென்றறியாமல் பிரமித்தோமே யென்ற ஞானம் வந்தபின்பும் அந்த ஜலப் பிரவர்த்தி காணப்படுவது

போல, ஆத்மாவினிடத் தாரோபிக்கப்பட்ட பஞ்ச கோசங்களும் அதிஷ்டானமாகிய ஆத்மாவையன்றி வேறில்லையென் றறிந்தபோதிலும் பஞ்ச கோசங்களின் பிரவர்த்தி வரலாம்.

ச. திருஷ்டாந்தமான கானலி னிடத்தில் ஜலப்பிரவிர்த்தி தோற்றல் மாத்திரமே யன்றி ஸ்நான பானுதிக் கிரிகைகளுக்கு உபயோக மில்லை. தாஷ்டாந்தத்தில் அதிஷ்டானமான ஆத்மாவை யன்றிப் பஞ்ச கோசங்கள் இல்லையென் றறிந்தபோதிலும பிறகு பஞ்ச கோசங்களின் பிரவர்த்தியும், அவற்றின் விவகாரங்களும வருகிற படியால், அதிஷ்டானமாகிய ஆத்மாவையன்றிப் பஞ்சகோசங்க ளில்லையென்ற ஞானம் புத்தியில் எப்படி யேறும்?

உ. ஏறும்; எப்படியென்றால், மிருத்திகையி லாரோபிக்குங் கடம் மண்ணை யன்றி வேறில்லையென்றறிந்தபின்னுங் கடாதிகளுடைய பிரவர்த்தியும், விவகாரங்களும் வருகிறதுபோலும், சுவர்ணத்தில் ஆரோபிக்குங் கடக மகுடாதி யாபரணங்கள் சுவர்ணத்திற் கன்னியமா யில்லையென் றறிந்த பின்னும் ஆபரணங்களின் பிரவர்த்தியும் விவகாரங்களும் வருகிறது போலும், ஆத்மாவினிடத்தில் ஆரோபிக்கும் பஞ்சகோசங்கள் அதிஷ்டானமான ஆத்மாவையன்றி வேறில்லையென் றறிந்தபோதிலும் பஞ்ச கோசங்களின் பிரவர்த்தியும் விவகாரங்களும் வரலாம். அல்லாமலும் திருஷ்டாந்தத்திற் கட முதலானவை தோற்றிக்கொண்டே விவகாரத் திற்கு வந்தபோதிலுஞ் சூட்சுமபுத்தி யுடையவர்களுக்கு மண்ணையன்றி யன்னியமாயக் கடாதிக ளில்லை யென்று புத்தியி லேறுவதுபோல, தாஷ்டாந்தத்திலும் பஞ்சகோசங்கள் தோற்றிக்கொண்டே விவகாரத் திற்கு வந்தபோதிலும் சூட்சுமபுத்தி யுடையவர்களுக்கு இந்தப் பஞ்ச கோசங்கள் ஆத்மாவுக்கு வெதிருத்தமா யில்லை யென்று புத்தியிலும் யுத்தியிலு மேறும். இந்தப்படிப் பிரத்தியேகித் தறிவதே பஞ்சகோச விலட்சண ஞானமென்று சொல்லப்படும்.

ச. இந்த விசாரத்திற்குப் பலம் யாது?

உ. ஆத்மா அவஸ்தாத்திரயத்தில் அனுகுதனு யிருக்கிறான், பஞ்ச கோசங் கள் அவஸ்தாத்திரயத்தில் அனுகுதமா யிருக்கவில்லை, வியாவிருத்தங்க ளாகிய பஞ்ச கோசங்கள் தோற்றிக்கொண்டே விவகாரத்திற்கு வந்த போதிலும் இந்தப் பஞ்ச கோசங்கள் ஆத்மாவுக் கன்னியமா யில்லை யென் றறிவதே யிந்த விசாரத்திற்குப் பலம். இப்படி யாத்மாவையும், பஞ்ச கோசங்களையும் அபின்னமாய் அதனதன் ஜொழில்களைப் பகுத்து விசாரித் தறிந்தபிறகு பஞ்சகோசங்கள் தோற்றினும் ஆத்மாவுக் கன் னிய மல்லவென்று ஆசாரிய ரறிவிக்க எவ னறிகிறானே, அவனே கிரு தார்த்தனுகிய சீவன்முத்தனென்று சுருதிஸ்மிருதி யிதிகாச புராணுகமங் கள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

பதினோராவது

பஞ்சகோச விலட்சண நிருபகம் முற்றிற்று.

---

பன்னிரண்டாவது

# சச்சிதானந்தலக்ஷண நிரூபகம்.

ச. ஆத்மாவுக்குச் சொல்லப்படும் சச்சிதானந்தசொரூபத்தில் சத்து ரூபமாவ தெப்படிப்பட்டது?

உ. எந்தவஸ்து ஒன்றினாலும் வாதிக்கப்படாமற் காலத்திரயத்திலும் ஏக ரூபமா யிருக்கிறதோ அதுவே சத்து ரூபம்.

ச. அது ஆத்மாவினிடத்தில் எப்படி உண்டு?

உ. காலத்திரயத்திலும் ஒன்றினாலும் வாதிக்கப்படாம லிருக்கின்றமையால் ஆத்மாவினிடத்தில் சத் ரூபத்வ முண்டு.

ச. ஆனால் காலத்திரயத்திலும் ஆத்மாவுண்டென்பதற்குப் பிரமாணம் யாது?

உ. சர்வ ஜனங்களுடைய அனுபவமே பிரமாணம்.

ச. சர்வ ஜனங்களாவது யார்?

உ. தரித்திரன், மகாராஜன், கர்மி, பக்தன், முமூக்ஷு இவர்களேயாம்.

ச. இவர்கள் அனுபவமாவது யாது?

உ. தரித்திரன் நான் சன்மாந்தரத்தில் யாருக்கு மொன்றுங் கொடாமற் போனபடியால், இந்த ஜன்மத்திற் றரித்திரத்தை யனுபவிக்கிறேன்; இந்தச் சன்மத்திலுங் கொடுப்பதற்கு வகை யில்லாதபடியினால் மேல் வருஞ் ஜன்மத்திலுந் தரித்திரனாகவே பிறப்பே னென்கிற வசனத்தினாலும், மகாராஜனும் நான் சன்மாந்தரத்திற் பெரியோர்களுக் குபகாரம் பண்ணினபடியினால் இந்தச்சன்மத்தில் ஐசுவரியத்தையனுபவிக்கிறேன்; இந்தச்சன்மத்திலு மொருவருக் குபகாரம பண்ணுவேனாகில் மேல்வருஞ் சன்மத்திலும் மகாராஜனாய்ப் பிறப்பேனென்கிற வசனத்தினாலும், கர்மியும் நான் அனேக ஜன்மத்திற் சற்கருமமே செய்தபடியினால் அந்தச் சற்கரும வாசனையா லிந்தச் சன்மத்திலுஞ் சற்கருமமே செய்யும்படி வந்தது; இந்தச் சற்கருமத்தினால் மேல்வரும் ஜன்மத்திலும் பரலோக முண்டென்கிற வசனத்தினாலும், பக்தனும் நான் அனேக ஜன்மத்திற் பகவானை யுபாசித்தவனாகையால், அந்த வுபாசனை வழியே இந்தச் சன்மத்திலும் நிரதிசயமான பக்தி யுண்டாயிருக்கிறது; இதனால் மேலைக்குப் பகவத் கடாக்ஷ முண்டாகுமென்கிற வசனத்தினாலும், முமூக்ஷுவும் நான் அனேக ஜன்மத்தில் ஈசுவரார்ப்பண மாகச் சற்கர்மங்கள் செய்தபடியினால் இந்தச் சன்மத்தில் சித்த சுத்தியும் சற்குரு லாபமும் சிரவணாதிக்கியமு முண்டாயின; நானே கிருதார்த்தன், எனக்கு இனி மேற் சனனமில்லை யென்கிற வசனத்தினாலும், இடவிவேகமுடையவர்களுக்கு ஆத்மா காலத்திரயத்திலு மிருக்கிறானென்றே யனுபவம். சமஸ்த ஜனங்களும் இந்த ஐவகைக்குள் அந்தர்ப்பூதமா யடங்கிய படியினால் இவர்களுடைய அனுபவப் பிரமாணத்தினால் ஆத்மாவுக்குச் சத்ரூபஞ் சித்தித் திருக்கின்றது. நாமும் இவர்களுக்குள் அந்தர்ப்பூத மாகையால் நமக்குஞ் சித்தித்தது.

ச. அனுபவத்தினால் நமக்குச் சத்து ரூபஞ் சித்தித்தது; இனி யுத்தியினா லெப்படி?

உ. நாம் மூன்று காலத்திலு மிருக்கிறபடியினால் நமக்கு யுத்தியினாலுஞ் சத் ரூபஞ் சித்தித்தது.

ச. அந்த யுத்தியாவது யாது?

உ. பகுத்து விசாரிப்பதே யுத்தியாகும்.

ச. நாம் இப்போ திருக்கிறோமா? இல்லையா?

உ. இருக்கிறோம்.

ச. சரீரியாயிருக்கிறோமா? அசரீரியா யிருக்கிறோமோ?

உ. அசரீரியாயிருப்பவனுக்கு விவகாரங் கூடாதாதலாலும், நாம் இப்போது விவகரிக்கிறபடியினாலும் சரீரியாகவே யிருக்கிறோம்.

ச. நமக் கிந்தச் சரீர மெதனால் வந்தது?

உ. கன்மத்தினால் வந்தது.

ச. யார் செய்த கன்மத்தினால் வந்தது?

உ. நாம் செய்த கன்மத்தினால் வந்தது.

ச. வேறொருவன்செய்த கன்மத்தினால் வந்ததென்று ஏன்சொல்லக் கூடாது?

உ. அன்னியன் செய்த சோதிஷ்டோம யாகாதி பலன்களும் நமக்கு வரவேண்டும். வராதபடியினால் வேறொருவன் செய்த கன்மத்தினாற் சரீரம் வந்ததென்று சொல்லக்கூடாது; நாம் செய்த கன்மத்தினாலேயே நமக்குச்சரீரம் வந்ததென்று சொல்லவேண்டும்.

ச. ஆனாலிந்தச் சன்மத்திற்செய்த கன்மத்தினாற் சரீரம் வந்ததோ? சன்மாந்தரத்திற் செய்த கன்மத்தினாற் சரீரம் வந்ததோ?

உ. சன்மாந்தரத்திற் செய்த கன்மத்தினாலேயே சரீரம் வந்தது.

ச. இந்தச் சன்மத்திற் செய்த கருமத்தினாற் சரீரம் வந்த தென்று ஏன் சொல்லக் கூடாது?

உ. விருட்சத்தை யுண்டாக்கப்பட்ட பீஜந் தனக்குக் காரணமான விருட்சத்தை யெப்படி ஜனிப்பிக்கமாட்டாதோ, அப்படியே இந்தச் சரீரத்தினாற் செய்யப்பட்ட கன்மம் மேலைக்குச் சரீரங் கொடுக்குமே யன்றி, இந்தச் சரீரத்தைப் பிறப்பிக்கமாட்டாது. ஆகையா லிந்தச் சன்மத்திற் செய்த கன்மத்தினால் இந்தச் சரீரம் வந்ததென்று சொல்லக்கூடாது.

ச. பின்னை யெப்படிச் சொல்லவேண்டும்?

உ. பூர்வ ஜன்மாந்திரத்திற் செய்த கன்மத்தினால் நமக்குச் சரீரம் வந்ததென்றே சொல்லவேண்டும்.

ச. சன்மாந்தரத்தில் சரீரியாயிருந்து கன்மஞ் செய்தோமோ? அசரீரியா யிருந்து கன்மஞ் செய்தோமோ?

உ. அசரீரியாயிருந்து கன்மஞ் செய்யக்கூடாதபடியினால், சரீரியா யிருந்தே கன்மஞ் செய்தோம்.

ச. அந்தச் சரீர மெதனால் வந்தது?

உ. அதற்குப் பூர்வஜன்மத்திற் செய்த கன்மத்தினால் வந்ததென்கிற யுத்தியினால், நாமும் அனேகங் கோடி கற்பகாலத்தி லிருந்து சரீரத்துடனே கர்மங்களைச் செய்து, அந்தக் கர்மத்தினால் வரப்பட்ட அனேக சரீரமுந் தரித்து, அந்தந்தச் சரீர சுபாவமான சுகதுக்கங்கள் அனுபவித்து, அனேக கோடி கற்பாந்தரத்திலுஞ் சரீரியா யிருந்ததாகவே தோற்றுகின்றது. இந்த யுத்தியினால் பூதகாலத்திலு மிருந்தோ மென்பது சித்தித்தது.

ச. ஆனால் நமக்குப் பவுஷியகாலத்தில் வித்தியமானத்வ மெப்படி?

உ. இந்தச் சன்மத்தி லிப்போது சிரவண மனன நிதித்தியாச னாதிகளைப் பண்ணி ஞானத்தைச் சம்பாதிக்காவிட்டால், பூர்வ ஜன்ம கர்மத்துக்குப் பல பூதமாகிய இந்தச் சரீரம் வந்ததுபோல, இந்தச் சரீரத்திற் செய்கிற கர்ம பல பூதமாகிய அனேக சரீரங்க ளினிமேலும் வரும். இந்தச் சரீரத்தைத் தரித்துக்கொண் டிப்போ தனேகவித கர்மங்களை எப்படிச் செய்கிறோமோ, அப்படியே மேலே வருகிற சரீரத்தையுந் தரித்துக் கொண்டு, அனேகவித கர்மங்களைச் செய்யப் போகிறோம். அந்தக் கர்மங்களுக்குப் பல பூதமாகிய சரீரங்களும் வரப்போகின்றன. அவைகளையும் தரித்துக்கொண்டு அனேகவித கர்மங்களைச் செய்து அந்தந்தக் கர்மங்களுக்குப் பல பூதமாகிய சுக துக்கங்களை யனுபவித்துக்கொண்டு அனேக கோடி கற்பங்களிலு மிருப்போமென்று யுத்தியினால் அறிகின்றபடியால், நாம் காலத்திரயத்திலும் இருக்கிறோமென்பது யுத்தியினாற் சித்தித்தது. பிரளயங்களில் ஜகத்து வாதிக்கப்பட்டாலும் நாம் வாதிக்கப்பட வில்லை. அன்றியும் நமக்கு உற்பத்தியாதி விகாரங்க ளில்லாதபடியினால் சத்ரூபஞ் சித்தித்தது. இப்படிப்பட்ட சத்ரூபம் நம்மிடத்தி லிருப்பதால் சத்து லட்சணஞ் சித்தித்தது.

ச. ஆனால் சித்து ரூபமாவது யாது?

உ. எந்த வஸ்து ஒரு சாதனாந்தரங்களை யபேட்சியாமல் தானுந் தோற்றிக் கொண்டு, தன்னிடத்தில் ஆரோபிக்கின்ற சர்வ பதார்த்தங்களையுந் தோற்றுவிக்கின்றதோ, அதுவே சித்தென்று சொல்லப்படும்.

ச. இந்தச் சித்து ரூபம் ஆத்மாவினிடத்தி லுண்டோ?

உ. நாம் பாவியமுத லிதுவரையிலு மெந்தெந்த வியாபாரஞ் செய்தோமோ, அந்தந்த வியாபாரத்துள் சிறிது நமக்குத் தோற்றாமற் போனாலும் மற்றைய வியாபாரங்களெல்லாம் பிரகாச சாதனங்களாகிய ஆதித்தன் முதலியவற்றுள் ஒரு சாதனமும் அபேட்சியாமல் காடாந்த காரத்திலும் மூலையில் முக்காடிட்டுப் படுத்திருந்தாலும் தோற்றுகின்றன. ஆனபடியால், ஆத்ம சொரூபமாகிய நம்மிடத்திலுஞ் சித் ரூப மிருக்கின்றது.

ச. பாஹியமுதல் இதுவரையில் ஆரோபிக்கப்பட்ட சர்வபதார்த்தங்களிற் சிறிது தோற்றப்படுகின்ற தன்றிச் சமஸ்த பதார்த்தங்களுந் தோற்றவில்லை. ஆகையினால் சர்வ பதார்த்த அவபாசகத்வமாகிய சித்ரூபத்வம் நமக் கெப்படிக் கூடும்?

உ. அந்தர்ப் பிரபஞ்சமும், பாஹியப் பிரபஞ்சமுஞ் சர்வ பதார்த்தமென்று சொல்லப்படும். இவ்விரண்டு பிரபஞ்சமும் நம்மாலேயே தோற்றப்படுகின்றன.

ச. இவ் விரண்டனுள் பாஹியப்பிரபஞ்சம் நம்மால் எப்படித்தோற்றுகின்றது?

உ. பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயமென்றும், சத்த பரிச ரூப ரச கந்தமென்றும், பஞ்சீகிருத பூதமென்றும், பிரமாண்டமென்றும், சதுர்த்தச புவனமென்றும், சதுர்வித பூதக் கிராமங்களென்றும், இவைகளுக்குக் காரணம் மாயையென்றும் சொல்லப்படும் அனேக நாம ரூப குணத்வ விகார சத்தியாசிரயமாகிய பாஹியப் பிரபஞ்சமெல்லாம் நம்மால் அறியப்படுகின்றன.

ச. நம்மால் அவை அறியப்படுகின்றனவோ? அல்லது நாம் பாஹியப் பிரபஞ்சத்தினால் அறியப்படுகின்றோமோ?

உ. பாஹியப் பிரபஞ்சத்திற்கு நாம் அறியப்படாதபடியினாலும், நம்மாலேயே அது அறியப்படுகின்றபடியினாலும் பாஹியப் பிரபஞ்சத்தை யறிந்துகொண்டிருக்கிற நமக்குப் பாஹியமாகிய சர்வபதார்த்த அவபாசகத்வஞ் சித்தித்தது.

ச. இனி யந்தர் பதார்த்த அவபாசகத்வம் எப்படி?

உ. அஞ்ஞானமென்றும், அன்னமயம் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் ஆனந்தமயகோசமென்றும், தூல சூட்சும காரண சரீரமென்றும் சட்பாவ விகாரமென்றும், சட்கோசமென்றும், ஷடூர்மியென்றும், ஞானேந்திரிய கன்மேந்திரியமென்றும், பிராணாதி பஞ்சகமென்றும், அந்தக்கரண சதுஷ்டயமென்றும், சங்கற்ப விகற்பாதி யபிமான தாரணையென்றும், சாக்கிர சொப்பன சுழுத்தி யென்றும், அவஸ்தா வியாபாரங்களென்றும், அவஸ்தாவாசிகளென்றும், சமாதி மூர்ச்சை யென்றும், மனோ வாக்குக் காயங்களென்றும், மயித்திரி கருணை முதிதை யுபேட்சைகளென்றும், இயம நியம ஆசன பிராணாயாம பிரத்தியாகார தியான தாரணை சமாதி யஷ்டாங்க யோகங்களென்றும், பிரத்தியட்சம் அநுமானம் ஆகமம் அருத்தாபத்தி உபமானம் அபாவம் ஐதீகம் சம்பவமாகிய எட்டுப் பிரமாணங்களென்றும், ரோக ஆரோக்கியமென்றும் இவ்வாறு சொல்லப்பட்ட விவித நாம ரூப குண தர்ம விகார சத்தியாசிரயமாகிய அந்தர்ப் பிரபஞ்சமெல்லாம் நம்மா லறியப்படுகின்றன.

ச. நம்மால் அறியப்படுகின்றதோ, அல்லது அந்தர்ப் பிரபஞ்சத்தினால் நாம் அறியப்படுகின்றோமோ?

உ. அந்தர்ப் பிரபஞ்சத்தினால் நாம் அறியப்படவில்லை, நாமே யந்தர்ப்பிரபஞ்சமாகிய சர்வபதார்த்தங்களையும் அறிகிறோ மாகையால், நமக்கு அந்தராகிய சர்வபதார்த்த அவபாசகத்வஞ் சித்தித்தது. அன்றியும் நம்மிடத்தில் ஆரோபிக்கப்பட்ட சர்வபதார்த்த அவபாசகத்வம் ஒருசாதனாந்தரங்களையும் அபேட்சிக்காமல் நமக்குச் சித்தித்திருக்கின்றது.

ச. மனத்தினு லல்லவோ சர்வமும் அறியப் படுகின்றன ? நாமும் மனத்தினாலே யல்லவோ அறியப்படுகிறோம் ? ஆதலால் சாதனாந்தர நிரபேட்சையாகிய சொப்பிரகாசத்வமும் சர்வபதார்த்த அவபாசகத்வமும் நமக் கெப்படிக் கூடும் ?

உ. மனமானது உற்பத்தி நாச வஸ்தாய்ச் சாவயமாய்ப் பரிச்சின்னமாய்த் திரிசியமாய்க் கடத்தைப்போலப் பூத காரியமா யிருக்கிற படியினால், அந்த மனம் சடத்வமேயன்றிச் சேதனத்வம் அன்று; ஆதலால் அந்தச் சடமான மனம் ஒரு பதார்த்தத்தையுந் தோற்றுவிக்கமாட்டாது. என்னெனில், ஆத்மாவினாலேயே தோற்றப்பட்ட மனம் : ஆத்மாவைத் தோற்றுவிக்கமாட்டா தென்பதிற் சந்தேகமில்லை. ஆத்மாவே மனத்தையுஞ் சர்வ பதார்த்தங்களையுந் தோற்றுவிக்கின்றது. ஆகையினால் மனது உபாதி மாத்திரமேயாம்.

ச. அது எப்படி ?

உ. அகலி லிருக்கும் எண்ணெயினால் நனைக்கப்பட்ட வர்த்தி தானுந்தோற்றவில்லை, அந்த எண்ணெய் முதலானவைகளையுந் தோற்றுவிக்கவில்லை. அதில் அக்கினி யென்கிற தேஜசு திரியென்ற வுபாதியுடன் கூடிக்கொண்டு சாதனாந்தரங்களை யபேட்சியாமல் தானுந் தோற்றி அந்தத் திரி தயிலங் கலச மென்கிற பதார்த்தங்களையுந் தோற்றுவிக்கிறது. அதுபோல அகலென்ற தூலசரீரத்தில் தயிலமாகிய கர்மத்தினால் ஸ்தாபிதமாகிய திரியென்னும் மனது தானுந் தோற்றவில்லை, அன்னிய பதார்த்தங்களையுந் தோற்றுவிக்கவில்லை. ஆத்மா அந்த மனதுடன் கூடிச் சாதனாந்தரங்களை யபேட்சியாமல் தானும் தோற்றிக்கொண்டு, அந்த மனத்தையுந் தேகேந்திரியங்களையும் அந்தர்ப் பாகியமாகிய சர்வ பதார்த்தங்களையுந் தோற்றுவிக்கின்றது. அந்த ஆத்ம சொரூபமே நாமாகையினால், சாதனாந்தர நிரபேட்சையாய்ச் சுயம் பிரகாசமா யிருக்கப்பட்ட நமக்கே சர்வ பதார்த்த அவபாசகத்வஞ் சித்திக்குது. ஆதலால் நாமே சித்ரூபமென்பதிற் சந்தேக மில்லை.

ச. ஆனந்த ரூபமாவது யாது?

உ. நித்தியமாய் நிருபாதிகமாய் நிரதிசயமாகிய சுக சொரூபமே யானந்த ரூபம்.

ச. ஆனந்த ரூபம் ஆத்மாவினிடத்தில் இருக்கிறதோ ?

உ. சற்சந்தனாதிகளைப் பரிசிக்கும் புத்திக்குச் சர்வோத்கிருஷ்டமாய்ச் சர்வ துக்க நிவர்த்தகமாய் நித்தியமாகிய சுகமே யானந்தம். எந்த ஆனந்தஞ் சமஸ்தமானபேர்களினாலுஞ் சுழுத்திக் காலத்தில் அனுபவிக்கப்படுகின்றதோ, அவ்வானந்தத்தில் இந்த லட்சண மிருக்கின்றது.

ச. சுழுத்திக் காலத்தில் ஆனந்த மிருக்கு மானால், அவ்வானந்தத்திலும் இந்த லட்சணங்க ளுண்டென்று சொல்லலாம். அவ்விடத்தில் துக்கா பாவ மாத்திரமேயன்றி யானந்த மில்லையே. இப்படி யில்லாதிருக்கும் ஆனந்தத்திற்கு நிருபாதிகத்வமும் நிரதிசய சுக சொரூபத்துவமு மெப்படி வந்தன ?

உ. சுழுத்தியிற் புருஷனானவன் சுகம் அனுபவியா விட்டால் அவ்வவஸ்தையை விட்டெழுந்த பிறகு நான் சுகமாய் நித்திரை செய்தேனென்று சொல்லா திருக்கவேண்டும். துக்காதிகளு யிருந்து நித்திரை செய்தேனென்று சொல்லவேண்டும். அங்ஙன மில்லாதபடியினாற் சுழுத்தி யவஸ்தையிற் சமஸ்தமானபேர்களாலும் அனுபவிக்கப்படுகிற ஆனந்தத்தில் நித்தியமாய் நிருபாதிகமாய் நிரதிசயமான சுகசொரூபத்வலட்சணமிருக்கின்றது.

ச. அந்தச் சுகத்திற்கு நிருபாதிகத்வ மெப்படி?

உ. சுக ஜன்னியமாகிய சற்சந்தனாதி விஷயங்கள் சுழுத்தி யவஸ்தையி லில்லாதிருந்தபோதும் சமஸ்தமானபேர்களுஞ் சுகம்அனுபவிக்கிறபடியால் அதற்கு நிருபாதிகத்வ முண்டு.

ச. அதற்கு நிரதிசயத்வ மெப்படி?

உ. சமஸ்த விஷய ஜன்னியமாகிய சுகங்களிலும் உத்க்ருஷ்ட ஸ்திரீ சம்போக சுகத்திலும் விரசம் பிறந்து சமஸ்த பிராணிகளு மந்தச் சுகங்களை விட்டுப் பிரதிதினமும் இந்தச் சுழுத்திச் சுகத்தையே யபேட்சித்து அந்தச் சுகத்திற்கு விக்கினம் பண்ணினவர்களைத் தண்டித்து, அந்தச் சுகத்தையே மேலும்மேலும் விரும்புகிறபடியினாலும் அதற்கு நிரதிசயத்வ முண்டு. இதுமாத்திரமல்ல; சாக்கிர சொப்பனங்களிற் கூறப்பட்ட ஆதியாத்மீகம்ஆதிதெய்வீகம் ஆதிபவுதிகமாகிய தாபத்திரய துக்கங்களைப் போக்கினபடியாலும் நிரதிசயத்வ முண்டு.

ச. அதற்கு நித்தியத்துவ மெப்படி?

உ. சாக்கிர சொப்பனங்களி லனுபவிக்கப்பட்ட சமஸ்த விஷய சுகங்களை யனேகவிதரூபமா யனுபவியாமல் பிரதிதினஞ் சமஸ்தமானபேர்களு மேகரூபமாகவே யனுபவிப்பதா லதற்கு நித்தியத்துவ முண்டு.

ச. சுழுத்திச் சுகம் நித்தியமென்றால் சாக்கிர சொப்பனங்களிலுந் தோற்றவேண்டுமே. அங்ஙனந் தோற்றாத சுழுத்திச் சுகத்திற்கு நித்தியத்துவ மெப்படி?

உ. சுழுத்திச் சுகம் நித்தியமா யிருந்தபோதிலும் துக்க ரூபமாகிய தேகேந்திரியாதிக் கூட்டரவினால் திரோதானப்பட் டிருக்கிறபடியால் தோற்றவில்லை.

ச. ஆத்ம காரியங்களாகிய தேகேந்திரியங்களினாற் காரண பூதமாகிய ஆத்ம சுகத்திற்குத் திரோதான மெப்படிக் கூடும்?

உ. அக்கினிக்குப் பிரகாசம் சுதசித்தமா யிருந்தாலுஞ் சுயகாரியமாகிய தூம சம்பிரசக்தினால் திரோதானம் வருகிறதுபோலும், ஆதித்தனுக்குப் பிரகாசம் சுதசித்தமாயிருந்தாலும் சுயகாரியமான மேகாதிகளால் அவ்வாதித்தப் பிரகாசத்திற்குத் திரோதானம் வருகிறதுபோலும்ஆத்மாவுக்குஞ் சார்வதா சுகசொரூபம் சுதசித்தமாயிருந்தாலும் ஆத்ம காரியமாகிய தேகேந்திரியாதி சம்பந்தத்தினால் சாக்கிர சொப்பனங்களி லந்தச் சுகத்திற்குத் திரோதானம் வரும். பகிர்முகமானவனுக்கு இந்தச் சுகம் ஆத்ம சுகமென்று சாக்கிர சொப்பனங்களிற் றோற்றாமற்போனாலும் அந்தர்முகமானவனுக்குச் சார்வதா தோற்றிக்கொண்டிருக்கும். ஆதலா லிந்தச் சுழுத்திச்

சுகமே காலத்திரயத்திலு மிருக்கிறபடியால் இதற்கே நித்தியத்துவமும் நிருபாதிகத்துவமும் நிரதிசயத்துவமுமாகிய சுகசொரூபஞ் சித்தித்திருக்கின்றது. இப்படியே சாக்கிர சொப்பன சுழுத்திகளிலும் விஷயகாலங்களிலும் ஆத்மானந்தமே பிரதிபலித்து விளங்குகின்றது. இதைச் சற்குருவினால் விசாரித்துத் தெளிந் தறியவேண்டும்.

ச. இப்படித் தெளிந்த விசாரத்திற்குப் பலம் யாது?

உ. இப்போது சொல்லிய சத் ரூபத்வமுஞ் சித் ரூபத்வமு மானந்த ரூபத்வமும் நம்மிடத்திற் சித்தித்திருக்கிறபடியால், அந்தச் சச்சிதானந்த ஸ்வரூபமாகிய ஆத்மா நாமே யென்கிற திடப்பிரஞ்ஞை வருகிறதே இந்த விசாரத்திற்குப் பலமென்று சகல சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்களிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சய மில்லை சித்தம்.

பன்னிரண்டாவது
சச்சிதானந்த லட்சண நிரூபகம் முற்றிற்று.

---

பதின்மூன்றாவது

# அகண்டத்வ நிரூபகம்.

---

சங்கை: சச்சிதானந்த சொரூபமாகிய ஆத்மாவுக்கு அகண்டத்வமாவது யாது?

உத்தரம்: தேசத்தினாலுங் காலத்தினாலும் வஸ்துவினாலும் வரும் அபரிச்சின்னத்வமே யகண்டத்வம்.

ச. அகண்டத்வத்துக் கிந்த மூன்று விசேஷமு மேன் சொல்ல வேண்டும்? ஒரு விசேஷமாகிலு மிரண்டு விசேஷமாகிலும் போதாதோ?

உ. போதாது.

ச. ஆத்மாவுக்குத் தேசத்தினால் வருகிற அபரிச்சின்னத்வமே யகண்டத்வமெனச் சொல்லுவோமே?

உ. ஆகாசமும் வியாபகமா யிருக்கிறபடியால் அவ்வாகாசத்திற் ககண்டத்வம் வரும். ஆதலா லவ்வாகாசத்திற்கு அகண்டத்வம் நிராகரிக்கும் நிமித்தம் காலத்தினாலும் அபரிச்சின்னத்வமே யகண்டத்வமென்றுஞ் சொன்னோம்.

ச. ஆகாசத்திற்குக் காலத்தினால் அபரிச்சின்னத்வ மில்லையா?

உ. ஆகாசம் உற்பத்தி நாசமா யிருக்கிறபடியால் அதற்குக் காலத்தினால் அபரிச்சின்னத்வஞ் சொல்லக்கூடாது. ஆனபடியினால் காலத்தினாலும் அபரிச்சின்னத்வமென் றிரண்டாம் விசேஷமுஞ் சொல்லவேண்டிற்று.

ச. இவ்விரண்டு விசேஷமும் போதுமா?

உ. காலம் விபுவாய்த் தேசத்தினாலும் ஆகாயத்தினாலும் அபரிச்சின்னமா யிருக்கிறபடியினாலும், தனக்குப் பரிச்சேதங் கூடாதிருப்பதினாலும்

அபரிச்சின்னத்வமாய் அகண்டத்வம் வரும். ஆதலால் காலத்திற்கு அகண்டத்வம் நிராகரிக்கும் நிமித்தம் ஸ்வரூபத்திற்கு வஸ்துவினாலும் அபரிச்சின்னத்வமென்று மூன்றும் விசேஷமுஞ் சொல்லவேண்டியதாயிற்று.

ச. காலத்திற்கு வஸ்துவினால் அபரிச்சின்னத்வ மில்லையா?

உ. காலம் ஆகாசாதிக ளெல்லாதபடியினால் அதற்கு வஸ்துவினால் அபரிச்சின்னத்வ முண்டானாலும்ஆத்மாவையன்றிக் காலாதிகளுக்குத் திரிவித பரிச்சேத சூனிய ரூபமாகிய அகண்டத்வங் கூடாது.

ச. ஆனால் நான் இந்தத் தேசத்திலிருக்கிறேன், அந்தத் தேசத்திலில்லை யென்று தேசத்தினாலும், நான் முன் வருஷத்திற்பிறந்தேன், கொஞ்ச நாளைக்குப்பின்பு இல்லாமற் போகிறே னென்று காலத்தினாலும் பிருதிவியாதிகள் அல்லவென்று வஸ்துவினாலும் அபரிச்சின்னத்வமாகிய ஆத்மாவுக்குப் பரிச்சின்னத்வ முண்டாயிருக்கத் திரிவித பரிச்சேத சூனிய மெப்படிக் கூடும்?

உ. நானிந்தத் தேசத்திலிருக்கிறேன், இந்தக் காலத்திற் பிறந்தேன், இந்த வஸ்து நானல்ல வென்கிற திரிவிதபரிச்சேதமும் அத்தியாசமாய்த் தேகத்தை யபேட்சித்துக்கொண்டே வருகிறபடியால், அத்தேகத்திற் கன்னியமான ஆத்மாவுக்குத் தேச கால வஸ்துக்களினாலும் அபரிச்சின்னத்வ முண்டு.

ச. ஆத்மாவுக்குத் தேசத்தினால் அபரிச்சின்னத்வம் எப்படி?

உ. கடஜன மடஜன குட்டியஜன குசுவுலஜன பிருதிவிசதி அப்புசதி தேயுசதி வாயுசதி ஆகாசசதி யென்றும், பூத பௌதிக மாகிய சமஸ்த பிரபஞ்சத்திலுஞ் சத் ரூபனாகிய ஆத்மாவுக் கனுவிர்த்தி யிருக்கிற படியால் ஆத்மா வியாபகனா யிருக்கிறான். அப்படி வியாபகனா யிருக்கிற ஆத்மாவுக்குத் தேசத்தினாலும் அபரிச்சின்னத்வ மிருக்கின்றது.

ச. ஆத்மாவுக்குக் காலத்தினால் அபரிச்சின்னத்வ மெப்படி?

உ. ஆத்மா அனாதியா யிருக்கிறபடியினாற் பூத காலத்தினாலும், நித்தியனா யிருக்கிறபடியினால் பவிஷிக காலத்தினாலும், தேகாதி வெதிருத்தனா யிருக்கிறபடியால் வர்த்தமான காலத்தினாலும் பரிச்சின்ன மில்லாதபடியால் ஆத்மாவுக்குக் காலத்தினாலும் அபரிச்சின்னத்வ மிருக்கின்றது.

ச. ஆத்மாவுக்கு வஸ்துவினால் அபரிச்சின்னத்வ மெப்படி?

உ. சர்வாத்மனா யிருக்கிறபடியால் ஆத்மாவுக்கு வஸ்துவினாலும் அபரிச்சின்னத்வ மிருக்கின்றது.

ச. வஸ்துவாவது யாது?

உ. சுசாதிக விசாதிக சுவகத பேத மென மூன்றுவிதமா யிருக்கும்.

ச. மூன்றுவித ஜாதி பேதங்கள் யாவை?

உ. திருஷ்டாந்தத்தில் விருட்சத்திற்கு விருட்சாந்தரம் சுசாதிகம், பாஷாணாதிகள் விசாதிகம், பத்திர புஷ்ப பலாதிகள் சுவகதபேதமாம். இந்த மூன்று பேதமு மில்லாதபடியினால் ஆத்மா சுசாதிக விசாதிக சுவகத பேத ரகிதமென்று சுருதியிற் சொல்லப்படுகின்றது.

ச. கடஜன மடஜன குட்டியஜன் குசுவுலஜன தேவதத்த யக்ஞ தத்த சயித்ராத்மா மயித்திராத்மா என்கிற சுசாதிகமும், சுசாதிக பேதமும், பிரிதிவி அப்பு தேயு வாயு ஆகாச கட மட குட்டிய குசுவுல வென்கிற விசாதிகமும், விசாதிகபேதமும், இச்சா துவேஷ சுக துக்க சத்துவ ராசத தாமச மென்கிற சுவகதமும், சுவகத பேதமும் ஆத்மாவுக் கிருக்கிறபடியினால் சுசாதிக விசாதிக சுகத பேத ரகித மென் றெப்படிச் சொல்லலாம்?

உ. ஆத்மாவுக்குச் சுசாதிகாதி பேதங்கள் உபாதியினால் வந்தனவே யல்லாமல் பாரமார்த்திகமாய் விசாரிக்குமிடத்து இல்லையென்றே சொல்ல வேண்டும்.

ச. இல்லையென்று சொல்லுகிற தெப்படி?

உ. திருஷ்டாந்தத்தில் ஒரு ஆகாசமே கட மட குட்டிய குசுவுல வன விருக்ஷாதி யுபாதியினால் கடாகாச மடாகாச குட்டியாகாச குசுவுலாகாச வனவிருக்ஷாகாச மென் றனேகமாக விவரிக்கப்படுகிறதுபோல, ஆத்மாவும் நாமரூபக் கிரியை முன்னிலையாதிகளாகிய சரீர வுபாதிகளினால் தேவதத்த யக்ஞதத்த விஷ்ணுமித்திர கிருஷ்ண ராமனென் றனேகமாய் விவகரிக்கப் படுகின்றது. பாரமார்த்திகமாய் விசாரிக்கு மிடத்தில் அவ்வாகாசத்தைப்போலும் ஆத்மாவுக்குச் சுசாதிகமும் சுசாதிக பேதமுமில்லை.

ச. விசாதிக பேத மில்லை யென்ப தெப்படி?

உ. சத் ரூபனாகிய ஆத்மாவுக்கு விசாதிகமாகிய பிரபஞ்ச மெல்லாம் சசவிஷாண வந்தியா புத்திர ககனார விந்தம்போல் அசத்தா யிருக்கிறபடியினால், விசாதிகமும் விசாதிக பேதமு மில்லை.

ச. சுவகத பேத மில்லையென்ப தெப்படி?

உ. இச்சை துவேஷ சுக துக்காதிகளெல்லாம் அந்தக் கரண சுபாவமன்றி யாத்ம சுபாவ மல்லாதபடியினால் சுவகதமும் சுவகதபேதமு மில்லை.

ச. ஆனாற் பின்னமாகிய சச்சிதானந்தத்தினால் ஆத்மாவுக்குப் பேத மில்லையா?

உ. சச்சிதானந்தங்கள் அன்னியோன்னியமும், பின்னமு மாகுமானாற் பேதமுண்டு; அங்ஙன மில்லாதபடியினாற் பேதமில்லை.

ச. ஆனால் சத்துச் சித்து ஆனந்த மென்று சப்த பேதமும், அர்த்த பேதமு மிருப்பதினாலும், அஸ்த கர பாணி சப்தத்தைப்போற் பரியாய சப்த மல்லாமற் போனபடியினாலும் சச்சிதானந்தத்திற்கு எப்படி யேகார்த்தங் கூடும்?

உ. திருஷ்டாந்தத்தில் தீபமானது சிவப்பு உஷ்ணம் பிரகாசமென்று சப்தத்தினாலும் அர்த்தத்தினாலும் பின்னம்போல விவகரிக்கப்பட்டாலும் அஸ்த கர பாணி சப்தம்போலும் பரியாய சப்த மல்லாமற்போனாலும், ரோகிதோஷ்ணப் பிரகாசம் தீபத்திற்கு ஸ்வரூபமா யிருக்கிறபடியினாலும் பரஸ்பர பின்னமின்றி யேகார்த்தங் கூடும். அதுபோலத் தாஷ்டாந்தத்திற் சச்சிதானந்தங்கள் சப்தத்தினாலும் அர்த்தத்தினாலும் பின்

ணம்போல் விவகரிக்கப்பட்டாலும் ஆத்ம சுபாவமா யிருக்கிறபடியால் பரஸ்பர பின்னமின்றி ஏகார்த்தங் கூடும்.

ச. அப்படிப் பேதமில்லாவிட்டால் சுருதியாதிகள் ஆத்மா சத் ரூப னென்று ஒன்று மாத்திரஞ் சொல்லவேண்டும். அப்படி யில்லா மல் சித் ரூபனென்றும் ஆனந்த ரூபனென்றும் எதைப்பற்றிச் சொல்லுகின்றது? பேதமில்லாவிட்டா லிப்படிச் சொல்லுமா?

உ. சுருதியாதிகள் சச்சிதானந்தங்களுக்குப் பேதஞ் சொல்லுமிடத்தில் தாற்பரியமே யில்லை.

ச. பின்னை யெப்படித் தாற்பரியம்?

உ. ஆத்ம சுபாவமாகிய சத்து அசத்தாகிய ஜகசுபாவமாகவும், ஆத்ம சுபாவ மாகிய சித்து ஜடமாகிய புத்தியாதி சுபாவமாகவும், ஆத்ம சுபாவமாகிய ஆனந்தம் துக்கரூபமாகிய புத்திர பாரியாதி சுபாவமாகவுந் தோற்றிக் கொண்டு, ஜகசுபாவமாகிய அசத் ரூபமும் புத்தியாதி சுபாவமாகிய ஜட ரூபமும் புத்திர பாரியாதி சுபாவமாகிய துக்கரூபமுமாய் நான் செத்துப் போகிறேன், நான் சடன், நான் துக்கி யென் றாத்ம சுபாவமாய்த் தோற்றுகிற இந்த விபரீதப் பிராந்தியை நிராகரிக்கும் நிமித்தம் ஆத்மா சத்ரூபன், சித்ரூபன், ஆனந்தரூபனென்று சுருதியாதிகள் சொல்லுகிற தாற்பரிய மன்றி, ஆத்மசொரூபமாகிய சச்சிதானந்தத்திற்கு அன்னி யோன்னிய பேதஞ் சொல்லுமிடத்தில் தாற்பரியமே யில்லை. சிலசமயி கள் ஆத்மா ஜடரூப னென் றங்கீகரித்து அவனுக்குச் சத்து தர்மமென் றுஞ் சிற் சுகங்கள் குணங்களென்றுஞ் சொல்லுகிறபடியால் அவர்களை நிராகரிக்கு நிமித்தமும் ஆத்மா சச்சிதானந்த சொரூபமென்று சுருதியாதி கள் சொல்லுகின்றன. ஆகையால் சத்தே சித்து, சித்தே யானந்த மென்று சுருதி தாற்பரியம் நிர்க்கமாகச் சித்தித்தது.

ச. சுருதியினால் சித்தித்ததுபோல் யுத்தியினாலுஞ் சித்திக்கின்றதா?

உ. யுத்தியினாலுஞ் சித்தித்திருக்கின்றது.

ச. அதெப்படி? சத்தானது தானே தோற்றுகின்றதா? மற்றொன் றினால் தோற்றுவிக்கப்பட்டுத் தோற்றுகின்றதா?

உ. தானே தோற்றுகின்ற தென்றே சொல்லவேண்டும். அப்படிச் சொன் னால் சத்தே சித்தென்று யுத்தியினாலும் சித்திக்கின்றது. மற்றொன்றி னால் தோற்றுவிக்கப்பட்டுத் தோற்றுகின்றதென்று சொல்லுவோமா னால், சத்து விலட்சணத்தினால் தோற்றுவிக்கப்பட்டுத் தோற்றுகின் றதா, சுதந்தரத்தினால் தோற்றுவிக்கப்பட்டுத் தோற்றுகின்றதா வென்று சங்கை யுண்டாம்.

ச. சத்து விலட்சணத்தினால் தோற்றுவிக்கப்பட்டுத் தோற்றுகின்ற தென்று சொல்லலாமா?

உ. அப்படியானால் சத்து விலட்சணம் அசத்தானபடியினால் அவ்வசத்தான சத்து விலட்சணத்தினால் சத்துத் தோற்றப்படுகிறதென்று சொல்லக் கூடாது. அப்படிச் சொன்னால் அசத்தாகிய சசவிஷாணாதிகளாலும் சத்தாகிய கடாதிகள் தோற்றவேண்டும். அப்படித் தோற்றுகிற தென்று சொல்லவே கூடாது.

ச. ஆனால் சுதந்தரத்தினாலேயே சத்துத் தோற்றுவிக்கப் படுகிறதென்று சொல்லலாமா?

உ. சொல்லலாம்.

ச. அந்தச் சுதந்தரம் தானுந் தோன்றிக்கொண்டு சத்தைத் தோற்றுவிக்கின்றதா? தான்தோற்றாமற் சத்தைத் தோற்றுவிக்கின்றதா?

உ. சுதாவாகத் தோற்றிக்கொண்டுஅந்தச் சத்தைத் தோற்றுவிக்கிறதென்று சொல்லுவோமானால், அந்தச் சத்து எதனால் தோற்றப்படுகிறதென்று கேள்வியுண்டாய் இப்படிப் போகப்போக அனவஸ்தா தோஷம் வரும். ஆதலால் சுதந்தரம் தன் சுதாவாகவே தோற்றாமல் தோற்றிக்கொண்டிருந்து அந்தச் சத்தைத் தோற்றுவிக்கிறதென்று சொல்லவேண்டும்; மேலும் வேதாந்த பட்சத்தில் இரண்டு சத்து இல்லாதபடியினால், எந்தச் சத்து சுதாவாகத் தோற்றுகின்றதோ, அதற்கே சித்துத்வ மென்று யுத்தியினாலுஞ் சித்தித்தது.

ச. ஆனால் சித்தாகிய சத்துக்கு ஆனந்தத்வஞ் சித்திப்ப தெப்படி?

உ. சத்வியத்தினா லானந்தமுஞ் சித்தித் திருக்கின்றது.

ச. சித்தாகிய சத்துக்குச் சுதந்தரத்தினால் சத்வியத்வம் வருகின்றதா? சத்து விலட்சணத்தினால் வருகின்றதா?

உ. சுதந்திரத்தினால் வருகின்றதென்று சொல்லக்கூடாது.

ச. ஏன் சொல்லக்கூடாது?

உ. சத்துக்குச் சுதந்தரத்வ முபாதிமாத்திர மன்றிச் சுதாவா யில்லை.

ச. சத்விதிய விலட்சணத்தினால் சத்துக்குச் சத்விதியத்வம் வருகிறதென்று சொல்லுவோமே?

உ. சத்விதிய விலட்சணமும் ரச்சு சர்ப்பத்தைப் போலச் சத்தானபடியினால் அவ்வசத்தான சத்விதிய விலக்ஷணத்தினால் சித்தாகிய சத்துக்குச் சத்விதியத்வம் வருகிறதென்று சொல்லக்கூடாது. ஆகையினால், அந்தச் சத்துக்குச் சுதந்தரமும் சத்விதிய விலட்சணமும் சத்விதியத்வஞ் சம்பாதிக்கப்பட்ட பதார்த்தங்களா யில்லாதபடியினால், அந்தச் சத்விதியத்துக்கு அத்விதியத்வஞ் சித்தித்தது. அந்த அத்வைதமே யானந்த ரூபத்வமானபடியால், எப்போது அத்வைதஞ் சித்தித்ததோ, அப்போதே ஆனந்த ரூபத்வமுஞ் சித்தித்தது. இந்தப்படி யுத்தியினாலும் சத்தே சித்து, சித்தே யானந்த மென்று சித்தித்தது.

ச. சுருதி யுக்திகளினா லல்லவோ சித்தித்தது? அநுபவத்தினால் எங்கே சித்தித்தது?

உ. அநுபவத்தினாலுஞ் சித்தித்திருக்கின்றது.

ச. அதெப்படி?

உ. சுழுத்தியிற் சர்வப் பிராணிகளாலும் அநுபவிக்கப்பட்டதாய் ஒரு சுகந் தோற்றுகின்றதே; அந்தச் சுகஞ் சாக்கிர சொப்பனத்திற் றோற்றப்பட்ட சுகம்போல நானா ரூபமா யிராமல் சர்வப் பிராணிகளுடைய சுழுத்தியிலும் ஏக ரூபமா யிருக்கிறபடியினால், அந்தச் சுழுத்திச் சுகமே சத்தாயிற்று.

ச. அந்தச் சத்தாகிய சுழுத்திச் சுகத்திற்குச் சித்துத்வ மெப்படி ?

உ. தானுந் தோற்றிக்கொண்டு தன்னிடத்தி லாரோபிக்கப்பட்ட சர்வ பதார்த்தங்களையுந் தோற்றுவிக்கிறபடியினால் சித்துத்வமு முண்டு.

ச. அதெப்படி ?

உ. சுழுத்தியிலிருந் தெழுந்த புருஷனால் நான் சுகமாய் நித்திரைசெய்தேன், ஒன்றையு மறியா திருந்தேனென்று ஒரு சுகமும்அஞ்ஞானமுந் தோற்றப்படுகின்றன. இந்த நினைவு அனுபவ மில்லாமல் வாரா தாகையினால் இந்தச் சுகமும் அஞ்ஞானமும் சுழுத்திக் காலத்தில் அனுபவிப்பதாகத் தோற்றுகின்றது. அந்தச் சுகம் சுவரூப மானபடியினால் சுகம் அனுபவிக்கப்படுகிற தென்பது மோகமே. அஞ்ஞானமாத்திரமே யனுபவிக்கப் படுகின்றது.

ச. இப்படி யனுபவிக்கப்பட்ட அஞ்ஞானம் எவரால் தோற்றப்படுகிறது ?

உ. சுழுத்தி யவத்தையில் பிரகாச சாதனங்களாகிய ஆதித்த சந்திர நட்சத்திர மின்னல் அக்கினி சட்சுவாதிக ளில்லாமற் சுகமாத்திரந் தோற்றிக் கொண்டிருக்கிறபடியால், அந்தச் சுகத்தினால் அஞ்ஞானந் தோற்றப்படுகிறதென்றே சொல்லவேண்டும்.

ச. அஞ்ஞானத்தினாற் சுகந் தோற்றப்படுகிற தென்று சொல்லுவோமே ?

உ. அஞ்ஞானஞ் சடமாகையினால் அதனால் அந்தச் சுகந் தோற்றப்படுகிற தென்று சொல்லப்படாது.

ச. அந்தச் சுகம் தான் தோற்றிக்கொண்டு அஞ்ஞானத்தையுந் தோற்றுவிக்கின்றதோ? தான் தோற்றாமல் அஞ்ஞானத்தைத் தோற்றுவிக்கின்றதோ ?

உ. தான் தோற்றாமல் அஞ்ஞானத்தையுந் தோற்றுவிக்க மாட்டாது; ஆகையால் தான் தோற்றிக்கொண்டே யஞ்ஞானத்தையுந் தோற்றுவிக்கின்றது. அவ்வஞ்ஞானத்தினாற் சமஸ்த பிரபஞ்சமும் மலினமா யிருக்கிறபடியினாலும், அஞ்ஞானத்தையுந் தோற்றுவிக்கின்றபடியினாலும் அந்தச் சுகத்திற்கே சகல பதார்த்த அவபாசகத்வஞ் சித்தித்தது. இதுவே ஆத்மாவுக்குச் சர்வக்ஞத்வ மாகையினாற் சுழுத்தி யவத்தையிற் சத்தாகிய சுகத்திற்குச் சித் ரூபத்வமுஞ் சித்தித்தது.

ச. ஆனந்த ரூபத்வ மெப்படி ?

உ. இந்தச் சுழுத்திச் சுகத்திற்கு நிருபாதிக நிரதிசய சுகசொரூபத்வ மிருக்கின்றபடியால் ஆனந்த ரூபத்வமுஞ் சித்தித்தது. ஆதலால் அனுபவத்தினாலுஞ் சத்தே சித்து சித்தே யானந்தமென்று சித்தித்தது. இந்தப் பிரகாரத்தினால் ஆத்மாவுக்குச் சச்சிதானந்தங்கள் சுவரூபமாகையினால் சுவகத பேதமும், விசாதிகமாகிய அநாத்மா அசத்தாகையினால் விசாதிக பேதமும், ஆத்மாந்தர மில்லாதபடியினால் சுசாதிக பேதமு மில்லை. இப்படிச் சர்வாத்மனாயிருக்கிற வாத்மாவுக்குச் சுசாதிக விசாதிக சுவகத பேத ரூபமாகிய வஸ்துவினாற் பரிச்சேதமே யில்லை, மேலும் ஆத்மா

விபுவா யிருக்கிறபடியால் தேசத்தினாலும், நித்தியனா யிருக்கிறபடியால் காலத்தினாலும், சர்வாத்மனா யிருக்கிறபடியினால் வஸ்துவினாலும் பரிச்சேதமில்லா திருக்கின்றபடியினால் சச்சிதானந்த சொரூபமாகிய ஆத்மாவுக்கு அகண்டத்வஞ் சித்தித்தது. இவ்வகண்டத்வ சொரூபமாகிய சச்சிதானந்த லட்சணத்தைத் தெளிந்த சுவானுபவ ஞானாசாரியரிடத்தில் விசாரித் தறியவேண்டும்.

ச. இந்த விசாரத்திற்குப் பலம் யாது?

உ. சமஸ்த பிராணிகளுந் தேகமே நானென்று திடப்பிரக்ஞையா யிருப்பது போலத் தேகத்தினிடத்தில் நானென்கிற ஆத்ம புத்தி வாராமல் அகண்ட சச்சிதானந்த சொரூபமாகிய ஆத்மாவே நானென்கிற திடப் பிரக்ஞை பெறுவதே இந்த விசாரத்திற்குப் பலம். இப்படிச் சற்குரு முன்னிலையில் விசாரித்து ஆத்ம சுவரூபமே நானென்றறிகிறவனெவனோ, அவனே சர்வ சமுசாரத்தினுமிருந்து விடுபட்டவனும் பரிபூரண ஞானியுமென்று சுருதி ஸ்மிருதியாதிகள் சொல்லுகின்றன. இதிற் சம்சயமில்லை சித்தம்.

பதின்மூன்றாவது அகண்டத்வ நிரூபகம் முற்றிற்று.

---

பதினான்காவது

## அஞ்ஞானசொரூபநிரூபகம்.

சங்கை: அஞ்ஞான சொரூபம் எப்படிப்பட்டது?

உத்தரம்: தன்னைத் தான் அறியாதிருக்கிறதே யஞ்ஞானம்.

ச. எவர்களுந் தன்னைத் தான் அறியார்களா?

உ. அறியார்கள்.

ச. யாருந் தன்னைத் தான் அறியாதிருக்கிறார்களென்று சொல்லலாமா?

உ. அப்படி யிருக்கிறபடியினாற் சொல்லலாம்.

ச. ஆனால் தன்னை மற்றெப்படி யறிகிறார்கள்?

உ. நான் மனுஷன், நான் ஸ்திரீ, நான் புருஷன், நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரன், நான் பிரமசாரி, நான் கிரகஸ்தன், நான் வானப்பிரஸ்தன், நான் சந்நியாசி, நான் ஊரிகநாட்டான், நான் வேலிநாட்டான், நான் வெளிநாட்டான், நான் யோகி, நான் தெலுங்கன், நான் தமிழன், நான் கர்னாடகன், நான் மாராஷ்டன், நான் தத்துவாதி, நான் வைஷ்ணவன், நான் சைவன், நான் வீரசைவன், நான் பாகவதன், நான் பக்தன், நான் புராணிகன், நான் சாஸ்திரி, நான் கிருஷ்ணன், நான் ராமன், நான் நாராயணன், நான் இன்னானுக்குத் தகப்பன், நான் இன்னானுக்குப் பிள்ளையென் றிப்படி யறிகிறார்களே யல்லாமல் வேறில்லை.

ச. எவர்களுந் தங்களைத் தாங்கள் அறியார்களென்று முன்னே சொல்லி, இப்போது இப்படி யறிகிறார்களென்று சொன்னால் பூர்வ வசனத்திற்கும் இந்த வசனத்திற்கும் விரோதமில்லையா ?

உ. இல்லை ; தான் மனுஷனல்லாததினால் தன்னை மனுஷனென் றறிந்ததும், தான் ஸ்திரீ யல்லாததினால் ஸ்திரீயென் றறிந்ததும், புருஷ னல்லாததினால் புருஷனென் றறிந்ததும், பிராமண னல்லாததினால் பிராமணனென் றறிந்ததுந் தன்னை யறிந்ததல்லவே. ஆகையினா லெவர்களுந் தன்னைத்தா னறியார்களென்று சொல்லலாம்.

ச. மனுஷனாகிய தன்னை மனுஷனென் றறிந்தானேயன்றி, எருதென் றறியவில்லை; ஸ்திரீயாகிய தன்னை ஸ்திரீயென் றறிந்தானே யன்றிப் புருஷனென் றறியவில்லை; புருஷனாகிய தன்னைப் புருஷனென் றறிந்தானேயன்றிப் பசாசென் றறியவில்லை; பிராமணனாகிய தன்னைப் பிராமணனென் றறிந்தானே யன்றிச் சூத்திரனென் றறியவில்லை. இந்தப்படிச்சமஸ்தமானபேர்களும்யதார்த்தமாய்த் தங்களைத் தாங்க ளறிந்திருக்கிறபோது யாருந் தங்களைத் தாங்க ளறியார்களென் றெப்படிச் சொல்லுகிறது ?

உ. சொல்லலாம் ; தான் மனுஷனேயானாற் பூர்வ ஜன்மத்தில் மனுஷனாகவே யிருக்கவேண்டும். இனி வருகிற ஜன்மத்திலும் மனுஷனாகவே பிறக்கவேண்டும்; அப்படி யில்லையே. பூர்வ ஜன்மத்தில் தான் யக்ஷனோ, தேவதையோ, கந்தருவனோ, தாபரமோ, பசாசோ, எருதோ, கடாவோ, நாயோ, நரியோ வென் றறியப்படவில்லையே. தனக்கு மனுஷத்வஞ் சுதசித்தமானால் மேலைக்குந் தேவாதி சரீரம் பெறவேண்டுமென் றிந்தச் சரீரத்தில் விரும்பி யாகோபாசனாதிக் கிரியைகள் பண்ணாதிருக்கவேண்டும். பண்ணுகிறபடியால் தன்னை மனுஷனென் றறிந்த தறிவன்று; இந்தப் பிரகாரமே பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திராதிகளென்று தங்களை யறிந்த தறிவல்லவென்றே யறியவேண்டும்.

ச. எல்லோரு மிந்தப் பிரகார மறியார்களா ?

உ. சிலபேர்களில் லௌகிகமானவர்கள் சீவனென் றறிவார்கள். அந்த சீவ சொரூப மேதென்றுகேட்டால், அதை யறிந்து சொல்லத் தெரியாது. மனுஷனல்லாத தன்னை மனுஷனென் றறிந்தவ னெப்படி யறிந்தவ னல்லவோ, அதுபோலச் சீவனல்லாத தன்னைச் சீவனென் றறிந்தது மறிவல்ல.

ச. சாஸ்திரிகள் அறியார்களா ?

உ. அவர்களும் அறியாதவர்களே.

ச. சாஸ்திரிகள் ஆத்ம சொரூப மின்னதென்று நிச்சயித்துக்கொண்டிருக்க, அவர்களு மறியார்களென்று சொல்லுவ தெப்படி ?

உ. சாஸ்திரிகளிற் சாருவாகர் அனாத்ம ரூபமாகிய தூலதேகத்தையே யாத்மாவென்றும், பிராணோபாசகர் பிராணனையே யாத்மாவென்றும், பவுத்தரிற் சிலர் அனாத்மாவாகிய நாசமாகிற புத்தியையே யாத்மாவென்றும், சிலமூடர் சகவிலக்ஷணமாகிய சூனியத்தையே யாத்மாவென்றுஞ் சொல்

லுகிருர்கள். அவர்கள் சாஸ்திரிகளாளுலும் தன்னை யறிந்தவர்க ளல்ல. இன்னமும் மீமாஞ்சரும், சைவர்களும், இராமானுஜரும், மாத்துவரும் பரிபூரணமாகிய ஆத்மாவை யணுப்பிரமாணமென்று சொல்லுகிருர்கள். இன்னுந் தார்க்கிகர் ஆத்மாவை விபுத்வமென் றங்கீகரித்தபோதிலும் அனேகமென்றும, சடமென்றும், சடமாகிய ஆத்மாவுக்குச் சிற்குண மென்றும், அந்த ஆத்மாவுக்கு இச்சையாதி குணங்க ளுண்டென்றும், இருக்காகிய ஆத்மாவைத் திரிசியமா யங்கீகரித்தபடியிஞல் அவர்கள் சாஸ்திரிகளாளுலும் ஆத்மாவை யறிந்தவர்க ளல்ல.

ச. சாங்கிய யோகிகளும் ஆத்மாவை யறியார்களா ?

உ. அவர்களிற் சிலபட்சத்தார் ஆத்மாவுக்கு விபுத்வமும்,சச்சிதானந்த சொரூபத்வமும், அசங்கத்வமும் அங்கீகரித்தபோதிலும் ஆத்மா பலவென்றும், ஜகத்து நித்தியமென்றும், ஜீவேசுவராதிகள் பேதமென்றும் அங்கீகரித்த படியிஞல் அவர்கள் சாஸ்திரிகளாளுலும் ஆத்மாவை யறிந்தவர்க ளல்ல.

ச. ஆளுல் இந்தச் சாஸ்திரிகளெல்லாம் அறியாமற்போளுல் போகட்டும்; வேதாந்த சாஸ்திரிகளாகிலும் ஆத்மாவை யறியார்களா?

உ. அவர்களில் அமுமூட்சுக்களென்றும் முமூட்சுக்களென்று மிரண்டுவிதப் படுவார்கள். அவர்களுள் முமூட்சுக்க ளிரண்டுவிதமும், அமுமூட்சுக் கள் நான்கு விதமுமா யிருப்பார்கள்.

ச. அந்த நான்கு விதமானவர்கள் யாவர்?

உ. திரவியாதி விஷயப் பிரயோசன நிமித்தமும், பிரசித்திநிமித்தமும், தமக்குப் பூஜார்த்த வந்தன மரியாதையிநிமித்தமும் வேதாந்தம் படித்த பேர்களும், இதரமதத்திலிருந்துகொண்டு வேதாந்தசாஸ்திரத்தின் மர்மத்தையறிந்து தூஷிக்கக்கருதி படித்தபேர்களும் வேதாந்த சாஸ்திரிகளாளுலும் ஆத்மாவை யறிந்தவர்க ளல்ல.

ச. ஆளுல் இந்த நான்கு வகையானவர்களுக்கும் பலம் யாது?

உ. வேதாந்தத்தைத் தூஷிக்கவேண்டிப்படித்தவனுக்கு நரகமும், மிருகாதி ஜந்துப் பிராப்தியும் உண்டு. மற்ற மூவர்களுக்கோ வென்ருல், இந்தச் சரீரத்தில் திரவிய, கீர்த்தி, பூஜாதிபலமும மேதகாந்தத்திற் பக்குவத்துக் கேடாய்ச் சொர்க்காதிலோகப் பிராப்தி பலமும் வரும்.

ச. இனி முமூட்சுக்களி னிரண்டுவகை யெப்படி ?

உ. பிரதிபந்தம் நீக்கிப் படித்தவர்கள், பிரதிபந்தத்துடன் கூடிப் படித்த வர்களென் றிரண்டுவிதமா யிருப்பார்கள்.

ச. பிரதி பந்தமாவது யாது ?

உ. பூர்வகாரியமும், இனிமேல் நடக்குங் காரியமும், இப்போது நடக்குங் காரியமும், பூர்வாதிப் பழக்கமும் விடாமற் சிந்தனை வருகிறதே பிரதி பந்தம். இதனேடு கூடி வேதாந்தம் படித்தால், காலாந்தரத்திற் பிரதி பந்தந் தீர்ந்தபிறகு ஆத்ம சொரூபத்தை யறிந்து முத்தராவார்கள்.பிரதி பந்த மின்றி வேதாந்தம் படித்தவர்க ளிந்தச் சரீரத்திற்றுனே யாத்ம சொரூபத்தை யறிந்து முத்தி யடைவார்கள்.

ச. பூர்வம் யாருந் தன்னைத் தான் அறியார்களெ று சொல்லி; இப்போது பிரதிபந்தமின்றிப் படித்தவர்கள் ஆ மாவை யறியார்களென்று சொன்னால், பூர்வ வசனத்திற்கு மி த வசனத்திற்கும் விரோத மில்லையா ?

உ. பிரதிபந்த நீக்கிப் படித்து ஆத்மாவை யறிந்தவர்கள் ஆத்மாவே யாகையினால், யாரும் ஆத்மாவை யறியார்களென்று சொன்னதில் விரோத மில்லை.

ச. பூர்வம் தன்னைத் தானறியார்களென்றுசொல்லிப் பிறகு ஆத்மாவை யறியார்களென்று சொன்னால் விரோத மில்லையா ?

உ. தானே யாத்மாவானபடியால் யாருந் தன்னைத் தானறியார்களென்று சொன்னதற்கும், ஆத்மாவை யாரு மறியார்களென்று சொன்னதற்கும் விரோத மில்லை.

ச. ஆனால் தன்னை யறியாம லிருக்கப்பட்ட அஞ்ஞான மெதனாற் போம் ?

உ. ஆத்ம ஞானத்தினாலன்றி மற்றொன்றினாலும் போகாது.

ச. கர்மத்தினாற் போமென்று சொல்லுவோமே ?

உ. கர்மம் அஞ்ஞான விரோதி யல்லாதபடியினால் அஞ்ஞானத்தைப் போக்க மாட்டாது. திருஷ்டாந்தத்தில் கடம் கடாந்தரத்திற்கு விரோத மில்லாதபடியினால் கடத்தைக் கடாந்தர மெப்படிப் போக்கமாட்டாதோ, அப்படியே கர்மமும் அஞ்ஞானத்திற்கு விரோத மல்லாதபடியால் அஞ்ஞானத்தைப் போக்கமாட்டாமல் மேலுமேலும் விருத்தியே செய்விக்கும்.

ச. அதெப்படி ?

உ. அமாவாசை நிசியிருட்டில் வந்த மேகாவரணம் அவ்வமாவாசை நிசியிருட்டுக்கு விரோத மில்லாதபடியினால், அவ்விருட்டைப் போக்காமல் பின்னும் விருத்தி செய்விப்பதுபோல, கன்மமும் அஞ்ஞானத்தைப் போக்காமல் பின்னும் விருத்தியே செய்விக்கும். அல்லாமலும் அமாவாசை நிசி யிருளில் மார்க்க மறிந்து செல்லும் புருஷனுக் கெதிரே யொரு மனுஷன் வந்தால், அவன் பிராமணனென்றுஞ் சூத்திரனென்றுந் தோற்றாமல், யாரோ புருஷன் வருகிறானென்று சாமானியமாகத் தோற்றப்படுகிறதுபோலும், ஒருமாடெதிர்ப்பட்டால் ரிஷபமென்றும் எருமையென்றும் பசுவென்றுந் தோற்றாது சாமானியமாகத் தோற்றப்படுகிறதுபோலும், அந்தச் சமயத்தில் மேகாவரணமு முண்டானால், அவ்வந்தகாரத்திற்குஅதிக விருத்தியை யுண்டாக்கிச் சாமானியமாகத் தோற்றிய மனுஷாதிகளையும் பரிச்சிதந் தோற்றவொட்டாமற் செய்கிறதுபோலவும் கர்மமும் அஞ்ஞான விருத்தி செய்து ஆத்மாவைப் பரிச்சிதந் தோற்றவொட்டாமற் செய்விக்கும்.

ச. திருஷ்டாந்தத்தில் மேகாவரணமும் அந்தகார விருத்தி செய்வித்து மனுஷாதிகளைப் பரிச்சிதந் தோற்றாமற் செய்வது பிரத்தியட்சமாகக் கண்டோம். தாஷ்டாந்தத்தில் கன்மம் அஞ்ஞான

*விருத்தி செய்வித்து நித்தியமாய் லபித்திருக்கிற ஆத்மாவை எப்படித் தெரியவொட்டாமற் செய்யும்?

உ. அஞ்ஞானமான இருளுடன் கன்மமான மேகமுங் கூடினால் மூடபட்ட அந்தகாரம்: ரத்தினம், புத்தகம், சாளக்கிராமம், உருத்திராட்ச முதலிய பதார்த்தங்கள் கையி லகப்பட்டிருந்தாலும் இது வஜ்ரயற்கல்லோ, ரத்தினமோ; இது வேதமோ, சாஸ்திரமோ; இது சீதா ராமமோ, லட்சுமி நாராயணமோ; இது சண்முகமோவென் றுள்ளபடி யிருந்தவற்றை யறியக்கூடாமல் மறைப்பிக்கிறதுபோல, அந்தக் கர்மத்தோடுங் கூடிய அஞ்ஞானமும் நித்தியமாய் லபித்திருக்கிற ஆத்மாவைத் தோற்றவொட்டாமற் செய்விக்கும்.

ச. அந்தகாரத்தில் கையி லகப்பட்ட ரத்னாதிகளுடைய யதார்த்த ஞானம் எப்படி வரும்?

உ. சூரியோதயமாகி அந்தகாரம் நசித்தபிறகு கையிலிருக்கிற ரத்னாதிகளுடைய யதார்த்த ஞானந் தோற்றப்படுகிறதுபோல, தார்ஷ்டாந்தத்திலும் கன்மத்தினால் விருத்தியாகாநின்ற ஆவரணமான அஞ்ஞான சத்தாவரணமுஞ் சித்தாவரணமும் பிரமஞான விசார சூரியோதயத்தினால் நசித்த பிறகு ஆத்மா யதார்த்தமாகத் தோற்றும்.

ச. திருஷ்டாந்தத்தில் சூரியோதயத்தினால் போன பொருள் எது? இருக்கிற பொருள் எது?

உ. சூரியோதயத்தினால் ரத்னாதி ரூபத்தைத் தெரியாது மறைத்த அந்தகார மாத்திரம் நசித்துப்போய் மேகாவரண மாத்திர மிருக்கும்.

ச. அந்த மேகாவரண மென்னசெய்யும்?

உ. சிலருக்குச் சுகமுஞ் சிலருக்குத் துக்கமுஞ் செய்விக்கும்.

ச. யாருக்குச் சுகமும் யாருக்குத் துக்கமுஞ் செய்விக்கும்?

உ. வழிநடப்போர் கிருஷிபண்ணுகிறவர்களாகிய இவர்களுக்குச் சுகமும், நெல் உலர்த்துகிறவர், வைக்கோ லுலர்த்துகிறவர், ஸ்நானம் பண்ணுகிறவர், வாய்வு சரீரக்காரர்க ளாகிய விவர்களுக்குத் துக்கமுஞ் செய்விக்கும்.

ச. தார்ஷ்டாந்தத்திற் போகிறது எது? இருக்கிறது எது?

உ. ஞானோதயத்தினால் அஞ்ஞானம் நசித்துப்போம். அஞ்ஞான காரியமான தேகேந்திரியாதிக ளிருக்கும்.

ச. அப்படி யிருக்கப்பட்ட தேகேந்திரியாதிகள் அஞ்ஞானிகளுக்கு என்ன செய்விக்கும்?

உ. சுக துக்கங்களைக் கொடுத்துக்கொண் டிருக்கும்.

ச. மேகாவரணம் அந்தகார காரிய மல்லாதபடியினால் அந்தகாரம் நசித்தும் இருக்கலாம்; தேகேந்திரியாதிகள் அஞ்ஞான காரியமாகையினால், காரணமான அஞ்ஞானம் நசித்தபிறகும் எப்படி யிருக்கும்?

உ. திருஷ்டாந்தத்தில் கற்றாழையும் புகையும் அம்புவேகமு மிருப்பதுபோ லிருக்கும்.

ச. அதெப்படி?

உ. கற்றாழையின் காரணமான வேர் போயும் காரியமான கற்றாழை யிருப்பதுபோலும், காரணமான அக்கினி போயும் காரியமான புகை யிருப்பதுபோலும், காரணமான வில்லொடிந்தும் அதனால் விடுபட்ட காரியமாகிய அம்புவேக மிருப்பதுபோலும் தேகேந்திரியாதிகளின் காரணமான அஞ்ஞானம் நசித்துப்போனாலும் காரியமாகிய தேகேந்திரியாதிகளிருக்கும்.

ச. தேகேந்திரியங்களுக் கெப்போது நாசம் வரும்?

உ. மேகாவரணத்தின் நாசத்திற் கொரு நியம மில்லாததுபோல, தேகேந்திரியாதிகளுடைய நாசத்திற்கும் நியம மில்லை. பிராரத்த நாசத்தில் தேகேந்திரியாதிகளும் நாசப்படும்.

ச. மேகாவரணம் அந்தகார விருத்தி பண்ணுவிக்கிறது பிரத்தியட்சமாகக் கண்டோம்; கன்மம் அஞ்ஞான விருத்தி பண்ணுவிக்கிறது பிரத்தியட்சமாகக் காணோமே?

உ. திரிவித காரணங்களினாற் செய்யப்படுகிற கன்மம் அகர்த்தாவாகிய ஆத்மாவைக் கர்த்தாவாகவும், அபோக்தாவாகிய ஆத்மாவைப் போக்தாவாகவும், சுக துக்க மின்றிய ஆத்மாவைச் சுக துக்கியாகவும் செய்கிறபடியால், அஞ்ஞான விருத்தி பண்ணுகிறதென்று பிரத்தியட்சமாய்க் காணலாம். இந்தக் கன்மம் அஞ்ஞானத்தைப் போக்கமாட்டாது.

ச. பின்னை யெதனாற் போம்?

உ. ஆத்மஞானத்தினால்தான் போகவேண்டுமெல்லாமல், வேறொன்றினாலும் போகாது.

ச. இந்த ஆத்மஞான மெதனால் வரும்?

உ. விசாரணையினால் வரவேண்டும்.

ச. அப்படி யேன் சொல்லவேண்டும்? திருஷ்டாந்தத்தில் அக்கினியானது பசியைப் போக்காமல் விருத்தி பண்ணினபோதிலும், அரிசியை யன்னாகாரமாய்ப் பரிணமிக்கப் பண்ணிப் பசியைப் போக்கடிப்பதுபோல, தாஷ்டாந்தத்தில் கன்மமானது அஞ்ஞானத்தைப் போக்காமல் விருத்திபண்ணினபோதிலும் சித்த விருத்தியாகிய அஞ்ஞானத்தைப் போக்கிற ஞானாகாரமாய்ப் பரிணமிக்கப் பண்ணி, அஞ்ஞானத்தைப் போக்குமென்று சொல்லலாமே?

உ. ஆனால் அக்கினியானது அரிசியை யன்னாகாரமாகப் பரிணமிக்கப்பண்ணிப் பசியைப் போக்குமென்பது பிரத்தியட்சமாகக் கண்டோம்; தாஷ்டாந்தத்தில் கன்மமானதுஅஞ்ஞான நிவிர்த்தியாகிற ஞானத்தை யுண்டுபண்ணி, அந்தவழியினால் அஞ்ஞானத்தைப் போக்குமென்பது கூடாது. ஏனென்றால் சித்தவிருத்தியைக் கர்த்தத்வாகாரமாகப் பரிணமிக்கப்

பண்ணுகிற கன்மம் அஞ்ஞானத்தைப்போக்கிச் சித்தவிருத்தியை அகர்த்தத்வாகாரமாகப் பரிணமிக்கப்பண்ணுகிற ஞானத்தைக் கொடுக்கமாட்டாது. ஆதலால் கன்மத்தினால் ஞானம் வராது. விசாரணையினாலேயே வரவேண்டும்.

ச. எந்த விசாரணையினால் வரவேண்டும்?

உ. ஆத்மானாத்ம விசாரணையினாலேயே வரவேண்டும்.

ச. அதற்குத் திருஷ்டாந்த மெப்படி?

உ. அர்த்தத்துடன் கூடியிருக்குங் காயத்திரியைப் புருஷர் உச்சரித்தாலும் அதனருத்தம் விசாரிக்காமையினால் தெரியவில்லை. அந்த அர்த்தந் தெரியவேண்டிச் சேதுஸ்நானமும், கங்கா சாகரத்தில் ஆயிரம் வருஷம் அகமருஷண ஸ்நானமும், லட்சம் பிராமண போஜன முதலானவைகளுஞ் செய்தாலும், பஞ்சாக்கினி மத்தியிலிருந்து பதினாயிரம் வருஷந் தபசு பண்ணினாலும், நூறு அசுவமேத யாகம் லட்சங் காயத்திரி ஜபம் இவைமுதலானவைகளை அனேக நாள் செய்தாலும் அந்தக் காயத்திரிக் கர்த்தந் தெரியாது; அந்த அர்த்தம் அறிந்தவர்களிடத்திற்போய் அவர்களை வழிபட்டு விசாரிக்க அவர்கள் மனமிரங்கி அதனருத்த மின்னதென்றுசொல்ல அதைக் கேட்டு மனதினால் யூகித்தால் தெரியவரும். அதுபோலத் தாஷ்டாந்தத்தில் மிருத்திகா ஸ்நானமுதலான கர்மங்களினாலும் ஆசார நியம நிஷ்டைகளினாலும் ஆத்மஞானம் வராது. ஆத்மானாத்ம விசாரணையினாலேயே வரவேண்டும்.

ச. இதற் கனுபவமுண்டோ?

உ. சர்வானுபவ சுத சித்தமா யுண்டாயிருப்பதைக் கர்மத்துவாரா எடுத்துச் சொல்லுகிறோம். ஸ்நான சந்தியாவந்தன அனுஷ்டான ஜப தபாதி யுபாசனைகளும், தேவ பூஜை அதிதி பூசார்ச்சனைகளும், வைசுவதேவ தீர்த்த ஸ்நான முதலானவைகளுங் கர்மமென்று சொல்லப்படும். இந்தக் கர்மங்களில் இதுவரைக்கும் நாமெம்மாத்திரமானாலுஞ் செய்துகொண்டு வந்தோமல்லவா? அப்படிச் செய்துவந்த கர்மங்களினால் இதுவரையில் நமது ஸ்வரூபந் தெரியாதபடியினால், எவர்களுக்கும் கன்மத்தினால் ஆத்ம ஞானம் வரமாட்டாது. விசார ஞானத்தினாலேயே யாத்ம ஞானம் வரவேண்டியது.

ச. அதெப்படி?

உ. ஒரு புருஷனொருவனை இன்றைக்குத் திதி வார நட்சத்திர யோக கரணங்க ளென்னவென்றுகேட்டால், அவன் விசாரித்திருந்தால் இன்றைக் கின்னவாரம், இன்ன திதி, இன்னநட்சத்திரம், இன்ன யோகம், இன்ன கரணமென்று சொல்லுவான். விசாரியாதிருந்தால் நான் விசாரிக்க வில்லை, ஆதலால் நானறியேனென்று சொல்லுவான். அவ்வளவேயல்லாமல் நான் ஸ்நானம் பண்ணவில்லை, சந்தியாவந்தனம் பண்ணவில்லை, ஆசாரமா யிருக்கவில்லை, கஷாயந் தரிக்கவில்லை, பூஜை பண்ணவில்லை, ஆகையால் நானறியேனென்று சொல்லமாட்டான். மேலும் கோவிலில் தேவதைகளுக்குப் பூஜை நிவேதனமாயிற்றாவென்று கேட்டால், அவன் விசாரித்திருந்தால் ஆயிற்று, ஆகவில்லை யென்றுசொல்லுவான். இல்லாவிட்டா லெனக்குத் தெரியாது, நான் விசாரிக்கவில்லை

யென்று சொல்லுவான். அவ்வளவே யல்லாமல் நான் ஸ்நான சந்தியா வந்தன அனுஷ்டான ஜப தபங்கள் பண்ணுதபடியினால் அறிவேனென்று சொல்லமாட்டான். இப்படியே உலகத்திலுள்ள சர்வப்பிராணிகளினாலும், எந்தெந்தவஸ்து விசாரிக்கப்படுகின்றதோ, அந்தந்த வஸ்து ஞானம் வருமன்றி விசாரியாத வஸ்து ஞானம் வரமாட்டாது. அது போலத் தாஷ்டாந்தத்திலும் ஆத்ம ஞானம் சமஸ்த பிராணிகளுக்கும் அனுபவ சொரூபமாகிய ஆசாரியர் முகமாய் விசாரித் தறிவதனால் வர வேண்டுமேயன்றிக் கர்ம வுபாசனைகளினால் வரமாட்டாது.

ச. கன்மத்தினால் ஞானம் வருமென்று சுருதியாதிகள் சொல்லியிருக்க, அந்தச் சுருதியாதிகளுக்கு விரோதமாய்க் கன்மத்தினால் ஞானம் வாராதென் றெப்படிச் சொல்லலாம்?

உ. ஏகதேசமாகிய நிஷ்காம கர்மமே ஞானத்திற்குப் பரம்பராசாதனமன்றி நானாவித கன்மஞ் சாதன மாகாது. ஆகையினால் அப்படிச் சொன்ன சுருதியாதிகளுக்கும் விரோத மில்லை.

ச. ஆனால் கன்ம மெத்தனை விதம்?

உ. லௌகிகமென்றும், வைதிகமென்று மிரண்டுவிதம். இவ்விரண்டிலுள் லௌகிக கர்மஞ் சீவனத்துக் கேதுவாகுமன்றி யதனால் ஞானம் பிறவாது. ஏனைய வைதிக கர்ம மைந்துவிதமா யிருக்கும்.

ச. அது எப்படி?

உ. நித்திய நைமித்திய காமிய நிஷித்த பிராயச்சித்தமென் றைந்துவிதம். அவற்றுள் காமிய கன்மத்தினால் ஞானம் வாராது; சொர்க்க மாத்திரம் வரும். நிஷித்த கன்மத்தினால் காலசூத்திராதி நரகங்கள் வரும். பிராயச்சித்த கன்மத்தினால் புருஷனுக்குக் கர்மத்தில் அதிகாரத்துவ முண்டாக்கிப் பிரத்தியவாயத்தைப் போக்கடிக்கும். ஆதலா லிம்மூன்று கன்மமும் ஞான சாதக மல்லாமற் போயின. நித்திய நைமித்திய கன்மங்களோ, அவைகள் சாத்துவித ராசத தாமதமென மூன்றுவித கன்மங்களாயிருக்கும். அவற்றுள் ராசத தாமத கர்மங்க ளிரண்டுஞ் ஜன்ம ஜன்மாங்களையுந் துக்க சுகங்களையுங் கொடுக்குமன்றி யவ்விரண்டினாலும் ஞானம் வராது. சாத்துவித கர்மமாத்திரத்தினால் சித்தசுத்தி வரும். அந்தச் சித்தசுத்தித் துவாரா, ஞானத்திற்குப் பரம்பரா சாதனமென்று சொல்லப்படும். இதுவே சுருதியாதிகளின் சம்மதமென் றறியவேண்டியது. நித்திய நைமித்திய ரூபமாகிய சாத்துவித கர்மத்தினால் தன்னை விசாரிக்கச் சித்த சுத்தி வரும். சித்த சுத்தித் துவாரா, நித்தியாநித்திய வஸ்து விவேகம் வரும். நித்தியாநித்திய வஸ்து விவேகத்துவாரா, இகமுத்திரார்த்த பலபோகவிராகம் வரும். இகமுத்திரார்த்த பலபோகவிராகத்துவாரா, சமாதி ஷட்க சம்பத்தி வரும். சமாதி ஷட்க சம்பத்தித் துவாரா, முமூட்சுத்வம் வரும். முமூட்சுத்வத் துவாரா, சற்குரு லாப முண்டாம். சற்குரு லாபத் துவாரா சிரவணமும், சிரவணத் துவாரா மனனமும், மனனத் துவாரா நிதித்தியாசனமும், நிதித்தியாசனத் துவாரா உள்ளபடி யிருக்கிற ஆத்ம ஞானமும் வரும். இந்தப்படி ஏகதேசமான கன்மம் ஞானத்திற்குப் பரம்பரா சாதனமென்றும், விசார முண்டாவதுவே சாட்சாத் சாதனமென்றுஞ் சொல்லவேண்டியது.

ச. இந்தத் திருஷ்டாந்தத்திற் கனுபவமுண்டோ?

உ. பசித்தவர்களுடைய பசியைப்போக்கித் திருப்தியாக்குவதற்குப் பக்குவமாகிய அன்னமே சாட்சாத் சாதனமும், உழவு முதலிய பயிர்களே பரம்பரா சாதனமுமா யிருப்பதுபோல, அஞ்ஞானத்தைப் போக்கி யாத்மானுபவ திருப்தியாக்குவதற்கு நிஷ்காம கன்மமே பரம்பரா சாதனமும், விசார ஞானமே சாட்சாத் சாதனமுமா யிருக்கின்றன. இந்தப்படி அஞ்ஞான சொரூபத்தை அருளே திருமேனியான ஆசிரியர் முன்னிலையிற் சந்தேக விபரீதமற விசாரித் தறிகிறவ னெவனோ, அவனே கிருதகிருத்தியனாகிய பிரமவித்தென்று சுருதி ஸ்மிருதியாதிகள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

பதினான்காவது அஞ்ஞானசொரூப நிரூபகம் முற்றிற்று.

---

பதினைந்தாவது

# ஞானாஞ்ஞானசொரூப நிரூபகம்.

சங்கை: ஞானமாவது யாது? அஞ்ஞானமாவது யாது?

உத்தரம்: தன்னை யதார்த்தமா யறிகிறதே ஞானம்; தன்னை யதார்த்தமா யறியாததே யஞ்ஞானம். இன்னமும் நானே பிரமமென் றறிகிறதே ஞானம்; நான் மனுஷனென் றறிகிறதே யஞ்ஞானம். இன்னமும் அத்துவிதியனாகிய ஆத்மாவைத் துவிதியனாகவும், அபரிச்சின்னனாகிய ஆத்மாவைப் பரிச்சின்னனாகவும், அசங்கனாகிய ஆத்மாவைச் சங்கனாகவும், அகர்த்தா அபோக்தாவாகிய ஆத்மாவைக் கர்த்தா போக்தாவாகவுந் தோற்றுவிக்கிறதே அஞ்ஞானம். அத்விதியனாகிய ஆத்மாவை யத்விதியனாகவும், அபரிச்சின்னனாகிய ஆத்மாவை யபரிச்சின்னனாகவும், அசங்கனாகிய ஆத்மாவை யசங்கனாகவும், அகர்த்தா அபோக்தாவாகிய ஆத்மாவை அகர்த்தா அபோக்தாவாகவும் தோற்றுவிக்கிறதே ஞானம்.

ச. அத்விதியனாகிய ஆத்மாவைத் துவைதனாகத் தோற்றுவிக்கிறது அஞ்ஞானமென்றால் ஆத்மா துவைதனாகத் தோற்றுகிறதோ?

உ. நீ நான் அவன் இவன் தேவதத்தன் எக்ஞதத்தன் விஷ்ணுமித்திரனென் றிப்படி யனேகவிதமாகத் தோற்றுகின்றது.

ச. அபரிச்சின்னனாகிய ஆத்மாவைப் பரிச்சின்னனாகத் தோற்றுவிக்கிறது அஞ்ஞானமென்றால் ஆத்மா பரிச்சின்னனாகவுந்தோற்றுகின்றதோ?

உ. இந்த வீட்டிலிருந்து மிந்த வீட்டி லில்லை; இந்தத் தேசத்தி லிருந்து மிந்தத் தேசத்தி லில்லை யென் றிப்படி யனேக விதமாகத் தோற்றுகின்றது.

ச. அசங்கனாகிய ஆத்மாவைச் சங்கனாகத் தோற்றுவிக்கிறது அஞ்ஞானமென்றால், ஆத்மா சங்கனாகத் தோற்றுகின்றதோ?

உ. அவர்களுடன் கூடிக்கொண்டிருந்தேன், இவர்களுடன் கூடிக்கொண்டிருந்தேன், தாயுடன் கூடிக்கொண்டிருந்தேன், தகப்பனுடன் கூடிக்

கொண்டிருந்தேன், தமையன் தம்பியுடன் கூடிக்கொண்டிருந்தேனென் றிப்படி யனேகவிதமாகத் தோற்றுகின்றது.

ச. அகர்த்தாவாகிய ஆத்மாவைக் கர்த்தாவாகத் தோற்றுவிக்கிறது அஞ்ஞானமென்றால், ஆத்மா கர்த்தாவாகத்தோற்றுகின்றதோ?

உ. நான் ஸ்நானம் பண்ணினேன், சந்தியாவந்தனம் பண்ணினேன், அவுபாசனம் பண்ணினேன், அக்கினிஷ்டோமம் பண்ணினேனென் றிப்படி யனேகவிதமாகத் தோற்றுகின்றது.

ச. அபோக்தாவாகிய ஆத்மாவைப் போக்தாவாகத் தோற்றுவிக்கிறது அஞ்ஞானமென்றால், ஆத்மா போக்தாவாகத் தோற்றுகின்றதோ ?

உ. நான் போசனம் பண்ணினேன், பால்குடித்தேன், வாழைப்பழஞ் சாப்பிட்டேன், மாம்பழம் பட்சித்தேனென் றிப்படி யனேக விதமாகத் தோற்றுகின்றது.

ச. அத்விதியனாகிய ஆத்மாவை அத்விதியனாகத் தோற்றுவிக்கிறது ஞானமென்றால் அப்படி ஆத்துமா அத்விதியனாகத் தோற்றுகின்றதோ ?

உ. ஆம்.

ச. அத்விதியமாவது யாது ?

உ. சுசாதிக விசாதிக சுவகத பேத ரஹிதத்வமே அத்விதியம்.

ச. அதற்குத் திருஷ்டாந்தம் யாது ?

உ. விருட்சத்திற்கு விருட்சாந்தரம் சுசாதிகம், சிலாதிகள் விசாதிகம், பத்திர புஷ்ப பலம் சுவகதம். இம்மூன்று பேதமுஞ் சகசொரூபமாகிய பதார்த்தங்களுக்கெல்லா முண்டு. இது திருஷ்டாந்தம். ஆத்மாவினிடத்தில் இம்மூன்று பேதங்களு மில்லை யென்பது தாஷ்டாந்தம்.

ச. ஆத்மாவினிடத்தில் சுசாதிக விசாதிக சுவகதமும், அதின் பேதமும் பிரசித்தியாய்த் தோற்றப்பட்டா லல்லவா ஆத்மா சுசாதிக விசாதிக சுவகத பேத ரஹிதமென்று சொல்லலாம்? அப்படிப் பிரசித்தியாய்த் தோற்றுகின்றதா ?

உ. வஸ்துத்வ சாமானியத்தினால் பிரசித்தியாய்த் தோற்றுகின்றது.

ச. வஸ்துத்வ சாமானியமாவது யாது ?

உ. ஒரு வஸ்து இருக்கிற தென்பதும், ஒரு வஸ்து வென்று தோற்றப்படுவதுமே வஸ்துத்வ சாமானியம்.

ச. ஆனால் அனாத்ம வஸ்துவினிடத்தில் சுசாதிக விசாதிக சுவகதமும், அதின் பேதமுங் கண்டோம். அப்படியே ஆத்மாவும் ஒரு வஸ்து வாகையினால், அவ்வாத்மாவினிடத்திலும் சுசாதிக விசாதிக சுவகதமும், அதின்பேதமு முண்டென்று பிரசித்தியாயி

ற்று. ஆதலால் சுசாதிக விசாதிக சுவகத பேத ரகிதமென்று சொன்னமாத்திரத்தினால் அந்த அர்த்தம் நமக்குப்புத்தியிலேறுவ தெப்படி ?

உ. ஆத்மா சத்ரூபம்; அப்படிச் சத்ரூபமாகிய ஆத்மாவுக்குச் சுதந்தரமில்லை யல்லவா? ஆகையினால் சுசாதிக விசாதிக சுவகத பேத ரகிதமென்று புத்தியில் யூகித்தறிந்தாலேறும்.

ச. அதெப்படி? நீ நான் அவன் இவன் தேவதத்தன் எக்கியதத்தன் ராமன் கிருஷ்ணனென்கிற இவர்களிருக்கிறார்களென்றும், பிருதிவுசதி அப்புசதி தேயுசதி வாயுசதி ஆகாசசதி யென்றும் சத்துக்கு அனேக பேதங் காணப்படுகிறபடியினால், ஆத்மா சுசாதிக விசாதிக சுவகதபேத ரகிதமென் றெப்படி யறியலாம்?

உ. எல்லாவற்றிலும் சதி சதி யென்று சொல்லப்பட்டு, சத்து ஏகரூபமாய்க் காணப்படுகிறபடியினால், ஆத்மா சுசாதிக விசாதிக சுவகத பேத ரகித மென்றே சொல்லலாம்.

ச. அப்படிச் சொல்லப்படாது; பூர்வம் சத்து ஏகரூபமா யிருக்கிற படியா லதற்குப் பேத மில்லையென்று சொல்லியபடி, கட கட வென்கிறது மேக ரூபமாயிருக்கிறபடியால் அங்கும் பேத மில் லாமற் போகவேண்டும். அதற்குப் பேத மிருப்பதால், சத்து க்கு ஏக ரூபத்தினாற் சுசாதிகமுஞ் சுசாதிக பேதமு மில்லை யென்பது கூடுமோ ?

உ. அந்தக் கடாதிகளினிடத்தில் ஆகார வைலட்சணிய மிருக்கிறபடியினால் அங்கே சுசாதிகமும், சுசாதிக பேதமு மிருக்கின்றன; சத்தினிடத்தில் ஆகார வைலட்சணிய மில்லாதபடியினால் சுசாதிகமுஞ் சுசாதிகபேதமு மில்லை. ஆதலாற் சத்தாகிய ஆத்மாவுக்குச் சுசாதிகமுஞ் சுசாதிகபேதமு மில்லையென்றே சித்தித்தது.

ச. சத்தாகிய ஆத்மாவுக்கு விசாதிகமும் விசாதிக பேதமு முண் டோ ? இல்லையோ ?

உ. ஆத்மா சத்ரூப னாகையா லில்லை.

ச. ஆத்மாவுக்கு விசாதிகமாவது யாது ?

உ. அசத்தாகிய பிரபஞ்சமே விசாதிகம். இவ்வசத்தாகிய பிரபஞ்சம் சத்தா கிய ஆத்மாவுக்குத் துவிதபட்சஞ் சம்பாதிக்கமாட்டாது. திருஷ்டாந்தத் தில் அசத்தான மலடி பிள்ளை தாயைப் புத்திரவதி யாக்காததுபோல அசத்தான பிரபஞ்சமு மாத்மாவுக்குத் துவிதபட்சஞ் சம்பாதிக்கமாட் டாது. ஆதலால் சத்தாகிய ஆத்மாவுக்கு விசாதிகமும் விசாதிக பேதமு மில்லையென்று சித்தித்தது.

ச. சச்சிதானந்தத்தினால் ஆத்மாவுக்குச் சுவகதமும் சுவகத பேதமு முண்டோ ? இல்லையோ ?

உ. திருஷ்டாந்தத்தில் விருட்சத்திற்குப் பத்திர புஷ்ப பலாதிகளினால் வர ப்பட்ட சுவகதமும், சுவகதபேதமு மெப்படி யிருக்கின்றனவோ, அப்

படியே ஆத்மாவுக்குச் சச்சிதானந்தத்தினுற் சுவகதமுஞ் சுவகத பேதமு மில்லை. விருட்சத்திற்குப் பத்திர புஷ்ப பலாதிகளினுல் சுவகதமும் சுவகத பேதமும் பிரத்தியட்சமாகத் தோற்றுகிறதினு லுண்டு. சச்சிதானந்தங்கள் ஆத்மாவினிடத்தில் சுவரூபமாகையினுல் சப்தமாத்திரத்திற் பேதந் தோற்றினுலும் பிரத்தியட்சத்திற் பேதந் தோற்றவில்லை. ஆதலால் சச்சிதானந்தத்தினு லாத்மாவுக்குச் சுவகதமுஞ் சுவகத பேதமு மில்லை யென்பது கூடும்.

ச. அப்படிச்சொல்லுவதுகூடாது. ஏனெனில் சப்தபேதமிருப்பதினுலும், அஸ்த கர பாணி சப்தத்தைப்போற் பரியாய நாம சப்த மல்லாதபடியினுலும், சப்த பேதத்தினுல் அர்த்த பேத முண்டானபடியினுலும் சச்சிதானந்தத்தினு லாத்மாவுக்குச் சுவகதமும் சுவகதபேதமு முண்டென்று ஏன் சொல்லப்படாது?

உ. சச்சிதானந்தத்தில் சப்தபேதம் அர்த்தபேதமுண்டாயிருந்தாலும் அது பேதமல்ல.

ச. அது எப்படி?

உ. திருஷ்டாந்தத்தில் அக்கினியினிடத்தில் சிவப்பு உஷ்ணம் பிரகாசமிருக்கின்றன. இம்மூவிதமான சப்த பேதமும், அர்த்த பேதமுந் தோற்றினுலும் அஸ்த கர பாணி சப்தத்தைப்போற் பரியாய நாம சப்தமாகாமல் ஏகார்த்தமாய் விளங்குவதுபோலச் சச்சிதானந்தமும் ஏகார்த்தமாகிய ஆத்ம சொரூபமாகப் பிரகாசிக்கின்றது.

ச. அக்கினிக்குச் சொரூபமாகிய ரோகிதோஷ்ணப் பிரகாசத்திற்கு ஒரு சமயத்தில் பிரத்தியட்சமாய்ப் பிரதிபந்தங் காணப்படுகிறபடியினு லெப்படிச் சொரூபமாகும்?

உ. அக்கினிக்குத் தர்மத்வமும் குணத்வமும் சொன்னுலுஞ் சொல்லலாம். ஆத்மாவின் சச்சிதானந்தத்திற்குச் சர்வாத்மனுய்ப் பேதஞ் சொல்லக் கூடாது.

ச. ஏன் சொல்லக்கூடாது?

உ. சுருதிக்கு விரோதம் வருகிறபடியினுலும் ஆத்மா நிரவயவனுகையாலுஞ் சொல்லக்கூடாது. ஆதலாற் சச்சிதானந்தங்கள் அகண்டமே; அகண்டமாகையினுல் அத்வைதமேயாம்.

ச. அஃதெப்படி?

உ. சத்தே சுவயந் தோற்றுகிறபடியினுற் சித்தாயிற்று. அந்தச் சித்தாகிய சத்தே யிரண்டாம்வஸ்து வல்லாதபடியினுல் அதுவே யானந்தமாயிற்று. ஆதலாற் சச்சிதானந்தத்திற்குப் பேதமின்றி யாத்மாவுக்கு அத்விதியத் வஞ் சித்தித்தது.

ச. யுக்தி யுக்தமாகிய அனுபவ மின்றி யிப்போது சொன்ன வசன மாத்திரத்தினுல் ஆத்மா அத்விதிய னென்பது புத்தியி லெப்படி யேறும்?

உ. விசாரித்தால் புத்தியி லேறும்.

ச. அதெப்படி ?

உ. இல்லாத வஸ்து இருக்கிறதென்று சொல்லக்கூடாது. ஆகையினால் சத்து இருக்கிறதென்பதிற் சந்தேக மில்லை.

ச. அசத்துத் தோற்றப்படுகிறதே?

உ. தோற்றுத வஸ்து இருக்கிற தென்பது விவேகித்தால் விஷயமாகாதபடியினால் சத்துத் தோற்றுகிறதென்றே சொல்லவேண்டும்.

ச. அப்படித்தோற்றிக்கொண்டிருக்கிற சத்துத் தானேதோற்றுகின்றதா? மற்றொன்றினாற் றோற்றுகின்றதா ?

உ. தானே தோற்றுகிறதென்றே சொல்லவேண்டும். அப்படிச் சொன்னால் சத்தே சித்தாகச் சித்தித்தது. அன்னியத்தினால் தோற்றுகிற தென்று சொன்னால் சுதந்தரத்தினால் தோற்றுவிக்கப்பட்டுத் தோற்றுகின்றதா? சத்து விலட்சணத்தினால் தோற்றுகின்றதாவென்று சங்கிக்க வரும்.

ச. அதெப்படி ?

உ. சுதந்தரமென்றால் அந்தச் சுதந்தரம் நிக்ருஷ்டமா யிருந்துகொண்டு அந்தச் சத்தைத் தோற்றுவிக்கின்றதா? அல்லது சமானமாயிருந்துகொண்டு தோற்றுவிக்கின்றதா? அல்லது ஒன்றினாற் றான் பிரகாச அதிசயம் பெற்றுத் தோற்றுவிக்கின்றதா? அலலது தானே தோற்றிக்கொண்டு அந்தச் சத்தையுந் தோற்றுவிக்கின்றதாவென்று விசாரிக்க வரும்.

ச. ஆனால் ஆத்ம சொரூபமாகிய சத்தைத் தோற்றுவித்துக்கொண்டிருக்கிற சுதந்தரம் நிக்ருஷ்டமா யிருந்துகொண்டு தோற்றுவிக்கிறதென்று சொல்லுவோமே ?

உ. சூரியப் பிரகாசத்திற்கு நிக்ருஷ்டமாகிய தீபமுஞ் சூரியனைத் தோற்றுவிக்கவேண்டும். அங்ஙன மில்லாதபடியினால் அந்தச் சத்துக்குச் சுதந்தரம் நிக்ருஷ்டமா யிருந்துகொண்டு சத்தைத் தோற்றுவிக்கிறதென்று சொல்லக்கூடாது.

ச. சுதந்தரம் சத்துக்குச் சமானமா யிருந்துகொண்டு சத்தைத் தோற்றுவிக்கிறதென்று ஏன் சொல்லுவோமே?

உ. தீபத்திற்குச் சமானமான தீபாந்தரமும் அந்தத் தீபத்தைத் தோற்றுவிக்கவேண்டும். அங்ஙன மில்லாமையால் சுதந்தரஞ் சமானமாயிருந்துகொண்டு சத்தைத் தோற்றுவிக்கிறதென்பது கூடாது.

ச. ஒன்றினால் தான் பிரகாச அதிசயம் பெற்றுக்கொண்டு சத்தைத் தோற்றுவிக்கிறதென்று சொல்லுவோமே ?

உ. அந்தச் சுதந்திரத்திற்குப் பிரகாச அதிசயங்களைச் சம்பாதிக்கிற வஸ்து சத்தோ, அசத்தோ வென்று நிரூபிக்கக் கூடாது. அன்றியும் சத்தென்றால் சொப்பிரகாசமோ? அப்பிரகாசமோ? வென்று நிரூபிக்கக்கூடாது.

ச. சொப்பிரகாசமென்று சொல்லலாமே ?

உ. சொப்பிரகாசமாகிய சத்தே சித்தாகியபடி. சத்துக்குச் சொப்பிரகாசத்வமும் அத்விதியத்வமும் வேதாந்திகளுக் கன்னியரால் அங்கீகரிக்கப்பட

வில்லை. ஆதலால் ஆத்ம சொரூபமாகிய சத்தைத் தோற்றுவிக்கிற சுதந்தரத்திற்குப் பிரகாச அதிசயஞ் சம்பாதிக்கிற சத்து சொப்பிரகாச மென்பது கூடாது.

ச. அப்பிரகாச மென்று சொல்லுவோமே ?

உ. அப்பிரகாசமாகிய வஸ்து பிரகாசமாகிய வஸ்துவுக்குப் பிரகாச அதிசயத்தைச் சம்பாதிக்கக் காணோம். ஆகையால் அப்பிரகாசமென்பதுங் கூடாது.

ச. சுதந்தரம் அன்னியவஸ்துவினால் அதிசயத்தைப்பெற்று ஆத்மாவைத் தோற்றுவிக்கிறதென்று சொல்லுவோமே ?

உ. அன்னிய வஸ்து அசத்தாகையினால் அப்படியுஞ் சொல்லக்கூடாது. ஆத்ம சொரூபமாகிய சத்துக்குப் பிரகாச அதிசயங்களைச் சம்பாதிக்கிற சுதந்தரத்திற்குப் பிரகாச அதிசயங்களைச் சம்பாதிக்கிற சத்து வேறொன்றுண்டென்று சொல்ல வரும்.

ச. அப்படிச் சொல்லலாமோ?

உ. அப்படிச் சொன்னால் அதற்கொன் றுண்டென்றும், அதற்கொன் றுண்டென்றும் இவ்வாறு சொல்ல நேர்ந்து அனவஸ்தாதோஷமும், சத்துக்கு அப்பிரகாசத்வமும், துவிதத்வமும் சொல்ல வரும். மேலும் உலகத்தில் ஒன்றுக் கதிசயத்தைச் சம்பாதிக்கிறவஸ்து தானதிசயமா யில்லாதிருப்பதாய்க் காணோம்.

ச. பின்னை யெப்படி ?

உ. அவ்வஸ்து தானும் அதிசயமான வஸ்துவா யிருந்துகொண்டு மற்றொரு வஸ்துவுக்கு அதிசயத்தைச் சம்பாதிக்குமென்பது அக்கினியாதிகளிடத்திற் கண்டோம். ஆதலால் முன்சொன்ன பட்சத்திரயங்களுங் கூடாதபடியினால் சத்தைத் தோற்றுவிக்கிறதென்றே சொல்லவேண்டும். இப்படிச் சொன்னால் சொப்பிரகாசமான சுதந்தரமே சித்தாகச் சித்தித்தது.

ச. ஆனால் உலகத்தில் ஆகாசாதிகளைப்போல வுபாதி யினவாய்ச் சத்தாத்வித்தியமும் நிரூபிக்கக்கூடாதே ?

உ. நிருபாதிகமாகிய சத்தே யத்விதியமென்று சுருதியாதிகளிற் சொல்லுகிறபடியினால், சத்துப் பிரகாசமாகிய சுதந்தரத்தினால் தோற்றப்படுகிறதென்று சொல்லக் கூடாது. ஆத்ம சொரூபமாகிய சத்தே பிரகாசமாயிருக்கிறபடியினால் அதுவே சித்தென்று சொல்லலாம்.

ச. கடாதிகளுக்கு விலட்சணமாகிய தீபாதிகளினால் கடாதிகள் தோற்றுகிற தென்பதுபோலச் சத்துக்கு விலட்சணமாகிய வஸ்துவினாற் சத்துத் தோற்றப்படுகிறதென்று சொல்லுவோமே?

உ. கடாதிகளுந் தீபாதிகளுஞ் சமான சத்தாகாரமா யிருக்கிறபடியாலும் அந்தக் கடாதிகளைப்பார்க்கிலுந் தீபாதிகள் கடாதிகளுக்குப் பிரகாசங்கள் பிரத்தியக்ஷமாய்க் கொடுத்துக் காண்பிக்கிறதினாலுந் தீபாதிகளினாற் கடாதிகள் தோற்றலாம்; தாஷ்டாந்தத்தில் சத்துக்கு விலட்சணமான வஸ்து அசத்தானபடியினால், அது வஸ்துத்வமாயிருந்து விளக்குகிறதென்று சொல்லக்கூடாது. ஆதலால் சத்து விலட்சணமாகிய அசத்தி

னாற் சத்துத் தோற்றுகிறதென்பதுகூடாது. அகலினிடத் தில்லையென்கிற தீபாதிகளினாலும், பிராந்திகளாற் றோற்றுகிற வுபாதிகள் அனேகமானதினாலும் கடாதிகள் தோற்றப்படுகிறதென்று சொல்லக் கூடாதது போல், சத்து விலட்சணமாகிய அசத்தினாற் சத்துத் தோற்றுகிறதென்று சொல்லக்கூடாது. மேலும் சத்தைத் தோற்றுவிக்கிற பதார்த்தங்களொன்றாகிலு மில்லை. சமஸ்த பதார்த்தங்களுஞ் சத்தில் ஆரோபிக்கப்படுகிறபடியினாலும், அந்தப் பதார்த்தங்களனைத்துஞ் சத்தை யுபஜீவித்துக்கொண்டு தோற்றுகிறபடியினாலும் சத்து சொப்பிரகாசமே. அந்தச் சத்தே சித்து; அந்தச் சித்தான சத்துக்குத் திரிசியமாயிருக்கப்பட்ட வஸ்து அசத்தாயிருக்கிறபடியினாலும், அந்தச் சத்தே யிரண்டாம் வஸ்து உண்டாகிற தில்லாமற் போனதினாலும் அந்தச் சித்தான சத்தே ஆனந்த ரூபமாயிற்று.

ச. உலகத்தி லிரண்டாம் வஸ்து உண்டாகிறதில்லாமற்போன வஸ்துவே யானந்தமா யிருக்கிறதுண்டா?

உ. சுழுத்தியில் இரண்டாம் வஸ்து இல்லாதபடியினால் அதுவே யானந்தமாயிற்று. சாக்கிர சொப்பனத்தி லிரண்டாம் வஸ்து இருக்கிறபடியினால் துக்கமே தோற்றுகிறது. சாக்கிரத்திலு மேகாந்தமா யிருந்து இரண்டாம் வஸ்து தோற்றாதிருக்கிறபோது சமஸ்த பிராணிகளுக்கும் ஆனந்தந் தோற்றப்படுகின்றது. ஏகாந்தமா யிருக்கிற புருஷன் இரண்டாம் வஸ்துவை ஸ்மரிக்காமற் சுகமாயிருந்தாலும் அவசியமாய் ஸ்மரிக்கப் பண்ணுகிற ஒரு சப்தசிரவணத்தினாலும் ரூப தரிசனத்தினாலும் பய ரூபமாய்த் துக்கமே தோற்றுகின்றது. இரண்டாம் வஸ்து தோற்றினால் ஐயமுண்டென்றே சுருதிகள் சொல்லுகிறபடியால் இரண்டாம் வஸ்து தோற்றாத சுழுத்தியி லானந்தமாயிற்று. அவ்வானந்தத்தில் கற்பனை பிறந்தபடியினால் ரச்சுவாதிகளிற் கற்பிக்கப்பட்ட சர்ப்பாதிகளைப்போலஅவ்வானந்தத்திற்கு வெதிருத்தமில்லை. ஆதலா லாத்மாவே காலத்திரயத்திலு மிருக்கிறபடியால் சத்தென்றும், சொப்பிரகாசமா யிருக்கிறபடியாற் சித்தென்றும், இரண்டாம் வஸ்து உண்டாகிறதில்லாமற் போகிறபடியா லானந்தமென்றும் சொல்லப்படும். ஆதலால் சத்ரூபனாகிய ஆத்மாவுக்குச் சுதந்தர மின்மையால் சுசாதிகமும், சுசாதிகபேதமும்; விசாதியாகிய அசத்தில்லாதபடியினால் விசாதிகமும், விசாதிகபேதமும்; சத்தே சித்து சித்தே யானந்தமானபடியினால் சுவகதமும், சுவகதபேதமு மில்லை. இதனா லாத்மா அத்விதியனென்கிற சுருதிவாக்கியப்படி யுத்தி யனுபவமுஞ் சித்தித்தன. இந்தப்படி முமூட்சுவானவர்கள் அத்விதியனாகிய ஆத்மாவே நானென்றறிந்து அனுபவிக்கத்தக்கது.

ச. ஆத்மா அத்விதியனென்று சுருதி சொல்லுகிறதுபோலவே பரிபூரணனென்றுஞ் சொல்லுகின்றதே; ஆத்மாவுக்குப் பரிபூரணத்வ மெப்படி?

உ. பரிபூரணத்வமென்று சாமானியமாகச் சொன்னால் வியாபகத்வமோ, விபுத்வமோ, அபரிச்சின்னத்வமோ, பரிபூரணத்வமோ என்று விசாரிக்க வரும். அவற்றுள் அபரிச்சின்னத்வமே பரிபூரணத்வமென்று சொல்ல வேண்டும்.

ச. அப்படி யேன் சொல்லவேண்டும்? வியாபகத்வமே பரிபூரணத்வமென்று சொல்லலாமே?

உ. சுவய காரிய அணுரூதத்வ மல்லவோ வியாபகத்வம்? அது பிருதிவியாதிகளுக்கு மிருக்கிறபடியினால் அப்படிக் கூடாது.

ச. ஆனால் விபுத்வமே பரிபூரணத்வமென்று சொல்லலாமே?

உ. சர்வ திரவிய சையோகத்வ மல்லவோ விபுத்வம்? அது ஆகாசாதிகளுக்கு மிருக்கிறபடியினால் அப்படியுங் கூடாது. அபரிச்சின்னத்வமே பரிபூரணத்வமென்று சொல்லவேண்டும். இந்த அபரிச்சின்னத்வம் பரிச்சின்னமான ஆகாசாதிகளுக் கில்லை. ஆத்மாவுக்கோ வென்றால், வியாபகத்வம் விபுத்வம் அபரிச்சின்னத்வமாகிய மூன்று முண்டு.

ச. அதெப்படி?

உ. பிருதிவியாதிகளுக்குச் சுவய காரியமான சதுர்வித பூதக்கிராமத்தில் அணுரூதத்வ மிருக்கிறதுபோல, ஆத்மாவுக்குச் சுவயகாரியமான பிரபஞ்சத்தி லணுரூதத்வ மிருக்கிறபடியால், வியாபகத்வமும், ஆகாசாதிகளுக்குச் சர்வமூர்த்தத்திரவிய சையோகத்வமிருக்கிறதுபோல, ஆத்மாவுக்குஞ் சர்வமூர்த்தத்திரவிய சையோக மிருக்கிறபடியால், விபுத்வமு மிருக்கின்றது.

ச. ஆனால் வியாபகமானவனே யாத்மா, விபுவானவனே யாத்மா வென்று சொல்லலாமே?

உ. அப்படிச் சொல்லுமிடத்து ஆத்மாவுக்குத் துவிதந் தோற்றுகிறபடியால் அங்ஙனங் கூடாது. அபரிச்சின்னத்வமே பரிபூரணத்வம், அத்விதியத்வமே யபரிச்சின்னத்வம். மேலும் அத்விதியத்வமே யபரிச்சின்னத்வமானபோதிலும் இன்னும் விசாரிக்க வேண்டும்.

ச. அதெப்படி?

உ. திரிவித பரிச்சேத சூனியத்வமே யபரிச்சின்னத்வம்.

ச. திரிவித பரிச்சேதமாவது யாது?

உ. தேச கால வஸ்துவே திரிவித பரிச்சேதம்.

ச. தேச கால வஸ்துவினா லாத்மாவுக்குப் பரிச்சேதம் பிரசித்த மாயிற்று?

உ. அஞ்ஞானியாகிய பிராந்தியினாற் பிரசித்த மாயிற்று.

ச. அதெப்படி?

உ. நான் இந்தத் தேசத்திலிருந்தேன், அந்தத் தேசத்தி லில்லையென்று தேசத்தினாலும், இந்தவருஷத்திற் பிறந்தேன், இனிமேல் நானில்லாமற் போகப்போகிறேனென்று காலத்தினாலும், இந்த வஸ்து நான், அந்த வஸ்து நானல்லவென்று வஸ்துவினாலும், ஆத்மா பிராந்தியினாற் பரிச்சேதமாகத் தோற்றுகின்றது. அதை விசாரிக்குமிடத்தி லில்லை.

ச. அதெப்படி?

உ. ஆத்மா வியாபகனு யிருக்கிறபடியால் தேசத்தினுலும், நித்தியனு யிருக்கிறபடியால் காலத்தினுலும், சர்வாத்மனு யிருக்கிறபடியால் வஸ்துவினுலும் பரிச்சேத மில்லை.

ச. திரிவித பரிச்சேத சூனியமே யபரிச்சின்னத்வ மென்று ஏன் சொல்ல வேண்டும்? தேசத்தினுற் பரிச்சேத ரகிதமே அபரிச்சின்னத்வ மென்று சொல்லலாகாதா?

உ. தேச பரிச்சேத ரகிதம் ஆகாயத்துக் கிருப்பதால் அதற்கும் அபரிச்சின்னத்வம் வரும். அதை நிராகரிக்கிற நிமித்தம் காலத்தினுலும் ஆத்மா பரிச்சேத ரகிதனென் றங்கீகரிக்கவேண்டும்.

ச. ஆனுல் ஆகாசத்திற்குக் கால பரிச்சேத முண்டா?

உ. சுருதிகளில் ஆகாசத்திற்கு நாசஞ் சொல்லுகிறபடியினுல் காலத்தினுல் ஆகாசத்திற்குப் பரிச்சேத முண்டு.

ச. ஆனுல் ஆத்மாவுக்குத் தேசத்தினுலுங் காலத்தினுலும் பரிச்சேத ரகிதமே யபரிச்சின்னத்வமென்று சொல்லலாமே?

உ. காலத்திற்குத் தேசத்தினுலுந் தன்னுலும் பரிச்சேத ரகிதமா யிருக்கிறபடியால் அதற்கும் அபரிச்சின்னத்வம் வரும். அதை நிராகரிக்கிற நிமித்தம் வஸ்துவினுலும் பரிச்சேத ரகிதமே யபரிச்சின்னத்வமென் றங்கீகரிக்கவேண்டும்.

ச. ஆனுல் காலத்திற்கு வஸ்து பரிச்சேத முண்டா?

உ. காலம் ஆகாசாதி வஸ்து வல்லாதபடியால் காலத்திற்கு வஸ்துவினுல் பரிசேத முண்டு.

ச. அப்படியானுல் ஆத்மாவுக்கும் வஸ்துவினுற் பரிச்சேதந்தோற்றுகின்றது. எப்படியென்றுல் ஆத்மாவுக்கு வியாபகத்வமும் நித்தியத்வமு மிருக்கிறபடியால் தேசத்தினுலுங் காலத்தினுலும் பரிச்சேத ரகிதமுண்டான போதிலும் ஆத்மா ஆகாசாதி வஸ்து வல்லாதபடியினுல் பரிச்சேதந் தோற்றுகின்றதே?

உ. அதனுலும் ஆத்மாவுக்குப் பரிச்சேத மில்லை.

ச. எப்படி யில்லை?

உ. ஆகாச காலமே, வாயு காலமே, தேயு காலமே, அப்பு காலமே, பிருதிவி காலமே யென்று விகாரமின்மையால், காலத்தை யுபசீவித்துக் கொண்டு ஆகாசாதிக ளிருக்க வில்லை. மேலும் அவ்வாகாசாதிகளைப் போற் காலமும் அவித்தியா பரிணும மாகையினுலும்; விகாரத்தில் காலமும், ஆகாசாதிகளும் பின்ன சத்தாகாரமாகத் தோற்றுகிறபடியினுலும், கடாதிகளினுல் கடாதிகளுக்குப் பரிச்சேதம் பிரத்தியட்சமாய்த் தோற்றுகிறதுபோல, வஸ்துவினுற் காலத்திற்குப் பரிச்சேதம் பிரத்தியட்சமாய்த் தோற்றுகின்றது. ஆதலால் வஸ்துவினுல் காலத்திற்குப் பரிச்சேதஞ் சொல்வது யுக்தமே. ஆத்மாவோ வென்றுல் ஆகாசாதிகளல்லாத வஸ்துவைப்போற் றோற்றப்பட்டாலும் எப்போதுஞ் சத்தா

மாத்திரமா யிருக்கின்றபடியாலும் அவ்வாத்ம சொரூபமாகிய சத்தை யுபசீவித்துக்கொண்டே யாகாசாதிக ளிருக்கிறபடியினாலும் பழுதையி னிடத் தாரோபிக்கப்பட்ட பாம்பு அந்தப் பழுதையையன்றி யெப்ப டிப் பரிச்சேதமல்லவோ, மிருத்துவினிடத்திற் றோற்றப்பட்ட கடாதி கள் மிருத்துவையன்றி யெப்படிப் பரிச்சேதமல்லவோ, அப்படிப்போல ஆத்ம சொரூபமாகிய சத்தினிடத்திற் றோற்றப்பட்ட ஆகாசாதி வஸ் துக்களும் ஆத்ம சொரூபமாகிய சத்துக்கன்னிய மல்லாதபடியினால் ஆத்மாவுக்குப் பரிச்சேதமல்ல. ஆதலால் ஆத்மாவுக்கு வஸ்துவினாலும் பரிச்சேத மில்லையென்பது யுக்தமே.

ச. தேசமுங் காலமும் வஸ்துவா யிருக்கிறபடியினால், அந்த வஸ்து வினாற் பரிச்சேத ரகிதமே யாத்மாவுக்கு அபரிச்சின்னத்வ மென்று சொன்னாற் போதாதோ?

உ. போதும். ஆனாலுந் தேசகாலங்களுக்கு ஆகாசாதிகளைப்போல வஸ்துத்வப் பிரசித்தி யின்மையினாலும் ஆத்மாவுக்குச் சுதசித்தமாகிய வியாபகத்வ மும் அநாதியாகிய அஞ்ஞானத்தினால் வந்த தேகேந்திரியாதி யத்தியாச த்தினால் தோற்றாமற் போனபடியினாலும் அந்தப் பிராந்தியைத் தள்ளு நிமித்த மித்தனையுஞ் சொல்லவேண்டிற்று. இந்தத் திரிவித பரிச்சேத சூனியத்வமே யபரிச்சின்னத்வம், அதுவே பரிபூரணத்வம், அதுவே அகண்டத்வம், அதுவே யத்துவிதியத்வம் என்று சுருதியாதிகளிற் சொ ல்லுகிறபடி சற்குரு முன்னிலையில் விசாரித் தறிந்தவனே முத்தன்.

ச. ஆனால் ஆத்மாவுக்கு அசங்கத்வ மெப்படி?

உ. சங்கத்வம் பிரசித்தமானா லல்லவா அசங்கத்வத்தைப்பற்றி விசாரிக்க வேண்டும்?

ச. விசாரத்தினால் தள்ளப்பட்ட சங்கத்வம் ஆத்மாவுக் குண்டோ?

உ. உண்டு.

ச. அதெப்படி ?

உ. பிராந்தியினால் வந்த தேகேந்திரியாதி யத்தியாசத்தினால் ஆத்மாவுக்குச் சங்கத்வந் தோற்றப்படுகின்றது. இதுவுமன்றி அவர்களுடன் கூடிக் கொண்டிருந்தேன், இவர்களுடன் கூடிக்கொண்டிருந்தே னென்று சங் கத்வந் தோற்றப்படுகின்றது. ஆகலஸ் சுருதி விசாரத்தினா லாத்மா அத் விதியனென் றப்போ தறிகிறானோ, அப்போ திரண்டாம் வஸ்து வில் லாதபடியினால் ஆத்துமாவுக்குச் சங்கத்வந் தள்ளப்பட்டது.

ச. ஆனால் பரமாத்மா சீவாத்மா வென்பதின்றி அத்விதியனாய் அச ங்கனா யிருந்த போதிலும் விவகார காலத்திற் சங்கனைப்போற் றோற்றுவதால், ஆத்மாவுக்கு அசங்கத்வ மெப்படிக் கூடும்?

உ. திருஷ்டாந்தத்தில் பழுதையாதிகளிடத்தி லாரோபிக்கின்ற பாம்பாதி களுடன்கூட அந்தப் பழுதையாதிகளுக் கெப்படிக் காலத்திர யத்திலுஞ் சங்கமில்லையோ, அப்படியே யாத்மாவினிடத்திலும் ஆரோ பிதமாய்த் தோற்றுகின்ற தேகேந்திரியாதிப் பிரபஞ்சத்துடன் கூடியும் ஆத்மாவுக்குக் காலத்திரயத்திலுஞ் சங்கமே யில்லை. இதுவுமன்றி உல

கத்தில் சாவயவமா யிருக்கப்பட்ட பதார்த்தங்களுக்கு அன்னியோன்னிய சங்கங்கள் கண்டோம்; நிரவயவமாயிருக்கப்பட்ட பதார்த்தங்களுக்குச் சாவயவமா யிருக்கப்பட்ட பதார்த்தங்களுடன் கூடியுங் காலத்திரத்திலுஞ் சங்கங் காணோம்.

ச. அதெப்படிக் காணோம்?

உ. பரமார்த்தத்தில் நிரவயவ மென்று சம்மதமா யிருக்கப்பட்ட ஆகாசாதிகளுக்குப் பிருதிவியாதிகளுடன்கூடச் சங்கஞ் சொல்லக் காணோம். அப்படிச் சொன்னால் ஜலாதி சங்கத்தினால் வஸ்திராதிகளுக்கு ஈரமுதலானவைகள் வருவதுபோல், ஆகாசாதிகளுக்கும் பிருதிவியாதிகளுடன் கூடின சங்கத்தினால் அந்தப் பிருதிவியாதிகளின் விகாரம் வரவேண்டும். அங்ஙன மின்மையால் அவ்வாகாசாதிகள் பிருதிவியாதிகளுடன் கூடிக்கொண்டதுபோலத் தோற்றினாலும் அவ்வாகாசாதிகளுக்குப் பிருதிவியாதிகளுடன் கூடியு மெப்படிச் சங்கமில்லையோ, அப்படிப்போல ஆத்மாவும் பிராந்தியினா லிந்தத் தேகேந்திரியாதிப் பிரபஞ்சத்துடன் கூடிக்கொண்டிருக்கிறதுபோலத் தோற்றினாலும் ஆத்மா அசங்கனே. அல்லாமலும் விவகார காலத்திற் பரமார்த்தத்தை யனுசரித்து ஆகாசாதிகளுக்கு நிரவயவத்வ மங்கீகரித்து இப்படிச்சொன்னோம். பரமார்த்தமாக விசாரிக்குமிடத்தில் ஆகாசாதி சர்வ பதார்த்தமும் பிராந்தியினால் ஆத்மாவினிடத்தில் ஆரோபிதமாகத் தோற்றியபடியால், அவ்வாரோபித பதார்த்தங்களும் பழுதையிற் றோற்றப்பட்ட பாம்பாதிகளைப்போலவே அதிஷ்டான ஆத்மசத்தே ஸ்வரூபமா யிருக்கிறபடியினால் காலத்திரயத்திலும் அத்விதியனாகிய ஆத்மா அசங்கனென்பதிற் சந்தேக மில்லை.

ச. ஆனால் ஆத்மாவுக்கு அகர்த்தத்வ மெப்படி?

உ. கர்த்ருத்வம் பிரசித்தமானா லல்லவா அகர்த்ருத்வத்தை விசாரிக்க வேண்டும்?

ச. விசாரத்தினால் தள்ளப்பட்ட கர்த்ருத்வம் ஆத்மாவுக்குண்டோ?

உ. உண்டு.

ச. அதெப்படி?

உ. நான் ஸ்நானம் பண்ணினேன், ஸ்நானம் பண்ணப்போகிறேன், ஜபம் பண்ணினேன், ஜபம் பண்ணப்போகிறேன், அக்கினி ஹோத்திரம் பண்ணினேன், அக்கினிஹோத்திரம் பண்ணப்போகிறேன், எக்கியம் பண்ணினேன், எக்கியம் பண்ணப்போகிறேன் என்கிற கர்த்ருத்வம் அத்தியாசத்தினால் ஆத்ம சுபாவமாகவே தோற்றப்படுகிறபடியால்அதை நிராகரிக்கு நிமித்தம் விசாரிக்கவந்தது.

ச. ஆனால் ஆத்மாவுக்கு அகர்த்ருத்வ மெப்படி?

உ. உலகத்தில் கர்த்ருத்வமென்பது கிரியைகள் முன்னிலையாய் நானென்றாசிரயித்துப் பரிச்சின்னமாயுஞ் சங்கமாயுஞ் சாவயவமாயும் விகாரமாயும் அந்தந்த வஸ்துக்களை யாசிரயித்துக்கொண் டிருப்பதாகக் கண்டோம். ஆத்மா அபரிச்சின்னமாயும் அசங்கனாயும் நிருவிகாரியாயும் நிரவயவமாயுமிருக்கிறபடியால், அவ்வாத்மாவுக்குக் கர்த்ருத்வஞ் சொல்வது கூடாது. ஆத்மா அகர்த்தாவென்றே சொல்லவேண்டும். ஆத்மாவுக்கு அத்விதிய ஞானத்தினால் அகர்த்ருத்வஞ் சித்தித்தது. அப்படிச் சித்தித்தாலும் நன்றாயறியவேண்டி விசேஷமாகச் சொல்லுகிறோம். விவகாரத்

தில் ஸ்நானாதிக் கிரியையாசிரயத்வம், நானென்கிற அபிமான கர்த்தவியம் தேகாதிகளுக்கே கண்டோம். வியாபகத்வமாகிய ஆகாசாதிகளுக்குக் காணோம். ஆதலால் அபரிச்சின்னமாகிய ஆத்மாவுக்குக் கர்த்ருத்வ மில்லையென்பது சொல்லவேண்டுமோ? பிராந்தியினால் வந்த தேகேந்திரியாதியத்தியாசத்தினால் ஆத்மா கர்த்தாவைப்போற் றோற்றினபோதிலும் விசாரிக்கிறபோது அநுபவத்திற்கு அபரிச்சின்னனா யிருக்கிறபடியால் அகர்த்தாவென்பதிற் சந்தேகமில்லை.

ச. ஆனால் ஆத்மாவுக்கு அபோக்த்ருத்வ மெப்படி?

உ. போக்த்ருத்வம் பிரசித்தி யானாலல்லவா அபோக்த்ருத்வத்தைப்பற்றி விசாரிக்கவேண்டும்?

ச. விசாரத்தினால் தள்ளப்பட்ட போக்த்ருத்வம் ஆத்மாவுக்கு உண்டோ?

உ. உண்டு.

ச. அதெப்படி?

உ. நான் போஜனம் பண்ணினேன், அனேக போகங்க ளநுபவித்துக்கொண்டிருக்கிறேனென்று பிராந்தியினால் ஆத்மாவுக்குப் போக்த்ருத்வந் தோற்றப்படுகின்றது. விசாரிக்கும்போது சர்வாத்மனா யில்லை.

ச. எப்படி யில்லை?

உ. அத்விதியனா யிருக்கிறபடியால் போக்த்ருத்வஞ் சொல்லக்கூடாது. ஆதலால் ஆத்மா அபோக்தாவென்பதிற் சந்தேக மில்லை. மேலும் உலகத்தில் தேவதத்தாதிகள் தங்களுக்கு வெதிருத்வமான அன்னாதிகள் புசிக்கிறதாய்க் கண்டோம். அந்தத் தேவதத்தாதிகள் தங்களுக்குத் தாங்களே போக்கியமா யிருப்பது எங்கேயுங் காணோம். போக்கியவஸ்து இல்லாமற் போக்த்ருத்வ மெங்கேயுங் காணாதபடியினால், அத்விதியனாகிய ஆத்மாவுக்கு அபோக்த்ருத்வஞ் சித்தித்தது. இந்தப்படி அருளே திருமேனியாகிய பரமாசாரியர் முன்னிலையில் ஐயந் திரிபின்றி விசாரித்தறிந்து அத்விதியனாயும் அபரிச்சின்னனாயும் அசங்கனாயும் அகர்த்தாவாயும் அபோக்தாவாயு மிராநின்ற ஆத்மாவே நானென் றெவ னறிகிறானோ, அவனே கிருதகிருத்தியனாகிய ஜீவன்முக்தனும் பரமுக்தனுமென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்கள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

பதினைந்தாவது ஞானஞ்ஞான சொரூப நிரூபகம் முற்றிற்று.

---

பதினாறவது

## சரீரத்திரய நிரூபகம்.

---

சங்கை: சரீரத்திரயத்தைப்பற்றி விசாரிப்பதில் பிரசித்தியாவது யாது? பிரயோசனமாவது யாது?

உத்தரம்: ஸ்தூல சரீர மெல்லாருக்கும் பிரத்தியட்சமாய்த் தோற்றப்படுகின்றது. பின்னை யொன்றுந் தோற்றப்பட வில்லை. இதுவுமல்லாமல் வேதாந்த

சாஸ்திரிகளுக் கன்னியரானவர்களெல்லாம் இந்திரியங்கள் தோற்றிய போதிலும் பிரத்தியட்சத்திற் காணுகிற சரீர மொன்றுமாத்திரமே யன்றி வேறே யொரு சரீரமுமில்லையென்று சொல்லுகிறபடியினுல், பிரசித்தி யுண்டு. மேலும் இந்த விசாரத்தினுலேயே சமஸ்தமான தேகாதிகளும் அந்தத் தேக சுபாவமாகிய விகாரங்களும் காலத்திரயத்திலும் ஆத்மாவை ஸ்பரிக்கவில்லை யென்று தோற்றப்படுகின்றது. இப்படித் தோற்றப்படு கிறதே இந்த விசாரத்திற்குப் பலமாகிய பிரயோசனம்.

ச. ஆனுலும் விசாரிப்போம். பிராணிகளுக் கெத்தனை சரீரம்?

உ. தூல சூட்சும காரணமென்று மூன்றுசரீரம்.

ச. தூலத்துக்குச் சரீர லட்சண மிருக்கிறபடியா லிருக்கலாம். சூட் சும காரண சரீரங்களுக்குச் சரீரத்வ மெப்படிக் கூடும் ?

உ. அவைகளுக்குஞ் சீரணித்துப்போகிற லட்சண மிருக்கிறபடியாற் சரீ ரத்வ முண்டு.

ச. அவைகளுக்குச் சீரணத்வ மெங்கே காணப்படுகிறது ?

உ. சுழுத்தியிலும் முமூட்சுக்களிடத்திலுங் காணப்படுகின்றது.

ச. இந்தச் சூட்சும காரண சரீரங்களிரண்டுந் தூலத்தைப்போற் பிர த்தியட்சமாய்க் காணுதபடியினுல் இல்லையென்று சொல்லு வோமே ?

உ. அவ்விரண்டு சரீரமுஞ் சாஸ்திரங்களா லுண்டென்று சொல்லுகிறபடி யினுலும், பெரியோர்களால் அங்கீகரிக்கப்பட்டபடியினுலு மில்லையென் பது கூடாது.

ச. ஒரு பிராணிக்குத் தூலசரீர மெத்தனை ? சூட்சும காரண சரீர ங்க ளெத்தனை ?

உ. தூல சரீரம் அனந்தம்; சூட்சுமமும் காரணமு மொவ்வொன்றேயாம்.

ச. இம்மூன்றுக்குஞ் சரீரத்வந் துல்யமாயிருக்கத் தூலசரீர மனந்த மாகவும், சூட்சும காரண சரீர மொவ்வொன்ருகவு மிருக்கிற தென்ன ?

உ. சூட்சும காரண சரீரங்கள் கர்ம ஜன்னியமல்லாதபடியினுல் அவை ஒவ் வொன்ருயின.

ச. அவைகளுக்குப் பிரகாராந்தரத்திலானுலுங் கர்ம ஜன்யத்வம் அங்கீகரிக்கப்படுமே ?

உ. அப்படிக் கூடாது.

ச. சூட்சும காரண சரீரங்களுக்குக் கர்ம ஜன்யத்வ மங்கீகரிக்காத படியினுற் சரீரத்வமே யில்லாமற் போகின்றது. போனுற் போக ட்டு மென்றெண்ணுவோமானுற் பிராணிகளுக்கு மூன்று சரீர மென்று சொன்ன தெடுபட்டுப்போகிறதே ?

உ. அப்படியல்ல; சூட்சும சரீரத்திற்குப் பிரகாராந்தரத்தினுல் உற்பத்தி யங்கீகரித்தோமானுற் சீவனுக்கு அநுதித்வ மெடுபட்டுப்போகின்றது.

ச. எதனாலெடுபட்டுப்போகின்றது ?

உ. ஆத்மாவுக்கு ஜீவத்வம் சூட்சும சரீரமென்கிற வுபாதியினாலல்லவா வந்ததென்று சொல்லுகிறீர்கள்? ஆகையினால் ஜீவனுக்கு உபாதியாகிய சூட்சும சரீரத்திற் குற்பத்தி சொல்லுமிடத்துச் ஜீவனுக்கு அனாதித்வமெடுபடுகின்றது.

ச. ஆனால் அவ்வனாதித்வஞ் சித்திக்கு நிமித்தம் உற்பத்தியை யங்கீகரிக்காம லிருப்போமே ?

உ. அங்ஙனமானாற் சுருதிக்கு விரோதமும் சூட்சும சரீரத்திற்கு நித்தியத்வமும் வருகின்றன. ஆத்மாவுக்கு அத்விதியத்வமு மெடுபட்டுப் போகின்றது. ஆதலால் சுருதிக் கர்த்தஞ் சித்திக்கு நிமித்தமும் ஆத்மாவுக்கு அத்விதியத்வஞ் சித்திக்கு நிமித்தமும் சூட்சும சரீரத்திற் குற்பத்தி யங்கீகரித்தோமானால் ஜீவனுக் கனாதித்வ மெடுபட்டுப்போகின்றது. இது வன்றியும் உலகத்தி லுள்ளவை ஜன்னியமா யிருக்கின்றனவோ, அவை களெல்லாங் கன்மத்தினா லுற்பத்தியாயினவென்று கண்டோம். ஆகையால் சூட்சும சரீரத்துக்கு ஜன்னியத்வ மங்கீகரிக்கிறபோது சூட்சும சரீரங் கர்ம ஜன்னியமென்றே யங்கீகரிக்கவேண்டும். இல்லாவிட்டால் திருஷ்டாந்த விரோதம் வரும்.

ச. வந்தால் வரட்டுமே ?

உ. அது யுக்தமல்ல; இந்த விரோதங்களைப் பரிகரிக்கு நிமித்தம் சூட்சும சரீரத்திற்குக் கர்ம ஜன்யத்வ மங்கீகரித்தோமானாற் கர்ம ஜன்னியமாகிய ஸ்தூல சரீரங்களுக் கனேகத்வங் கண்டதுபோல, ஒரு பிராணிக்குச் சூட்சும சரீரத்துக்கும் அனேகத்வம் வரவேண்டுமென்று சங்கை வரும்.

ச. வந்தால் வரட்டுமே ?

உ. அப்போது ஒவ்வொரு பிராணிக்கு ஒவ்வொரு சூட்சும சரீரமென்று சொன்ன தெடுபட்டுப்போகின்றது.

ச. போனாற் போகட்டுமே ?

உ. பூர்வ மொன்றென்று சொல்லி இப்போ தனேகமென்று சொல்வதற்கும், பூர்வங் கர்ம ஜன்னிய மல்லவென்று சொல்லி இப்போது கர்ம ஜன்னியமென்று சொல்வதற்கும் விரோத முண்டாகின்றது. இப்படி ஒருதோஷத்தைப் பரிகரிக்கப்போனால் மற்றொரு தோஷம் வருகின்றது.

ச. ஆனால் இந்த விசாரத்தை விட்டுவிட்டுப் பின்னொருவாயினுஞ் சொல்லுவோமே ?

உ. பின்னை யொன்றுஞ் சொல்லுதற் கிடமில்லை. ஆனபடியினால் இப்போது சூட்சும சரீரங் கர்ம ஜன்னியமென்று சொன்னதற்கும், ஜீவனுக் கனாதித்வஞ் சொன்னதற்கும், சூட்சும சரீர மொன்றென்றதற்கும், பூர்வம் சூட்சும சரீரங் கர்ம ஜன்னிய மல்லவென்றதற்கும் விரோதம் வராமற் பின்னாற்சொல்லுகிறோம். இப்போது காரண சரீரத்திற்கு ஜன்னியத்வஞ் சொல்லாமல் சூட்சும சரீரத்வ லட்சணஞ் சொல்லுகின்றோம்.

ச. காரண சரீரத்திற்கு ஜன்னியத்வ மங்கீகரிக்காமல் எப்படிச் சூட்சும சரீரத்வஞ் சொல்லக் கூடும்?

உ. அதற்குஞ் (கிரியதே) தொழிற்படும் தன்மையுடையது என்ற சரீர லட்சண மிருக்கின்றது. ஆதலாற் சூட்சும சரீரத்வஞ் சொல்லக்கூடும்.

ச. அனாதியான வஸ்துவுக்கு நாசமுண்டா?

உ. உண்டு.

ச. அதெப்படி?

உ. கடாதிப் பிராகபாவம் அனாதியா யிருந்தபோதிலும் அதற்குக் கடாதி யுற்பத்தியினால் நாச மெப்படியோ, பிரகிருதி புருஷ சையோகம் அனாதியா யிருந்தபோதிலும் அந்தப் பிரகிருதி புருஷர்களுடைய விவேகத்தினால் அதற்கு நாச மெப்படியோ, அப்படிப்போலவே அனாதி யஞ்ஞான மென்ற காரணசரீரத்திற்குப் பிரயாத்ம ஐக்கிய ஞானத்தினால் நாசம் வரலாம். அதற்குஞ் சரீரத்வ மங்கீகரிக்கிறது விருத்த மல்ல. இந்தப் படிச் சூட்சும சரீரத்துக் குற்பத்தி யங்கீகரித்தோமானு லொரு விரோதமு மில்லை.

ச. எப்படி யில்லை?

உ. சூட்சுமசரீரத்திற் குற்பத்தி யங்கீகரித்தால் அதற்குற்பத்தி சொல்லுகிற சுருதிகளுக்கு விரோத மில்லை. சூட்சும சரீரம் ஆத்ம காரியமா யிருப்பதினாலும் காரணமான ஆத்மாவையன்றி வேறிருத்தமா யில்லாத படியினாலும் ஆத்மாவுக்கும் அத்விதியத்திற்கும் ஆனியில்லை; ஜீவனுக்கு அனாதித்வ பங்கமு மில்லை.

ச. அதெப்படி?

உ. பிரளயத்திலுஞ் சூட்சும சரீரங் காரணாத்மகமா யிருக்கிறபடியினாலும் உபாதிக் கேதுவாகிய ஜீவசம்ஸ்காரமு மிருக்கிறபடியினாலும் ஜீவனுக்கு அனாதித்வ பங்க மில்லை.

ச. இந்தப்படி சூட்சும சரீரம் பிரளயத்திலிருந்தா லதற் குற்பத்தி ஏன் சொல்லக்கூடாது?

உ. அப்படிச் சொல்வது யுக்த மல்ல.

ச. உலகத்தில் மிருத்தாதிகளிடத்தில் இல்லாத கடத்துக்கே யுற்பத்தி கண்டோம்; இருக்கிற மிருத்தாதிகளுக் குற்பத்தி காணோமே?

உ. இல்லாத வஸ்து அசத்து; அவ்வசத்துக் குற்பத்தி சொன்னால் சசவிஷாணாதியும் உற்பத்தி யாகவேண்டும். அங்ஙன மின்மையால் அசத்துக் குற்பத்தி சொல்லக் கூடாது. இருக்கிற வஸ்து சத்து. அதற்கே யுற்பத்தி சொல்லவேண்டு மென்பது உலகத்திற் கண்டோம்.

ச. அதெப்படி?

உ. கடம் வனையவேண்டிப் பிரவர்த்திக்கிற புருஷன் மிருத்திகையை யெடுத்து வருகிறான். புடவை நெய்யவேண்டினவன் நூலைக் கொண்டுவருகி

றான். தயிர் வெண்ணெய் வேண்டுமென்றவன் பாலைச் சம்பாதிக்கிறான். எண்ணெய் வேண்டினவன் எள்ளைச் சம்பாதிக்கிறான், இந்த மிருத்தாதிக ளிடத்திற் கடாதிக ளுண்டாகாமற்போனால் அவனவன் அது அது களை நியமமா யேன் சம்பாதிக்கிறான்? இல்லாமற் சம்பாதியான். சம்பாதிக்கிறபடியினால் இருக்கிற வஸ்துவுக்கு உற்பத்தி சொல்லவேண்டும். இல்லாத வஸ்துவுக் குற்பத்திசொன்னா லிந்தக்காரியத்துக்கிதுவே காரண மென்கிற நியம மில்லாமற் போகின்றது. அப்படிப்பட்ட நியம மில்லாமற்போனால் நூலிற் கடமும் மண்ணிற் புடவையும் தண்ணீரிற் றயிரும் வெண்ணெய்யும் மணலில் எண்ணெயு முண்டாகவேண்டும். அப்படி யுண்டாகாதபடியினால் அது அதுகளுக்கு நியமிதமான காரணத்தினா லேயே காரிய முண்டாகிறதென்பது திண்ணம். ஆதலா லிருக்கிற வஸ் துவே பிறக்கிறதென்று சொல்லவேண்டும். அந்தந்தக் காரியத்துக்குங் காரணமா யிருக்கிற வஸ்து இருக்கிறபடியினால் சூட்சும சரீரமு மிப் படியே பிறக்கிறதென்று சொல்லக்கூடாது.

ச. ஏன் சொல்லக்கூடாது?

உ. அந்தக் காரணங்களுக்கு உற்பத்தி பிரத்தியட்சமாய்க் காணாதபடியினா லிந்தக் கடத்திற்கு உற்பத்தி சொன்னதுபோ லிதற்குக் காரணமாகிய மிருத்துவாதிகளுக்குச் சொல்லப்படாது. இந்தக் காரணமான மிருத்து வாதிகளுக்கு ஒவ்வொரு திக்கிலுற்பத்தி கண்டபோதிலும், பிருதிவியாதி களுக்குச் சுருதியாதிகளினா லுற்பத்தி கேட்டபோதிலும் சர்வ காரண மாகிய ஆத்மாவுக் குற்பத்தி யுண்டென்பதற்கு யாதொரு பிரமாணமு மில்லாதபடியினாலும், உற்பத்திசொல்வதில் அனவஸ்தாதோஷம் வருகிற படியினாலும் சர்வ காரணமான ஆத்மாவுக் குற்பத்தி சொல்லக்கூடாது. இருக்கிற வஸ்துவுக்கே யுற்பத்திசொல்லுகிறது யுக்தி யுக்தமேயாம்.

ச. அசத்துக் கேன் உற்பத்தி சொல்லப்படாது?

உ. காரணாத்மகமாய்ப் பீஜாதிகளிடத்திலிருக்கிற விருட்சாதிகள் நாம ரூப மாய்த் தோற்றுகிறதுபோல, பிரபஞ்சத்துக்குப் பூர்வம், தோற்றமின்றிய நாமரூபாத்மகமான சூட்சும சரீரங்கள் நாமரூபாத்மகமாய்த் தோற்று கின்றதையே யுற்பத்தி.

ச. ஆனாற் காரண காரியங்களுக்குப் பேத மெப்படி?

உ. அனபிவியக்த நாம ரூபகமாயிருக்கிறது காரணம்; அபிவியக்த நாம ரூபகமா யிருக்கிறது காரியம். இப்படியே காரிய காரணங்களுக்குப் பேத முண்டு. காரியங் காரணாத்மகமா யுண்டென்பதிற் காலத்திரய த்திலுஞ் சந்தேக மில்லை. இதுபோ லுற்பத்திக்கும் அனபிவியக்த நாம ரூபாத்மகமாயிருக்கிற காரணங் காரியமாய்த் தோற்றுகிறதற்கும் குலா லாதி வியாபாரத்தை யபேட்சிக்கிறது யுக்தமே.

ச. அதெப்படி?

உ. அசத்தான காரியம் பிறக்கிறதென்னும் பட்சத்தில் குலாலாதி வியாபார த்திற்கு அசத்து ஆசிரயமில்லாதபடியினாலும், அன்னியம் ஆசிரயமான வியாபாரத்தினால் அன்னியத்துக் குற்பத்திசொல்லும்போது அதிகப் பிரசங்கம் வருகிறபடியினாலும் குலாலாதி வியாபாரம் வியர்த்தமாகின் றது. அந்தக் குலாலாதி வியாபாரத்திற்கு வியர்த்தஞ் சொல்லக்

கூடாது. ஆனபடியினால் காரியங் காரணாத்மகமாயிருந்தபோதிலும் குலாலாதி வியாபாரத்தை யபேட்சிக்கிறது யுக்தமே. ஆனால் பூர்வஞ் சொன்ன யுக்திகளினால் காலத்திரயத்திலுங் காரியம் காரணாத்மகமாயிருக்கிறபடியாலும், பிரளயத்திலும் ஆத்மாவுக்குச் ஜீவத்துவத்திலுபாதிபூதமாகிய சூட்சும சரீரங் காரணாத்மகமா யிருக்கிறபடியாலும், பிரளயத்திலும் ஆத்மாவுக்குச் ஜீவத்வம் சம்ஸ்காராத்மகமாயிருக்கிறபடியாலும் ஜீவனுக்கும் அனாதித்வ பங்க மில்லை. சூட்சும சரீரம் நாமரூபாத்மகமாய்த் தோற்றுகிறதே யுற்பத்தியென் றங்கீகரிக்கிறபடியினாற் சுருதிகளுக்கும் விரோத மில்லை.

ச. இந்தத்தோஷமிப்படிப் பரிகரிக்கப்பட்டாலும் உலகத்தில் ஜன்னியமான வஸ்துக்களுக்குக் கர்ம ஜன்னியத்வமும் அனேகத்வமுங் கண்டோம். ஆதலால் சூட்சுமசரீரமுஞ் ஜன்னியமாகிறபோது அதற்குக் கர்மம் ஜன்னியத்வமு அனேகத்வமும் வரவேண்டுமென்கிற தோஷம் பரிகரிக்கப்படவில்லையே. சூட்சும சரீரத்திற்குக் கர்ம ஜன்யத்துவமும் அனேகத்வமு மங்கீகரித்தாலல்லவா, அந்தத்தோஷங்கள் பரிகரிக்கப்படவேண்டும்? அப்படி யங்கீகரித்தால் பூர்வஞ் சூட்சும சரீரங் கர்ம ஜன்னியமல்லவென்றும் ஒன்றென்றுஞ் சொன்னதற்கு விரோதம் வருகிறதே?

உ. ஜன்னியமாவது சாமானிய கர்ம ஜன்யமென்றும், விசேஷ கர்ம ஜன்யமென்று மிரண்டுவிதம். சூட்சும சரீரத்திற்குச் சாமானிய கர்ம ஜன்யமங்கீகரித்தபடியினால் ஜன்ய மாத்திரத்திற்குக் கர்ம ஜன்யத்வ நியம பங்கமில்லை. சூட்சும சரீரத்துக்குச் சாமானிய கர்ம ஜன்யத்வ மங்கீகரித்தபோதிலும் விசேஷ கர்ம ஜன்யத்வ மங்கீகரிக்காதபடியினால் பூர்வஞ் சூட்சுமசரீரங் கர்மஜன்யமல்லவென்று சொன்னதற்கும் விரோத மில்லை. மேலும் சாமானிய கர்ம ஜன்யமாகிய வஸ்துவுக்கு ஏகத்வமும், விசேஷ கர்ம ஜன்யமாகிய வஸ்துவுக்கு அனேகத்வமும் உலகத்திற் கண்டோம். ஆதலால் சூட்சும சரீரஞ் சாமானிய கர்ம ஜன்யமா யிருந்தபோதிலும் விசேஷ கர்ம ஜன்ய மல்லாதபடியினால், சூட்சும சரீர மொன்றென்று சொன்னதற்கும் விரோத மில்லை.

ச. சாமானிய கர்ம ஜன்யமான வஸ்துவுக்கு ஏகத்வமும், விசேஷ கர்ம ஜன்யமான வஸ்துவுக்கு அனேகத்வமு மெங்கேயாகிலுங் கண்டதுண்டோ?

உ. உகத்திற் பிருதிவியாதிகளிடத்திற் கண்டோம்.

ச. பிருதிவியாதிகளுக்குக் கர்ம ஜன்யத்துவங் காணோமே?

உ. சகத்தெல்லாஞ் ஜன்யமானபடியாலும், ஜீவர்களுக்குப் போக்கியமானபடியினாலுஞ் சகத்துச் சாமானிய கர்ம ஜன்ய மென்றே சொல்லவேண்டும்.

ச. ஜீவர்களுக்குப் போக்கியமானால் ஜகத்துக்கர்மஜன்யமாக வேண்டுமோ?

உ. ஆம்; கர்மங்களுக்கெல்லாஞ் சுக துக்கம் பல மாகையினால், அச்சுக துக்கங்கள் அனுகூலப் பிரதிகூல வஸ்துங்களை யவலம்பித்துக்கொண்டு வரு

கின்றன. அவைகளிற் சில பதார்த்தங் சிலருக்கு அனுகூலமாயிருந்து சுகமாகவும், சிலருக்குப் பிரதிகூலமாயிருந்து துக்கமாகவு மிருக்கிறபடியினாலும், ஜீவர்களுடைய கர்மங்கள் தங்களுக்குப் பலமான சுக துக்கங்களுக்குச் சாதனங்களாகிய ஆகாசாதிகளுக் குற்பத்திகளைச் சம்பாதித்துக் கொண்டே ஜீவர்களுக்குச் சுக துக்கங்களைக் கொடுக்கிறபடியினாலும் சகத்தெல்லாங் கர்ம ஜன்யமென்றே சொல்லவேண்டும்.

ச. நிதிகாலத்தி லல்லவா ஜீவர்களையும் அவர்கள் கர்மங்களையுங் காணுகிறோம். பிரளயத்திற் ஜீவர்களையும் அவர்கள் கர்மங்களையுங் காணோமே. இப்படியிருக்கச் ஜீவர்களது கன்மத்தினாலாகாசாதி ஜகத்துப் பிறக்குமென் றெப்படிச் சொல்லலாம்?

உ. பிரளயத்திலுஞ் ஜீவர்களெல்லாந் தங்கள் தங்களுபாதிகளுடன் சுழுத்தியைப்போற் சம்ஸ்காராத்மகமா யிருக்கிறார்கள். அவர்களது கன்மங்களுஞ் சம்ஸ்காராத்மகமா யிருக்கின்றன. அப்படிப்பட்ட கர்மத்தினாலாகாசாதி சகத்துப் பிறக்குமென்பது கூடும். அங்ஙன மங்கிகரிக்காவிட்டால், பூர்வ கற்பத்திற் ஜீவர்களாற் செய்யப்பட்ட கன்மத்துக்கும், இந்தக் கற்பத்திற் பல மில்லாமற் போகவேண்டும். பூர்வ கற்பத்திற் செய்யாத கன்மத்திற் கிந்தக் கற்பத்திற் பலமாகவேண்டும். அதோடு சுருதியாதிகளுக்கு வியர்த்தமும் வரும். அல்லாமலும் ஒரு காரணமுமின்றி ஜகத்துப் பிறக்குமென்று சொல்லுமிடத்து, முத்திபெற்ற ஜீவர்களும் உற்பத்தியாகவேண்டும். மேலும் சகத்தில் மனுஷர் தேவர் திரியக்காதிகளும், பிராம க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களுமாகிற விவஸ்தைகளில்லாமற் போகவேண்டும். இந்தத் தோஷங்கள் வந்தாலும் வரட்டுமென்கிற நியதமல்ல. ஆகலாற் பிரளயத்திலுஞ் சம்ஸ்காராத்மகமாயிருக்கிற ஜீவர்களது கர்மத்தினாலேயே ஆகாசாதி ஜகத்துப் பிறக்குமென்பதிற் சந்தேகமில்லை. இப்படி யாகாசாதிகள் கர்மத்தினாற் பிறந்தபோதிலும் முத்தி பரியந்தமு மொன்றாகவே யிருக்கின்றன. அன்றியும் பிரளயத்தில் லயித்திருந்து சிருஷ்டியில் ஆகாசம் ஆகாசமாகவும், வாயு வாயுவாகவும், தேயு தேயுவாகவும், அப்பு அப்புவாகவும், பிருதிவி பிருதிவியாகவும் பிறக்கின்றன. அதுபோலச் சூட்சும சரீரம் பிரளயத்தில் லயித்திருந்தபோதிலும் அந்தந்தச் ஜீவர்களது கர்மத்தினாற் பூர்வகற்பத்திலிருந்ததுபோற் பிரதி கற்பத்திலும் பிறக்கின்றது. இப்படிப் பிறந்தபோதிலுஞ் சுகைத விகாரமாயிருந்தபோதிலும் சூட்சுமசரீரம் ஒவ்வொரு பிராணிக்கும் முத்திபரியந்தமு மொன்றென்பதிற் சந்தேக மில்லை.

ச. இப்படிச் சொன்னால் முத்திக்குப்பிறகு சூட்சும சரீரங்க ளனேகமாயிருக்கு மென்று தோற்றுகின்றதே?

உ. முத்திக்குப் பிறகு சூட்சும சரீரம் இல்லவே யில்லை. ஆதலா லந்தச் சங்கைக் கவகாசமில்லை. இந்தப்படிச் சூட்சும் சரீரம் ஆகாசாதிகளைப் போல் சாமானிய கர்ம ஜன்னியத்தினாற் பிறந்திருக்கிறபடியினா லொவ்வொரு பிராணிக் கொவ்வொரு சரீரமென்று சொன்னது யுக்தமே.

ச. இப்படிச் சொல்லுகிறது விரோதமாகத் தோற்றுகின்றதே?

உ. அதில் விரோதமே யில்லை.

ச. ஆகாசாதிகள் சர்வப் பிராணிகளுடைய கர்மத்தினாற் பிறந்தன வாகையால், அவ்வாகாசாதிகளுக்குச் சாமானிய கர்ம ஜன்யத்வமும், பிரளயபரியந்த மொன்றாயிருத்தலும், பிரதி கற்பத்திலு மப்படியே பிறத்தலும் யுக்தமே. அந்தப் பிராணிகளுடைய சூட்சும சரீரம் சமஸ்த பிராணிகளது கர்மத்தினாற் பிறந்த தல்லவே. ஆகையால் அதற்குச் சாமானிய கர்ம ஜன்னியத்வ மென்பதும், ஒவ்வொரு பிராணிகளுக் கொவ்வொன் றென்பதும், பிரதி கற்பத்தி லப்படி யப்படியே பிறக்குமென்பதும் எப்படிக் கூடும்?

உ. ஆகாசாதிகளைப்போ லந்தப் பிராணிகளுடைய சூட்சும சரீரங்கள் சமஸ்த பிராணிகளுடைய கர்மத்தினாற பிடிக்காமற் போனாலும் அந்தந்தப் பிராணிகளுக்குச் சிருஷ்டிமுதற் பிரளய பரியந்தமும் தூல சரீரத் துவாரா சுக துக்கங்களைக் கொடுக்கிற கன்மங்களினாலேயே அந்தந்தப் பிராணிகளது சூட்சும சரீரங்க ளப்படி யப்படியே பிறக்கின்றன. ஆதலால் அந்தச் சூட்சும சரீரத்திற்குச் சாமானிய கர்ம ஜன்னியத்வமும் ஒவ்வொரு பிராணிக் கொவ்வொரு சூட்சும சரீரமும் பிரதி கற்பத்தி லப்படி யப்படியே பிறக்குமென்பதும், முத்தி பரியந்தம் நித்தியமென் பதுங் கூடும்.

ச. ஆனால் வீணமான வஸ்து கர்மத்தை யபேட்சித்துப் பிறக்கு மென்பதற்கும், சாமானியகர்மத்தினாற் பிறந்த வஸ்து ஒன்றாயிருக்குமென்பதற்கும், விசேஷ கன்மத்தினாற் பிறந்த வஸ்து நானாரூபமாயனேகமாயிருக்குமென்பதற்குந் திருஷ்டாந்தமுண்டோ?

உ. உண்டு. காஷ்ட பாஷாணாதிகளிடத்தில் வீணமாயிருக்கிற அக்கினிக்கு மர்த்தனாதி ரூபமான கர்மத்தினா லெப்படி யுற்பத்தியோ, அப்படியே காரண ரூபமான சூட்சும சரீரத்திற்குக் காரிய காரணமாகத் தோற்றுகிற கர்மத்தினாலேயே யுற்பத்தி சொல்லப்பட்டது. மேலுங் குலாலனால் நானாவித பாண்டங்கள் பண்ணவேண்டுமென்று சம்பாதிக்கப்பட்ட மண் மொத்தை யொன்றே. அது அனேக கர்மத்தினாற் பண்ணப்பட்டாலும் அக்கர்மங்களெல்லாம் அந்த மிருத்துப் பிண்டத்தினாற் பிறந்த அனேகம் பாண்டங்களுக் கெல்லாஞ் சமானமா யிருக்கிறபடியினாலும், அம்மண் மொத்தை சாமானிய கர்மமானதாலும் அந்த மிருத்துப்பிண்டம் ஒன்றே யாகும். மேலும்அம்மிருத்துப் பிண்டத்தினால் பண்ணப்பட்ட பாண்டங்களில் ஒருபாண்டம் பண்ணப்பட்ட கர்மத்தினால் மற்றொரு பாண்டம் பண்ணப்படவில்லை. ஆகையால் அந்தப் பாண்டங்களெல்லாம் விசேஷ கர்மஜன்னியமே. அந்தப் பாண்டங்கள் நானாரூபமாகவும் அனேகமாகவு மிருக்குமென்பது சர்வானுபவ சித்தமே. இந்தப்படிச் சூட்சும சரீரஞ் சாமானிய கர்ம ஜன்னியமானபடியினா லொவ்வொரு பிராணிக் கொவ்வொரு சரீரமென்பதும், தூலசரீரம் விசேஷ கர்ம ஜன்யமானபடியினா லொவ்வொரு பிராணிக் கனந்தமென்பதுங் கூடும்.

ச. இன்னும் இதற்கு விசேஷமான திருஷ்டாந்த முண்டோ?

உ. உண்டு. உலகத்தில் ஒரு தேவதத்தனுக்குக் கர்ம வசத்தினால் நானாவித வஸ்திரங்கள் வருகின்றன. அவைகளொன்றுபோ லொன்றிருக்கவில்லை.

அதுபோலத் தூலசரீரங்களு மொவ்வொருபிராணிக்கு விசித்திரமாகவும் அனந்தமாகவும் வருகின்றன. ஆதலால் அந்தத் தூலசரீரங்களும் விசேஷ கர்ம ஜன்யமென் றறியத்தக்கன. அந்தத் தேவ தத்தனுக்கு அந்தந்த விசேஷ கர்மத்தினால் வரப்பட்ட வஸ்திரங்கள் வந்து அவ்வஸ்திரங் களால் வருகிற சுக துக்கங்களுக்குச் சாதனபூதமாகிய ஸ்தூல சரீரமு மொன்று யிருக்கிறபடியால், அவ்வஸ்திரங்களை யபேட்சித்து ஸ்தூல சரீர மெப்படிச் சாமானிய கர்ம ஜன்னியமாயிற்றோ, அப்படியே சூட்சும சரீரமு மொவ்வொரு பிராணிக்கு மொவ்வொன்று யிருக்கிறபடியினால், அதுவும் சாமானிய கர்ம ஜன்னியமென்றே யறியவேண்டும்.

ச. இதனு லென்ன சித்தித்தது?

உ. சூட்சும சரீரமே தூல சரீரத்தைத் தரிக்கிறதுங் களைகிறது மென்று சித்தித்தது.

ச. அதெப்படி?

உ. திருஷ்டாந்தத்தில் தூல சரீரங்களுக்கே வஸ்திரங்களைக் கிரகிக்கிறதும் களைகிறதும் பிரத்தியட்சமாய்க் கண்டதுபோல, சூட்சும சரீரத்திற்கே தூல சரீரங்களுடைய பரிக்கிரகமும் தியாகமுமென்று அறியத்தக்கது. இதனாற் சூட்சும சரீரத்திற்குத் தூல சரீரத்தைத் தரிக்கிறதே ஜனனமெ ன்றும், அத்துடன் கூடிப் பிறகு சம்பந்தமின்றி விட்டுவிடுகிறதே மர ணமென்றும் பிரசித்தி யாயின. ஆதலாற் சூட்சும சரீரத்திற்கே பிரத்தி யட்சத்திற் சனன மரணங்களில்லை யென்று தோற்றுகிறபடியால், ஆத் மாவுக்கு ஜனன மரணாதிகள் இல்லையென்று சொல்வது ஒரு விசேஷ மல்ல.

ச. இப்படிச் சொல்லுமிடத்தில் சூட்சும சரீரத்திற்குத் தூல சரீர மனந்தமென்று தோற்றப்படுகின்றது. தோற்றினாற் றோற்றட்டு மென்னில், பூர்வம் பிராணிகளுக்குத் தூலசரீர மனந்தமென்று சொல்லி, இப்போது சூட்சும சரீரத்திற்குத் தூல சரீர மனந்த மென்று சொன்னால், முன் சொன்னதற்கு மிப்போது சொல்வதற் கும் விருத்தமல்லவா? ஆனையால் விந்தச் சூட்சுமசரீரமே பிராணி சப்தத்திற் கர்த்தமென்று சொல்லலாமே?

உ. அப்படிச் சொல்லக்கூடாது.

ச. ஏன் சொல்லக்கூடாது?

உ. பூர்வம் பிராணிகளுக்குச் சூட்சும சரீர மொன்றென்று சொல்லி, இப் போது சூட்சும சரீரமே பிராணி சப்தத்திற் கர்த்தமென் றெப்படிச் சொல்லலாம்?

ச. ஆனு லிவ்விரண்டு விரோதமுந் தோற்றுகின்றனவே?

உ. விரோதம் வாராமற் சொல்லுகிறோம். பிராணி சப்தத்திற்கு ஆத்மாவே யர்த்தம். அவ்வாத்மாவுக்கே காரண சரீரமாகிய அஞ்ஞானத்தினால் வந்த சூட்சும சரீர அத்தியாசத் துவாரா அனந்தமான தூல சரீரங்கள் வருகின்றன போலவும், போகின்றன போலவும், அந்தத் தூல சரீர சுபாவமாகிய ஜனன மரணங்கள் பிரசித்தமாயினபோலவுந் தோற்றப் படுகின்றன.

ச. அவை யெப்படித் தோற்றப்படுகின்றன ?

உ. திருஷ்டாந்தத்தில் தூல சரீரத்தினால் வஸ்திரங் கிரகிக்கிறதும், விடுகிறதும் பிரத்தியட்சமாய்க் கண்டபோதிலும், அந்த ஸ்தூலசரீர வெதிருத்தமாகிய ஆத்மா அந்தத் தூல சரீரத்தின் வழியே வஸ்திரக் கிரகணத் தியாகாதிக ளெப்படித் தோற்றுகின்றனவோ, அப்படியே யஞ்ஞானத்தினால் வரப்பட்ட சூட்சும சரீரத்தின் வழியே ஆத்மாவுக்கு அனந்தமான தூலசரீரங்கள் வருகின்றனபோலவும், போகின்றன போலவும் மோகத்தினால் தோற்றப்படுகின்றன. விசாரிக்குமிடத்து ஆத்மாவுக்குப் பிரசித்தியில்லாமல் தூலசரீரத்துக்கே பிரத்தியட்சமாய்க்காணப்படுகிறபடியால், சூட்சும சரீரத்திற்குத் தூல சரீரத்துடனேகூட அத்தியாசம் விளைவாய்ச் சனன மரணங்க ளில்லை. சூட்சும சரீரத்திற்கே ஜனன மரண மில்லாமற்போனபடியா லாத்மாவில் மோகமாத்திரமல்லாமற் சனன மரணங்களில்லையென்பதிற் சந்தேக மில்லை. இந்தப்படிப் பிராணிகளுக்குத் தூல சரீர மனந்தமென்றதும், சூட்சும சரீரமும் காரண சரீரமும் ஒன்றென்றதும் யுக்தமே.

ச. இதனு லென்ன சித்தித்தது ?

உ. சரீரத் திரயம், பிராணி சப்தத்தினாற் சொல்லப்பட்ட ஆத்மா அல்லவென்பது சித்தித்தது.

ச. அதெப்படிச் சித்தித்தது ?

உ. உலகத்தி லொருவன் மற்றொருவனைப் பார்த்து உனக்கு ருத்திராட்சத் தாழ்வட மெத்தனை யென்றால் மூன்றென்கிறான் ; வேட்டி யெத்தனை யென்றா லதுவு மூன்றே யென்கிறான் ; இப்படியே பிராணிகளுக் கெத்தனை சரீரமென்று விசாரிக்குமிடத்து மூன்று சரீரமென்று சொல்லப்படுகிறது.

ச. இப்படித் தோற்றுகிறதினு லென்ன சித்தித்தது ?

உ. திருஷ்டாந்தத்தில் அந்த உருத்திராட்சத் தாழ்வட முதலானவைகளைத்தனையுந் தரித்துக்கொண் டிருக்கிறவர்க ளெப்படி யவையல்லவோ, அந்த ருத்திராட்சாதி சுபாவமான விகாரங்கள் அவற்றைத் தரித்துக் கொண்டவர்களை யெப்படிப் பரிசிக்கவில்லையோ, அப்படியே தாஷ்டாந்தத்திலும் தூல சூட்சும காரண சரீரங்கள் பிராணி சப்தத்தினாற் சொல்லப்பட்ட ஆத்மா வல்லவென்றும் சரீரத்திரய சுபாவமான விகாரங்கள் அந்தப்பிராணி சப்தவாச்சியமாகிய ஆத்மாவைப் பரிசிக்கவில்லையென்றுஞ் சித்தித்தன. உலகத்தில் அந்தத் தேவதத்தாதிகளுக்குக் கிரகியென்றும், க்ஷேத்திரனென்றும், புத்திரியென்றும், தனியென்றும், குண்டலியென்றும் விவகாரங்கள் கண்டோம். அதுபோல ஆத்மாவுக்கும் சரீரி யென்றும் தேகி யென்றும் பிராணி யென்றுஞ் சொல்லப்பட்ட விவகாரமும் லோகத்திலும் வேதங்களிலுந் தோற்றப்படுகின்றது. அப்படித் தோற்றப்பட்ட தேவதத்தாதிக ளந்தக் கிரகாதிக ளெப்படி யல்லவோ, அவைகளின்சுபாவமான விவகாரங்க ளவர்களையெப்படிப் பரிசிக்கவில்லையோ, அப்படிப்போலத் தேகி சரீரி பிராணி யென்கிற வுபாதியினால் தோற்றுகிற ஆத்மா அந்தத் தேகாதிகளல்லவென்றும், அந்தத் தேகாதி சுபாவ விவகாரங்களும் ஆத்மாவைக் காலத்திரயத்திலும் பரிசிக்கவில்லையென்றுந் தோற்றப்படுகின்றன.

ச. இந்தப்படிச் சரீரத்திரயமு மாத்மாவல்லாதனவாய்ச் சரீரத்திரய சுபாவமான விகாரங்க ளுமாத்மாவுக் கில்லாதனவா யிருந்தாலும் சாமானியமாய்த் தோற்றப்படுகிறபடியினாலும் விசேஷமாய்த் தூல சரீரம்போல் சூட்சும காரண சரீரந் தோற்றப்படாமையினாலும் நன்றாய்ப் பலபலவிதமாக விசாரித்தபோதிலும் இந்தச் சரீரங்க ளாத்மாவல்லவென்று தோற்றுகிறது கடினமா யிருக்கிறபடியினாலும் சரீர மூன்றே. இந்தச் சரீரங்கள் ஆத்மா வல்ல; இந்தச் சரீரத்திரய சுபாவமான விகாரங்க ளாத்மாவைப் பரிசிக்கவில்லையென்று திடமாகத் தோற்றும்படி விசேஷ யுத்தியுண்டா?

உ. உண்டு. தூல சரீரஞ் சமஸ்த பிராணிகளுக்கும் பிரத்தியட்சமாகையினாலிந்தத் தூல சரீரமுண்டோ, வில்லையோ வென்னுமிடத்தில் யாருக்குஞ் சம்சய மில்லை. சாருவாக பாமரர்களுக் கன்னியரானபேர்கள் இந்தத் தூல சரீர மாத்மா வல்லவென்னு மிடத்தில் சந்தேகமில்லை. அந்தச் சாருவாக பாமரர்களுக்கு இந்தத் தூலசரீரமே யாத்மாவென்று சொல்லுகிறது உசிதமல்ல.

ச. அது எப்படி யுசிதமல்ல?

உ. சூட்சும சரீரத்தி லத்தியாசத்தினால் ஜீவரூபனான ஆத்மா சூட்சும சரீரத்துவாரா தூல சரீர அத்தியாசத்தினால் வந்த புத்திராதி யபேட்சையினால் பிதாவாதி சப்தஞ் சொல்லப்படுகிறான். இப்படிப் பிதாவாதி சப்தத்தினாற் சொல்லப்பட்டவன்போற் றோற்றுகிற ஆத்மா தூல சரீரத்துக் கன்னியனே. அந்தப் பிதாவாதி சப்தத்தினா லிந்தத் தூல சரீரஞ் சொல்லப்பட்டதானால் அந்தப் பிதாவாதிகள் செத்தபிறகும் அந்தப் பிதாவாதி சப்தார்த்தமாய்ச் சாருவாகபாமரர்களுக்குத் தூலசரீர மாத்மாவென் றங்கீகரிக்கப்பட்டால் தூல சரீர மிருக்கவேண்டும். அவர்கள் செத்துப்போனார்களென்று சொல்லாதிருக்கவேண்டும். அங்ஙன மின்மையால் இந்தத் தூலசரீர மெயிருத்தனே யாத்மாவென்று சாருவாக பாமரர்களு மங்கீகரிக்கவேண்டும். இதுவல்லாமற் பின்னும் யுக்தியாந்தரத்தினாலும் தூலசரீர மெயிருத்தனே யாத்மாவென்று தோற்றப்படுகின்றது.

ச. அதெப்படி?

உ. பிதாவாதி சப்தங்களுக் கர்த்தம்போல் தோற்றப்பட்ட தூல சரீரஞ் செத்துக் கிடக்கும்போது அதைத் தழுவி யோலமிட்டழுகிற புத்திராதிகள், அப்பா எங்களை அனாந்தரத்தில் விட்டுவிட்டுக் கடன் கொடுத்த விடமும், வாங்கின விடமுஞ் சொல்லாமல், எங்கள் வாயில் மண்போட்டு விட்டுப் போகலாமா வென்று கதறுகிறார்கள். அல்லாமலும் பந்து ஜனங்கள், சிநேகர்கள், அறிந்தவர்கள் வந்து, ஐயோ இப்படியே யுன் தாயார் முதலானபேர்களெல்லா மிறந்துபோனார்க ளல்லவா? உங்கள் சவரட்சணைக்கு ஒருவரு மில்லாமற் போய்விட்டார்களேயென்று துக்கம் வினவினால், அவர்களைக் கண்டு, கூ கா வென்றலறி வாயிலடித்துக்கொண்டு, இப்படியே எங்களை யனாதரவாய்விட்டுவிட்டு எல்லோரும் போய் விட்டார்கள், இனி நாங்க ளெப்படிப் பிழைக்கப்போகிறோமென்று பூமியில் விழுந்தழுகிறார்கள். பின்னும் வேறொருவன் வந்து அவன் மனைவியை அம்மா, உன் புருஷ னிறந்து போய்விட்டாரா வென்று துக்கம்

வினவினால், ஆ தெய்வமே! கெட்டேனென்று தலையில் மோதிக் கொண்டு தரையில் விழுந்தழுகிறாள். பின்னும் ஒருவன் வந்து தகப்பனை ஐயா, உன் பிள்ளை போய்விட்டானென்வெனத் துக்கம் வினவினால், ஐயா, என் வாயில் மண்ணைப்போட்டு இறந்து போய்விட்டான். அடா மகனே, என்னையும் உன்னுடன்கூட அழைத்துக்கொண்டு போடா, நீ பிறந்த நாள் முதற் றுக்கமே யனுபவித்தேன், உன்னுடன் ஏழுபிள்ளைகளைக் கொன்றேன், இன்னமுந் தெய்வ மெங்களையே சோதிக்கின்றது, நான் இந்தத் துக்கத்தைச் சகிக்கமாட்டேன், நானும் என்வீட்டிலுள்ளவர்களுமாய் விஷத்தைத்தின்று எல்லாரு மொருமுகூர்த்தத்தி லிறந்துபோகிறோமென் றழுகிறான். ஒரு வித்துவானை யுன் பெண்சாதி யிறந்துபோனாளாவென்று ஒருவன் துக்கம்வினவ வந்தால், அப்போது அவன் கற்றிருக்கிற பலகல்வி சாமர்த்திய யுக்திகளையெல்லாம் மறந்து, துக்காக்கிராந்தனாய், ஐயா, என்பிராணனானவள், என்வாயில் மண்போட்டுவிட்டுப் போனாள். அவள் ஸ்ரீ தேவியைப் பழித்த அழகும், பூதேவியைப் பழித்த பொறுமையும், அருந்ததியைப் பழித்த கற்புமுடையவள். அவளைப் பிரிந்து நானெப்படியிருப்பேன்? ஆ என் பிராணநாயகியே! ஒருவார்த்தை சொல்ல எனக்குத் திக்காரடி, நானுன்னுடன்கூட வருகிறேன், என்னையு மழைத்துக்கொண்டு போடி, எனக்குக் கஞ்சி, தண்ணீர் வார்த்து இனி யுன்னைப்போ லுபசரிக்கிறவ ராரடி; தேவபூசை, அவுபாசனம் பண்ணவும், பந்துக்கள்வந்தா லுபசாரம் பண்ணவும் உரித்தானவர்களொருவருமில்லையே. ஆயிரம்பேர் வந்தாலும் நீ யாவார்களாவென் றிப்படிப் பலபலவிதமாகப் பிரலாபித் தழுகிறான்.

ச. இப்படி யழுகிறவிதத்தினா லென்ன தோற்றுகிறது?

உ. ஊரிலிருந்து வந்த வுன்மாமன்முதலானவர்க ளூருக்குப்போய்விட்டார்களாவென்று ஒருவனைக்கேட்டால் அவர்க ளெங்களுடன் சொல்லாமற் கட்டி யிருந்த தோவித்தி புடைவைகளையும் விட்டுவிட்டுச் செவ்வையாய்ப் போய்விட்டார்களென்று சொல்வதுபோ லிருக்கிறது. இந்தத் திருஷ்டாந்தத்தில் மாமன்முதலியோர்கள் கட்டியிருந்த தோவித்தி புடைவைகளுடன் தோற்றப்பட்டாலும் அவைகளை விட்டுப்போனவர்களே மாமன் முதலானவர்கள் சப்தத்திற் கர்த்தமானதுபோல், இந்தத் தூல சரீரத்தை விட்டுவிட்டுக் கர்மானுசாரத்தினால் லோகாந்தரத்திற்குப் போனவர்களே பிதுராதி சப்தத்திற் கர்த்தமென்றும், தூல சரீரம் பிதுராதி சப்தத்திற் கர்த்தமல்லவென்றுந் தோற்றப்படுகின்றன. ஆதலாலிந்தத் தூல சரீரத்திலிருந்து வெளிப்பட்டுப் போனவர்களே பிதுராதி சப்தத்துக் கர்த்தமேயன்றி வெளிப்படாமுன்னு மிங்கிருந்த சரீரம் பிதுராதி சப்தத்துக் கர்த்தமென்று சொல்லக்கூடாது.

ச. அப்படித்தான் அர்த்தமென்று சொல்லுவோமே?

உ. தோவித்தி புடைவைகளை விட்டுப்போன மாமன் முதலியோர்கள்அவைகளை விட்டுப்போகா முன்னம் தோவித்தி புடைவைகளே மாமன் முதலியோராகவேண்டும். பின்னும் ஒருவீட்டி லிருந்து வெளிப்பட்டுப் போன புருஷன் அந்தக்கிரகத்திலிருந்து வெளிப்படாமுன்னம் அந்தக் கிரகமே புருஷனாகவேண்டும். அப்படிச் சொல்லக்கூடாமையினால் தோவித்தி

புடவைகளுடன் கூடிக்கொண்டிருந்த மாமன் முதலியோர் கூடியபோதும் விட்டபோதும் அந்த தோவித்தி புடவைகளெப்படி யவர்களல்லவோ, கிரகத்திலிருந்து வெளிப்பட்ட புருஷன் கிரகத்திலிருந்தபோதும் நீங்கினபோதும் அவன் அந்தக் கிரக சப்த மெப்படி யல்லவோ, அப்படியே பிதுராதி சப்தங்களுக் கர்த்தமாகிய பிதுராதி சப்தத்திற்கு ஸ்தூல சரீரத்தை விட்டுப்போனவர்களே யர்த்தமாகுமன்றித் தூலசரீர மர்த்தமல்ல. பின்னும் எந்தப் பிதுராதி சரீரமாகுமென்ன, அதன் மரணத்திற்குமுன் பிதுராதி சப்தத்துக் கர்த்தமென் றெண்ணியிருந்த இந்தச் சரீரத்தைக்குறித்து ஒருவர் உதாசினஞ் சொன்னபோதிலும் அந்தச் சரீரத்திற் பிராணவதை செய்தபோதிலும் அனேக நரகமுண்டாகுமென்று சாஸ்திரங்களிற் சொல்லக்கேட்டும் மரணமான பிறகு சரீரத்தைக் கொளுத்திவிடுகிறார்கள். அந்தப் பிதுராதி சப்தத்துக் கிந்தத் தூலசரீரமே யர்த்தமானால் இதைக் கொளுத்திய புத்திராதிகளுக்கும் பிதுராதிகளுக்கும் பிதுர்ஹத்தியாதி தோஷம் வரவேண்டும். அங்ஙனம் வந்தால் அப்புத்திராதிகளுக் கனந்தங் கோடி நரகம் வரவேண்டும். அன்றியும் உலகத்தில் அவர்களை மாதுர் ஹத்தி பிதுர் ஹத்தி யுடையவர்களென்று எல்லோருந் தூஷிக்கவேண்டும். அப்படி யில்லாமையினாலும் பிதுராதி சரீரங்களைக் கொளுத்தினவர்களுக்கு நரகமென்று சாஸ்திரஞ் சொல்லாமையினாலும் தூல சரீரம் பிதுராதி சப்தங்களுக் கர்த்தமல்ல. மேலும் எந்தச்சரீரத்தைப் பிதுராதி சப்தத்துக் கர்த்தமாக வெண்ணிக்கொண்டு பூஜை நமஸ்கார வுபசாரங்கள் செய்துவந்தார்களோ, அந்தச் சம்பந்தமான சரீரத்தை மரணாந்தரத்திற் றகித்துப்போடாவிட்டால், புத்திராதிகளுக்குப் பிரத்தியவாய தோஷ முண்டென்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. புத்திராதிக ளந்தத் தேகத்திற்குத் தகனாதிக் கிரிகைகள் பண்ணினார்களானால் அதிலிருந்து வெளிப்பட்டு லோகாந்தரம்போன பிதுராதிகளுக்குப் பிரேதத்வ விமோசன ரூபமான வதிக சயமும் நற்கதியுமுண்டு. அதைத் தகனஞ்செய்த புத்திராதிகளுக்கும் பிரத்தியவாயதோஷ மில்லையென்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றன.

ச. அதெப்படி?

உ. பாளயத்திலிருந்த ராஜன் வெளிப்பட்டுப் போனால் அவனுக்கு நல்ல பாளயம் வரவேண்டுமென்றும், மிகுந்த செல்வம் வரவேண்டுமென்றும் கோருவார்கள். அப்படிக் கோராதவர்களை அவ்வரசன் பாளயம் வந்தவுடனெப்படிச் சிக்ஷை பண்ணுவானோ, அப்படியே செத்துக் கிடக்கிற பிதுர்க்கள் சரீரங்களைப் புத்திராதிகள் சம்ஸ்காரஞ் செய்தால் அப்பிதுராதிகளுக் கதிக சயமும் நற்கதியுமுண்டு; அப்படிச் செய்யாவிட்டால் புத்திராதிகளுக்குப் பிரத்தியவாய தோஷமுண்டு. இன்னும் உலகத்தில் செத்துக் கிடக்கும் பிதுராதி சரீரங்களைச் சம்ஸ்காராதிகள் பண்ணின புத்திராதிகளைப் பார்த்து, அப்பா, நீ நல்லகதி யுண்டுபண்ணினை யென்று கொண்டாடுகின்றார்கள்; அப்படிச் செய்யாதவர்களைத் தூஷிக்கிறார்கள். இதனாலும் பிதுராதி சப்தத்திற்குத் தூல சரீரத்திலிருந்து வெளிப்பட்டு லோகாந்தரம் போனவர்களே யர்த்தமாமென்க.

ச. யுக்தியினா லிந்தப் பிதுராதி சப்தங்களுக்குத் தூல சரீர மர்த்தமல்லாமற் போனால் தூல சரீரத்தையே பிதுராதிக ளென் றெண்ணி என் பணிவிடை பண்ணுகிறார்கள்?

உ. இந்தத் தூலசரீரத்தினு ளிருக்கிறவர்களுக்குப் பிரீதியாகப் பணிவிடை பண்ணுகிறார்களேயன்றித் தூலசரீர நிமித்தம் பண்ணவில்லை.

ச. அதெப்படி ?

உ. ஒரு பட்டணத்தில் ராஜனிருக்கும்போது அந்த ராஜப் பிரியநிமித்தம் அவ்வரண்மனை மேற்கட்டுமுதலிய அலங்காரங்க ளெப்படிச் செய்கிறார்களோ, அவ்வரண்மனை முதலானதின் பிரிய நிமித்த மெப்படிச் செய்யவில்லையோ, அப்படியே தூல சரீரத்தி லிருந்தவர்கள் பிரிய நிமித்தமல்லது தூல சரீரப் பிரியநிமித்தஞ் சிசுருஷை பண்ணவில்லை. மோகத்தினால் தூல சரீரம் பிதுராதி சப்தத்துக் கர்த்தம்போற் காணப்பட்டாலும் தூல சரீரத்தி லிருக்கிறவனே பிதுராதி சப்தத்துக் கர்த்தம். உலகத்தில் கிராமாந்தரம் போன பிதாமுதலியோர்களின் வஸ்திரத்தைத் திருடன், பறித்துக்கொண்டு போனானென்று கேள்விப்பட்ட புத்திராதிகள் மறு வஸ்திரம் அனுப்புவதுபோல, இறந்து லோகாந்தரம்போன பிதுராதிகள் அம்மணத்துடன் போனார்களென்று சாஸ்திரஞ் சொல்லக்கேட்டு, அவர்களைக் குறித்து இவ்விடத்தில் பிராமணர்களுக்கு வஸ்திரங் கொடுத்தால், அவர்களுக்குப் போய்ச்சேருமென்று புத்திராதிகள் இப்போதும் பிராமணர்களுக்கு வஸ்திரங் கொடுத்துவருகிறார்கள். இதனாலும் இந்தத் தூலசரீரம் பிதுராதி சப்தத்துக் கர்த்தமல்லவென்று விளங்குகின்றது. கழனியில் வேலை செய்கிறவன் வெய்யலி லடிபட்டுத் தாபத்தினால் வாதைப்படுகிறானென்று கேட்டுக் கிரகத்திலிருக்கின்றவர்கள் அன்னந் தண்ணீ ரனுப்புவதுபோலச் செத்து லோகாந்தரம் போன பிதுராதிகளுக்குப் பசி தாக நிமித்தம் பிண்ட திலோதகங் கொடுக்கவேண்டுமென்று சாஸ்திரஞ் சொல்லக்கேட்டு,புத்திராதிகள்அவர்களைக் குறித்துப் பிண்ட திலோதகங் கொடுக்கிறார்கள். பின்னுந் தேசாந்தரம் போகவேண்டுமென்று பரஸ்தானம் பண்ணி யிருக்கிறவர்களுக்குக் கட்டுச் சாதங் கொடுத் தனுப்புவதுபோற் செத்து லோகாந்தரம் போன பிதுராதிகளுக்கு இவ்விடத்தில் சொர்க்க பாத்தியங் கொடுத்தா லவர்களுக்குத் திருப்தி யாகுமென்று சாஸ்திரங்களிற் சொல்லுகிறபடி சொர்க்க பாத்தியங் கொடுக்கிறார்கள். அடுத்த ஊருக்குப் போகவேண்டிச் செலவுபெற்றுக் கொண்டு போனவர்கள் ஆறு தாண்டிப் போக வகையின்றி யாற்றங் கரையிலிருப்பதாய்க் கேள்விப்பட்டு, வீட்டிலிருக்கிறவர்கள் கட்டுமரந் தெப்பங் கட்டிக்கொடுத்து அனுப்பி வைப்பதுபோல, செத்து லோகாந்தரம்போன பிதுராதிகளுக்குச் சொர்க்கப் பிராப்தியைக்குறித்து விகாதமான வைதரணி நதி யிருக்கிறதென்று சாஸ்திரஞ் சொல்லக் கேட்டு, அதை யவர்கள் தாண்டிப் போகிறநிமித்தம் இவ்விடத்தில் புத்திராதிகள் வைதரணி கோதானங் கொடுக்கிறார்கள். இறந்துபோன பிதுராதிகளைக்குறித்து அவர்க ளிறந்தநாள்முதல் வருஷாப்திகவரைக்கும் மாத மாதம் மாசியமும் புத்திராகளிருக்கிறபரியந்தம் வருஷாந்தர திவசமும் மத்திய மத்தியத்தில் அட்டகாதி சிராத்தங்களும் புண்ணியக்ஷேத்திரங்களிற் சிராத்தங்களுஞ் செய்கிறார்கள். ஆதலால்இப்போது சொல்லிவந்த ஸ்தூல சரீரங்கள் பிதுராதிசப்தத்துக் கர்த்தமல்ல, இவைகளிலிருந்து வெளிப்பட்டு லோகாந்தரம் போனவர்களே பிதுராதி சப்தத்துக் கர்த்தமென்று சந்தேகமின்றி யறியத்தக்கது.

ச. இந்த யுக்திகளினால் தூல சரீரம் பிதுராதி சப்தத்துக் கர்த்தமாகாமற்போனாற் போகட்டும். இதனாற் சூட்சும சரீர சித்தி எதனாற் சித்தித்தது?

உ. தூல சரீரத்தை விட்டுவிட்டு எது லோகாந்தரம் போகிறதோ, அதுவே சூட்சும சரீரமென்று நமக்குச் சித்தித்தது.

ச. ஆனால் பிதுராதி சப்தத்துக் கிந்தச் சூட்சும சரீரமே யர்த்தமென்று சொல்லலாமோ?

உ. பிதுராதி சப்தம் சேதனம்; சூட்சும சரீரம் அசேதனம். இவ்வசேதனமான சூட்சும சரீரம் பிதுராதி சப்தத் துக் கெப்படி யர்த்தயாகும்?

ச. அப்படி யேன்சொல்லவேண்டும்?

உ. சேதனம் ஆத்மா; அவ்வாத்மா ஆகாசத்தைப்போல வியாபக மாகையால் அதற்கு லோகாந்தர கமனாகமனங் கூடாது; நிரவயவனானபடியால், கர்மாதி சம்ஸ்காராதி யாசிரயத்வங் கூடாது. கர்மாதி சம்ஸ்காரத்துக் காசிரயமாயிருந்து ஒன்றை யங்கீகரிக்காமற் போனால் கிருதனாசாகிருதாப்பியாகமாதி தோஷம் வரும். ஆதலால் ஆத்மாவுக்குக் கர்மாதி சம்ஸ்காரத்துக் காசிரயமான சூட்சும சரீரமே லோகாந்தரத்திற்குப் போகிறதும் வருகிறதுமென் றங்கீகரிக்க வேண்டும்.

ச. ஆனால் சாகிறதும் பிறக்கிறதும் லோகாந்தரங்களுக்குப் போகிறதும் புண்ணிய பாவங்கள் செய்கிறதுஞ் சேதனதர்மமா யெப்படித் தோற்றுகிறது?

உ. வியாபகமான ஆத்மாவுக்குச் சூட்சும சரீரப் பிரதான அவயவமான அந்தக்கரண பிரதிபிம்பத் துவாரா சூட்சும சரீரத்துடன் அத்தியாசம் வந்தபடியினால், அக்கினியுடன் கூடிய தாதாத்மியத்தினால் அயப்பிண்டம் எப்படி யக்கினிபோற் றோற்றுகின்றதோ, அப்படியே அந்தச் சூட்சும சரீரமுஞ் சேதனம்போற் றோற்றுகின்றது. இந்தச் சூட்சும சரீர தாதான்மியத்தினால் தூல சரீரமு மோகத்தினாற் சேதனம்போற் றோற்றுகின்றது. ஆதலால் ஜனன மரண முதலிய கர்மங்களும் தூல சூட்சும காரண சரீரங்களும் அந்தக் கரணத்தில் ஆத்மப் பிரதிபிம்பமும் அதிஷ்டான பூத சைதன்னியமுமாகியவைகளெல்லாங் கூடி மோகத்தினாற் பிதுராதி சப்தத்துக்குத் தூல சரீரமே யர்த்தமாகத் தோற்றுகின்றது. விசாரிக்குமிடத்தில் இவைகளெல்லாம் அதற்கு வாசகமான சப்தத்தினாற் சொல்லப்பட்டன. ஆகையால் இந்தப் பிதுராதி சப்தத்துக்கு இதற்கு ளொன்றிலும் அர்த்தமாய்த் தோற்றப்படவில்லை. ஜனன மரணங்களு மிந்தத் தூலசரீரத்திற்கே பிரத்தியட்சமாய்க் காணப்படுகிறபடியினாலும், கமனாகமனாதிக் கிரியாசிரயத்வம் பரிச்சின்னமாகிய வஸ்துவுக்கே பிரத்தியட்சமாய்க் காணப்படுகிறபடியினாலும், புண்ணிய பாவக் கிரியையாதிகளென்கிற விகாராசிரயத்வமும் விகாரமாகிய வஸ்துவுக்கே சித்தித்திருக்கிற படியினாலும் நிரைஷ்டுவென்பதே நித்திய வியாபகச் சைதன்னிய சொரூபனாகிய ஆத்மாவுக்கு இப்படிச் சொன்ன தர்மங்களுள் ஒன்றுமினு மில்லையென் றறிக. இப்படிச் சொச்சொரூபமாகிய ஆத்மாவுக்கு மோகத்தினால் வந்த ஜீவத்வமும் லோகாந்தர கமனாகமனங்களும் பிதுராதி சப்த வாச்சியத்வமு மெதனிடத்தில் அத்தியாசத்

துவாரா வந்ததோ, அதுவே ஸ்தூல சரீர வெதிருத்தமான சூட்சும சரீரமென் றறியப்பட்டது. அன்றி யுத்தியினாலுந் தூல சரீரத்திற்குச்சூட்சும சரீரம் அன்னியமென்றே தோற்றுகின்றது.

ச. அந்த யுத்தியாவது யாது?

உ. விசித்திராதிகளான நானாவித வியாபாரங்க ளெதனாற் செய்யப்படுகின்றனவோ, அதுவே சூட்சும சரீரமென்று யூகித் தறியவேண்டியது.

ச. இவ்வியாபாரங்கள் தூல சரீரத்தினாற் செய்யப்படுகிறதென்று சொல்லலாமே?

உ. அப்படியானால் பிரேத சரீரத்தினாலுஞ் செய்யப்படவேண்டும். அங்ஙனமின்மையால், தூலத்துக் கன்னியமான சூட்சும சரீரத்தினாலேயே செய்யப்படுகின்றதென்று சொல்லவேண்டும்.

ச. அப்படி யேன் சொல்லவேண்டும்? ஆத்மாவே சகல காரியங்களுஞ் செய்கிறதென்று சொல்லுவோமே?

உ. ஆத்மா வியாபகனா யிருக்கிறபடியால் அப்படிச் சொல்லுவது கூடாது. அன்றி ஆகாசாதிகளிடத்தி லிருக்கப்பட்ட ஆத்மாவுங் கர்மங்கள் செய்ய வேண்டும்; அப்படிச் செய்யாதபடியினால் அங்ஙனஞ் சொல்லப் படாது.

ச. ஆகாசாதிக ளிடத்திலிருக்கிற ஆத்மா கர்மங்கள் செய்யாமற் போனால் போகட்டும்; தூல சரீரத்துடன் கூடியிருக்கிற ஆத்மா, கர்மங்கள் செய்கிறானென்று சொல்லுவோமே?

உ. வியாபகனான ஆத்மாவுடன் கூடியிருக்கிற பிரேத சரீரத்தினாலுங் கர்மம் பண்ணவேண்டும், அப்படி இல்லாமையால் அது கூடாது. இவ்வாறு கேவலந் தூல சரீரமுங் கர்மம் பண்ணக் காணோம்; கேவலசுத்தரூபனான ஆத்மாவுங் கர்மம் பண்ணக் காணோம்; தூல சரீரத்துடன் கூடியிருக்கிற ஆத்மாவுங் கர்மம் பண்ணக் காணோம்; ஆத்மாவுடன் கூடியிருக்கிற தூல சரீரமுங் கர்மம் பண்ணக் காணோம். இப்படி யிருந்தாலும் விசித்திரமாய் நானாவிதமான கர்மங்கள் செய்கிறதாய்க் காணப்படுகின்றபடியால், இந்தக் கர்மங்கள் செய்வது சூட்சும சரீரமென்றே அறியத்தகும். சத் ரூபனாகிய ஆத்மா வியாபகனும் நிரவயவனும் நிர்விகாரியும் அத்விதியனுமா யிருக்கிறபடியால், அவ்வாத்மா வொன்றுடனுங் கூடவுமில்லை; அவ்வாத்மாவுக்கு வெதிருத்தமாக வொருவஸ்துவு மில்லாதபடியினால் அவ்வாத்மாவுடன் ஒருவஸ்துவுங் கூடவில்லை. இதனாற் கர்மங்க ளெல்லாங் கர்த்துருசாபேட்சையா யிருக்கிறபடியினால், ஆத்மா வொரு கர்மமேனும் பண்ணாதபோதிலும் இந்த ஆத்மாவினிடத்தி லனாதி கற்பிதமான அவித்தை யென்னு மஞ்ஞானத்தினாலே கற்பிக்கப்பட்ட அபஞ்சீகிருத பஞ்ச மகாபூதத்தாற் கற்பிக்கப்பட்டு ஆத்மாவினுடைய சத்தினாலேயே சத்தாய்ப்போற் றோற்றப்பட்ட சூட்சும சரீரம், தூல சரீரத்துடன் கூடிக்கொண்டு சமஸ்த கர்மங்களையும் பண்ணுகின்றது.

ச. ஆனால் இந்தச்சூட்சும சரீரந் தூலசரீரத்தைப்போ லேன் தோற்ற வில்லை? சூட்சும சரீரந் தூலசரீரத்துடன் கூடிக்கொண்டு

என் கர்மம் பண்ணவேண்டும்? அக்கர்மம் சூட்சும சரீரத்தினாலேயே செய்யப்படுகிறதென்றறிகிறதெப்படி?

உ. சூட்சும சரீரஞ் சூட்சுமமானபடியினால் தூலசரீரம்போற் றோற்றவில்லை. உலகத்திலெந்தெந்த வஸ்துக்கள் கர்மத்துக்குக் கர்த்தாவாயிருக்கின்றனவோ, அந்தந்த வஸ்துக்கள் ஒன்றை யாசிரயித்துக் கர்மஞ் செய்கிறதாகவும் அப்படிக் கர்மத்தைச் செய்தபோதிலும் எந்தெந்த வஸ்துவை யாசிரயித்துக்கொண்டு கர்மஞ்செய்கின்றனவோ, அந்தக் கர்மமும் ஆசிரயத்தினாலேயே செய்யப்பட்டதாகவு மக்கினியாதிகளிடத்திற் றோற்றப்படுகின்றது. அப்படியே சூட்சும சரீரமுந் தூலசரீரத்தை யாசிரயித்துக் கொண்டு சகல கர்மங்களையும் பண்ணினபோதிலும் அவ்வாசிரயமான சூட்சும சரீரத்தினுடைய கர்மமே சமஸ்த கர்மங்களுமாதலால் இந்தக்கர்மத்தின்வழியே தூல சரீரம்போற் சூட்சும சரீரமென்றும், அது இந்தத் தூலசரீரத்துக் கன்னியமென்றும் விசாரிக்கப்பட்ட புருஷனுக்குத் தோற்றப்படுகின்றன. அல்லாமல் என் கண், என் சுரோத்திரம், என் வாக்கு, என் பிராணன், என் அந்தக்கரணம், என் புத்தி யென்கிற அனுபவத்தினால், தூல சரீரத்துக் கன்னியமா யொரு சூட்சுமசரீரமுந் தோற்றப்படுகின்றது. இப்படிக் காரியமான ஸ்தூல சூட்சும சரீரத்தினால், இவைகளுக்குக் காரணமாய் ஆத்மாவுக்குச் சீவத்துவத்தினாலும் ஈசுவரத்துவத்தினாலும் ஜகத் காரணத்தினாலு முபாதியான அவயவங்களினால் அனிர்வசனீயமென்றும் சுருதியாதிகளினாற் பிரகிருதியென்றும் மாயையென்றும் அவித்தையென்றும் சொல்லப்படுகிற காரணசரீர மொன்றுண்டென்று சொல்லப்படுகின்றது. அன்றி, நான் அஞ்ஞானி, நான் சடன், ஒன்று மறியேனென்கிற அனுபவத்தினாலுங் காரணசரீர மொன்றுண்டென்றுந் தோற்றப்படுகின்றது. இவ்வாறு சமஸ்த பிராணிகளுக்கும் மூன்று சரீர முண்டென்று நிச்சயிக்கப் படுகின்றது இப்படியே யாத்மாவும் இம்மூன்று சரீரத்தை யறிகிறவனாயும் இம்மூன்றுடன் கூடியிருந்தபோதிலும் ஆகாசத்தைப்போல ஒன்றிலுங்கூடாமலும்காலத்திரயத்திலுமிருக்கிறபடியால் சத்ரூபனாகவும் சமஷ்டி வியஷ்டிரூபமாகிய சரீரத்திரய ஆத்மகமான பிரபஞ்ச சடாவ பதார்த்தங்களுக்குள் ஒரு பதார்த்தத்தினாலுந் தன்னை யறியப்படாமல் சமஸ்த பதார்த்தங்களையுந் தானே யறிகிறபடியினால் சித்ரூபனாகவும் பரமப்பிரியம் ஆஸ்பமானபடியினால் ஆனந்தரூபனாகவுந் தோற்றுகின்றது. இப்படிப்பட்ட ஆத்மசொரூபமே நானென்று முமூட்சுக்களா லறியத்தக்கது.

ச. காரியமான சரீரத்திரயமுங் காரணமான பிருதிவியாதியும் பிரத்தியட்சமாய்த் தோற்றிக் கொண்டிருக்க, சுருதியாதிகளாற் சொல்லப்பட்ட அத்விதீயத்வமும் பரிபூரணத்வமும் ஆத்மாவுக் கெப்படிக் கூடும்?

உ. சமஷ்டி வியஷ்டி யாத்மகமாகிய சரீரத்திரயமென்கிற பிரபஞ்சம் அவ்வாத்மாவினிடத்தி லாரோபிதமா யிருக்கிறபடியால், ரச்சுவினிடத்தி லாரோபிக்கப்பட்ட சர்ப்பாதிகளுக்கு ரச்சுமாத்திர மெப்படிச் சுவரூபமோ, அப்படிப்போலவே ஆத்மாவினிடத்தி லாரோபிக்கப்பட்ட பிரபஞ்சத்திற்கு மாத்மாவே சுவரூபமன்றி வஸ்துவாதிகள் வேறில்லை. ஆதலாலாத்மாவினுடைய சத்தைப்போல விருத்தமான சத்தாய் பதார்த்த மிருந்து பிரதிபத்திய மில்லாதபடியினால், ஆத்மா அத்விதீயனென்ப

திற் சந்தேகமில்லை. எப்போது ஆத்மாவுக்கு அத்விதியத்வஞ் சித்தித்த தோ, அப்போதே பரிபூரணத்வமுஞ் சித்தித்தது.

ச. அதெப்படி ?

உ. ஆத்மாவுக்குப் பிராந்தியினாற் பரிச்சேதம் போலவும், கண்டிதம் போல வுந் தோற்றப்பட்ட தேச கால வஸ்துக்கள் ஆத்மாவுக் கன்னியமா யில்லாதபடியினால் திரிவித பரிச்சேத சூனியத்வ சொருபமான பரிபூர ணத்வஞ் சித்தித்தது. இப்படியே யாத்மாவே நானென்றெவனறிகிறானோ அவனுக்குக் காலயத்திரத்திலும் பிரபஞ்சமில்லை. ஆனாலும் பிராரத்த முள்ளமட்டு மிந்தத் தேகேந்திரியாதிப் பிரபஞ்ச மித்தியா பூதமாய்த் தோற்றலாம். அப்படித் தோற்றினதினால் ஜீவன்முத்திக்கு மித்தியா பூதமாய் ஆபாச ரூபமாகிய சுக துக்கங்க ளேதாவது விவேகித்த பிறகு தோற்றினாலும் வாதையில்லை.

ச. மித்தையாவது யாது ?

உ. ரச்சு சர்ப்பம்போல அதிஷ்டானஞ்ஞானத்தினால் வாதிக்கப்படுகிறதும், சொப்பன மனோராச்சியம்போற் பார்த்துக் கொண்டிருக்கும் போதே நசித்துப் போகிறதும் கானற்சலம்போல் அனிர்வசனீயமாயிருப்பதும், கடாதிகளைப்போற் சத்த ரகிதமாய்த் தோற்றுவதும் மித்தையென்று சொல்லப்படும். இந்த மித்தையாத்மக லட்சணம் சமஷ்டி வியஷ்டி தேகேந்திரியாதிப் பிரபஞ்சத்திலிருக்கின்றது. ஆதலால் பரமார்த்த ஸ்வ ரூபமான ஆத்மாவே பரதந்துவம். அன்றியும் ஆத்மாவையன்றிப் பேதம் போற் பிராந்தியினால் தோற்றப்படுகிற ஜகத்து மித்தை யென்கிறதிற் சந்தேகமில்லை. ஆதலா லெந்த வர்ணாசிரம தர்மங்களுடையவனா யிருந் தாலும் சாஸ்திரோக்த சாதன சம்பன்னனாகிப் பரமார்த்த அத்வைத பரிபூரண சச்சிதானந்த ஸ்வரூபமாகிய ஆத்மாவே நான்; என்னைவிட ஜகத்தில்லை; அதவா ஜகத்துமெதிருத்தமாய்த் தோற்றினபோதிலும், சுச விஷாணம்போல மித்தையாபூதமான ஜகத்தினா லெனக்குப் பரிசமே யில்லையென்று சம்சய பாவனை விபரீத பாவனையின்றி அருளே திரு மேனியாகிய ஆசாரியர் முன்னிலையி லெவ னறிகிறானோ, அவனே ஜீவன்முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்ககள் சொல்லு கின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

பதினாறாவது சரீரத்திரய நிரூபகம் முற்றிற்று.

---

பதினேழாவது

## தாபத்திரய நிரூபகம்.

சங்கை: தாபத்திரயமாவது யாது ?

உத்தரம்: ஆதியாத்மீகம், ஆதிபௌதீகம், ஆதிதெய்வீகமென மூன்றாம்.

ச. ஆதியாத்மீகமாவது யாது ?

உ. சரீரத்தை யதிஷ்டித்துக்கொண்டு வரப்பட்ட க்ஷயரோகம், சீதசுரம், தாபசுரம், குன்மம், தலைநோய், அதிசாரம், வெப்பம், சூலைமுதலான

வியாதிகளும்; மக்கள், மிருகங்கள், பேய்கள், திருடர்கள், இராக்ஷதர்கள் முதலானவர்களா லுண்டாகின்ற துக்கங்களுமாம்.

ச. ஆதி பௌதிகமாவது யாது?

உ. ஜலம், வெய்யில், மழை, காற்று, இடி, மின்னல், பனி முதலிய அசேதனங்களா லுண்டாகாநின்ற துக்கங்களாம்.

ச. ஆதி தெய்வீகமாவது யாது?

உ. கருப்பந் தரித்தல், உண்டாதல், வளர்தல், நரை, திரை, அஞ்ஞானம், ஜர்மரணம், நாசம், ஜனன முதலிய துக்கங்களேயாம்.

ச. தாபத்திரய காரணமாவது யாது?

உ. சுரோத்திரம் ஆதியாத்மீகம், சத்தம் ஆதிபூதம், ஆகாசம் ஆதிதெய்வீகம் தொக்கு ஆதியாத்மீகம், பரிசம் ஆதிபூதம், வாயு ஆதிதெய்வீகம்; சட்சு ஆதியாத்மீகம், ரூபம் ஆதிபூதம், ஆதித்தன் ஆதிதெய்வீகம், நாக்கு ஆதியாத்மீகம், ரசம் ஆதிபூதம், வருணன் ஆதிதெய்வீகம்; ஆக்கிராணம் ஆதியாத்மீகம், கந்தம் ஆதிபூதம், அசுவினி ஆதிதெய்வீகம்; வாக்கு ஆதியாத்மீகம், வசனம் ஆதிபூதம், அக்கினி ஆதிதெய்வீகம்; பாணி ஆதியாத்மீகம், தானம் ஆதிபூதம், இந்திரன் ஆதிதெய்வீகம்; பாதம் ஆதிஆத்மீகம், கமனம் ஆதிபூதம், உபேந்திரன் ஆதிதெய்வீகம்; பாயுரு ஆதியாத்மீகம், விசர்க்கம் ஆதிபூதம், பிரசாபதி ஆதிதெய்வீகம்; மனம் ஆதியாத்மீகம், சங்கற்பம் ஆதிபூதம், சந்திரன் ஆதிதெய்வீகம்; புத்தி ஆதியாத்மீகம், நிச்சயம் ஆதிபூதம், சதுர்முகன் ஆதிதெய்வீகம்; அகங்காரம் ஆதியாத்மீகம், அபிமானம் ஆதிபூதம், உருத்திரன் ஆதிதெய்வீகம்; சித்தம் ஆதியாத்மீகம், தாரணை ஆதிபூதம், க்ஷேத்திரக்ஞன் ஆதிதெய்வீகம்; தமசு ஆதியாத்மீகம், விகாரம் ஆதிபூதம், ஈசுவரன் ஆதிதெய்வீகமாம். இவைகளெல்லாங் கூடிச் சாக்கிர சொப்பன சுழுத்தியாகிய அவஸ்தாத்திரயங்களாயின. இந்த அவஸ்தாத்திரயங்களுக்குச் சாட்சியாய் நித்தியனாய் நிர்விகாரனாய் ஆனந்தசுவரூபனாகிய ஆத்மாவே நானென்று ஸ்ரீசற்குரு முன்னிலையில் விசாரித்து எவனறிகிறானோ அவனே கிருதார்த்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாசபுராணங்கள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

பதினேழாவது தாபத்திர நிரூபகம் முற்றிற்று.

---

பதினெட்டாவது

# பிரதிபந்தத்திரயநிரூபகம்.

---

சங்கை: பிரதிபந்தத்திரயமாவது யாது?

உத்தரம்: பூதப்பிரதிபந்தம், வர்த்தமானப்பிரதிபந்தம், ஆகாமியப்பிரதிபந்தமாம்

ச. பூதப் பிரதிபந்தமாவது யாது?

உ. பெரியகுடும்பியானவொரு பிராமணன் ஜீவனார்த்தமாய் ஒரு எருமையைச் சம்பாதித்து அவ்வெருமையினுடைய பால் தயிர் நெய் முதலான

வைகளை விற்பனைசெய்து, அதனால் அவன் புத்திர பாரியாதிகளை ரட்சித்துக்கொண்டு அவ்வெருமைக்கும் வைக்கோல் தவிடுமுதலானவைகளுங் கொடுத்து வருகிற வுபசாரங்களிற் குறைவில்லாமல் நடத்திக்கொண்டு வெகுநாள் தேகநிஷ்டனாய்ச் சீவனம் பண்ணிக் கொண்டிருந்தான். இப்படியிருக்குங் காலத்தில் கர்மவசத்தினால் அவன் புத்திர பாரியாதிகளும் எருமையும் இறந்துபோய், அந்தப்பிராமண னொருவன் மாத்திரம் இறவாமல் தனித்திருந்து துக்காக்கிராந்தனாய் விசனப்பட்டு, ஐயோ! இந்தக் குடும்பம் சத்தியமென்றிருந்தோமே, சொப்பனம்போல் அசத்தியமாய் விட்டதேயென்று மகா வருத்தமடைந்து, நாம் இனி யிந்தச் சமுசாரத்திலிருக்கப் போகாதென்கிற விரத்தியுடன் சந்நியாசியாய் ஓர் ஆசிரியரிடத்திற்போய்ச்சேர்ந்து, வேதாந்த சாஸ்திர சிரவணாதிகள் செய்தான். அவ்வாசிரியரும் அவனுக்குச் சொல்லவேண்டிய சாஸ்திரார்த்தங்களையெல்லாம் முபதேசித்து, அந்தச் சீடனை மாறாமல் ஒரு லட்சியத்தைச் சிந்தித்திருக்கும்படி வைத்திருந்தார். அவனும் அந்தலட்சியத்தையிடைவிடாமல் அனுஷ்டித்துக்கொண்டே யிருந்தான். அங்ஙன மிருக்க ஒருநாள் அவ்வாசிரியர் அந்தச் சீடனையழைத்து அப்பா, நீ இத்தனை நாளாய்ச் சிந்தனையிற் பழகிவருகிறாயே; உன்னுடையசித்தம் நிருமலமாயிற்றா? கிருத கிருத்தியனாய் விளங்குகின்றாயா? சுவானுபவத்தில் இன்னங் கர்த்தவியமுண்டா யிருப்பதாய்த் தோற்றப்படுகிறதோவென்று வினவ, அந்தச் சீடன், அவ்வாசிரியருக்கு நமஸ்காராதிகள் செய்து, சுவாமீ, எனக்கு வேறொன்றுந் தோற்றப்படவில்லை, பூர்வ ஆசிரமத்திலெனக்கொரு எருமை உண்டு; அவ்வெருமை அப்போதே யிறந்துவிட்டது. அவ்வெருமையே சார்வதா முன்னிட்டுச் சாட்சாத்காரமாய் நிற்கின்றதேயன்றி வேறொன்றுங் காணேனென்று தன்னுடைய நிசானுபவத்தை மறைக்காமல் யதார்த்தமாகச் சொன்னான். அது கேட்ட ஆசிரியர் இது பூதப் பிரதிபந்தமென்று மவுனமா யிருந்தார்.

ச. ஆனால் அந்தப் பிரதிபந்தத்திற்கு நிவிர்த்தி யெப்படி?

உ. பிறகு அவ்வாசிரியர் அந்தப்பிரதிபந்தம் நிவிர்த்தியாகும்பொருட்டு, அவ்வெருமையினிடத்தி லிருக்கப்பட்ட பிரிய வாஞ்சையை யனுசரித்து, அந்தச் சீடனுக்குத் தத்துவ உபதேசஞ் செய்து அம்மோகத்தைக் கெடுத்துக் கிருதகிருத்தியனாகச் செய்தருளினார்.

ச. அதெப்படி?

உ. அந்தச் சாட்சாத்காரமான எருமையே அஸ்தி பாதிப் பிரிய நாமரூபமாகிய ஐந்தவயங்களுடன் கூடியிருக்கிறதென்றும், அவற்றுள் நாமரூபமிரண்டையுந் தள்ளி, அஸ்தி பாதிப் பிரியமாத்திரமே உனது சொரூபமென்று சிந்தித்திருவென்றும் கிருபையினால் அனுக்கிரகஞ் செய்தருளினார். அதுமுதல் அவனு மப்படியே யிடைவிடாமற் சிந்தித்துச் சிலநாளில் நாமரூபமாகிய அந்தப் பூதப்பிரதிபந்த நீங்கிச் சச்சிதானந்த ஸ்வரூபமாகிய ஆத்மாவே நானென்று சாக்ஷாத்கார சுவானுபவம் பெற்றுக் கிருதார்த்தனானான். இந்தக்கதை யுலகத்தில் வழங்கிவருகின்றது. அல்லாமலும் வித்தியாரண்ய சுவாமிகளும் பஞ்சதசப்பிரகரணத்தில் நிரூபித்திருக்கின்றார். இதுவே பூதப்பிரதிபந்த விவகாரமும், அத னிவிர்த்தியுமென் றறிக.

ச. வர்த்தமானப் பிரதிபந்தமாவது யாது ?

உ. விஷயாசத்தி, பிரக்ஞாமாந்தம், குதர்க்கம், விபரீத துராகிருதம் என்று நான்குவிதமா யிருக்கும்.

ச. விஷயாசத்தியாவது யாது ?

உ. சமஸ்தவிஷயங்களிலும் ரூடமான ஆசத்தி யுண்டாயிருத்தல்.

ச. பிரக்ஞாமாந்தமாவது யாது ?

உ. ஒருவர் சொன்ன அர்த்தம் புத்தியிற் பதியாமலிருத்தல்.

ச. குதர்க்கமாவது யாது ?

உ. ஆசிரியர் சொன்ன அர்த்தத்திற்கு விபரீத அர்த்தஞ் சொல்வது.

ச. விபரீத துராகிருதமாவது யாது ?

உ. நான் பண்டிதன், நான் வித்துவான், நான் விரத்தன், நான் சந்நியாசி, நான் சடையுடையவன், நான் காஷாயந் தரித்தவன், நான் தவசியென்று தேகேந்திரியாதிகளிடத்தில் ஆத்மபுத்தி பண்ணுதல்.

ச. இதற்கு நிவிர்த்தி யெப்படி ?

உ. சமை, தமை, யுபரதி, திதிட்சைகளினால் விஷயாசத்தியும், சிரவணத்தினால் பிரக்ஞாமாந்தமும், மனனத்தினால் குதர்க்கமும், நிதித்தியாசனத்தினால் துராகிருத விபரீதமும் நீங்கிவிடும். இந்தப்படிப் பிரதிபந்தம் நாசப்படுமானால் முமுட்சுக்களுக்குத் தானே யாத்மசொரூபமென்கிற திடபுத்தி யெளிதில் உண்டாம்.

ச. ஆகாமியப் பிரதிபந்தமாவது யாது ?

உ. எந்தவேளையி லெந்தக் கன்மம் வந்தாலும் அது புண்ணிய பாவ மிசிர கன்மத்தினாலேயே வருகின்றது. அங்ஙனமிருக்க இந்தவேளையி லிது வரவேண்டுமென்றும், இது வருமல்லவா வென்றும், இது வரலாகா தென்றும் ரூடமனதாய்ச் சிந்தித்துக்கொண்டிருப்பது ஆகாமியப் பிரதிபந்தமாம்.

ச. இதற்கு நிவிர்த்தி யெப்படி ?

உ. உபஸ்திதமான பாவ கர்மமும், முமுட்சுக்களுக்கு விஷயத்தினிடத்தில் ரூடமாய்த் தயா ரூபமான ஆசத்தி பிறப்பிக்குமென்றும், தேகத்திற்கு நடக்கவேண்டிய புசிப்பு எற்றக் குறைச்சலில்லாமற் சுநிச்சயமாய் நடக்குமென்றுங் குருவாக்கியத்தினாற் றெளிந்திருக்கிறபடி. மேல்வருங் காரியத்தை நாடவேண்டியதே யில்லை. ரூடமான மனதாய் நாட்டம் வைத்தாலதுவே யாகாமியப் பிரதிபந்தமென்று சொல்லப்படும். முமுட்சுவானவர்கள் அந்த ஆசத்தியை யாகாமியப் பிரதிபந்தமென்றறியாமல், அகர்த்தாவாய் அசங்கனுகிய வென்னை இந்த வாசத்தி யென்னசெய்யப்போகிறதென்று சட்டைபண்ணாதிருந்தார்களேயானால், அது அவர்களுக்குச் சிறிது ஜன்மங்களையேனுங் கொடாமற் போகாது.

ச. ஆகாமியப் பிரதிபந்தஞ் சனனங் கொடுக்குமென்று எங்கே சொல்லைப்படுகிறது ?

உ. சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணங்களிற் சொல்லப்படுகின்றது.

ச. அதெப்படி?

உ. வாமதேவருக் கொருஜன்மங் கொடுத்ததென்றும், ஜடபரதருக்கு மூன்று சன்மங் கொடுத்ததென்றும், இன்னுஞ் சிறிது பேர்களுக் கனேக சன்மங்கள் கொடுத்ததென்றுஞ் சொல்லப்படுகின்றன. ஆதலால், ஸ்ரீ சற்குருவானவர், சீஷனுக்குப் பாகியத்திலும் அந்தக் கரணத்திலு மிருக்கிற பூர்வ பழக்கமாகிய அஞ்ஞானத்தை நன்றாய் விமரிசையாய் நினைவி லிருக்கவொட்டாமல் அதின் மலினங்களையும் சொரூபத்தையும் பல திருஷ்டாந்த தாஷ்டாந்தங்களினால் போதமாகும்படி யெடுத்தறி வித்து, அவனைப் பிரதிபந்தத்தி லொட்டாமற் பண்ணுவார். ஆதலா லிந்தப்படி முமூட்சுக்களானவர்கள் ஸ்ரீ சற்குரு முகமாய்ப் பிரதிபந்தங் களை நன்றாய் விசாரித்து அவை தங்களை யனுசரிக்கவொட்டாமற் றள்ள வேண்டும். அப்படித் தள்ளாவிட்டால் அவர்களுக்குச் சிறிது ஜன்மங் கள் வருமென்பதிற் சந்தேகமில்லை. இந்தப் பிரதிபந்தத்திரயம் எந்த ஜன்மத்தி லவனுக்கு நசித்துப்போகின்றதோ, அவனுக்கே அந்த ஜன் மத்தில்முத்தி. இந்தப் பிரதிபந்தங்களி லொன்றாயினுமிருந்தால் அந்தச் சன்மத்தில் முத்தியில்லையென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங் கள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

பதினெட்டாவது பிரதிபந்தத்திரய நிரூபகம் முற்றிற்று.

---

பத்தொன்பதாவது

## நவவிதசமுசார நிரூபகம்.

சங்கை: நவவித சமுசார மாவது யாது?

உத்தரம்: ஞாதுரு, ஞான, ஞேயம்; போக்தா, போக்கிய, போகம்; கர்த்தா, கர்ம, கிரியை யென்றொருபட்சஞ் சொல்லுவார்கள்.

ச. ஆனால் பட்சாந்தரமாவது யாது?

உ. பஞ்சமகா பூதங்கள், ஞானேந்திரியங்கள், கன்மேந்திரியங்கள், பிராணாதி பஞ்சகம், அந்தக்கரண சதுஷ்டயம், ஸ்தூலசரீரம், அவஸ்தாத்திரயம், இவைகளுக்குக் காரணமான அஞ்ஞானம் இவைகளையே நவவித சமு சாரமென்றும், நவவிதப் பிரபஞ்சமென்றுஞ் சொல்லுவார்கள். இந்த நவவித சமுசாரமும் பிராந்தியினால் வந்தன. இவை அகங்காரத்திற்கே யன்றிச் சாட்சியாகிய எனக் கில்லையென்றும்; ஞானேந்திரியம், கன் மேந்திரியம், மனாதிசதுஷ்டயம், பிராணாதிபஞ்சகம், விஷயாதிபஞ்சகம், காமம், கர்மம், அஞ்ஞானம் இவைகளே புரியட்டக சரீரமென்றும் ஸ்ரீ சற்குரு முன்னிலையி லெவன் சம்சய விபரீதமில்லாமல் விசாரித் தறிகிறானோ, அவனே சீவன் முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்கள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

பத்தொன்பதாவது நவவித சமுசார நிரூபகம் முற்றிற்று.

---

இருபதாவது

# வைராக்கியாதி நிரூபகம்.

சங்கை: வைராக்கியாதிகள் எவர்களிடத்தி லிருக்கும்?

உத்தரம்: இம்மூன்றும் விவேகிகளிடத்திற் கூடியிருக்கும்; கன்மவசத்தினல் சில விவேகிகளிடத்தி லில்லாதிருந்தாலு மிருக்கும்.

ச. அவற்றின் தன்மையாவது யாது?

உ. ஏது, சொரூபம், காரியம், அவதி, பலம் இவ்வைந்தும் அவற்றின் தன்மைகளாம்.

ச. வயிராக்கியத்திற்கு ஏதுவாவது யாது?

உ. சமஸ்த விஷயத்திலுந் தோஷதிருஷ்டி யுண்டாவது.

ச. சொரூபமாவது யாது?

உ. தேக கரண வெதிருத்தமான விஷயங்களில் தோஷம் பிறந்து, அவைகளைக் கக்கின சாதத்தைப்போற் காண்பது.

ச. காரியமாவது யாது?

உ. அந்த விஷயங்களைப் புசிக்காமலேன் தள்ளிவிட்டோமென்று திரும்பவும் நினையாதிருப்பது.

ச. அவதியாவது யாது?

உ. பிரமலோகாதிபரியந்தந் திரணீகரிப்பது.

ச. பலமாவது யாது?

உ. பிரமலோகம்.

ச. உபரதிக்கு ஏதுவாவது யாது?

உ. இயம நியமாதி யஷ்டாங்க யோகங்கள்.

ச. சொரூபமாவது யாது?

உ. சித்தநிரோத முண்டாவது.

ச. காரியமாவது யாது?

உ. சர்வ விகாரங்களு மற்றிருப்பது.

ச. அவதியாவது யாது?

உ. சுழுத்தியைப்போற் சாக்கிரத்திலுஞ் சமஸ்த விஷயங்களையும் மறந்திருப்பது.

ச. பலமாவது யாது?

உ. பிரமலோகம்.

ச. ஞானத்திற்கு ஏதுவாவது யாது?

உ. சிரவண மனன நிதித்தியாசனம்.

ச. சொரூபமாவது யாது ?

உ. அந்தச் சிரவணாதிகளினால் தேகேந்திரியாதிப் பிரபஞ்சத்தினிடத்தில் ஆத்ம சொரூபத்தைப் பிரித்து அந்த அத்விதிய ஆத்ம சொரூபமே தானென்றும், இந்தத் தேகாதிப் பிரபஞ்சம் நானல்லவென்றும், இந்தப் பிரபஞ்சங்கள் தோற்றினபோதிலும் காலத்திரயத்திலு மில்லையென்றும் புத்தியிற் றிடநிச்சயம் வருவதற்குச் சற்குரு முகமாய் அனுதியில் விவேகத்தினிடமாய்ப் பிராந்தி தோற்றின விதமும் எப்போதும் பிரபஞ்சமில்லாதவிதத்துக்குப் பிராந்தி நிவிர்த்தியும்அறிந்ததே சொரூபமென்று சொல்லப்படும்.

ச. காரியமாவது யாது ?

உ. இவ்வாறாத்ம சொரூபமான அகங்காரக் கிரந்திமுதல் காரிய தேகேந்திரியாதிகளும் மறுபடியும் நினைவில் வராதிருப்பது.

ச. அவதியாவது யாது ?

உ. அஞ்ஞானகாலத்தில் தேகம் நானென்று உரப்பு வந்ததுபோல் பிரம சொரூபமே நானென்று திடநிச்சயம் வருவது.

ச. பலமாவது யாது ?

உ. உபாதி ரகிதமான மோக்ஷமே பலம். இந்தப்படி ஒவ்வொன்றுக் கைந்து தன்மைகளும் அன்னியோன்னிய சங்காரிய மில்லாத பிரகாரஞ் சொல்லப்படும்.

ச. இந்த வைராக்கியாதிகள் மூன்றும் மோட்சத்திற் கேதுவோ ? அல்லது இரண்டு ஏதுவோ? அல்லது ஒன்று ஏதுவோ?

உ. சாதனாந்தரத்தை யபேட்சியாமல் பிரத்தியக்ஷ மோக்ஷம் வருகிறபடியால் ஞான மொன்றுமே பிரதானம். வைராக்கிய வுபரதி யிரண்டும் ஞானத்திற்குச் சாதனம். இந்த மூன்று மொரு புருஷனிடத்தி லிருந்தால் மகா தபோபலமாகும். அல்லது ஒருவனிடத்திற் கன்மத்துக்கிடாயொன் றிருந்தாலு மிருக்கும்; இரண் டிருந்தாலு மிருக்கும். சுத்தமாயிரண்டு மில்லாமற் போனாலும் போம். ஒருவனுக்கு வயிராக்கிய வுபரதி யிரண்டும் பூரணமாயிருந்து ஞான மொன்றில்லாமற்போனா லவனுக்கு மோட்ச மில்லை.

ச. ஆனால் வைராக்கிய வுபரதி வியர்த்தமாய்ப் போமோ ?

உ. போகாது.

ச. பின்னை யெப்படி ?

உ. வைராக்கிய வுபரதிகள் தபசானபடியினால் அதனாற் புண்ணிய லோகங்கள் கிடைக்கும். ஒருவனுக்கு ஞானம் பூரண மாயிருந்து வயிராக்கிய வுபரதிக ளில்லாமற் போனாலும் அவனுக்கு மோட்சம் வருமென்பதிற் சந்தேக மில்லை.

ச. வைராக்கிய வுபரதிகளாற் பிரயோசன மென்ன ?

உ. அவைக ளில்லாவிட்டாற் பிராத்தியட்ச துக்கம் போகாது. இதுவே ஞான வயிராக்கிய வுபரதிகளின் தாரதன்மிய மென் றறியத்தக்கது.

பிராரத்தம் நானாவித மானபடியினால் ஞானிகளுடைய விவகாரமும் நானாவிதமா யிருக்கும். விவேகிகள் ஞானிகளுடைய விவகாரத்தைப் பார்த்துச் சாஸ்திர மொருவிதமாய்ச் சொல்லியிருக்க, இவர்கள் நடை பேதப்படலாமா வென்று பிரமிக்கப்படாது. அவரவர்கள் கன்மத்தினா லவரவர்கள் நானாவித வியாபாரத்துடன் கூடியிருந்தபோதிலும் ஞானமும் ஞானபலமான மோட்சமும் பேதமில்லையென்று ஸ்ரீ சற்குருவினாற் றெளிந்து நானே சுயம் பிரகாசப் பிரமசொரூபமென் றெவனறிகிறானோ அவனே சீவன் முத்தனும், அதிவர்ணாசிரமியுமென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்கள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

இருபதாவது வைராக்கியாதி நிரூபகம் முற்றிற்று.

---

இருபத்தோராவது

## வாசனாத்திரய நிரூபகம்.

சங்கை: வாசனாத்திரயமாவது யாது?

உத்தரம்: லோகவாசனை, தேகவாசனை, சாஸ்திரவாசனை என மூன்றுவிதம்.

ச. லோக வாசனையாவது யாது?

உ. உலகத்தில் சமஸ்தமானபேர்களுந் தன்னை நிந்திக்காமலிருக்கவேண்டும்; சார்வதா தன்னையே தோத்திரம் பண்ணவேண்டும் என்று அபிமான பூர்வகமாய்த் தோற்றுகிறதே யுலகவாசனை யென்று சொல்லப்படும்.

ச. ஆனா லிந்தப் பிரதிபந்தத்திற்கு நிவிர்த்தி யெப்படி?

உ. தன்னை ஒருவரும் நிந்தியாமலிருக்கவேண்டும்; தன்னை யெல்லாரும் புகழவேண்டும் என்கிறது ஈசுவராதிகளுக்கும் அசாத்தியமான பிரயத்தனமா யிருக்கிறபடியினால், அஞ்ஞானிகளானவர்கள் ஒருபோது நிந்திப்பார்கள்; ஒருபோது தோத்திரம் பண்ணுவார்கள். அதனால் தனக்கு ஹானியேது? லாபமேது? என்று விசாரித் தறிவதே அந்தப் பிரதிபந்தத்துக்கு நிவிர்த்தியாகும்.

ச. ஆனா லீசுவரனை நிந்திக்கிறவர்க ளுண்டோ?

உ. உண்டு; சர்வ லோகேசுவரனை சதுர்முகப் பிரமா சிவனாலுங் குமார சுவாமியினாலுந் தண்டிக்கப் பட்டாரென்று சிவபாஷாண்டிகளும் வைணவ பாஷாண்டிகளும் நிந்திக்கிறார்கள்; மகாதேவரும் தட்சப்பிரஜாபதி முதலானவர்களால் நிந்திக்கப்பட்டா ரென்று வைணவ பாஷாண்டிகள் முதலியோர்கள் நிந்திக்கின்றார்கள்; இப்படியே சிவபாஷாண்டிகள் முதலானோர் விஷ்ணுவை நிந்திக்கிறார்கள்; நிரீசுவர சாங்கியருஞ் சில மீமாம்சரும் அந்தரியாமி யில்லையென்று நிந்திக்கிறார்கள். ஆதலால் பாமரராகிய பகிர் முகமான பிரஜைகள் நம்மை நிந்திப்பார்களென்பதிற் சந்தேகமே யில்லை.

ச. அந்த நிந்தை யாருக்கு?

உ. அத்விதியப் பிரமசொரூப பரிபூரண ஆத்மாவை யெவர்களாலும் நிந்தை பண்ணக்கூடாது.

ச. ஏன் கூடாது?

உ. அவ்வாத்வா சர்வப் பிராணிகளுக்குஞ் சொரூபமானபடியினால் தன்னைத் தானே நிந்தித்துக்கொண்டதாகும்.

ச. ஆனாலாகட்டுமே?

உ. உலகத்தில் அன்னியன் அன்னியனை நிந்திக்கக் கண்டோமே யன்றி ஒருவன் தன் சொரூபத்தைத் தானே நிந்திக்க வில்லை.

ச. ஆனால் தேகத்தை நிந்தித்தானென்று சொல்லுவோமே?

உ. அந்தத் தேகம் முமூட்சுக்களால் பூர்வமே நிந்திக்கப்பட்டபடியினால், அதைப் பிறர் நிந்திப்பார்களாகில், அந்த நிந்தை முமூட்சுக்களுக்கு லாபமே யன்றி ஆனி யல்ல.

ச. அதெப்படி?

உ. ஒருவனுடைய சத்துருவை அன்னியர் நிந்தித்தால் அப்படி நிந்தித்தவன் அவனுக் கெப்படிப் பிரியனோ, அப்படியே விவேகியானவர்கள் தம் தேகத்தை நிந்தித்தவர்களைத் தமக்குப் பிரியரென்றே காண்பார்கள். மேலும் இம்மூன்று சரீரத்தினுள் தூல சரீரமே நிந்திக்கப்படுகின்றது. மற்ற இரண்டும் கிரிசியமல்லாதபடியினால் நிந்தைக்கு விஷயமல்ல. இந்தச் சரீரமே நிந்தைக்கு விஷயமல்லாமற் போனபடியினால் சர்வாதீதமாய்ச் சமஸ்தமானபேர்களுக்கும் ஆத்மசொரூபமாய்ச் சாட்சி சொப்பிரகாச சொரூபனாகிய நம்மை எந்த நிந்தையும் பரிசிக்கவில்லை யென்பது சொல்லவேண்டுமோவென்று விசாரித்தறிகிற விவேகிகளுக்கு லோக வாசனையாகிய பிரதிபந்தம் நசித்துப் போம். பிரபஞ்சாதீதமாய்ப் பரமானந்த சொரூபமாயிருக்கப்பட்ட நமக்கு உலகத்தில் வரும் நிந்தா ஸ்துதிகளால் பிரயோசன மில்லையென்று அபிமான ரஹிதமா யிருக்கிற விவேகிகளுக்குச் சந்தோஷ துக்கமான விகாரங்களும் நசித்துப்போமென்பதிற் சந்தேக மில்லை.

ச. ஆனால் தேகவாசனையாவது யாது?

உ. ஆயுள், ஆரோக்கியம், அழகு சம்பாதிக்கவேண்டுமென்று வருகிற அபிமானமே தேக வாசனையாம்.

ச. ஆயுளாவது யாது?

உ. ஜீவித்திருக்கிற சரீரம் ஸ்திரமாக விருக்க வேண்டுமென்று கோருதல். அந்தத் தேக ஸ்திதியுங் கர்மாதீனமாகையினால் புருஷ யத்தனத்தினால் சம்பாதிக்கக் கூடாது.

ச. அப்படிச் சொன்னால் சிலர் யோகாப்பியாசம் பண்ணித் திர்க்க காலமாகிய ஆயுள் சம்பாதிக்கிறார்களென்று புராணாதிகளிற் சொல்லுகின்றனவே?

உ. அந்த யோகாப்பியாசம் அனாத்ம விஷயமானபடியினால் ஞானம் வராமற் பண்ணும். ஆதலால் தேகம் வெகுகால மிருக்கவேண்டுமென்று முமூட்சு

கள் பிரயத்தனஞ் செய்யவேண்டியதில்லை. இந்தக்கருத்தே சுருதி ஸ்மிருதி புராணாதிகளிற் சொல்லப்படுகின்றது. இப்படியே புருஷாரா லாரோக்கியமுஞ் சம்பாதிக்கக் கூடாது.

ச. அதெப்படி?

உ. ஆரோக்கியமுங் கர்மாதீனமாகையால் அது புருஷயத்தனத்தினாற் சித்திக்காது. சித்தித்தபோதிலும் முமூட்சுவுக்கு அதனால் இலாபமேது? ஆனியேது? அவ்வாரோக்கிய சித்தியினா லுண்டான சந்தோஷ விகாரமும், சித்திக்காமையினா லுண்டான துக்க விகாரமும் அந்தக்கரணத்திற்கே. அதற்குச் சாட்சியாகிய நமக்கு இவ்விகாரங்களில்லையென்று விசாரித்தறிந்து, அவ்வாரோக்கிய சித்தியில் அபிமானிக்காமல் விட்டுவிடவேண்டியது. மேலும் அழகா யிருக்கப்பட்ட புருஷருங் காலாந்தரத்திற் குரூபியாகக் கண்டோம்; அழகு வரவேணுமென்று நாம் பிரயத்தனம் பண்ணினபோதிலும் அது வியர்த்தமாய்ப் போவதுங் கண்டோம். அழகு சம்பாதிக்கவேண்டுமென்று வருகிற அபிமானமும் சமஸ்தமான பரமார்த்தத்துக்கும் லௌகீகப் பிரவர்த்தி விகாதமா யிருந்து அனர்த்த பரம்பரையுண்டாக்கு மாகையினால்அழகு சம்பாதிக்கவேண்டுமென்னும் அபிமானமும் முமூட்சுக்கள் வர்ச்சிக்கத்தக்கது.

ச. சாஸ்திரவாசனையாவது யாது?

உ. சாஸ்திர பாடத்தினாலும், சாஸ்திரார்த்த ஞானத்தினாலும், சாஸ்திரானுஷ்டானத்தினாலும் விசனமுண்டாயிருப்பதே சாஸ்திரவாசனை. இதனால் தன்னுண்மையாகிய ஆத்ம விசாரஞ் சம்பாதிக்கக் கூடாது. அந்த விசனம் சாஸ்திரவிஷயமான வாசனா சொரூபப் பிரதிபந்தமென்றே சொல்லப்படும்.

ச. மோட்ச சாதன வேதுவாகப்பட்டதைப் பிரதிபந்த மென்று சொல்லுவ தெப்படி?

உ. பரத்துவாசர், நாரதர் முதலானவர்கள் வேத சாஸ்திரங்களை யாதி யந்தமா யறிந்து அப்பியசிக்க ஆரம்பித்து வெகு துக்கங்களை யடைந்துஅசாத்தியமென்று விட்டுவிட்டார்களென்று சுருதியாதிகளிற் கண்டிருப்பதாலும் வேதாந்த விருத்தயான அன்னிய சாஸ்திராப்பியாசம் ஆத்ம விசாரத்திற்கு விரோதமாகையினாலும் பிரதிபந்தமென்று சொல்லப்படும். ஆதலால் சாஸ்திர பாடமுஞ் சாஸ்திரார்த்த ஞானமும் சாஸ்திரானுஷ்டானமும் ஆதி யந்தமாகச் சம்பாதிக்கக் கூடாது. ஆகையால் முமூட்சுக்கள் சாஸ்திரார்த்தங்களை ஆதி யந்தமாய் விசாரிக்கவேண்டுமென்கிற அபிமானத்தை விடவேண்டியது. உலகத்தில் சாஸ்திராப்பியாசம் பண்ணினவனுக்குப் பூர்வங் கற்றுப் பிற்பாடு மறந்துபோகிறபடியினால் துக்கமே தோற்றுகின்றது. தான் பிறருடனே வாது செய்து செயித்தபோதுந் துக்கமே தோற்றுகின்றது. ஆதலால் அன்னிய சாஸ்திராப்பியாசம் சர்வதா அனர்த்த ஏதுவானபடியினால் முமூட்சுக்கள் விடத்தக்கது. இந்தப்படி வேதாந்த சாஸ்திராப்பியாசம் பணணி யனுபவஞ் சம்பாதித்த பிறகு வேதாந்த சாஸ்திரத்திலு முபாதி வருமானால் அந்தச் சாஸ்திர விஷய வாசனாப் பிரதிபந்தமும் நசித்துப் போமென்று சுருதி ஸ்மிருதியாதிகள் சொல்லுகின்றன. இதிற் சமசய மில்லை சித்தம்.

இருபத்தோராவது வாசனாத்திரய நிரூபகம் முற்றிற்று.

---

இருபத்திரண்டாவது

# ஆசுரவாசனுப்பிரதிபந்தநிரூபகம்.

சங்கை: ஆசுரவாசனுப் பிரதிபந்தமாவது யாது?

உத்தரம்: அது தன்னிடத்தில் இல்லாததாய்த் தோற்றினபோதிலும் ஒவ்வொரு சமயத்தில் பிறருடைய ஆசாரத்தைப் பார்த்தபிறகு ஆட்சேபாதிகளா லுண்டாகும். அதுவே யாசுரவாசனுப் பிரதிபந்தமென்று சொல்லப்படும்.

ச. அஃதெப்படி?

உ. அடா பிரஷ்டா! ஆசார மிப்படியா பண்ணுகிறது? நீ பிரஷ்டனாய்ப் போனாய், சந்தேகமில்லை. அடா வுனக் குபதேசம் பண்ணி யாசாரஞ் சொன்ன குரு யாரோ? அவனும் பிரஷ்ட னென்பதிற் சந்தேக மில்லை. அடா நாளைமுதல் நீ நம்மிடத்துக்கு வரவேண்டாம். நீ எழுந்துபோடா. இல்லாவிட்டால் நமது பாததீர்த்தம் வாங்கிக்கொண்டு பிழைத்துப்போடா வென்று சொல்லிப் பின்னையுந் தன் னின்பத்தைக் குறித்து அடா நீ நமக்குச் சிசுருஷை செய்வதைப் பார்க்கிலும் வேதாந்த விசாரத்திலென்ன பலனிருக்கின்றது? நம்மை யுபாசனை பண்ணினு லுனக்குத் தர்மார்த்த காமிய மோட்சமும் சகல அயிசுவரியாபீஷ்டமுஞ் சித்திக்கும். ஆதலால் நீ இது முதல் நம்மையன்றி யாருக்குஞ் சிசுருஷை பண்ணவேண்டாம்; ஒருவரிடத்திலும் போகவேண்டாம்; போனாலு மவர்களை நீ நமஸ்கரிக்கவேண்டாம். அவர்களே உன்னை முன்பு நமஸ்கரித்தால் பிறகு நீ நமஸ்காரஞ் செய்யென்று பலவாறாகச் சொல்லிப் பின்னும் ஒருவரிடத்திற் போனால், தன துமர்மம் வெளியாய்விடுமென்றுநினைத்து, அப்பா, நீ மற்றொரு பெரியவர்களிடத்திற் போய்ப் பேசினாலும் அவர்களை வணங்கினாலும் பிறகு நீ நம்முடைய சந்நிதானத்தில் வரக்கூடாது. இப்படியே ஒருவன் வெகுநாளாய் நம்மை யடுத்தவனாயிருந்து பின்பு சட்டை பண்ணாமல் நம்மைக் கண்டெழுந்திரா திருந்தான்; நாம் அது கண்டு, உனக் காயுள் இந்தமட்டுந்தானென்று சபித்தோம். அவனப்படியே யிறந்து போனான். பின்னும் நம்மை யறிந்த ஒருவன் ஐசுவரிய கர்வத்தினால் நம்மைப் பராமரிக்காமற் போனான். அவனுக்கும் ஐசுவரியமிந்தமட்டுந்தா னென்று சபித்தோம். அவனுந் தரித்திரனாகி யிருக்கிறான். ஒருவனை நீ நம்மிடத்தில் உபதேசம் பெற்றுக்கொண்டு நம்மை மதியாம லிருக்கிறபடியினால் நீ பஸ்பமாய்ப் போவென்று சபித்தோம். அவனும் அப்படியே போனான். நீ நமது மகிமையை நன்றா யறிந்தவனாகையாலும், நல்லவனாகையாலும் உன்னைப்போ லொத்தவர்களனது மகிமை யறியவேண்டு மல்லது பின்னை யார்தான் அறியப்போகிறார்கள்? நாம் பூதபவுஷிய வர்த்தமானங்களெல்லா மறிவோம். பூர்வம் அனேகம்பேர்களுக்கு உபதேசம் பண்ணி யிரட்சித்தோம்; இப்போதும் அனேகருக் குபதேசம் பண்ணி இரட்சித்துக் கொண்டிருக்கிறோம்; இனிமேலும் அனேகம்பேரைச் சிஷராக்கி யிரட்சிக்கப் போகிறோம். இதுவரையில் நமது கையினால் அனேக திரவியங்களைச் சம்பாதித்துப்

பெரியோர்களுக்கும், அதிதிகளுக்கும்,கோயில்களுக்குங் கொடுத்து, ஈசுவரப் பிரதிஷ்டை செய்வித்தோம். நமது மனம் எதைக் கோருகின்றதோ, அது உடனே வந்து முன்னிற்கும். நமக்கு இன்னும் இவ்வளவு திரவியம் வரப்போகின்றது? சகல சித்தி முத்திகளுக்கும் நாமே பாத்திரமன்றி மற்றொருவர் பாத்திர மாவார்களா? ஆதலால் நீ செய்யத்தக்க தான தர்மங்களெல்லாம் நமக்கே சேரும்படி பண்ணு; நமக்கு உடல் பொருளாவி மூன்றுந் தத்தம் பண்ணி உபதேசம் பெற்றுக்கொண்ட பிறகு நீ வேறுமூலமாய்ச் செலவு பண்ணினால் உனக்கு நரகமுண்டாகும். மேலும் அவன் தலைகீழாய் விழுகிறான்; இவன் தலை கீழாய் விழுகின்றான். இன்னுஞ் சிலபேர்கள் தலைகீழாய் விழுகிறார்கள். இவர்களை யெல்லாம் பார்த்து நாம் சற்றே விகற்பமாய் நினைத்தா லவர்கள் கெட்டுப் போவார்கள். அதுவும் நீயே யின்னுஞ் சிலநாளில் அறிந்துகொள்ளப் போகிறாய். நாமே ஈசுவரன்; நாமே யோகி; நாமே சித்தபுருஷன்; நமது பாதத்திற்சரணம் பண்ணு;நமது சந்நிதானத்தில் மனங் கரையாமற் சும்மாவிருக்கிற நீ மற்றவர்களைத்தான் சார்வதா சரணமடைந்து மோட்சமடையப் போகிறாய். மேலும் இந்த மானிட சரீரங் கிடைப்பதே யருமை. இது கிடைத்ததற்குப் பெரியோர்களைக் கண்டமாத்திரம் அவர்களுக்குப் பணிவிடை செய்து ஜனன மரண வுபாதியை நீக்கிக் கொள்ளவேண்டும். நாமே மகாஞானி; நம்போலிகள் உலகத்தில் யாருமில்லை. நமக்கே சகல கலைகளுந் தெரியும்; நாமே யக்கியங்களும், பிராமண போஜனமும், மகேசுவர பூசையும் தானங்களுஞ் செய்யத்தக்க யோக்கிதை வகித்திருக்கிறோம். நமது சாமார்த்திய வல்லபமும், பத்தி புத்திகளும் மந்திர சித்தியும் யோக சித்தியும் தியான சித்தியும் வாத சித்தியும்போல் எவரிடத்திலாகிலும் நீ கண்ட துண்டானாற் சொல்லு. உனக்கென்ன வேண்டினாலும் அவைகளை யெல்லாம் உபதேசித்து ஒரு நிமிஷமாத்திரத்தில் உனக்கு மனோலயம் வரப்பண்ணுகிறோம். தமக்குப் பகையாளி பேரில் ஒரு மந்திரத்தை யுச்சாடனம் பண்ணினால் அவனுடனே மரணமடைவான். நாம் ஒருசிஷனுக் குபதேசஞ்செய்திருந்தோம். அவன் அதுமுதல் மகாபாக்கியவந்தனா யிருக்கிறான். மற்றொருவன் சாக வேண்டுமென்று ஒரு மந்திரத்தை யுபதேசித்தோம். அவன் அதைச் செபித்த மூன்றா ளிறந்துபோய்விட்டான். முன்பு நம்மை யடுத்திருந்த ஒரு சிஷன் திரும்பி வேறொருவனிடத்திற் போய்ச் சேர்ந்து உபதேசம் பெற்றுக்கொண்டான். அது நமக்குத் தெரிந்து அவனுக்கு நாவெழாமற் செய்துவிட்டோம். பூர்வம் அநேகம் பெரியோர்க ளிருந்தார்கள். அவர்களி லொருவரும் நம்மைப்போற் பிரதிஷ்டை யானவர்களில்லை. ஆதலால் மன வஞ்சகமற நமக்குப் பணிவிடை செய்கிறவனே கிருதார்த்தன். கொடுக்கப்பட்ட தானங்களெல்லாம் நமக்கே கொடுக்கவேண்டும்; நம்மையே பூசிக்கவேண்டும்; நம்மையே சேவிக்கவேண்டும்; நம்முடைய பாததூள் விழுந்த கிரகமே மோட்ச வீடாகும். நமது பாதோதகத்தைச் சிரசில் புரோட்சித்துக் கொள்ளுகின்றவர்களே கிருதகிருத்தர்கள். நமக் கிவ்வளவு மகிமை யில்லாவிட்டால் ஒருவரும் நம்மை யுபாசிக்கமாட்டார்கள். நாம் இன்னும் வெகு சிஷவர்க்கங்களைச் சம்பாதிக்கவேண்டுமென் றிப்படிப் பிரதாபமாகச் சொல்லி யனர்த்த ரூபமாக வரப்பட்ட சித்தவிருத்திக்கு ஆசுர வாசனைப் பிரதிபந்தமென்று சொல்லப்படும். இது மகா அனர்த்தத்திற்கு ஏதுவானபடியினாலும், அனாத்ம விஷயமானபடியினாலும், ஆத்மஞான விரோதமானபடியினாலும் விவே

விக வினை விசாரித்து விட்டுவிடவேண்டியது. இந்தப் பிரதிபந்தத்துடன் சிரவணம் பண்ணினால் அவர்களுக்கு அந்தச் சென்மத்தில் ஞானம் வராது.

ச. ஆனால் சிரவணம் வீணாய்ப் போகுமா?

உ. போகாது. அசுவமேத யாகம் பண்ணினவர்கள் போயடைகிற லோகத்திற் போயடைந்து அங்குள்ள போகங்களை யனுபவித்துப் பிறகு பிரமநிஷ்டர் குலத்திற் பிறந்து சம்சார வசத்தனா யிருந்து பூர்வ ஜன்ம வாசனை வசத்தினால் சிரவணத்தில் வந்து நிற்பான். அப்படி நின்றபின் தனக்குப் பிரதிபந்த முண்டென்று தெரிந்து ஸ்ரீ சற்குரு முன்னிலையிற் போக்கடித்து அந்தச் சற்குரு கடாட்ச வீட்சணியப் பிரபாவத்தினால் பரஞானம் பெற்று முத்தனாவான். இந்தப் பிரகாரமாகப் பிரதிபந்தத்தைப் போக்கடித்துச் சிரவணாதிகள்செய்து ஞானம்பெற்றவனே சீவன் முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்கள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

இருபத்திரண்டாவது ஆசுரவாசனாப் பிரதிபந்த நிருபகம் முற்றிற்று.

---

இருபத்துமூன்றாவது

# சிரவணாதித்திரய நிருபகம்.

சங்கை: சிரவணமாவது யாது?

உத்தரம்: சமஸ்தமான வேதாந்தங்களுக்குஞ் சட்வித லிங்க தாற்பரியத்தினால் பிரமஸ்வரூபமாகிய ஆத்மாவினிடத்திற் றாற்பரியமென்று புத்தியில் நிச்சயிப்பதே சிரவணம்.

ச. மனனமாவது யாது?

உ. சுருதி யர்த்தங்களை விசாரித்துக் கேட்கப்பட்ட அர்த்தத்திற்கு யுத்தியினா லேகவாக்கியம் பண்ணிச் சிந்திக்கிறதே மனனம்.

ச. நிதித்தியாசனமாவது யாது?

உ. விசாதிகமான காமக் குரோதாஞ்ஞானங்களை விட்டுவிட்டுச் சுசாதிகமான அகம் பிரமாஸ்மி யென்கிற நிரந்தர சிந்தையைப் பெறுவதே நிதித்தியாசனம்.

ச. இதனாற் பிரயோசனம் யாது?

உ. சார்வதா சிரவணம் பண்ணினால் சகல சம்சயபாவனைகளையும், சார்வதா மனனம் பண்ணினால் அசம்பாவனைகளையும், சார்வதா நிதித்தியாசனம் பண்ணினால் விபரீதபாவனைகளையும் போக்கடிக்கும். பிரதிபந்த அருத்தமுள்ளவர்கள் சார்வதா இத்தமூன்றுஞ் செய்யவேண்டும். அஃதில்லாத சூட்சும புத்தி யுடையவர்களுக்குச் சிரவண காலத்திற்றானே மனன நிதித்தியாசனங்களுஞ் சித்திக்கும்.

ச. அஃதெப்படி?

உ. யுத்திசாலியானவன் ஸ்ரீ சற்குருவினிடத்தில் பாடங் கேட்டுப் படித்த போதே யுத்தியினால் வாக்கியார்த்த ஆலோசனை பண்ணி அவ்வர்த்தத்

திற் கேக வாக்கியம் பண்ணுவான். அதுவே மனனமும் அவனது சித்தம் விஷயாகாரமாகச் செல்லாது சிரவண மனனத்தினாற் சம்சய ரகிதமான சொரூபத்தில் ஏகாக்கிரமாய் நிற்கும். அதுவே நிதித்தியாசனமுமென்று சொல்லப்படும். எந்த மூடனானவன் பிரதிபந்தத்துடன் கூடியிருக்கிறானோ, அவன் சிரவண மனன நிதித்தியாசனங்களைத் திரும்பவும் திரும்பவும் பண்ணவேண்டும். பிரதிபந்த மின்றிச் சூட்சும புத்தியுடையவனா யிருக்கிற விவேகிக்குச் சிரவண காலத்திற்றானே மனனமும் நிதித்தியாசனமுஞ் சித்திக்கும். இந்த அர்த்தத்தை ஸ்ரீ சற்குரு முன்னிலையிற் சங்கையற விசாரித் துணர்ந்தவனே சீவன் முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாதிகள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

இருபத்துமூன்றாவது சிரவணாதித்திரய நிரூபகம் முற்றிற்று.

---

இருபத்துநான்காவது

# பாவனாத்திரய நிரூபகம்.

சங்கை: பாவனாத்திரயமாவது யாது?

உத்தரம்: சம்சயபாவனை அசம்பாவனை விபரீதபாவனையென்று மூன்றுவிதம்.

ச. அவற்றுள் சம்சய பாவனையாவது யாது?

உ. வஸ்து த்வயத்தைப்பற்றிக்கொண்டு வருவதே சம்சய பாவனை.

ச. அஃதெப்படி?

உ. திருஷ்டாந்தத்தில் மார்க்கத்திற் போகிற வொரு புருஷனுக்கு ஊர்த்வாகாரமாயிருக்கிற ஸ்தாணுவைப் பார்த்து, இது ஸ்தாணுவோ, புருஷனோவென்று வருகிற சித்தவிருத்திக்குச் சம்சய பாவனையென்று பெயர்.

ச. அசம்பாவனையாவது யாது?

உ. இங்கே ஸ்தாணு வரக் காரண மில்லையே; ஸ்தாணு வராதேயென்று வருகிற சித்த விருத்திக்கு அசம்பாவனையென்று பெயர்.

ச. விபரீத பாவனையாவது யாது?

உ. இது சர்வாத்மகமாய் ஸ்தாணுவல்ல, புருடனே யென்று நிச்சய ரூபமாய் வருகிற சித்தவிருத்திக்கு விபரீத பாவனை யென்று பெயர். இப்படியே தார்ஷ்டாந்தத்திலும் பிரமாணகத சம்சயம், பிரமாணகத அசம்பாவனை, பிரமாணகத விபரீதம், பிரமேயகத சம்சயம், பிரமேயகத அசம்பாவனை, பிரமேயகத விபரீதம் என ஒவ்வொன் றிரண்டுவிதமாயிருக்கும்.

ச. பிரமாணகத சம்சயமாவது யாது?

உ. சுருதிப்பிரமாணமானது கன்மத்தைப் பிரதிபாதிக்கின்றதோ, அல்லது சுதசித்தமாகிய பிரத்தியேகாத்ம பிரமத்தைப் பிரதிபாதிக்கின்றதோவென்று வருகிற சித்தவிருத்திக்குப் பிரமாணகத சம்சயமென்று பெயர்.

ச. பிரமாணகத அசம்பாவனையாவது யாது?

உ. பிரமம் சித்தவஸ்து வானபடியினாலும் பிரமாணாந்தரங்களினால் பிருதிவியாதிகளைப்போ லறியப்படுகிறபடியினாலும் சுருதியாதிகள் அந்தச் சித்தப் பிரமத்தை யெப்படிப் பிரதியாதிக்கும்? அப்படிப் பிரதிபாதிக்க

மாட்டாதென்று வருகிற சித்த விருத்திக்குப் பிரமாணகத அசம்பாவனை யென்று பெயர்.

ச. பிரமாணகத விபரீதமாவது யாது?

உ. பிரமம் சித்த வஸ்துவானபடியினால் சுருதிகளுக்குச் சித்தப் பிரமத்தைப் பிரதிபாதிக்குமிடத்தில் தாற்பரிய மில்லை. மேலும் சுருதிகள் சித்தப் பிரமத்தைப் பிரதிபாதிக்குமேயானால் புருஷனுக்குப் பிரவிர்த்தி நிவிர்த்தி போக்கு வரவு காணும லிருக்கவேண்டும். ஆதலாற் பிரயோசன மில்லாமற்போகும். உலகத்திற் பிரவிர்த்தி பூர்வகமாய்ப் புருஷார்த்தங் கண்டோம். ஆகையினால் சமஸ்த வேதார்த்தங்களுங் கர்மம் பிரமமே யென்று வருகிற சித்தவிருத்திக்குப் பிரமாணகத விபரீதமென்றுபெயர்.

ச. பிரமேயகத சம்சயமாவது யாது?

உ. பிரமமே ஜகத் காரணமோ, அல்லது பிரதானாதிகளே ஜகத் காரணமோ வென்று வருகிற சித்தவிருத்திக்குப் பிரமேயகத சம்சயமென்று பெயர்.

ச. பிரமேயகத அசம்பாவனையாவது யாது?

உ. ஜகத்துக்குப் பிரமம் அன்னியமாய் விலட்சணமா யிருக்கிறபடியினால் ஜகத்திற்குப் பிரமங் காரணமாகமாட்டாது. ஆதலால் பிரதானாதிகளே ஜகத்காரணமென்று வருகிற சித்த விருத்திக்குப் பிரமேயகத அசம்பாவனையென்று பெயர்.

ச. பிரமேயகத விபரீதமாவது யாது?

உ. உலகத்திற் புடவை நூலினிடத்தில் காரிய காரணங்களுக்கு ஏகரூபங் கண்டோம். அதுபோல அசுத்தியாதி விகாரங்களுடன் கூடியிருக்கின்ற ஜகத்திற்குக் காரணமான பிரமமும் அசுத்தியாதிகளுடன் கூடிக்கொண்டிருக்கவேண்டும். அங்ஙன மின்மையால் பிரதானாதிகளே ஜகத் காரணமென்று திடமாய் வருகிற சித்தவிருத்திக்குப் பிரமேயகத விபரீதமென்று பெயர். இப்படியே பிரத்தியேகாத்ம விஷய சம்சயம், பிரத்தியேகாத்ம விஷய அசம்பாவனை, பிரத்தியேகாத்ம விஷய விபரீத மென மூன்றுண்டு.

ச. பிரத்தியேகாத்ம விஷய சம்சயமாவது யாது?

உ. யந்திரத்திற் சிவனாகவும்ஜகத்திலொருவனாகவும்தோற்றிக்கொண்டிருக்கப்பட்ட தான் ஜகத் விலட்சணமான பிரம மாவேனோ, ஆகேனோ வென்று வருகிற சித்தவிருத்திக்குப் பிரத்தியேகாத்ம விஷய சம்சய மென்று பெயர்.

ச. பிரத்தியேகாத்ம விஷய அசம்பாவனையாவது யாது?

உ. கர்த்ருத்வாதி அனேக தர்ம யுக்தனாய்ப் பரிச்சின்னனாய் ஜனன மரணங்களிற் கூடி இந்திரியாதி விபரீத லட்சணங்கள் பெற்ற, தனக்குப் பிரம சொரூபத்வ மெப்படிக் கூடும்? அது கூடாதென்று வருகிற சித்தவிருத்திக்குப் பிரத்தியேகாத்ம விஷய அசம்பாவனை யென்று பெயர்.

ச. பிரத்தியேகாத்ம விஷய விபரீதமாவது யாது?

உ. தான் அகர்த்தாவானால், தன்னைக் குறித்துஇந்தக் கர்மத்தைப் பண்ணு, இந்தக் கர்மத்தைப் பண்ணாதே, இதைப் பார், இதைப் பாராதே, இதைக் கேள், இதைக் கேளாதே, இதைப் பட்சி, இதைப் பட்சி

யாதே யென்று விதி ரூபமாக வேதஞ் சொல்லவே மாட்டாது. சொல்லு கிறபடியால், நான் கர்த்தா வென்பதிற் சந்தேகமே யில்லை யென்று கர்த்ருத்வ உபயோக்கியமான அபிமானாதிகளுக்குச் சுதர்மப் பிரீதி லட்ச ணமாய் வருகிற சித்தவிருத்திக்குப் பிரத்தியேகாத்ம விஷய விபரீத மென்று பெயர். இந்தப் பாவனைகளின் தாரதம்மியங்களை ஸ்ரீ சற்குரு முன்னிலையில் நன்றாய் விசாரித்துத் தள்ளிப் பரஞானத்தை யடைந்த வனே சீவன் முத்தனென்று சொல்லப்படும். இந்த விபரீத பாவனையை மாத்திரம் இன்னும் விசேஷமாய் விசாரித்தறியவேண்டும். ஏனென்றால் உலகத்தில் சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமாதி சுத்த வசனங்களெல் லாம் நீயே யாத்மா, நீயே பிரம மென்று சொல்லியும், ஸ்ரீ சற்குருவும் நீயே யாத்மா, நீயே பிரமென்று சுருதியுக்தியனுபவங்கள் முதலிய வெகு பிரகாரங்களால் உபதேசஞ் செய்தும் ஈசுவர கடாட்சமும் பெரியோர்க ளுடைய கடாட்சவீட்சண்ணியமு மில்லாத பாபாத்மாக்களுடைய மல சகித சித்தமானது துன்மார்க்கத்வ சங்கத்தினால் சச்சிதானந்த சொரூப மாகிய ஆத்மாவே நானென்று கிரகிக்க வல்லமையில்லாமல் சடமாகிய தேகேந்திரியாதிகளையே நானென்று கிரகிக்கும். ஆதலால் அந்த விபரீத த்தை நானுவித திருஷ்டாந்தத்தினால் விசாரித்தறிந்து யூக புத்தியினாற் றள்ளிவிட வேண்டியது.

௪. அந்தத் திருஷ்டாந்த மெப்படி?

உ. தர்ம குத்தனென்றொரு அரசனுண்டு அவன் தனது தர்மத்தினாலேயே பிரதானி முதலிய பரிசனங்களை நன்றாய்ச் சவரட்சணை செய்து துஷ்ட நிக்கிரஞ் சிஷ்ட பரிபாலனம் பண்ணிக்கொண்டுவந்தான். அப்படி யிரு க்குங் காலத்தில் பரிசினி யென்னும் பெயரையுடைய ஒரு பரமார்த்த வஞ்சகன் அந்த ராஜனிடத்தில் பிரதானியாக வந்து சேர்ந்தான்.

அவன் அவ்வரசனுக்கு அதர்மங்களையே போதித்து ஓ மகாராஜா வே, இந்த வித்துவான் முதலான பேர்களுக்கு ஏன் விருதாவிற் சம்ப ளங் கொடுத்து வருகிறீர்கள்? இவர்களாலும் ஸ்தானாதிபதி, வாயில்காப் போர், கொல்லர் முதலான இவ்வளவு ஜனங்களாலும், மாதமொன்றுக்கு எவ்வளவு பொருள் வீணாகச் செலவாகின்றன? இந்தப் பிரதிஷ்டையி னால் நமக்கென்ன பிரயோசனமென்று நாள்தோறுஞ்சொல்லிச்சொல்லி அவர்களுக்கெல்லாஞ் சீவனமில்லாமற் பண்ணுவித்து, அவர்களை யெல் லாந் துவேஷம் பண்ணிக்கொண்டு, ராஜாவும் நாமும் ஒருமையாயிருந் தால், இவர்கள் துவேஷம் நம்மை யென்னசெய்யுமென்று அசட்டை யாய் அவர்களை யெல்லாம் அவமதித்திருந்தான்.

இப்படியிருக்க, ஒருநாள் சமஸ்தமான பேரு மொன்றாகக் கூடி யாலோசித்து, இந்தப் பரிசினி யென்பவனை ராஜ சமூகத்திற்கு வர வொட்டாமற் செய்விக்கிறதே யுக்தமென்று தீர்மானித்துக்கொண்டு, அவன் வருஞ் சமயம் பார்த்துப் பலபேருமாய் அவன்மேல் விழுந்து அடித்துத் துரத்திவிட்டார்கள். இந்தச் சேதியை அறியாத அரசன் பரி சினி யேன் வரவில்லையென்று கேட்டான். அவனுக்கு மகாசுரவியாதி சம்பவித்திருக்கிறதென்று பதில் சொன்னார்கள். அதைக்கேட்ட அர சன் அவனிடத்தில் வைத்திருக்கு மிஷ்டத்தினால் அரண்மனை வைத்தி யர்களை யனுப்பிப் பார்க்கும்படிச் செய்வித்தான். அவர்களும் மேற்படி யார் கூட்டத்திற் சேர்ந்தவர்களாதலால், ஓ மகாராஜாவே, நாங்க

ளென்ன அவுடதங்கள் கொடுத்தாலும் அவன் பிழைக்கிறது அருமையாயிருக்கிறதென்று சொன்னார்கள்.

அதைக்கேட்ட அரசனும் மகா விசனங் கொண்டு நான் அவனைப் போய்ப் பார்த்து வரவேண்டுமென்று பிரயாணப்பட்டுப் போகும்போது அந்தச்சேதி தெரிந்து சிலபேர் அரசனுக் கெதிரே வந்து, சுவாமீ, பரிசினி யிறந்துபோனான், அந்தப் பிணத்தை நீங்கள்போய்ப் பார்க்கலாகாதென்று சில சாஸ்திர திருஷ்டாந்தங்க ளெடுத்துக்காட்டி யரசனைப் பரிசினி வீட்டுக்குப் போகவொட்டாமற் றடுத்து, ஓ மகா ராஜாவே! உமக்கு இந்தலோகத்தில் எவ்வளவு சிநேகர்களிருக்கிறார்கள்? அநேகர் இருந்தாலும் உங்களுக்கு எவர்கள்பேரில் கிருபையோ, அவர்கள்தான் உங்கள் சிநேகத்திற்குப் பாத்திரராவார்களென்று பலவிதமான இத வார்த்தைகள் சொல்லி அரசனது துக்கத்தைப்போக்கி யரண்மனைக்குத் திரும்பும்படி செய்துவிட்டார்கள்.

பிறகு இந்தச் சங்கதிகளைப் பரிசினி யென்பவ னறிந்து நாம் எப்போதும்போல ராஜ சமூகம் போய்ச் சேர்ந்தாலல்லவா இவர்களுக் கெல்லாம் பிராயச்சித்தம் பண்ணிவைக்கலாம்? இவர்களைப் பிராயச்சித்தம் பண்ணி வைக்காமல் நாம் க்ஷவர கர்மம் பண்ணிக்கொள்ளக் கூடாதென்று பிரதிக்ஞை பண்ணிக்கொண்டு, நமக்குராஜசேவை யெப்போது கிடைக்கப்போகிறதென்று வெகுநாள் காத்துக்கொண்டிருந்தான்.

இப்படியிருக்கப் பரிசினியும் ஒருநாள் அவ்வரசன் சவாரி புறப்படுகிற சமாசாரங் கேள்விப்பட்டு, வழியி லொரு அரசமரத்தி லேறிக்கொண்டு, ஒருவருக்குந் தெரியாமற் பதுங்கி யிருந்தான். அப்படி யிருக்க, அரசன் சதுரங்க சேனைகளுடன் சகல வாத்தியங்களும் முழங்கும்படி அம்மரத்திற்குச் சமீபமாய்ச் சவாரி வரும்போது, இந்தப் பரிசினி யென்பவன் பிரத்தியட்சமாய்க் கண்டு, விஜயீபவாவென்று கூவி, நான்தான் பரிசினி, என்னை யுங்கள் சமூகத்திற்கு வரவொட்டாம லெல்லாருங் கூடிச் சங்கேதம் பண்ணிக்கொண்டு, என்னைக் கண்டவிடத்தி லடித்துத் துரத்தித் துராகிருதம் பண்ணுகிறார்களென் றுரத்த சத்தமாய்ச் சொல்ல, அதுகேட்டு அரசனுந் திரும்பி மரத்தின்மே லிருக்கும் பரிசினியைப் பிரத்தியட்சமாகப் பார்த்தான்.

அந்தச் சமயத்தி லங்கிருந்த பரிசனங்களெல்லாம் ஓ! ஓ!! ஏது மோசம் வந்ததே; இனி யெப்படி யென்று சீக்கிரத்தில் விபூதியை அபிமந்திரித்து, அரசன்மேல் தெளித்து, தப்பட்டாவால் ராஜனை மூடி மறைத்து, அஹோ மகாராஜாவே! தேவரீர் பீதி கொள்ளவேண்டாம், முன்செத்துப்போன பரிசினி இந்த மரத்தில் பிரமராட்சதனாயிருந்து, உங்களைக் கூப்பிட் டடைகிறானென்று சகல வாத்தியங்களையும் நன்றாய்க் கோஷிக்கும்படிச் செய்வித்து, அதிசீக்கிரத்திலதானே ராஜாவை யரண்மனைக்கு அழைத்துக்கொண்டு போய்விட்டார்கள்.

பிறகு சிலபேரைவிட்டு அந்தப் பரிசினியை நன்றா யடித்துப் பட்டணத்திற்குப் புறம்பே துரத்திவிட்டார்கள். இப்படி ராஜன், தனது தோஷரகிதமான கண்களால் பரிசினியை நன்றாய்ப் பார்த்தும் அவன் குரல் வசனங்களைக் கேட்டும் அவர்கள் செய்த ஜாலத்தினால் விவேகம் விளங்காமல் உள்ளபடி பிரம ராட்சதனென் றெப்படி நிச்சயித்தானோ, அப்படியே சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமாதிக ளனேக விதங்களினால், நீயே பிரமமென்று சொன்னாலும், ஸ்ரீ சற்குரு நாதனும் சுருதி

யுத்தி யனுபவங்களாற் பிரத்தியட்சப் பிரமாணத்துடன் நீயே பிரமமென்று உபதேசித்தாலும், சுருதிப் பிரமாணத்தினால் ஞானோதய முண்டாயிருந்தாலும் பிரதிபந்த முடையவர்கள் தேகேந்திரியாதி விபரீதங்களையே நானென்று விவேக விளக்கமில்லாமற் கிரகித்துக்கொள்வார்கள்.

ஆதலா லுண்மையாகிய வேதாந்த சாஸ்திர யுக்த சொரூபமே திருமேனியாகிய சற்குரு கடாட்சத்தினாற் சம்சயமறக் கேட்டுத் தெளிந்து, கேட்டபடி யுக்திபண்ணி, யுக்திபண்ணினபடி யனுபவத்திற் கண்டு, அனுபவத்திற்கண்டபடிபிரதிபந்தங்களைநீக்கிச்சாட்சாத்கார மடைந்தவனெவனோ, அவனே சீவன்முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாதிகள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

இருபத்துநான்காவது பாவனாத்திரய நிரூபகம் முற்றிற்று.

---

இருபத்தைந்தாவது

# ஷட்விதலிங்கதாற்பரிய நிரூபகம்.

சங்கை: ஷட்வித லிங்கமாவது யாது?

உத்தரம்: உபக்கிரமம் உபசங்காரம், அப்பியாசம், அபூர்வதை, பலம், அர்த்தவாதம், உற்பத்திகளாம்.

ச. உபக்கிரமமாவது யாது?

உ. அகண்ட பரிபூரண சச்சிதானந்த பிரமத்தினிடத்தில் ரச்சுவிற் சர்ப்பந் தோன்றினதுபோலச் சகல பிரமாண்டங்களாகிய ஜகத்துண்டாயிற்று; சிருஷ்டிக்குமுன் ஜகத்து நாம ரூப ரகிதமாய்ச் சத்தாமாத்திரமா யிருந்ததென்று பிரதிபாதிக்கப்படுகிறதே உபக்கிரமம்.

ச. உபசங்காரமாவது யாது?

உ. இப்படித் தோற்றப்படுகிற சர்வ ஜகத்தும் அந்தச் சத்தினுடைய சொரூபமாம்; அதுவே சத்தியம்; அதுவே யாத்ம சொரூப மென்று பிரதிபாதிக்கப் படுவதே யுபசங்காரம். இவ்விரண்டும் அத்விதிய ஆத்ம சொரூபத்தைப் பிரதிபாதிக்கிறபடியா லிவ்விரண்டு மொருலிங்கமாம்.

ச. அப்பியாசமாவது யாது?

உ. பிரத்தியேகாத்மாவாகிய நீயே பிரமமென்று ஒன்பது பிரகாரமாக வுபதேசிப்பது அவ்வுபதேசம் சேதனனைக் குறித்துச் சொல்வதினாலும், சேதனனுக்கே அத்வைத ஆத்மத்துவம் போதிப்பதினாலும் அதுவே யப்பியாசம்.

ச. அபூர்வதையாவது யாது?

உ. அஷ்டப் பிரமாணங்களுள் உபநிஷத் பிரமாணத்தினாற் பிரத்தியேகாத்ம லட்சணத்தை யறியப்படுவதன்றி, மற்றைப் பிரமாணங்களா லறியப்படாதென்று பிரதிபாதிக்கப்படுகிறதே யபூர்வதை.

ச. பலமாவது யாது?

உ. ஆத்மஞானிக்கு இந்தத் தேகேந்திரியாதி சகலஜகத்தும் பிராரத்தமுள்ளமட்டு மித்தையாய்த் தோற்றுகின்றன. பிராரத்த நாசத்தில் சர்வாத்மனாய்த் தோற்றாமல் அத்வைதசொரூபமாத்திரமாய்ப் பிரகாசிக்குமென்று பிரதிபாதிக்கப்படுகிறதே பலம்.

ச. அர்த்தவாதமாவது யாது?

உ. எந்த வஸ்துவைக் கேட்டமாத்திரத்தில் கேட்கப்படாத வஸ்து கேட்கப்படுகின்றதோ, எந்தவஸ்துவை மனனம் பண்ணின மாத்திரத்தில் மனனம் பண்ணப்படாத வஸ்து மனனம் பண்ணப் படுகின்றதோ, எந்த வஸ்துவை யறிந்த மாத்திரத்தில் அறியப்படாத வஸ்து அறியப்படுகின்றதோ, அதுவே பஞ்சகிர்த்தியங்கட் காதார பூதமான கர்த்தவ்வியமாய் விளங்குகிறதென்று பிரதிபாதிக்கப்படுவதே யர்த்தவாதம்.

ச. உற்பத்தியாவது யாது?

உ. மிருத்திகையிற் பிறந்த கட கலசாதிகளும், சொர்ணத்திற் பிறந்த கடக மகுடாதிகளும், இரும்பிற் பிறந்த கட்க முதலானவைகளும் காரணத்தை யன்றிப் பிர்தக்காய்த் தோற்றினபோதிலும் இந்தக் காரியாதிகளுக்கு உச்சாடன மாத்திர மன்றி, வேறே யர்த்த மில்லாதபடியினால் காரண வெதிருத்தமாய்க் காரிய மில்லையென்று பிரதிபாதிக்கப்படுகிறதே யுற்பத்தி. இப்படியே பிரசித்தமாய்த் தோற்றப்பட்ட ஜகத்தும் பிரத்தியேகாத்ம சொரூபமான பிரம விகாரமானபடியினால் பிரத்தியேகாத்மாவையன்றி வெதிருத்தமா யில்லையென் றறியவேண்டியது.

இந்தப்பிரகாரம் அனுபவமே திருமேனியாகிய ஆசிரியர் முன்னிலையில் ஷட்வித லிங்கத்தினாற் சுருதிகளுக்குத் தாற்பரியங்களைக் களங்கரகிதமாய் விசாரித்தறிந்து நிச்சயிக்கின்றவன் சிரவணமாத்திரத்தில் அத்விதிய ஆத்ம ஞானியாவன். அவனுக்கு மனன நிதித்தியாசனம் வேண்டுவதில்லை. ஆசிரியர் சம்சய ரகிதமாய்ப் பிரத்தியட்சமாய்ப் போதித்தும் சிஷன் மந்தனாய் விபரீத புத்தி யுடையவனா யிருந்தால் அவனுக்கே மனன நிதித்தியாசன முதலிய வுபாதி காரியமெல்லாம் வேண்டும். ஆதலால் எவன் ஷட்விதலிங்க தாற்பரியத்தினால் ஸ்ரீ சற்குரு முன்னிலையில் சாட்சாத்கரிக்கிறானோ, அவனே சீவன் முத்தனும் பரமுத்தனுமுபாதி ரகிதனுமென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்கள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

இருபத்தைந்தாவது ஷட்விதலிங்க தாற்பரிய நிரூபகம் முற்றிற்று.

---

இருபத்தாறவது

## தத்துவ நிரூபகம்.

சங்கை: தத்துவமாவது யாது?

உத்தரம்: ஞானேந்திரிய பஞ்சகமும், கன்மேந்திரிய பஞ்சகமும், பிராணாதி பஞ்சகமும், சத்தாதி பஞ்சகமும், அந்தக்கரண சதுஷ்டயமுங் கூடி இருபத்துநான்கு தத்துவங்களென்றும்; இந்த இருபத்துநான்கு தத்துவங்களும், அபஞ்சீகிருத பூதமும், சரீரத் திரயமும், அவஸ்தாத் திரயமும், அஞ்ஞானமுங் கூடி முப்பத்தாறு தத்துவங்களென் றுஞ் சொல்லப்படும். இவைகளைச் சற்குரு முன்னிலையில் சந்தேக விபரீத மின்றி விசாரித்தறிந்து, இவைகளுக்கு விலட்சணமாகிய அத்விதிய ஆத்ம சொரூபமே நானென்றறிகிறானோ, அவனே சீவன் முத்தனென்று சுருதி ஸ்மிருதி யாதிகள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

இருபத்தாறாவது தத்துவநிரூபகம் முற்றிற்று.

---

இருபத்தேழாவது

# பிரமசரியத்வ நிரூபகம்.

சங்கை: பிரமசரியத்வ மாவது யாது?

உத்தரம்: தரிசனம், பரிசனம், கேளி, கீர்த்தனம், குய்யபாஷணம், சங்கற்பம், அத்தியாவசாயம், கிரியாநிவிர்த்தி என்கிற எண்வகையிலும் நிராசையா யிருப்பதே பிரமசரியத்வ மென்னப்படும்.

ச. தரிசனமாவது யாது?

உ. ஒரு ஸ்திரீயை ஆசையாகப் பார்க்கிறது.

ச. பரிசனமாவது யாது?

உ. ஒரு ஸ்திரீயை ஆசையாகத் தீண்டுவது.

ச. கேளியாவது யாது?

உ. ஒரு ஸ்திரீயோடு ஆசையாகச் சரசமாய் விளையாடுவது.

ச. கீர்த்தனமாவது யாது?

உ. ஒரு ஸ்திரீயை அப்படிப்பட்டவ ளிப்படிப்பட்டவ ளென்று ஆசையாக வர்ணிப்பது.

ச. குய்யபாஷணமாவது யாது?

உ. ஒரு ஸ்திரீயோடு ஆசையாய் ஏகாந்தத்தில் வசனிப்பது.

ச. சங்கற்பமாவது யாது?

உ. ஒரு ஸ்திரீயை யாசையாய் மனதில் நினைப்பது.

ச. அத்தியாவசாயமாவது யாது?

உ. ஒருஸ்திரீயைச்சேரவேண்டுமென்றுமனதில்ஆசையாய்த்தீர்மானிப்பது.

ச. கிரியா நிவிர்த்தியாவது யாது?

உ. ஒரு ஸ்திரீயை ஆசையாய்க் கூடி யனுபவிப்பது. இவ்வெண்வகைகளும் ஒன்றுக் கொன்று தாரதம்மியமா யிருந்தாலும் சமஸ்தத்துக்கும் இச்சையே காரணமாகையால், சாமானியமாய் மைதுனங்களென்றே பெரியோர்கள் சொல்லுவார்கள். இந்தப் பிரமசரியத்வ முடையவர்களுக்குச் சிரவணமாத்திரத்தில்தானே ஞானம் வருமென்பதிற் சந்தேக மில்லை. அப்படிப்பட்ட ஆத்ம ஞானிகளை அஜிம்மன், சண்டகன், பங்குரன், அந்தகன், பதிரன், மூகத னென்று சுருதியாதிகள் கோஷ்டிக்கின்றன.

ச. அஜிம்மன் எப்படிப்பட்டவன்?

உ. நாவில்லாதவனல்ல; ஆனால் இது எனக்குப் பிரியம், இது எனக்கு அப்பிரியமென்று சொல்லாமல் கர்த்ருத்வாபிமான ரகிதமாய் இட்டதைப் புசித்து அசத்தியம் பேசாமலும் அதிகம் பேசாமலு மிருக்கிறவனே அஜிம்மனாம்.

ச. சண்டகன் எப்படிப்பட்டவன் ?

உ. பேடியல்ல; ஆனால் ஸ்திரீ வடிவமான சிசுவையும், பதினாறு வயதுள்ள ஸ்திரீயையும், நூறு வயதுள்ள ஸ்திரீயையும் சமமாகக் கண்டு நிருவிகாரியா யிருக்கிறவனே சண்டகனும்.

ச. பங்குரன் எப்படிப்பட்டவன் ?

உ. முடவனல்ல; ஆனால் பிச்சையினிமித்தமும், மல சல நிமித்தமும் ஓரிடத்திற்குப் போகிறதும், அதவா கிராமாந்தரங்களுக்குப் போகவேண்டுமானால் யோசனை தூரத்திற்குள் போகிறதுமேயன்றி அதிகமாய்ப் போகாமல் இருக்கிறவனே பங்குரனும்.

ச. அந்தகன் எப்படிப்பட்டவன் ?

உ. குருடனல்ல; ஆனால் கண்ணிருந்தபோதும் சஞ்சரித்தபோதும் நான்கு நுகத்தடி யளவு பூமியை விட்டு அப்பால் பார்க்காம லிருக்கிறவனே அந்தகனும்.

ச. பதிரன் எப்படிப்பட்டவன் ?

உ. காது கேளாதவனல்ல; ஆனால் இதமாகிய வசனமும், அஹிதமாகிய வசனமுஞ் சுரோத்திரத்திற்குக் கேட்கப்படுகிறதா யிருந்தாலும் அவைகளில் இதாகிதங்க ளில்லாம லிருக்கிறவனே பதிரனும்.

ச. மூதகன் எப்படிப்பட்டவன் ?

உ. மூடனும் சவுந்தரிய மில்லாதவனுமல்ல; ஆனால் சமஸ்த விஷயமுந் தன் சந்நிதானத்தின்முன் வந்திருந்தபோதிலும் இந்திரியபடுத்துவ முண்டானவனாய், அவ்விஷயங்களை யனுபவித்தற்குத் திடகாத்திரனாயிருந்தாலும் நித்திரை போகிறவன்போலப் புத்தியில் நழுவி யிருக்கிறவனே மூகதன் என்று சொல்லப்படும். இவ் வாறுதன்மையு முண்டானவனே விவகார தசையிலிருந்து விடுபட்ட விரத்தனென்றும், சந்நியாசியென்றும், முத்தனென்றும், அதிவர்ணாசிரமியென்றும் சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்கள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

இருபத்தேழாவது பிரமசரியத்வ நிரூபகம் முற்றிற்று.

---

இருபத்தெட்டாவது

## சத்தவிதசைதன்ய நிரூபகம்.

சங்கை: சத்தவித சைதன்னியமாவது யாது ?

உத்தரம்: சுத்த சைதன்யம், ஈசுவர சைதன்யம், ஜீவ சைதன்யம், பிரமாத்துரு சைதன்யம், பிரமாண சைதன்யம், பிரமேய சைதன்யம், பல சைதன்னிய மென்று ஒரு சைதன்னியமே விவகாரத்தி லேழுவிதமாகச் சொல்லப்படுகின்றது.

ச. இவ்வேழுக்கும் பேத மெவ்வாறு ?

உ. மாயா ரகித சைதன்னியத்திற்குச் சுத்த சைதன்னியமென்றும், மாயா சகித சைதன்னியத்திற்கு ஈசுவரனென்றும், அவித்தியா சகித சைதன்னியத்திற்குச் ஜீவனென்றும், அந்தக்கரண சகித சைதன்னியத்திற்குப் பிரமாதாவென்றும், அந்தக்கரண விருத்தி சகித சைதன்னியத்திற்குப்

பிரமாணமென்றும், அப்பிரத்தியட்ச விஷய சகித சைதன்னியத்திற்குப் பிரமேயமென்றும், பிரத்தியட்ச விஷய சகித சைதன்னியத்திற்குப் பலமென்றுஞ் சொல்லப்படும். இந்தப்பிரகாரமாக அத்விதியமாகிய பரிபூரண ஆத்மாவே யுபாதி பேதத்தினால் அனேகவிதமாகத் தோற்றப்படுகின்றது. ஆதலால் இந்த வுபாதி பேதங்களை ஸ்ரீ சற்குருவினாற் றெளிந்து சொரூபமுதற் பலம் வரையிலு முண்டான வுபாதி முறைமையை யறிந்து தள்ளி, ஒன்றினாலும் தள்ளப்படாத அத்விதிய பரிபூரணமாகிய ஆத்மாவே நானென்று எவனறிகிறானோ, அவனே உபாதி ரகிதனான ஜீவன்முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்கள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

இருபத்தெட்டாவது சத்தவித சைதன்ய நிரூபகம் முற்றிற்று.

---

இருபத்தொன்பதாவது

## பஞ்சப்பிரமைநிரூபகம்.

சங்கை: பஞ்சப் பிரமையாவது யாது?

உத்தரம்: பிரமமும், பரமேசுவரனும் வேறென்பது பேதப்பிரமை; பிரமத்துக்கே கர்த்ருத்வம் வாஸ்தவமென்பது கர்த்தவியப் பிரமை; சரீரத்திரய அவிச்சின்னனாகிய ஆத்மாவைச் சங்கனாய்க் காண்பது சங்கப் பிரமை; ஜகத்துக்குக் காரணமான பிரமத்தை விகாரியென்பது விகாரப் பிரமை; காரணமான பிரமமன்றி இந்த ஜகத்து சத்தியமென்பது ஜகத் பிரமையாம்.

ச. இவைகளுக்கு நிவிர்த்தி யெப்படி?

உ. பிம்பப் பிரதிவிம்ப திருஷ்டாந்தத்தினாற் பேதப்பிரமையும், படிகலோகிதத்தினாற் கர்த்தவ்வியப் பிரமையும், கடாகாச மடாகாச திருஷ்டாந்தத்தினாற் சங்கப் பிரமையும், ரச்சு சர்ப்ப திருஷ்டாந்தத்தினால் விகாரப் பிரமையும் சொர்ண பூஷண திருஷ்டாந்தத்தினால் ஜகத் பிரமையும் நிவிர்த்தியாம்.

இந்தப் பஞ்சப் பிரமைகளும் அஞ்ஞானத்தினால் வரும். ஆகையால் ஸ்ரீ சற்குரு முன்னிலையில் இவற்றிற்குக் காரணமான அஞ்ஞானப் பிரமை யுண்டான விதத்தை விசாரித்தறிந்து தன்னை யுள்ளபடி கண்டு, மேற்சொன்ன பிரமைகள் அணுகாத பரஞானத்தை யெவன் சம்பாதிக்கிறானோ, அவனே கிருத கிருத்தியனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்கள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

இருபத்தொன்பதாவது பஞ்சப்பிரமை நிரூபகம் முற்றிற்று.

---

முப்பதாவது

## பிராரத்தத்திரயநிரூபகம்.

சங்கை: பிராரத்தத் திரயமாவது யாது?

உத்தரம்: இச்சா பிராரத்தம், அனிச்சா பிராரத்தம், பரேச்சா பிராரத்தமென மூன்றுவிதம். இம்மூன்று பிராரத்தமும் அவிவேகிகளுக்கும் விவேகிகளு

க்குஞ் சமானமா யிருக்கும். இருந்தாலும் அவிவேகிகளது பிராரத்தத்திற்கும் விவேகிகளது பிராரத்தத்திற்கும் பேத முண்டு.

ச. அவிவேகிகளது இச்சா பிராரத்த மெப்படிப்பட்டது?

உ. ஐப்பசி மாதத்தின் மேகத்தைப்போ லொத்தது.

ச. அதெப்படி?

உ. ஐப்பசி மாதத்தின் மேகஞ் சுலபமாய்க் காண்பித்துச் சர்வத்திரா வியாபித்துக் கும்பத் துரோணமாய் வருஷித்துச் சகல பயிர்கள் அழுகிப்போகவும் வீடுகள் சுவர்கள் விழவும் பண்ணி, பிராணிகளுக் கனேக துக்கங்கள் செய்விக்கிறதுபோல, அஞ்ஞானிக்குச் சுலபமான இச்சை பிறந்து அந்த மேகத்தைப்போலச் சர்வத்திரா வியாபித்துப் பிறருக் கனேக துக்கங்கள் செய்து, தன் சாமர்த்திய ஹேதுவினாலேயே கூடிவந்த தென்றும், தன் சாமர்த்திய மில்லாமையினாற் கூடிவரவில்லையென்று மெண்ணச்செய்து, இக பரங்களிற் சுகமில்லாமல் நரகத்தைச் சம்பாதித்துக் கொடுக்கும்.

ச. விவேகிகளது இச்சா பிராரத்த மெவ்வகைப்பட்டது?

உ. தை மாதத்தின் மேகத்தைப் போலொத்தது.

ச. அதெப்படி?

உ. தை மாதத்தின் மேகஞ் சர்வத்திரா வியாபித்துக்கொண்டே பிறக்கும். அப்படிப் பிறந்தாலுஞ் சுலபமாய் வருஷித்துப் பயிர்களுக்கும் பிரஜைகளுக்கும் துன்பத்தைக் கொடாமல் தானுங் கெட்டுப்போம். அதுபோல விவேகிகளது இச்சையானது கர்ம வசத்தினால் வெகுவாய் வருகிறதுபோலிருக்கும். வந்தபோதிலும் புஷ்களமான விவேகத்தினாலேயே பிறருக்கு உபத்திரவங் கொடாமல் வருகிறதும் வாராததும் பூர்வ ஜன்ம சம்ஸ்கார கர்மப்படியே யென்றெண்ணப்பண்ணிப் பரலோகத்துக் கானி சம்பாதிக்காமல் தேகதாரணை மாத்திரமே வரப்பண்ணும்.

விவேகிகளானவர்கள் உலகத்தில் அபத்தியங்கள் செய்து இறந்துபோனவர்களையும், திருடித் தலை வெட்டுண்டவர்களையும், ராஜ ஸ்திரீயைக் கைப்பிடித்து ஆக்கினைப் பட்டவர்களையும் பார்த்து, நாம் இந்தக் காரியங்கள் செய்யப்போகாது; செய்தோமானால் நமக்கும் இவ்வனர்த்தங்கள் நேரிடுமென்று பயந்து நிற்பார்கள். அவிவேகிகளோ வென்றால் சுபாவ அனர்த்த மறிந்திருந்தும் அது நமக் கெம்மாத்திரம், அந்தக் காரியஞ் செய்கிறதற்கு அவர்களுக்குச் சமர்த்தில்லாமற் போயிற்று. நமது சமர்த்தினாற் செய்யலாமென் றெண்ணி அந்த வியாபாரத்திற் பிரவிர்த்தித்துத் தலைவெட்டுண்டு நிற்பார்கள். இந்தப்படி அவிவேகிகளது இச்சா பிராரத்தத்துக்கும், விவேகிகளது இச்சா பிராரத்தத்துக்கும் பேதமுண்டு. விவேகியானவர்கள் பிரீதியெல்லாம் அனர்த்த மென்றெண்ணி உலகத்தில் அர்த்த ஆசக்தியுடைய சமுசாரிகள் அர்த்தஞ் சம்பாதிக்கிறதிலும் அதைச் சவரட்சணை செய்கிறதிலும் செலவழிந்து நஷ்டப்படுவதிலுந் துக்கப்படுவதைக்கண்டு, நாமும் இந்த அர்த்தத்தில் ஆசக்தி வைக்கலாகாது, வைத்தோமேயானால் அவர்கள் துக்கப்படுவதுபோல நாமுந் துக்கப்படவேண்டுமென்று விசாரித்து, சமஸ்த பதார்த்தங்களிலும் ஆசத்தியை விட்டுவிட்டு, லபிக்கப்பட்ட லாபத்தை யனுபவித்துச் சந்தோஷகரமாயிருப்பார்கள். அவர்களது சரீர தாரணைமாத்திரமாகிய கிரியைகளிடத்

திலும், சவுசாதிக் கிரியைகளிடத்திலும் இச்சைவருமே யன்றி அன்னிய வஸ்துக்களில் இச்சை யுண்டாகமாட்டாது.

ச. அனிச்சா பிராரத்த மெப்படி யிருக்கும்?

உ. விவேகிகளுக்கும் அவிவேகிகளுக்குஞ் சமானமா யிருக்கும்.

ச. அதெப்படி?

உ. தலையிற் குட்டுதல், காலிற்படுதல், தண்ணீரி லடித்துக்கொண்டுபோதல், மழையில் நனைதல், வெய்யிலில் அடிபடுதல், க்ஷயரோக முதலிய வியாதிக ளுண்டாதல், இடிவிழுதல், கோயில் கோபுரம் பிரகாரம் மண்டபம் விழுதல் ஆகிய இவைகளால் வருந் துக்கமும், வெய்யில் காற்று மழை யக்கினி இவைமுதலியவைகளால் வருந் துக்கமும் விவேகிகளுக்கும்அவிவேகிகளுக்குஞ் சமமா யிருக்கும்.

ச. பர விச்சா பிராரத்த மெப்படி யிருக்கும்?

உ. அதுவுஞ் சமானமாகவே யிருக்கும்.

ச. அதெப்படி?

உ. ஒரு புருஷன் மவுனமா யுட்கார்ந்திருக்கும்போது அன்னிய னொருவன் வந்து, அவனை நமஸ்காரஞ் செய்து, நீ ஒருகாரியம் பண்ணவேண்டுமென்று வேண்டிக்கொள்ள, அந்தத் தாட்சணியத்தினால் அந்தக் காரியத்தைச் செய்து, அதனால் வருஞ் சுகதுக்கங்களை அவனனுபவிக்கிறான். இந்த அனுபவம் விவேகிகளுக்கும் அவிவேகிகளுக்குஞ் சமமா யிருக்கும்.

இந்தப்படிப் பிராரத்தத் திரயத்தை விசாரித்த பின்பு இச்சையிலாவது, அனிச்சையிலாவது, பரவிச்சையிலாவது ஆசைவந்தாலும் வரட்டும்; அவ்வாசையான இந்தப் பிராரத்தத் திரய அனுபவம் அகங்காரத்துக்கே யன்றி, அகங்கார சாட்சியாகிய நமக் கில்லையென்று ஸ்ரீ சற்குரு முன்னிலையில் அகங்காரத்தையுந் தன்னையும் பகுத்தறிந்து அகங்காரத்திற் கூடாமலெவ னிருக்கிறானோ, அவனே சுவரூபமுத்த னென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்கள சொல்லுகின்றன. இதிற் சம்சயமில்லை சித்தம்.

முப்பதாவது பிராரத்தத் திரய நிரூபகம் முற்றிற்று.

---

முப்பத்தோராவது

# சஞ்சிதாதிகன்மத்திரய நிரூபகம்.

---

சங்கை: சஞ்சிதாதி கன்மத்திரயமாவது எப்படிப்பட்டது?

உத்தரம்: ஒரு பிராமணனுக்குப் பத்து க்ஷேத்திரமுண்டு. அதி லொவ்வொன்றுக்கு வருஷத்தில் ஆயிரக்கல தானியம் விழுக்காடு பதினாயிரக் கல தானியம் விளையும். அதில் ஆயிரக்கல தானியம் வீட்டுச் சாப்பாட்டுக்கும், ஆயிரக் கல தானியம் விரைமுதலுக்கும், இரண்டாயிரக் கல தானியம் தர்மத்துக்கும், ஆயிரக் கல தானியம் பயிரிடும் ஆள்களுக்கும், ஆயிரக் கல தானியம் தீவாணத்தாருக்குமாகச் செலவு பண்ணினது போக, மீதியான தானியத்தைப் பத்திரப்படுத்தி வைப்பான். இப்ப

டியே வருஷா வருஷம் மீதியான தானியங்களைப் பத்திரப்படுத்திக் குறைந்த காலத்தில் விற்போமென் றெண்ணிக்கொண் டிருந்தான். இந்தத் தானியத்திற்குச் சஞ்சிதமென்று பெயர். வீட்டுச் சாப்பாட்டுக்கு நிறுத்தியது முதலிய தானியத்திற்குப் பிராரத்தமென்று பெயர். முளை பயிர், பெரிய பயிர், கதிர்ப் பயிர்களாகிய நன்செய், புன்செய்களுக்கு ஆகாமியமென்று பெயர். இப்படியிருக்க ஒரு சமயத்தில் கலகம் வந்து பிற தேசத்தார் மேலிட்டுச் சஞ்சித தானியங்களையெல்லாங் கொள்ளையிட்டு நெருப்பு வைத்தார்கள். வரப்போகிற ஆகாமியவிளைவு முதலானவைகளை யெல்லாம் இடைக் கொள்ளைக்காரர் கொள்ளையிட்டுப் பயிர்களை யெல்லாங் குதிரைகளுக்கும் மாடுகளுக்குமா யறுத்து அழித்துவிட்டார்கள். அதைக்கேட்டு அந்தப்பிராமணன் மிகுந்த விசனமடைந்து கிரகத்திற் சாப்பாட்டுக் கிருந்த பிராரத்த தானியத்தைப் பூமிக்குள் பத்திரம்பண்ணி நித்தியம் கொஞ்சங் கொஞ்சமா யெடுத்துச் சாப்பிட்டுக்கொண்டு வந்தான். அப்படியிருக்க அவன் பந்துக்கள் வந்து நீயுன் தேகபோஷணைக் கென்ன செய்கிறாயென்று கேட்க, நான் சஞ்சிதமாய் வைத்திருந்த களஞ்சிய தானியமெல்லாங் கொள்ளையாய் விட்டன. வரப்போகிற ஆகாமிய தானித்தை இடைக் கொள்ளைக்காரர் கொள்ளையிட்டுப் போனார்கள். வீட்டிற் கொஞ்சம் பிராரத்த தானியங் கட்டுக் கிடையா யிருந்தன. அதில் கொஞ்சங் கொஞ்ச மெடுத்துச் சீவனம் பண்ணிக்கொண்டு வருகிறேனென்று சொன்னான்.

ச, இதனால் என்ன சித்தித்தது?

உ. சஞ்சி தாகாமியங்களுக்கு நாச முண்டாகுமென்றும் பிராரத்த மாத்திரம் புசித்தே தீரவேண்டுமென்றுஞ் சித்தித்தன. இந்தப்படித் தாஷ்டாந்தத்திலும் நிரூபிக்கிறோம்.

ச. அஃதெப்படி?

உ. அனாதியான சீவன் புண்ணிய பாவ கர்மங்களைச் செய்துவருகையில் ஒவ்வொருநாளும் செய்கிற பாவ புண்ணிய கர்மங்களே ஜன்மங்களுக்குக் காரணமா யிருக்கும். இப்படியே ஜன்ம ஜன்மங்களிலுஞ் செய்துவருகிறபோது அந்தக் கர்மமெல்லாம் ராசி ராசியாகக் கூடும். இவைகளுக்கே சஞ்சிதமென்று பெயர். மரண மடைந்த பிறகு உடனே ஜன்ம மெடுக்கிற நிமித்தம் அந்தக் கர்ம சஞ்சிதத்திற் கொஞ்சம் பிரித்து அதை யனுபவிப்பதற்குக் காரணமான சரீர வேதுவாகிய பஞ்சீகிருத பஞ்ச மகா பூதங்களைச் சரீராகாரமாகப் பரிணமிக்கப்பண்ணி அந்தச் சரீரத்திறைற் சில கர்மங்கள் செய்து அந்தக் கர்மத் துவாரா சுக துக்க மனுபவிப்பன், இப்படி யனுபவிக்கிறதற்கே பிராரத்தமென்று பெயர். இந்தப் பிராரத்தங்களை யனுபவிக்குமிடத்து மரண பரியந்தஞ் செய்து வருகிற இதாகிதங்களுக்கே ஆகாமிய மென்று பெயர். இதுவே மேற் சஞ்சிதத்துக்குக் கட்டுப்படும். இப்படியே சீவன் கர்மங்களை யநாதியாய்ச் செய்து வர வர அந்தச் சஞ்சிதம் விருத்தியாகி வரும். ஆதலால் சீவர்களது ஜன்மங்களுக்கு நாசமே யில்லை.

ச. ஆனால் அந்த ஜன்மங்களுக்கு அவதி யெப்போது வரும்?

உ. இப்படிக் கர்மங்கள் செய்து வருகிறபோது ஒரு ஜன்மத்தில் ஓர் அதிக புண்ணிய கர்ம பரிபாக பலத்தினால் சீவனுக்குச் சம்சாரபந்தம் வரவொட்டாமற் செய்துகொள்ள வேண்டுமென்கிற விவேக முண்டாகும்.

ச. அதெப்படி ?

உ. ஒருவன் காமிய கன்மங்களையே பண்ணுவானாகில் சித்த சுத்தி வாராது, சம்சார பந்தமும் போகாது என்கிற விசாரம் பிறக்கும். பிறகு விகிதமான நிஷ்காமிய கன்மங்களையே யீசுவரார்ப்பணமாகச்செய்து வருவான். அந்த நிஷ்காம புண்ணிய பலத்தினால் பக்தியும் அதனாற் சற்குரு லாபமும் அதனாற் சிரவண மனன நிதித்தியாசனங்களுஞ் சித்தித்து ஞானத்தைச் சம்பாதித்துக் கொள்ளுவான். அப்படி ஞானம் வந்தபோதே அந்த ஞானாக்னியினால் சஞ்சிதாகாமிய அஞ்ஞான மெரிந்து பஸ்பமாய்ப் போம். அந்த ஞானம் வந்தபின் செய்யப்பட்ட புண்ணிய பாவ கர்மங்களெல்லாம் அகர்த்தாவாகிய அவனைப் பரிசிக்கமாட்டா.

ச. ஆனால் அந்தப் புண்ணிய பாவங்களுக்குக் கதி யாது ?

உ. அந்த ஞானியைப் பூசித்தவர்களுக்குப் புண்ணியமும் தூஷித்தவர்களுக்குப் பாவமும் போகும். பிராரத்த மாத்திரம் அனுபவித்தே தீரவேண்டும். அதற்கு வேறே நாசஞ்சொல்லக்கூடாது. இந்தப்படியே சஞ்சிதாகாமிய பிராரத்தங்களினாதி யந்தமும் கர்த்தா போக்தாவின் அகமமதைகளும் நன்றாய் விசாரித்து இவைகளெல்லாம் அகங்காரத்திற்கேயல்லது சாட்சியாகிய நமக் கில்லையென்று ஸ்ரீ சற்குரு முன்னிலையில் விசாரித் தறிகிறவனெவனோ, அவனே கிருதார்த்த னென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்கள் சொல்லுகின்றன. இதிற் சம்சயமில்லை சித்தம்.

முப்பத்தோராவது சஞ்சிதாதி கன்மத்திரய நிரூபகம் முற்றிற்று.

---

முப்பத்திரண்டாவது

## தார்க்கிகாதிபேதநிரூபகம்.

---

சங்கை: உலகத்தில் வேதாந்த சாஸ்திரத்துக்கு விருத்தமான காவிய நாடக தர்க்க சப்த மீமாம்சைகளைப் படித்தவர்களுங் கேவலமான கர்மிகளும் முமுக்ஷுக்களை நானாவித வுபாயத்தினாற் பேதப்படுத்திக் கெடுப்பார்களென்று பெரியோர்கள் சொல்லுகின்றார்களே; அதெப்படி ?

உத்தரம்: இருஷ்டாந்தத்தில் ஒரு மகாராஜனானவன் தனது புரோகிதனை யழைத்து யக்ஞம் பண்ணுமென் றாக்ஞாபித்துச் சகலபதார்த்தங்களுங் கொடுத்து, அதற்குத் தகுந்த பசு அகப்படாமலிருக்க, அது தெரிந்து அவ்வாசாரியனானவன், பசு லட்சண மறிந்த வொரு பிராமணனை யழைத்து, அவன் கையிற் சில திரவியங்களைக் கொடுத்துப் பசுவைக் கொண்டு வரும்படி யனுப்பினான். அப்படியே நல்லதென்று போய் அந்தப் பிராமணன் பசு இருக்கிற இடத்தில் விசாரித்துச் சகல லட்சணமும் நிறைந்த ஒரு பசுவைப் பேசி, அதற்கு அவர்கள் கேட்ட திரவியத்தைக் கொடுத்துப் பசுவை யோட்டிக்கொண்டு வரும்போது வழியில் சுங்கக்காரர்கள் கண்டு மறிக்க, அரண்மனைக்குப் போகிறதென்று சொன்ன

மாத்திரத்தில் ராஜாக்கினைக்குப் பயந்து விட்டுவிட்டார்கள். அது கண்
டிருந்த வொருவன் அந்தச் சுங்கக் காரருக்குப் போதித்து, இது நல்ல
லட்சணமுள்ள பசுவாயிருக்கின்றது, இதை நாமுபாயத்தினாற் கிரகிக்கலா
மென்று சொல்ல, அவர்கள் அவ்வுபாய மென்ன வென்று கேட்க,
ஐயா, நாம் நாலுபேரும் அவன் போகிற மார்க்கத்தில் நாலு நாழிகை
வழிக் கொருவரா யிருந்து அந்தப் பசுவைப் பேய்நாயென்று சொல்லு
வோம்; அப்படியே நாலுபேருஞ் சொல்லுகிறதினால் அந்தப் பிராமணன்
பிரமித்து அந்தப் பசுவை விட்டுவிடுவா னென்றான். அதுகேட்ட சுங்கக்
காரரும் அதற்குச் சம்மதித்துப் பிராமணன் போகிற வழியில் நாலுபேர்
நாலிடத்தி லிருந்தார்கள். பிறகு அந்தப் பிராமணன் பசுவைப் பிடித்து
க்கொண்டு போகிறதைப் பார்த்து, முன்னாக விருந்தவன் ஓ பிராமணா!
பிராமணர்களுக்கு நாய் வளர்ப்பது உசிதமல்லவே; அதிலும் மனுஷர்
களைக் கடித்துக் கொல்லப்பட்ட பேய்நாயை வளர்க்கலாமா, உமக்குத்
தெரியாதா, ஒருநல்ல நாய்அகப்படாமற்போயிற்றோவென் றிப்படி யனேக
மாகச் சொல்லி, மேலு மிது எல்லோரையுங் கடிக்கிறதாகத் தோற்று
கிறதே; ஆகையால்என்னிடங் கொண்டுவரவேண்டாமென்று கூறி, பயந்
தவனைப்போ லோடிப்போனான். அதுகேட்ட பிராமணன் இவனுக்குப்
பயித்தியம்போற் காணுகிறது. இவ்வளவு லட்சண முள்ள பசுவைப்
பார்த் திப்படி யேன் சொல்லுகிறானென்று அவன் சொல்லைச் சட்டை
பண்ணமற் செவ்வையாய்ப் போகிறபோது, அவ்விரண்டா மனுஷனு
மந்தப் பிராமணனைக் கண்டு, பேய்நாயென்று முன்சொன்னவன்போல
வே சொல்லி யோடிப் போனான். அது கேட்டு அந்தப் பிராமணனுந்
திடுக்கிட்டு, ஐயோ! இது வென்ன ஆச்சரியம்! நாம் பேய்நாயைத்
தான் வாங்கி மோசம் போனோமோ வென்று மனதிற் சமசயமுண்டாகி,
இந்தப் பேய்நாய் நம்மை யெங்கே கொல்லுகிறதோ வென்று, பதறிப்
பதறி, அடிக்கடி யந்தப் பசுவைப் பார்த்துக்கொண்டு, மகா பயத்து
டன் அப்பால் நடந்துபோகும்போது, மூன்றாமிடத் திருந்தவனு மிவனைக்
கண்டு, இவன் தூரத்தில் வரும்போதே ஓ பிராமணரே யென்று கூவி,
நீர் பிடித்து வருகிற பேய்நாயை நம்மிடத்திற் கொண்டு வர வேண்டா
மென்று தானு மோடித் தன்பக்கத்தி லிருந்தவர்களையு மோடும்படி
செய்தான். அதைக் கண்டு அந்தப் பிராமணன் திகிலடைந்து, நாம்
பேய்நாயைத்தான் வாங்கிவந்தோம், இதிற் சந்தேகமே யில்லையென்று
விசனத்தை யடைந்து, நாம் இந்தப் பேய்நாயை விட்டுவிட்டுப் போக
லாமென்று நினைத்தால், இது பிறகே தொடர்ந்துவந்து கடிக்குமே யென்கிற
நிச்சயங்கொண்டு அந்தப் பசுவை விட்டுவிடுகிற வுபாய சிந்தையுடன்
யோசித்துக்கொண்டு, அப்பால் போகும்போது நாலாமிடத்தி லிருந்த
வன், இவனைப் பார்த்து, ஓ பிராமணா! உமக்குப் பயித்தியம் பிடித்திருக்
கிறதோ, என்காணும் இந்தப் பேய்நாயைப் பிடித்துக்கொண்டு வருகி
றீர், இது எவர்களையுங் கடித்துக் கொல்லுமே, யுமக்குத் தெரியாதா
வென்றுசொல்லி விலகிப்போனான். அதுகேட்டு அந்தப் பிராமணன் பய
ந்து, அப்பா, நான் தெரியாமல் இதை வாங்கிவந்தேன், இதை என்னி
டத்திலிருந்து விடுவித்தால் உனக்கு வெகு சுகிர்த முண்டாகுமென்று
பரிதாபமாய்க் கெஞ்சினான். அப்படிக் கெஞ்சின சொல்லைக்கேட்டு,
ஐயா, எனக்கு உம்மிடத்தில் வரப் பயமாயிருக்கின்றது, அதை விடு
கிற வுபாயமாத்திரஞ் சொல்லுகிறேன், என்னவென்றால், உன் கைக்கயி
ற்றைப் பேய் நாயுடனே கூட்டி அதோ விருக்கிற மரத்தடியிற் கொண்

டுபோய் நிறுத்தி, அந்தக் கயிற்றை விடாமல் அந்த மரத்தை மூன்று
பிரதட்சணஞ் செய்து முடிபோட்டு ஓடிப்போ மென்று சொன்னான்.
பிராமணன் அப்படியே செய்துவிட்டு இப்பால் வந்து அப்பா! உன்னு
டைய சகாயத்தினா லின்று பிழைத்தேன், நீ இன்றைக்குப் பிராமணனை
ரட்சித்தாய், துர்மரணத்தினால் நான் இறவாதபடி யென்னைக் காப்
பாற்றினா யென்று பலவாறாகத் தோத்திரஞ் செய்து, அவனிடத்திற்
செலவு பெற்றுக்கொண்டு, இன்றைக்கு நமக்குப் புனர்ஜனனமாயிற்று,
இனிமேற் பசு கொள்ளப் போகப்படாதென்று நிச்சயித்துக்கொண்டு
தன்னுடைய ஸ்தானம்போய்ச் சேர்ந்துவிட்டான். இந்தப்படிப் பிரத்தி
யட்சமாய்ப் பரீட்சித்து வாங்கின பசுவாயிருக்க அந்த வஞ்சகர்கள்,
தாங்கள் கிரகிக்கிற நிமித்தம் பசுவைப் பேய் நாயாக்கிப் பிராமணனது
புத்தியை வெருட்டி மாறுபடுத்தினதுபோல, தார்க்கிக சப்த மீமாம்ச
கர்மிகள் முமூட்சுவை யழைத்து: அடா, கீதைகளை யென்படிக்கிறாய்?
சந்நியாசிகளிடத்தி லுனக்கென்ன காரியம்? உபநிஷத்தை என் சொல்லிக்
கொள்ளுகிறாய்? உனக் கெந்தப் பாவ கர்மமோ ஸ்திரமாயிருக்கின்றது?
நாரதர் முதலிய ரிஷீசுவரர்களுக்கும் இந்திரன் முதலிய தேவர்களுக்
குங்கூட ஞான மில்லையென்று புராண சித்த மிருக்கின்றதே; ஏக ஜீவ
பட்சமாகிய பேர்களுக்குச் சர்வாத்மனாய் ஞானங் கூடாதென்றும், சந்நி
யாசம் வாங்கிக் கெட்டுப்போகிறார்க ளென்றும், கலியுகத்திற் சந்நியா
சமே கூடாதென்றுஞ் சாஸ்திர சித்த மிருக்கின்றதே; இவர்களெல்லாந்
திரவிய மார்ச்சிக்கிற நிமித்தம் சந்நியாசம் பெற்றார்கள்; நீயாவதேது?
உனக்கு ஞானமேது? நாம் சகல சாஸ்திரமும் படித்தோம்; படித்த நமக்
கும் ஞானங் கிட்டாதென்று தீர விசாரித் தறிந்து கர்மமே பண்ணிவரு
கிறோம்; உனக்கு முத்திவேண்டுமானால் தர்க்கம்படி; இல்லாவிட்டால்
சப்தம் படி; இல்லாவிட்டால் காவிய நாடக கர்மங்கள்படி; கீதைக
ளையு முபநிஷத்துக்களையுஞ் சர்வாத்மனாய் ஸ்மரிக்கவேண்டாம்; உனக்கு
ஞானம் போதிக்கிறோமென்கிற பேர்களை மகா வஞ்சகரென்றே யறி,
அவர்களுக்கு ஞான முண்டாயிருந் தல்லவா உனக்கு மூலமான ஞான
த்தைச் சொல்லவேண்டும் ; அவர்களுக்கு முதலாய் ஞான சாதனமே
யில்லையே ; அவர்கள் க்ஷணகாலம் வெய்யிலிற் பொறுக்கமாட்டார்க
ளே ; க்ஷணமாத்திரஞ் சீதஞ் சகிக்கமாட்டார்களே ; அவர்கள் நாங்
களே ஞானிகளென்று பெயரிட்டுக்கொண்டு திரிகிறார்களே யல்லாமல்
ஞான லட்சணமாகிய இடப்பிரக்ஞை அவர்களிடத்திற் சற்றுங் காணோ
மே ; கோபதாபங்களே யதிகமா யிருக்கின்றனவே ; ஒரு சுலோகத்துக்
கர்த்தங்கேட்டால் தெரிந்து சொல்லமாட்டார்களே; அவர்களது வஞ்சக
த்துக்குள்ளா யனேகம் புருஷர்கள் கெட்டுப்போனார்களே; நீயு மெங்கே
கெட்டுப்போகிறாயோவென் றுன்பேரில் தயவுபிறந்து இத்தனை தூரஞ்
சொன்னோம்; நீயும் எங்களைப்போல் நன்றாய் விசாரித் தறிந்து இது
முதல் வேதாந்திகளுடைய சங்கத்தை விட்டுவிடவேண்டியது; உனக்கு
முத்திவேண்டியதா யிருந்தால் நாமறிந்திருக்கிற ரகசியமான மந்திரங்
களி லொன்றை யுபதேசிக்கிறோம் ; அந்த மந்திரத்தை மாத்திரஞ் சார்
வதா ஜபம் பண்ணிக்கொண்டு வந்தால், இகத்திற் சர்வாபீஷ்டமு முண்
டாகிறதன்றி, கடையில் மோட்சமுஞ் சித்திக்கும் ; உனக்கு நூறுவித
த்திற் சொன்னோம் ; எங்கள் சொற்படி கேட்டால் பிழைக்கலாம் ;
கேளாவிட்டாற் சந்தேகமில்லாமற் கெட்டுப் போவாயென்று, இந்தப்
படியே பல பலவிதமாக அவ்வஞ்சகமான சங்கக்காரர்களைப்போல வஞ்

சகமுள்ள விவர்களும் முமூட்சுக்களை வெருட்டிக் கெடுப்பார்கள். ஆத லால் முமூட்சுவானவர்கள் நன்றாய் விசாரித்த யுத்தி புத்திகளால் சுருதி குரு வாக்கொத்த வேதாந்த சாஸ்திரமே தமக்குத் தாரகமென்றும், மற்றைச் சாஸ்திரங்களை விட்டுச் சம்சயமறச் சுவரூப லட்சணத்தை யுபதேசஞ் செய்பவனே தமக்குச் சற்குருவென்றும், மற்றவர்களெல் லாம் வஞ்சகரென்றும் விசாரித்தறிந்து, வேதாந்த சாஸ்திரத்தினிட த்தும்; ஆத்மாவினிடத்துள்ள அத்தியாசம், பிரதிவிம்ப லட்சணம், ஆத்ம நிச்சய சொரூபமாகிய இவைகளையுபதேசம் பண்ணப்பட்ட ஸ்ரீசற்குருவி னிடத்தும் விசுவாசம் வைத்து, குருபணிவிடை செய்து, சிரவணாதிகளை யையமறக்கேட்டு, ஞானத்தைச் சம்பாதித்துக் கிருதார்த்தனாக வேண்டு மென்று சுருதி ஸ்மிருதி இதிகாச புராணாதிகள் சொல்லுகின்றன. இதிற் சம்சயமில்லை சித்தம்.

முப்பத்திரண்டாவது தார்க்கிகாதிபேத நிரூபகம் முற்றிற்று.

---

முப்பத்துமூன்றாவது

# பஞ்சவிதமுத்திநிரூபகம்.

---

சங்கை: பஞ்சவித முத்தியாவது யாது?

உத்தரம்: சாலோக சாமீப சாரூப சாயுச்சிய கைவல்யமென்றைந்துவிதம்.

ச. சாலோக முத்தியாவது யாது?

உ. உபாசனா மகிமையினாற் பிரமலோகம் போய்ப் பிரமதேவர் சமூக மில் லாமலொரு பிரதேசத்தி லிருந்து கொண்டு சமஸ்த போகங்களையும் அனுபவித்துக்கொண்டிருப்பது.

ச. சாமீப முத்தியாவது யாது?

உ. பிரமதேவர் சமுகங் கிடைத்துச் சமஸ்த போகங்களையும் அனுபவித்துக் கொண்டிருப்பது.

ச. சாரூப முத்தியாவது யாது?

உ. பிரமதேவருடைய ரூபத்தைப் பெற்றுச் சமஸ்த போகங்களையும் அனுப வித்துக்கொண்டிருப்பது.

ச. சாயுச்சிய முத்தியாவது யாது?

உ. பிரமதேவருக்குண்டான அதிகார ஐசுவரியத்தைப் பெற்றுச் சமஸ்த போகங்களையும் அனுபவித்துக்கொண்டிருப்பது. இந்த நாலுபேருக் கும் முத்தி யேகரூபமாயிருந்தபோதிலும் உபாசனாதாரதம்மியத்தினால் அவாந்தர பல தாரதம்மியங்களுள்ளன.

ச. கைவல்யமாவது யாது?

உ. முமூட்சுவானவர்கள் சாந்தியாதி குணங்களுடன் கூடிச் சற்குருவி னிடத்தில் சம்சயமின்றிச் சிரவணாதிகள் செய்து ஞானவடிவமான தன்னைத் தானே சம்பாதித்துச் சச்சிதானந்த சொரூபமான ஆத்மாவை

நானென் றறிந்த பிறகு சொரூப மாத்திரமா யிருக்கிறதே கைவல்ய மென்று சொல்லப்படும். இந்தக் கைவல்ய முத்தி தனது விசாரத்தினாற் பிறந்த ஞானத்தினால் வரவேண்டுமேயன்றி, கர்ம வுபாசனைகளால் வர மாட்டாது. ஸ்ரீ சற்குரு தரிசனத்தினால் மல மாயை கன்மங்கள் நீங்குமே யல்லது வேறொருவுபாயத்தினாலு மெவ்வளவு நீங்காது பிரமலோகத்தி லிருக்கிறவர்களும் பிரமதேவரிடத்திற் கேட்டு விசாரத்தினாலே ஞானஞ் சம்பாதித்து மோட்ச மடைந்தார்களென்று சுருதிகளிற் சொல்லப்படுகின்றது.

ச. இதனா லென்ன சித்தித்தது?

உ. சமஸ்த பிராணிகளுக்கும் ஞானத்தினால் முத்தியே யன்றி, கர்ம யோக வுபாசனைகளால் முத்தி யில்லை யென்று சித்தித்தது. ஆதலால் சமஸ்தமான பேர்களுக்கும் ஞானத்தினாலேயே முத்தி யென்று சுருதி ஸ்மிருதி இதிகாச புராணாதிகள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

முப்பத்துமூன்றாவது பஞ்சவிதமுத்தி நிருபகம் முற்றிற்று.

---

முப்பத்துநான்காவது

# பிரமவித்தாதி சதுஷ்டய நிருபகம்.

சங்கை: பிரமவித்துவின் றிதி யெப்படிப்பட்டது?

உத்தரம்: தனக்குக் காலத்திரயத்தினு மொன்றிலும் பாத்தியத்வ மில்லாமல் பாத்தியத்வமும் சொப்பனம்போற் சார்வதா பார்த்துக்கொண் டிருந்து யக்ஞாதி கர்மங்களும், அதிதி பூஜைகளும், சுதர்மமான சந்தியாவந்தனக் கிரியைகளும் இடைவிடாமற் பண்ணிக்கொண்டிருந்த போதிலுந் தான் சாட்சியே; தானொரு கர்மமும் பண்ணுகிறவனல்ல; அகங்காராதிகள் தன் தன் விஷயங்களிற் பிரவிர்த்திக்கின்றனவன்றி, தான் அசங்கனே. உபாதியைக் குறித்துத் தனக்குச் சாட்சித்துவமுங் கற்பிக்கப்பட்டதென்கிற திடசித்தத்துடன் சகல விவகாரங்களுஞ் செய்து வருகின்றவனைப் பிரமவித்தென்று சொல்லப்படும்.

ச. பிரமவரன் தன்மை யெப்படிப்பட்டது?

உ. பாகிய விவகாரமெல்லாந் துக்கமென் றறிந்து விவகாரங்களில் நமக்கெவ்வளவும் பிரயோசன மில்லையென்று யூகித்துணர்ந்து, முன்பிருந்த விவகாராதிகளை விட்டொழித்து, அந்தர்முக நாட்டமாய் நித்திரைசெய்பவன்போலிருந்து, காலத்திரயத்திலும் பிரபஞ்சமில்லவேயில்லை; உண்டு போல் தோன்றினும் மித்தையே. எனக்குச் சாட்சித்துவமுங் கற்பிதமே யென்கிற திட நிச்சயத்துடன் தன்னை வந்தடுத்த முமூட்சுக்களுக் குபதேசம்பண்ணிக்கொண்டு, அநிர்வாச்சியமான சவுச அன்னபானாதிக் கிரியைகளில் மாத்திரம் பிரவிர்த்தியுடையவனாய், சகலமு மகங்கார வியாபாரங்களென்று திடசித்தனாய்த் தானொரு கர்மமுஞ் செய்தவனல்லவென்று சம்சயமின்றி நிச்சயங்கொண்டவனாய்ப் பாகியவியாபாரமின்றிச் சார்வதா ஏகாந்த நிஷ்டையி லிருக்கின்றவனைப் பிரமவரனென்று சொல்லப்படும்.

ச. பிரமவரியான் தன்மை யெப்படிப்பட்டது?

உ. பாகியமெல்லாந் தூக்கமென்ற திடங்கொண்டு பாகிய ஸ்புரணத்தை விட்டுச் சார்வதா நிதித்தியாசன பரனாயிருந்து பிறரால் பிரேரிக்கப் பட்டு அன்னபானாதிக் கிரியைகள் செய்தபோதிலுஞ் சகல விவகாரமும் அகங்காரமே செய்கிறதென்றும், தானொரு வியாபாரமுஞ் செய்யவில்லை யென்றும், சாட்சியுஞ் சாட்சித் துவமுங் கற்பிதமே யென்றும், அசங்கனாகிய தனக்கு ஒன்றிலுஞ் சம்பந்த மில்லையென்றுந் திட நிச்சயங் கொண்டு, சகல சம்சய ரகிதனாய்ச் சார்வதா நிதித்தியாசனபரனா யிருப் பவனைப் பிரமவரியா னென்று சொல்லப்படும்.

ச. பிரமவரிட்டன் தன்மை யெப்படிப்பட்டது?

உ. பாகியமெல்லாந் தூக்கமென்று விட்டுவிட்டு, சகல சம்சய ரகிதனாய்ச் சார்வதா நிருவிகற்ப சமாதிபரனாய் அந்தர் வியாபாரமும் பாகிய வியா பாரமு மறந்து, சுவரூபத்தில் மக்கின சித்தனாய்ச் சுதந்தரத்திலாகிலும் பிறரைக் குறித்தாகிலும் ஒரு பிரவிர்த்தியு மில்லாமல் சுகமாயிருப்பன். அவனுக்குச் சர்வாத்மனாய் அன்னபானாதிக் கிரியைகளில்லை. அனேக புண்ணிய கர்ம பரிபாகத்தினால் சமாதி சித்தித்தபடியினாலும், சகல துக் கங்களும் நசித்துப்போனபடியினாலும் சதா நிருவிகற்ப சமாதிநிஷ்டையி லிருப்பன். அந்த மகாத்மாவைப் பிரமவரிட்டனென்று சொல்லப்படும். இவர்கள் நால்வருக்குந் தாரதம்மியத்தினால் யுக்தமான சுகமுண்டா யிருந்தபோதிலும் முத்திமாத்திரஞ் சமானமாகும்.

ச. ஆனா லிவர்க ளிப்படி யிருந்ததற்குப் பிரயோசனம் யாது?

உ. கர்மம் நானாவிதமாகையால் திர்ஷ்ட சவுக்கியப் பிரயோசன மெப்ப டியோ, அப்படியே யிருப்பார்கள். ஞானிகள் இந்தப் பிரகார மிருக்க வேண்டுமென்று ஒரு நியமமுஞ் சொல்லக்கூடாது.

ச. இதற்குப் பிரமாணம் யாது?

உ. ஜனகர் அரசாட்சி செய்துகொண் டிருந்தாரென்றும், ஜடபாரதர் அசங்கனாய்ச் சஞ்சரித்தாரென்றும், சுகர் உபநயன த்திற்பூர்வமே கிருகத்தி லிருந்து வெளிப்பட்டாரென்றும், தூருவாசர் சிலரைச் சபித்தார், சிலரை யனுக்கிரகித்தா ரென்றும் இதிகாச புராணாதிகளிற் சொல்ல ப்படுகின்றன. கர்மங்களும் நானாவித மானதால் ஞானிக ளொருவ ரிருந்தபடி யொருவ ரிரார்க ளென்பதற்குச் சுருதி யாதிகளுஞ் ஜனகாதிகளுமே பிரமாணம். விவேகிக ளானவர்கள் ஞானிக ளிப்படி யிருக்கிறார்கள், அப்படி யிருக்கவில்லை, இப்படி யிருக்கவேண்டும், அப் படி யிருக்கக் கூடாதென்று சந்தேகிக்க வேண்டுவதில்லை. அவரவர் களுடைய கர்மம் எப்படி நடத்துவிக்குமோ, அப்படியே யிருப்பார்க ளென்று சுருதி ஸ்மிருதி இதிகாச புராணாதிகள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

முப்பத்துநான்காவது

பிரமவித்தாதி சதுஷ்டய நிரூபகம் முற்றிற்று.

---

முப்பத்தைந்தாவது

# சப்தாவஸ்தை நிரூபகம்.

சங்கை: சப்தாவஸ்தைகளாவன யாவை?

உத்தரம்: அஞ்ஞானம், ஆவரணம், விட்சேபம், பரோட்சம், அபரோட்சம், துக்கநிவிர்த்தி, தடையற்ற ஆனந்த மென்று சொல்லப்படும்.

ச. அதெப்படி?

உ. திருஷ்டாந்தத்தில் பரமஹம்ஸ ரொன்றொரு சந்நியாசியுண்டு. அவருக் கனேகஞ் சிஷர்க ளிருந்தார்கள். அவர்களிற் பதின்மரை யழைத்து ஒரு காரிய நிமித்தம் ஒரு ஊருக் கனுப்பிவைத்தார். அவர்கள் போகும்போது மார்க்கத்தில் குறுக்கே யிருக்கிற வொரு ஆற்றி லிறங்கி அந்தக் கரை யேறிய பிறகு, அவர்களிற் பிரதானமானவன் சம்சயங்கொண்டு, நாம் பத்துப்பேரும் கரை யேறினோமோ, இல்லையோ வென் றெண்ணிப்பார்த்துத் தன்னை யெண்ணாமல் ஒன்பதுபேரிடத்திற் சித்தம் வைத்தவனாய், அவர்களைப் பிரத்தியட்சமாகப் பார்த்திருந்தும் அஞ்ஞானத்தினால் கணித கர்த்தாவாகிய தன்னைத் தசமனென் றறியாமல் மறந்து நிற்பதே யஞ்ஞானம்.

ச. ஆவரணமாவது யாது?

உ. அசத்தாவரணம், ஆபாசாவரணம் என்று இரண்டுவிதம்.

ச. அதெப்படி?

உ. தசமனானவன், தான் சுயம் தசமனாயிருந்துகொண்டே, தசம னிருக்கிறானென்று கேட்டது அசத்தாவரணம். தசமனைக் காணோம்; இருந்தால் தோற்றலாமே; தோற்றவில்லை யாகையினால், தசம னில்லையென்று சொல்லுவது ஆபாசாவரணம். இவ்விவகாரத்திற்குக் காரணமாயிருக்கிற தெதுவோ, அதுவே யஞ்ஞான காரியமான ஆவரணம்.

ச. விட்சேபமாவது யாது?

உ. தசமன் ஆற்றி லிறந்தானென்று நிச்சயித் தழுகிறதே விட்சேபம்.

ச. பரோட்சமாவது யாது?

உ. தசமனிப்படி யழும்போது ஆப்தன் ஒருவன்வந்து னனழுகிறாய், அழாதே, தசமன் செத்துப்போகவில்லை, இருக்கிறானென்று சொல்லச் சாஸ்திர ங்களாற் சொர்க்காதிகளை யறிந்ததுபோல அவ்வாப்த வாக்கியத்தினால் பரோட்சமாகத் தசமனிருக்கிறானென் றறிந்ததே அசத்தாவரண நிவர்த்தகமான பரோட்சஞானம்.

ச. அபரோட்சமாவது யாது?

உ. அவ்வாப்தன் தசமனுக்கு ஒன்பதுபேரையு மெண்ணிக்காட்டிப் பத்தாவான் நீயே யென்று காட்ட, அவனும் அப்படியே யெண்ணி, தானே தசமனென்பதிற் சந்தேகமில்லை யென் றறிந்து, அஞ்ஞானத்தினாற் பிரமித்தேனென்றும் காலத்திரயத்திலுந் தான் தசமனென்பதிற் சந்தேக மில்லையென்றுந் தெளிந்து, தன்னை யுள்ளபடி யறிந்ததே ஆபாசாவரண நிவர்த்தகமான அபரோட்ச ஞானம்.

ச. துக்க நிவிர்த்தியாவது யாது?

உ. முன்னிருந்த ரோதனாதிகளை விட்டதே துக்கநிவிர்த்தி.

ச. தடையற்ற ஆனந்தமாவது யாது?

உ. அந்தத் துக்க நீங்கினவுடன் இருந்த சுதா சவுக்கிய சுகமே தடையற்ற ஆனந்தம். இவையே சப்தாவஸ்தைகளாம்.

ச. தாஷ்டாந்தத்தி லெப்படி?

உ. சிதாபாசன் சமுசாரத்தில் ஆசத்தியுடையவனாய் ஒரொரு பொழுதானு லுந் தன் சுவரூப பூத சொப்பிரகாசனாகிய கூடஸ்தனை யறியாதிருப் பதே யஞ்ஞானம்.

ச. ஆவரணமாவது யாது?

உ. ஒருவன் கூடஸ்தனை யறிவாயா வென்று கேட்க, கூடஸ்தனென் ெருருவ னிருக்கிறானா? இல்லையே. உண்டாயிருந்தால் தோற்ற வேண் டுமே யென்று சொல்லுவதே யஞ்ஞான காரியமான ஆவரணம்.

ச. விட்சேபமாவது யாது?

உ. நான் கர்த்தா, போக்தா, சுகி, துக்கி, மனுஷன், பிராமண னென்பது இந்தத் தேகமே யன்றி,வேறே கூடஸ்த னில்லையென்று சொல்லுவதே விட்சேபம்.

ச. பரோட்சமாவது யாது?

உ. சற்குரு உபதேசத்தினால் கூடஸ்த னொருவ னுண்டென் றறிவதே பரோட்ச ஞானம்.

ச. அபரோட்ச ஞானமாவது யாது?

உ. சற்குரு சந்நிதானத்தில் சிரவணாதிகள் செய்து அதினா லுண்டான பர ஞானத்தினால், தான் கூடஸ்த னென்பதிற் சம்சயமில்லை யென்று பிர த்தியட்சமாய்க் காண்பதே அபரோட்சஞானம்.

ச. துக்க நிவிர்த்தியாவது யாது?

உ. இப்படி நிருவிகாரனாயும், அசங்கனாயு மிராநின்ற கூடஸ்த சொருபமே தானென் றறிந்த பிறகு கர்த்ருத்வாதி சோக முதலானவைகள் விட்டிரு ப்பதே துக்கநிவிர்த்தி.

ச. தடையற்ற ஆனந்தமாவது யாது?

உ. கர்த்தவ்ய வுற்பத்தி யெம்மாத்திர மிருக்கின்றதோ, அம்மாத்திரமும் என் னாலேயே செய்யப்பட்டனவென்றும், அதனா லடையப்பட்ட பலவுற்பத் திக ளெவ்வளவிருக்கின்றனவோ, அவ்வளவும் என்னாலேயே யடையப் பட்டனவென்றுங்கொண்டு சந்தோஷப் படுகிறதே தடையற்ற ஆனந்த மாம். இவற்றுள் ஆதியான மூன்றவஸ்தையும் பந்தத்திற்கு ஏது; மற்ற நான்கவஸ்தையும் மோட்சத்திற்கு ஏது வென்று விசாரித் தறிந்து இந்தச் சப்தாவஸ்தைகளும் என்னிடத்தில் ஆரோபிக்கப்பட்ட அகங் காரத்துக் கன்றிச் சாட்சியாகிய வெனக் கில்லையென்று ஸ்ரீசற்குரு முன் னிலையில் சம்சய விபரீதமற விசாரித் தறிந்தவனே ஜீவன்முத்தனென்று சுருதி ஸ்மிருதி இதிகாச புராணாகமாதிகள் சொல்லுகின்றன. இதிற் சம் சய மில்லை சித்தம்.

முப்பத்தைந்தாவது சப்தாவஸ்தை நிருபகம் முற்றிற்று.

முப்பத்தாறாவது

# தாதாத்மியத்திரயநிரூபகம்.

சங்கை: தாதாத்மியத்திரயமாவது யாது?

உத்தரம்: சகஜ தாதாத்மியம், கர்மஜ தாதாத்மியம், பிராந்திஜ தாதாத்மியம் என மூன்றுவிதமா யிருக்கும்.

ச. சகஜ தாதாத்மியம் எப்படிப்பட்டது?

உ. சித்து அகங்காரத்திற் பிரதிபிம்பித்து, அந்தப் பிரதிபிம்பமும் அகங்காரமுங் கூடித் தப்தாய பிண்டம்போ லேகரூபமாய் அந்தச் சித்தைப்போலவே தோற்றும். அந்தச் சிற்பிரதிபிம்பத்துடன் கூடிக்கொண்டிருக்கும் அகங்காரத்திற்கே சகச தாதாத்மியமென்று சொல்லப்படும்.

ச. சகச தாதாத்மியமெனப் பெய ரேன் வந்தது?

உ. பிறக்கும்போதே யிரண்டுங் கூடப் பிறந்தபடியினா லிவ்விரண்டினுடைய தாதாத்மியமே சகச தாதாத்மியமென்று பெயராயிற்று.

ச. கர்மஜ தாதாத்மிய மெப்படிப்பட்டது?

உ. சிற் பிரதிபிம்பத்துடன் கூடிக்கொண்டு சித்தைப்போலவே தோற்றப்பட்ட அகங்காரத்திற்குத் தூல சரீரத்துடன் கூடச் சம்பந்தம் வந்தபோது கர்மஜ தாதாத்மியமென்று சொல்லப்படும்.

ச. கர்மஜ தாதாத்மியமென்று பெய ரேன் வந்தது?

உ. சாக்கிர போகப் பிரதானமான கர்மம் பிறந்தபோது அந்தக் கர்மஜ தாதாத்மியம்பிறக்கின்றது.அந்தக் கர்மம் நசித்தா லந்தக் கர்மஜ தாதாத்மியமும் நசித்துப்போகின்றது. அதனாற் சிற் பிரதிபிம்பத்துடன் கூடியிருக்கிற அகங்காரத்திற்குத் தூல சரீரத்துடன் கூடிய தாதாத்மியமே கர்மஜ தாதாத்மியமென்று பெயராயிற்று. கர்ம முண்டானாற் கர்மஜ தாதாத்மிய முண்டு. கர்ம மில்லாமற்போனால் கர்மஜ தாதாத்மியமில்லை யென்பதற்குச் சாக்கிரத்திலுஞ் சுழுத்தியிலும் பார்த்துக்கொள்ளவேண்டியது. இந்தத் தாதாத்மியத்தினாலேயே தூல தேகமுஞ் சேதனம் போலத் தோற்றுகின்றது.

ச. பிராந்திஜ தாதாத்மிய மெப்படிப்பட்டது?

உ. நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரன், நான் பிரமசாரி, நான் கிரகஸ்தன், நான் வானப்பிரஸ்தன், நான் சந்நியாசி யென்கிற சித்த விருத்தியுடன் கூடியிருக்கிற அகங்காரத்திற்கு அகஞ் சத்தார்த்தமான சாட்சியோடுங் கூடிய தாதாத்மியம் பிராந்திஜ தாதாத்மியமென்று சொல்லப்படும்.

ச. பிராந்திஜமென்று பெய ரேன் வந்தது?

உ. சர்வாபீஷ்டமான ஆத்ம சொரூபத்தை நானென் றறியாமல் இப்படிப் பிராந்தியினால் வந்தபடியா லிதற்குப் பிராந்திஜ தாதாத்மியமென்று பெயராயிற்று.

ச. இதற்கு நிவிர்த்தி யெப்போது வரும்?

உ. சம்பந்தங்களான சிற் சாயா அகங்காரமா யெந்தமட்டு மிருக்கின்றதோ அந்தமட்டுஞ் சகஜ தாதாத்மியம் பிராந்திஜ தாதாத்மிய மிரண்டிற்கும் நிவிர்த்தி வரமாட்டாது. விதேக கைவல்யத்தில் அத்தியந்த நிவிர்த்தி வரும். கர்மஜ தாதாத்மியமோவென்றால் பிரதிதினமும் போகப்பிரதான மான கர்மத்தினாற் பிறக்கிறபடியினாலும், அந்தக் கர்மமுஞ் சுழுத்தி யில் நாசப்படுவதினாலும் இதற்குப் பிரதிதினமுஞ் சர்வானுபவமாய்ச் சுழுத்தியில் நாசங் கண்டுகொள்ளவேண்டியது. பிராந்திஜ தாதாத்மிய மும் நானே பிரமமென்கிற ஞானமுண்டானதட்சணம் நசித்துப்போம்.

ச. இதற்குப் பிரமாணமுண்டோ?

உ. வித்தியாரண்ய சுவாமிகள் திருக்கு திரிசிய விவேக மென்கிற கிரந்தத் தில் இப்படியே நிரூபித்திருக்கின்றார். நாம் நிரூபிக்கப்பட்டவையாவும் நமது சுவானுபவமும், ஈசுவர வாக்கியமாகிய வேதாந்த வுபநிஷத்துக ளும்பூர்வாசாரியர்கள் நிரூபித்திருக்கிற சாஸ்திரங்களும் ஒன்றுபட அனு பவத்திற் கண்டனவேயாம். இந்தத் தாதான்மியத் திரயங்களை ஸ்ரீ சற் குரு நாதன் முன்னிலையில் நன்றாய் விசாரித்தறிந்து, இந்தத் தாதாத் மியத் திரயங்களகங்காரத்திற்கே யல்லது, சாட்சியாகிய நமக்கில்லை யென்று எவனறிகின்றானோ, அவனே யசங்கனாகிய பரமுத்தனென்று சுருதி ஸ்மிருதி இதிகாச புராணாகமங்கள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

முப்பத்தாறாவது தாதாத்மியத்திரய நிரூபகம் முற்றிற்று.

---

முப்பத்தேழாவது

# ஜீவேசுவரசொரூபநிரூபகம்.

---

சங்கை: ஜீவனாவன் யாவன்?

உத்தரம்: அந்தக்கரணம், அதிஷ்டான சைதன்யம், அந்தக்கரண பிரதிபிம்ப சைதன்னியம் ஆகிய இம்மூன்றுங்கூடிச் ஜீவனென்று சொல்லப்படும்.

ச. அப்படிச் சொல்லுவானேன்? கேவலம் அந்தக்கரணத்திற்கே ஜீவத்துவஞ் சொல்லுவோமே?

உ. அப்படியானால் கடத்துக்குஞ் ஜீவத்துவம்வரவேண்டும். அப்படிக்கூடாத தால் கேவலமான அந்தக் கரணத்திற்குச் ஜீவத்வஞ் சொல்லக்கூடாது.

ச. கடஞ் சொச்ச திரவிய மல்லாதபடியினாலும், அந்தக் கரணஞ் சொச்ச திரவிய மானபடியினாலும் அந்தக் கரணத்திற்குச் ஜீவத் துவஞ் சொல்லலாமே?

உ. தர்ப்பணாதிகள் சொச்ச திரவியமானதால் அவைகளுக்குஞ் ஜீவத்துவம் வரவேண்டும். அப்படிக் கூடாதபடியினால் அந்தக்கரணஞ் சொச்ச திர விய மானபோதிலுங் கேவலம் அந்தக் கரணத்திற்குச் ஜீவத்துவஞ் சொல்லக்கூடாது.

ச. தர்ப்பணுதிகள் பாகிய பதார்த்த மானதினாலும், அந்தக்கரணம் அந்தர் பதார்த்த மானதினாலும் அந்தக்கரணத்திற்குச் சீவத்துவஞ் சொல்லலாமே?

உ. இந்திரியங்களும் அந்தர் பதார்த்த மானதால் அவைகளுக்குஞ் சீவத்துவம் வரவேண்டும். அப்படிக் கூடாதபடியினால் அந்தக் கரணத்திற்குச் சீவத்துவஞ் சொல்லக்கூடாது.

ச. அந்தக்கரணம் இந்திரியத்தைப் பார்க்கிலும் அந்தரானதினால் அந்தக்கரணத்திற்குச் சீவத்துவஞ் சொல்லலாமே?

உ. அஞ்ஞானம் அந்தக்கரணத்திலும் அந்தரானதால் அஞ்ஞானத்திற்குஞ் சீவத்துவஞ் சொல்லவேண்டும். அப்படிக் கூடாதபடியினால் அந்தக்கரணத்திற்குச் சீவத்துவஞ் சொல்லக்கூடாது. அல்லாமலும் சீவன் சேதனமானதினால் அசேதனமான அந்தக் கரணத்திற்குச் சீவத்துவங் கூடாது.

ச. கேவலம் பிரதிபிம்பத்திற்குச் சீவத்துவஞ் சொல்லுவோமே?

உ. அந்தக் கரண மில்லாமற் பிரதிபிம்ப மில்லை யாகையினாற் கேவலம் பிரதிபிம்பத்திற்கே சீவத்துவஞ் சொல்லக் கூடாது.

ச. பிரதிபிம்ப நிமித்தம் அந்தக்கரணத்தையும் அங்கீகரித்துக் கேவலம் பிரதிபிம்பத்திற்குச் சீவத்துவஞ் சொல்லுவோமே?

உ. பிரதிபிம்பத்திற்குச் சுயம் விகாரமுண்டா யிருந்தபோதிலுங் கர்த்ருத்வாதி விகார மில்லாதபடியினால் பிரதிபிம்பத்திற்கே சீவத்துவஞ் சொல்லக்கூடாது.

ச. அதிஷ்டான சைதன்னியத்திற்குச்சீவத்துவஞ் சொல்லுவோமே?

உ. அந்தச் சைதன்னியம் நிருவிகார மானபடியினால் விகாரரூபமான சீவத்துவஞ் சொல்லக் கூடாது.

ச. அந்தக்கரணமும் பிரதிபிம்பமுங் கூடினது சீவனென்றுசொல்லுவோமே?

உ. அதிஷ்டானமின்றிப் பிரதிபிம்பங் கூடாதபடியால் அப்படிச்சொல்வது கூடாது.

ச. அதிஷ்டான சைதன்னியமும் பிரதிபிம்ப சைதன்னியமுங் கூடினது சீவனென்று சொல்லலாமே?

உ. கேவலஞ் சைதன்னியமாத்திரம் நிருவிகார மானபடியினால் கர்த்ருத்வ போக்த்ருத்வாதி விகார லட்சணமான சீவத்வஞ் சொல்லக் கூடாது.

ச. ஆனால் அதிஷ்டான சைதன்னியத்தையும் அந்தக் கரணத்தையுங் கூட்டிச் சீவனென்று சொல்லுவோமே?

உ. தர்ப்பணமும் தர்ப்பண அதிஷ்டானமுங் கூடிச் சீவனாகவேண்டும். அவைகளுக்குச் சீவத்துவம் வரவில்லை. ஆகையால் அதிஷ்டான சைதன்னியத்தையும் அந்தக் கரணத்தையுங் கூட்டிச் சீவனென்று சொல்லக் கூடாது. ஆதலால் அந்தக் கரணம் அதிஷ்டான சைதன்னியம் அந்தக்

ச. இதற்கு நிவிர்த்தி யெப்போது வரும்?

உ. சம்பந்தங்களான சிற் சாயா அகங்காரமாயெந்தமட்டு மிருக்கின்றதோ அந்தமட்டுஞ் சகஜ தாதாத்மியம் பிராந்திஜ தாதாத்மிய மிரண்டுக்கும் நிவிர்த்தி வரமாட்டாது. விதேக கைவல்யத்தில் அத்தியந்த நிவிர்த்தி வரும். கர்மஜ தாதாத்மியமோவென்றால் பிரதிதினமும் போகப்பிரதான மான கர்மத்தினால் பிறக்கிறபடியினாலும், அந்தக் கர்மமுஞ் சுழுத்தி யில் நாசப்படுவதினாலும் இதற்குப் பிரதிதினமுஞ் சர்வானுபவமாய்ச் சுழுத்தியில் நாசங் கண்டுகொள்ளவேண்டியது. பிராந்திஜ தாதாத்மிய மும் நானே பிரமமென்கிற ஞானமுண்டானதட்சணம் நசித்துப்போம்.

ச. இதற்குப் பிரமாணமுண்டோ?

உ. வித்தியாரண்ய சுவாமிகள் திருக்கு திரிசிய விவேகமென்கிற கிரந்தத் தில் இப்படியே நிரூபித்திருக்கின்றார். நாம் நிரூபிக்கப்பட்டவையாவும் நமது சுவானுபவமும், ஈசுவர வாக்கியமாகிய வேதாந்த வுபநிஷத்துக ளும்பூர்வாசாரியர்கள் நிரூபித்திருக்கிற சாஸ்திரங்களும் ஒன்றுபட அனு பவத்திற் கண்டவையேயாம். இந்தத் தாதான்மியத் திரயங்களை ஸ்ரீ சற் குரு நாதன் முன்னிலையில் நன்றாய் விசாரித் தறிந்து, இந்தத் தாதாத் மியத் திரயங்களகங்காரத்திற்கே யல்லது, சாட்சியாகிய நமக் கில்லை யென்று எவனறிகிறானோ, அவனே யசங்கனாகிய பரமுத்தனென்று சுருதி ஸ்மிருதி இதிகாச புராணாகமங்கள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

முப்பத்தாறாவது தாதாத்மியத்திரய நிரூபகம் முற்றிற்று.

---

முப்பத்தேழாவது

# சீவேசுவரசொரூபநிரூபகம்.

---

சங்கை: சீவனாவன் யாவன்?

உத்தரம்: அந்தக்கரணம், அதிஷ்டான சைதன்யம், அந்தக்கரண பிரதிபிம்ப சைதன்னியம் ஆகிய இம்மூன்றுங்கூடிச் சீவனென்று சொல்லப்படும்.

ச. அப்படிச் சொல்லுவானேன்? கேவலம் அந்தக்கரணத்திற்கே சீவத்துவஞ் சொல்லுவோமே?

உ. அப்படியானால் கடத்துக்குஞ் சீவத்துவம்வரவேண்டும். அப்படிக் கூடாத தால் கேவலமான அந்தக் கரணத்திற்குச் சீவத்வஞ் சொல்லக்கூடாது.

ச. கடஞ் சொச்ச திரவிய மல்லாதபடியினாலும், அந்தக் கரணஞ் சொச்ச திரவிய மானபடியினாலும் அந்தக் கரணத்திற்குச் சீவத் துவஞ் சொல்லலாமே?

உ. தர்ப்பணாதிகள் சொச்ச திரவியமானதால் அவைகளுக்குஞ் சீவத்துவம் வரவேண்டும். அப்படிக் கூடாதபடியினால் அந்தக்கரணஞ் சொச்ச திர விய மானபோதிலுங் கேவலம் அந்தக் கரணத்திற்குச் சீவத்துவஞ் சொல்லக்கூடாது.

ச. தர்ப்பணாதிகள் பாகிய பதார்த்த மானதினாலும், அந்தக்கரணம் அந்தர் பதார்த்த மானதினாலும் அந்தக்கரணத்திற்குச் சீவத்து வஞ் சொல்லலாமே?

உ. இந்திரியங்களும் அந்தர் பதார்த்த மானதால் அவைகளுக்குஞ் சீவத்து வம் வரவேண்டும். அப்படிக் கூடாதபடியினால் அந்தக் கரணத்திற்குச் சீவத்துவஞ் சொல்லக்கூடாது.

ச. அந்தக்கரணம் இந்திரியத்தைப் பார்க்கிலும் அந்தரானதினால் அந்தக்கரணத்திற்குச் சீவத்துவஞ் சொல்லலாமே?

உ. அஞ்ஞானம் அந்தக்கரணத்திலும் அந்தரானதால் அஞ்ஞானத்திற்குஞ் சீவத்துவஞ் சொல்லவேண்டும். அப்படிக் கூடாதபடியினால் அந்தக்கர ணத்திற்குச் சீவத்துவஞ் சொல்லக்கூடாது. அல்லாமலும் சீவன் சேதன மானதினால் அசேதனமான அந்தக் கரணத்திற்குச் சீவத்துவங் கூடாது.

ச. கேவலம் பிரதிபிம்பத்திற்குச் சீவத்துவஞ் சொல்லுவோமே?

உ. அந்தக் கரண மில்லாமற் பிரதிபிம்ப மில்லை யாகையினாற் கேவலம் பிரதிபிம்பத்திற்கே சீவத்துவஞ் சொல்லக் கூடாது.

ச. பிரதிபிம்ப நிமித்தம் அந்தக்கரணத்தையும் அங்கீகரித்துக் கேவ லம் பிரதிபிம்பத்திற்குச் சீவத்துவஞ் சொல்லுவோமே?

உ. பிரதிபிம்பத்திற்குச் சுயம் விகாரமுண்டா யிருந்தபோதிலுங் கர்த்ருத் வாதி விகார மில்லாதபடியினால் பிரதிபிம்பத்திற்கே சீவத்துவஞ் சொல்லக்கூடாது.

ச. அதிஷ்டானசைதன்னியத்திற்குச்சீவத்துவஞ் சொல்லுவோமே?

உ. அந்தச் சைதன்னியம் நிருவிகார மானபடியினால் விகாரரூபமான சீவ த்துவஞ் சொல்லக் கூடாது.

ச. அந்தக்கரணமும் பிரதிபிம்பமுங் கூடினது சீவனென்றுசொல்லு வோமே?

உ. அதிஷ்டானமின்றிப் பிரதிபிம்பங் கூடாதபடியால் அப்படிச்சொல்வது கூடாது.

ச. அதிஷ்டான சைதன்னியமும் பிரதிபிம்ப சைதன்னியமுங் கூடி னது சீவனென்று சொல்லலாமே?

உ. கேவலஞ் சைதன்னியமாத்திரம் நிருவிகார மானபடியினால் கர்த்ருத்வ போக்த்ருத்வாதி விகார லட்சணமான சீவத்வஞ் சொல்லக் கூடாது.

ச. ஆனால் அதிஷ்டான சைதன்னியத்தையும் அந்தக் கரணத்தை யுங் கூட்டிச் சீவனென்று சொல்லுவோமே?

உ. தர்ப்பணமும் தர்ப்பண அதிஷ்டானமுங் கூடிச் சீவனாகவேண்டும். அவைகளுக்குச் சீவத்துவம் வரவில்லை. ஆகையால் அதிஷ்டான சைதன் னியத்தையும் அந்தக் கரணத்தையுங் கூட்டிச் சீவனென்று சொல்லக் கூடாது. ஆதலால் அந்தக் கரணம் அதிஷ்டான சைதன்னியம் அந்தக்

காரணப் பிரதிபிம்ப சைதன்னியம் ஆகிய மூன்றையுங் கூட்டிச் சீவனென்று சொல்லவேண்டும். இதுவுமல்லாமல் கர்த்ருத்வ போக்த்ருத்வாதி விசிஷ்டத்துவமே சீவத்துவம் ஆனபடியினால், கர்த்ருத்வ போக்த்ருத்வஞ் சித்திக்கும்பொருட்டு அந்தக் கரணத்துடன் கூடிய சூட்சும சரீரமும் அத்தியந்தம் வேண்டும்.

மேலும் சூட்சும சரீரந் தூல சரீரத்தை விட்டிராதபடியினாலும், அந்தத் தூலசரீர கோளகம் இல்லாமல் அவ்விந்திரியங்களுக்கு விஷயங்களைக் கிரகிக்கும் வகைகள் கூடாதபடியினாலும், பிராமணத்வாதியபிமான மில்லாமற் கர்த்ருத்வங் கூடா தானதினாலுந் தூல சரீரமும் வேண்டும். அசங்கனாகிய ஆத்மாவுக்கு அஞ்ஞான மில்லாமல் சரீரத்துவய அத்தியாசங் கூடாது. ஆனதினாலும், காரியங் காரணத்தை விட்டிராதபடியினாலுங் காரண சரீரமும் வேண்டும். ஆகையால் அதிஷ்டான சைதன்னியமும், பிரதிபிம்ப சைதன்னியமும், சரீரத்திரயமும், இவைகளிடத்தில் அத்தியாசமுங் கூடிச் சீவனென்று சொல்லப்படும்.

ச. ஈசுவரனாவது யார்?

உ. மாயையும், மாயா அதிஷ்டான சைதன்னியமும், மாயையிற் பிரதிபிம்பித்த சைதன்னியமுங் கூடி யீசுவரனென்று சொல்லப்படும்.

ச. இம்மூன்றையுங் கூட்டி யேன் சொல்லவேண்டும்? கேவலம் மாயைக்கே யீசுவரத்துவஞ் சொல்லுவோமே?

உ. அப்போது ஆகாசத்திற்கும் ஈசுவரத்வம் வரவேண்டும். அப்படிக் கூடாததினாற் கேவலம் மாயைக்கு ஈசுவரத்வஞ் சொல்லக் கூடாது.

ச. மாயை யனிர்வசனீய மானதால் மாயைக்கு ஈசுவரத்வஞ் சொல்லலாமே?

உ. அனிர்வசனீயமான கிளிஞ்சல் வெள்ளிக்கு மீசுவரத்வம் வரவேண்டும். அங்ஙனம் வராதபடியினால் அனிர்வசனீயமான மாயைக்கு ஈசுவரத்வஞ் சொல்லக் கூடாது. இதுவுமல்லாமல் ஈசுவரன் சேதன னானபடியால் அசேதனமான மாயைக் கீசுவரத்வஞ் சொல்லக் கூடாது.

ச. கேவலம் பிரதிபிம்பத்திற்கு ஈசுவரத்வஞ் சொல்லலாமே?

உ. மாயை யில்லாமற் பிரதிபிம்ப மில்லை யாதலால், அந்தப் பிரதிபிம்பத்திற்கு மீசுவரத்வஞ் சொல்லக் கூடாது.

ச. பிரதிபிம்ப நிமித்தம் மாயையை யங்கீகரித்துப் பிரதிபிம்ப மாத்திரத்துக்கு ஈசுவரத்வஞ் சொல்லலாமே?

உ. மாயை யில்லாமற் கேவலம் பிரதிபிம்பத்திற்குச் சர்வக்ஞத்வாதிகள் சொல்லக் கூடாது. ஆனபடியினா லிந்தப் பிரதிபிம்பத்திற்கு மாத்திரம் ஈசுவரத்வஞ் சொல்லக் கூடாது.

ச. அப்படியானால் அதிஷ்டான சைதன்னியத்திற்கு ஈசுவரத்வஞ் சொல்லலாமே?

உ. அதிஷ்டான சைதன்னியம் நிருவிகார மானபடியினாலும், கேவலம் நிருவிகார சைதன்னியத்திற்குச் சகத் சிருஷ்டியாதிகள் கூடாதபடியினாலும் அதிஷ்டான சைதன்னியத்திற்கும் ஈசுவரத்வஞ் சொல்லக் கூடாது.

ச. அதிஷ்டான சைதன்னியத்தையும் மாயையுங் கூட்டி ஈசுவரத்வஞ் சொல்லலாமே?

உ. ஆகாசம், அதிஷ்டான சைதன்னிய மாகிய இரண்டுக்கு மீசுவரத்வம் சொல்லவேண்டும். அப்படி யில்லாதபடியினால் மாயைக்கும்அதிஷ்டான சைதன்னியத்திற்கு மீசுவரத்வஞ் சொல்லக் கூடாது.

ச. மாயையையும் பிரதிபிம்பத்தையுங் கூட்டி ஈசுவரத்வஞ் சொல்லலாமே?

உ. அதிஷ்டானமின்றிப் பிரதிபிம்பங்கூடாதபடியால் அப்படிச் சொல்லக் கூடாது.

ச. அதிஷ்டான சைதன்னியத்திற்கும் பிரதிபிம்ப சைதன்னியத்திற்கு மீசுவரத்வஞ் சொல்லலாமே?

உ. கேவலம் பிரதிபிம்பமும், அதிஷ்டான சைதன்னியமும் நிருவிகாரமாகையினால் நிருவிகார சைதன்னிய மிரண்டிற்கும் விகாரமானஈசுவரத்வஞ் சொல்லக் கூடாது. ஆதலால் மாயையையும், அதிஷ்டான சைதன்னியத்தையும், மாயையிற் பிரதிபிம்பித்த சைதன்னியத்தையுங் கூட்டி யீசுவரத்வஞ் சொல்ல வேண்டும்.

ச. இந்தப்படிச் ஜீவேசுவரர்களை யெங்கே நிரூபிக்கப்பட்டிருக்கின்றது?

உ. வித்தியாரண்ணிய சுவாமிகள் பஞ்சதசப் பிரகரணத்தில் நிரூபித்திருக்கின்றார்.

இந்தப்படிச் ஜீவேசுவரர்களுடைய சொரூபத்தை விசாரித் தறிந்து ஜீவேசுவரர்கள் மாயா கற்பிதரென்று நிச்சயித்து, இவர்களுக் கதிஷ்டான பூதமாய் நிருவிகாரமாய் நிச்சங்கமாய் நிரவயவமாய்ச் சொப்பிரகாசமாய்ச் சர்வ சாட்சியாய் விளங்கப்பட்ட பிரத்தியேகாத்மாவே நானென்று ஸ்ரீசற்குருவினால் தெளிந்து ஜீவேசுவரப் பிரதிபிம்ப லக்ஷணமும் சுய சொரூப லட்சணமும் உபாதி பேதமும் தாதாத்மிய அத்தியாச தாரதம்மிய லட்சணமும் சம்சய விபரீத மற வெவ னறிகிறுனோ, அவனே ஜீவன்முத்த னென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணங்கள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

முப்பத்தேழாவது ஜீவேசுவர சொரூப நிருபகம் முற்றிற்று.

---

முப்பத்தெட்டாவது

# சித்தநிரோதநிரூபகம்.

---

சங்கை: சித்த நிரோதமாவது யாது?

உத்தரம்: மனம் ஒருநிலையா யிராமல் சகலமான பதார்த்தமா யிருக்கிறபடியினால் தன்னுடன் கூடியிருக்கிற புருஷனையும் மிகவுந் தாபப்படுத்தும். அதுபோய் ஒரு விஷயத்தில் விழுந்தால் அதைத் திருப்பவே கூடாது. மேலும் வேகமான வாயுவைத் திருப்ப வசமல்லாததுபோலவும்,கொலுசி

விருந்து விடுபட்டுப் போகிற மதயானையைத் திருப்ப வசமல்லாதது போலவும் மனதையுந் திருப்பி நிறுத்த வச மல்லவென்று அருச்சுனன் ஸ்ரீகிருஷ்ணபகவானைக் கேட்டதாகவும்; சமுத்திரத்தையுங் குடிக்கலாம், மேருவையும் பிடுங்கலாம், காட்டுத் தீயையும் விழுங்கலாம், காற்றையும் பிடித்துச் சுமையாய்க் கட்டலாம், சித்த நிரோதம் பெறுவது மாத்திரம் வெகுபிரயாசையென்று ஸ்ரீராமருக்கு ஸ்ரீவசிட்டமுனிவருபதேசித்ததாகவுங் கிதை வாசிட்டங்கள் சொல்லுகின்றன. அப்படிச் சொன்ன வசிட்ட முனிவரே திரும்பவும் சித்த நிரோதம் வருவது வெகு சுலபமென்றுந் திருவுளம் பற்றியிருக்கிறார். இதை மறந்துவிட்டு உலகத்திற் சிலபேர் சித்த நிரோதங் கடினமென்ற வாக்கியத்தை மாத்திரம் பற்றிக்கொண்டு, யாருக்குஞ் சித்த நிரோதம் சர்வாத்மனாய்வாராதென்றே நிச்சயித்து, வேதாந்த விசாரத்துக் கதிகாரிகளே யில்லையென்று சொல்லுகிறார்கள். ஸ்ரீசற்குரு கடாட்சத்தினால் பிரிவுபட வறிவிக்க நன்றா யறிந்தும், பிறிந்தும் பிறிபட்ட பதார்த்தமில்லாமல் சித்த நிரோதம்வந்து முத்தரானவர்களும் அப்படியே உலகத்திற் சித்தநிரோதம் பண்ண அதிகாரிகளே யில்லை யென்றுஞ் சொல்லுகிறார்கள். அச்சொல்லைக் கேட்டுச் சிலர் பிரமைகொண்டார்கள். அவர்களது பிரமையைப் போக்கடிக்கிற நிமித்தம் அவர்கள் நினைவின்படியே சித்த நிரோதம் வருவது வெகு சுலபமென்பதைத் திருஷ்டாந்த பூர்வகமாய் நிருபிக்கிறோம்.

ச. அதெப்படி ?

உ. மனம் பட்டி மாட்டைப்போலொத்தது. அந்தப் பட்டிமாடு சார்வதா பயிரைக் குறித்துக்கொண்டே போகும். பிடித்துக் கட்டப்போனால் ஓடிப்போம். அதைப் பிரயபசத்தினால் பிடித்துக் கட்டி வீட்டுக்குள் கொண்டுவந்தாலும் அதின்முன் வைக்கோலாதிகளைப் போட்டாலும் அவைகளை முகர்ந்துவிட்டு முன்மேய்ந்த பயிர்களையே சிந்தித்துக்கொண்டிருக்கும்; பிற்பாடு அவிழ்த்துவிட்டால் திரும்பவும் அந்தப் பயிரை நாடிக்கொண்டே போய்விழும். மறுநாளு மிந்தப்படியே பிடித்துக் கட்டி வீட்டுக்குள் வைக்கோல் தவிடு முதலானவைகள் போட்டாலும் அதைச் சற்றுநேரந் தின்றுவிட்டுப் பிறகு எப்போதும்போல் அப்பயிரையே சிந்தித்திருக்கும். இந்தப் பிரகாரம் நாள்தோறும் விடுவித்தும் கட்டுவித்துந் தீனிபோட்டும் பழக்கிக்கொண்டு வரவர, வீட்டுத்தீனடி யப்பியாசமாய் வெளியி லோட்டிவிட்டாலும், அது தானே போனாலும் மறுபடியும் வீட்டுக்கே வரும். பிறகு அதை யோட்டினாலும் போகாது. அந்தப் பட்டிமாடு அப்பியாசத்தினால் வீட்டுக்குள்ளேதானே கட்டுப்பட்டது போல், இந்த மனதையும் அப்பியாசத்தினாலும் வயிராக்கியத்தினாலும் நிறுத்தலாம்.

ச. அவ்வப்பியாசமாவது யாது ?

உ. நித்தியமும் தனக்கு அபீஷ்டமான மூர்த்தியைத் தியானம்பண்ண வுட்கார்ந்தால், அம்மனம் அகமுகப்படாமல் முன்போலவே பகிர்முகப்பட்டு விஷயங்களிற் போய்விழும். அப்படி விழுகின்ற மனதைத் திருப்பித் திருப்பி யகமுகப்படுத்தி மூர்த்தி சொரூபத்தில் நிறுத்தினால் சற்றே நிற்கும். திரும்பவும் பழக்கப்படியே போய்விழும். மறுநாளிரண்டுநாழிகை, அதற்கு மறுநாள் நாலுநாழிகை, அதற்கு மறுநாள் எட்டு

நாழிகை இந்தப்படியே அப்பியாசப்படுத்திக்கொண்டு வரவர, இந்த அப்பியாசத்தினுல் முனைபு ஓடிய மனம் எங்கே நிறுத்தினு லுமங்கே நிற்கும். இதுவே யப்பியாசமாம்.

ச. வயிராக்கியமாவது யாது?

உ. அனேக ஜன்மத்திற் செய்த விகிர்த கருமங்களெல்லா மீசுவரார்ப்பண மாகச் செய்து வருகிறபோது, அப்படிச் செய்த புருஷனுக்கு ஒரு ஜன்மத்திற் சித்தசுத்தி வரும். அதனுலெந்த விஷயத்திலுந் தோஷதிருஷ்டி வரும். அதனுல் பிரமலோகாதிகளும் திரணீகரமா யெண்ணுகிற திடசித்தம் வரும். இதுவேவயிராக்கியமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். இப்படிப்பட்ட அப்பியாச வயிராக்கிய புருஷர்களுடைய சித்தம் சிரவணுதிகளி லெங்கே நிறுத்தினபோதிலும் அங்கேயே நிலையாக நிற்கும். ஆதலால் சித்த நிரோதம் சர்வத்திரா கூடாமற் போனபோதிலும் ஈசுவரானுக்கிரகமும், குரு கடாட்சமு முண்டானவர்களுக்கு அப்பியாச வயிராக்கியங்களினுல் வெகு சுலபத்தி லுண்டாகும். ஆகையால் வேதாந்த விசாரத்திற் சாதனசதுட்டய சம்பன்னர்களாகியவதிகாரிக ளில்லையென்று பிரமிக்கத் தேவையில்லை. இந்த வியாபாரத்தில் சித்த நிரோதக் கடினத்தையுஞ் சுலபத்தையும் விசாரித்து அப்பியாச வைராக்கியஞ் சம்பாதித்த பூர்வகமாகவே சிரவணுதிகள் பண்ணிச் சித்த நிரோதம் பெற்று, ஆசாரியரால் பரஞானத்தைக் கரதலாமலகம்போற் பெற்றவனெவனே, அவனே கிருத கிருத்தியனுன சீவன்முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணுகமாதிகள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

முப்பத்தெட்டாவது சித்தநிரோத நிரூபகம் முற்றிற்று.

---

முப்பத்தோன்பதாவது

# தேகாத்மவைலட்சண நிரூபகம்.



சங்கை: தேகேந்திரியாதிகளுக்கும் ஆத்மாவுக்கும் பேத லட்சணமாவது யாது?

உத்தரம்: தேகேந்திரியாதிகள் அநித்தியம், அசுத்தம், சடரூபம், துக்கரூபம், திரியம், சவிகாரம், நாநாரூபம், சாபேட்சை, அப்பிரகாசம், பரிச்சின்னம், சகம்பம், ஆதேயம், சாவயவம், ஆதி யந்த சகிதம், சுசாதி விசாதி சுகதபேத சகிதம், காரியம், குணம் என்று சொல்லப்படும். ஆத்மாவோவென்றுல் நித்தியம், சுத்தம், சித்ரூபம், சுகரூபம், திருக்கு, நிர்விகாரம், ஏகரூபம், நிராபேட்சை, பிரகாசம், அபரிச்சின்னம், நிஷ்கம்பமும், ஆதாரம், நிரவயவம், ஆதி யந்த ரகிதம், சுசாதி விசாதி சுகதபேத ரகிதம், காரணம், நிர்க்குணம் என்று சொல்லப்படும். இந்தப் பிரகாரமாகத் தேகேந்திரியாதிகளுக்கும் ஆத்மாவுக்குமுள்ள வைலட்சணங்களை ஸ்ரீசற்குரு முன்னிலையில் நிரைநிரையாய் யூகபுத்தியினுல் நன்ருய் விசாரித்தறிந்தவனெவனே, அவனே சீவன் முத்தனென்றும், திடப்பிரக்ஞனென்றும் சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணுகமாதிகள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

முப்பத்தொன்பதாவது தேகாத்மவைலட்சண நிரூபகம் முற்றிற்று.

---

ஆவாரகமான வஞ்ஞானமே காரண சரீரமென்று சொல்லப்படும். இதற்கே யானந்தமயகோச மென்று பெயர்.

ச. ஆனந்த மய கோசமாவது யாது?

உ. பிரிய மோதப் பிரமோத விர்த்திமத்தும் அந்தக்கரண வுபசர்ச்சனமும் ஆகிய விவையே ஆனந்தமயகோச மென்னப்படும்.

ச. பிரிய மோதப் பிரமோத விர்த்தியாவது யாது?

உ. இஷ்டமான வஸ்துவைப் பார்த்த மாத்திரத்தில் வந்த சந்தோஷமே பிரியம்; அவ்வஸ்து லபித்த பின்பு வருகிற சந்தோஷமே மோதம்; அவ்வஸ்துவை யனுபவித்த பின்பு வருகிற சந்தோஷமே பிரமோதமாம்.

ச. அஞ்ஞானத்திற்குப் பாவரூபத்வ மெப்படி?

உ. நான் அஞ்ஞானி, சடன், மோகிதன், அசத்தனென்று சமஸ்த பிராணிகளாலும் அஞ்ஞான மனுபவிக்கப்படுகிற படியினாலிதுவே பாவ ரூபத்வம்.

ச. திரிசியத்துவ மெப்படி?

உ. சடத்துவமும், மோகத்துவமும் நிச்சயிக்கிறபடியினாலும் காரண சரீரமுஞ் சரீர மானதினாலுந் தூல சூட்சமம் போலவே சடமானபடியினாலுங் கட குட்டியாதிகள் போலவே யாத்மாவாக மாட்டாத படியினாலும் நானஞ்ஞானி, என் அஞ்ஞான மென்னை வாதிக்கின்றது, என் அஞ்ஞானம் முன் பின் தோற்றமற் பண்ணுகின்றதென்று சாட்சியினாலறியப் படுகிறபடியினாலும் இவ்வஞ்ஞானத்திற்குந் திரிசியத்துவமுங் கூடும். இப்படிச் சொல்லப்பட்ட யுத்தியினாற் பஞ்சகோச சரீரத்திற்கு அனாத்மத்வஞ் சித்தித்தது. இந்தச் சரீரத் திரயத்திற்கும் விலட்சணமாகிய பிரத்தியேகாத்மாவே தானென்று முமூட்சுக்கள் நிச்சயித்துக்கொள்ளத் தக்கது. பஞ்ச கோசாத்மகமாகிய சரீரத்திரயத்துக்கு ஆத்மத்வங் கூடாத படியினால் தேகேந்திரியாதி விலட்சணமாகிய ஆத்மாவே நானென்று ஸ்ரீ சற்குரு சந்நிதானத்தில் எவன் சந்தேக விபரீதமின்றி விசாரித் தறிகிறானோ, அவனே ஜீவன்முத்தனுஞ் சகல சாஸ்திர சம்பன்னனுமென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாதிகமாதிகள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

நாற்பதாவது ஆத்மானாத்ம நிருபகம் முற்றிற்று.

---

நாற்பத்தோராவது

# அவஸ்தாத்திரய நிரூபகம்.

சங்கை: அவஸ்தாத்திரயமாவது யாது?

உத்தரம்: சாக்கிர சொப்பன சுழுத்தி என்று மூன்றுவிதம்.

ச. சாக்கிரமாவது யாது?

உ. சுரோத்திராதி யிந்திரியங்களினாற் சத்தாதி விஷயஞான மெந்தமட்டும் வருகின்றதோ, அந்தமட்டுஞ் சாக்கிராவஸ்தை. இவ்வவஸ்தையில் தூல சரீரத்தில் அபிமானிக்கப்பட்ட ஆத்மாவை விசுவன், வியவகாரிகன், சிதாபாசன், என்று சொல்லப்படும்.

ச. இம்மூன்று பெயர் எப்படி வந்தது ?

உ. சமஸ்தத்தையும் அபிமானிக்கின்றபடியினால் விசுவனென்றும், சமஸ்த விவகாரமும் பண்ணுகிறபடியால் விவகாரிகனென்றும், சித்துப்போலவே தோற்றப்பட்டுச் சித்துலட்சண மில்லாதபடியினால் சிதாபாசனென்றும் பேர்வந்தது. இந்தத் தூலசரீரமுஞ் சமஷ்டி வியஷ்டி பேதத்தினு லிரண்டுவிதம்.

ச. அதெப்படி ?

உ. சாக்கிராவஸ்தையில் தூலசரீர சமஷ்டியில் அபிமானிக்கப்பட்ட வாத்மாவை விராட்டு வைசுவானரன் வைராஜசன் என்று சொல்லப்படும்.

ச. இம்மூன்றுபெய ரெப்படி வந்தது ?

உ. நானாவிதமாய்த் தோற்றுகிறபடியால் விராட் டென்றும், சமஸ்த பிராணிகளிடத்திலும் நானென் றபிமானஞ் செய்வதினால் வைசுவானரனென்றும், விசேஷமாய்த் தோற்றுவிப்பதால் வைராஜசனென்றும் பேர் வந்தது.

ச. சொப்பனமாவது யாது ?

உ. சாக்கிர வாசனையாற் பிறக்கப்பட்ட விஷயத்துடன் கூடின ஞானமே சொப்பன வவஸ்தை. இவ் வவஸ்தையில் சூட்சும சரீரத்தி லபிமானிக்கப்பட்ட ஆத்மாவைத் தைசதன் பிராதிபாதிகன் சொப்பன கற்பிதனென்று சொல்லப்படும்.

ச. இம்மூன்று பெய ரேன் வந்தது ?

உ. தேஜோ மயமான அந்தக்கரண விருத்தியுடன் கூடிக்கொண் டிருப்பதால் தைஜசனென்றும், தோற்றுகின்ற காலத்தில் மாத்திர மிருப்பதால் பிராதிபாதிக னென்றும், அஞ்ஞான காரியமான நித்திரா சத்தியினாற் கற்பிக்கப்பட்டுச் சொப்பனத்தை யபிமானித்தபடியினால் சொப்பன கற்பிதனென்றும் பெயர் வந்தது. இந்தச் சூட்சும சரீரமும் சமஷ்டி வியஷ்டி பேதத்தினு லிரண்டுவிதம்.

ச. அதெப்படி ?

உ. சொப்பன வஸ்தையில் சமஷ்டி சூட்சுமசரீரத்தில் அபிமானிக்கப்பட்ட ஆத்மாவை இரணியகர்ப்பன், சூத்திராத்மா, பிராணன் என்றுசொல்லப்படும்.

ச. இம்மூன்று பெயர் ஏன் வந்தது ?

உ. ஞானசத்தி யுண்டாயிருப்பதால் இரணிய கர்ப்பனென்றும், நானாவித மணியினிடத்தில் சூத்திரங் கோத்ததுபோல நானாவித பிரபஞ்சங்களிலும் அனுசூதனா யிருப்பதால் சூத்திராத்மா வென்றும், கிரியா சத்தியுடன் கூடியிருப்பதினால் பிராணனென்றும் பெயர் வந்தது.

ச. இனிச் சுழுத்தியாவது யாது ?

உ. சமஸ்த விஷய ஞானங்களு மில்லாதிருக்கின்ற தெதுவோ அதுவே சுழுத்தி யவஸ்தை. இவ்வவஸ்தையில் காரண சரீரத்தில் அபிமானிக்கப்

பட்ட ஆத்மாவைப் பிராஞ்ஞன், பாரமார்த்திகன், அவிச்சின்னனென்று சொல்லப்படும்.

ச. இம்மூன்று பெயர் ஏன் வந்தது?

உ. சொப்பிரகாச சொரூபனாகையால் பிராஞ்ஞனென்றும், அவஸ்தாத்திரயத்தில் அனுசூதனா யிருக்கிறபடியால் பாரமார்த்திக னென்றும், தேகேந்திரியாதி யுபாதியினாற் பரிச்சின்னனானபடியால் அவிச்சின்னனென்றும் பேர் வந்தது. இந்தக் காரண சரீரமுஞ் சமஷ்டி வியஷ்டி பேதத்தினா லிரண்டுவிதம்.

ச. அதெப்படி?

உ. சுழுத்தி யவஸ்தையில் சமஷ்டி காரண சரீரத்தில் அபிமானிக்கப்பட்ட ஆத்மாவை ஈசுவரன் அந்தரியாமி அவ்வியாகிருதன் என்று சொல்லப்படும்.

ச. இம்மூன்று பெயர் ஏன் வந்தது?

உ. சமஸ்த பிராணிகளையுஞ் சிருஷ்டிக்கிறபடியினால் ஈசுவரனென்றும், சமஸ்த பிராணிக ளிருதயத்தி லிருந்து பிரேரிப்பிக்கிறபடியினாலந்தரியாமி யென்றும், நாம ரூப ரகிதமா யிருக்கிறபடியால் அவ்வியாகிருதனென்றும் பேர் வந்தது. இதுவே வியட்டி சமட்டி சாக்கிர சொப்பன சுழுத்தி யவஸ்தாத்திரயங்களும் அபிமானங்களுமாம்.

ச. இந்தச் சரீரத்திரயங்களுக் கன்னியமாய் முப்பத்தாறு தத்துவங்க ளிருக்க, அவைகளைச் சொல்லாமற் சரீரத்திரயங்களைமாத்திரஞ் சொன்னதின் காரணம் என்னை?

உ. அந்த முப்பத்தாறு தத்துவங்களும் இந்தச் சரீரத் திரயத்தில் அந்தர்ப் பூதமா யிருக்கிறபடியினால், இவைகளைச் சொன்னபோதே அந்தத் தத்துவங்களையுஞ் சொன்னதாயிற்று.

ச. ஆயினும் முப்பத்தாறு தத்துவங்களாவன யாவை?

உ. ஆகாசாதி பூத மைந்தும், சத்தாதி விஷய மைந்தும், சுரோத்திராதி ஞானேந்திரிய மைந்தும், வாக்காதி கன்மேந்திரிய மைந்தும், பிராணாதி வாயுக்கள் பத்தும், மனாதி நான்கும், அஞ்ஞான மொன்றும், பகுவிய ஜீவனொன்றும் கூடினது முப்பத்தாறு தத்துவங்களென்று சொல்லப்படும். இந்தத் தத்துவங்களுக் கெல்லாம் அன்னியமாய் விளங்குவது ஜகத் காரண பூதமாகிய பரமாத்மாவான பரப்பிரமமென்று சொல்லப்படும்.

இந்த முப்பத்தாறு தத்துவமு மிருபத்து நான்கு தத்துவத்தில் அந்தர்ப் பூதமென்று நிச்சயித்து இருபத்து நான்கு தத்துவமென்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. இப்படிச் சொல்லப்பட்ட அவஸ்தாத்திரயங்களையுஞ் சரீரத் திரயங்களையும் ஸ்ரீ சற்குருமுன்னிலையில் விசாரித்து அகண்ட சச்சிதானந்த சொரூபமாகிய பிரத்தியகாத்மாவே நானென்றறிகிறவ னெவனோ, அவனே பிரமவித்தென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமாதிகள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

நாற்பத்தோராவது அவஸ்தாத்திரய நிரூபணம் முற்றிற்று.

நாற்பத்திரண்டாவது

# பிரளயசொரூப நிருபகம்.

---

சங்கை: பிரளய சொரூபமாவது யாது?

உத்தரம்: நித்தியப்பிரளயம், அவாந்தரப்பிரளயம், தினப்பிரளயம், பிரமப்பிரளயம், அத்தியந்தப்பிரளயம் என்றைந்துவிதமா யிருக்கும்.

ச. நித்தியப்பிரளயமாவது யாது?

உ. சமஸ்த பிராணிகளுடைய சுழுத்தியே நித்தியப்பிரளயம்.

ச. அவாந்தரப் பிரளயமாவது யாது?

உ. கிருதயுகம் திரேதாயுகம் துவாபரயுகம் கலியுகம் ஆகிய அவ்வவ் வாதிபத்தியம் வருகிறமட்டும் அவாந்தரப்பிரளயமென்று சொல்லப்படும். பிரமதேவருடைய மத்தியானத்தில் பதினான்கு அவாந்தரப் பிரளயம் வரும். அவைகளுக்கு நைமித்தியப் பிரளயமென்றும், மனுவந்தரப் பிரளயமென்றுஞ் சொல்லப்படும். அதற்குள் யுகப்பிரளயம் அந்தர்ப் பூதமாயிருக்கும்.

ச. தினப்பிரளயமாவது யாது?

உ. பிரமதேவருடைய சுழுத்தியே தினப்பிரளயம்.

ச. பிரமப் பிரளயமாவது யாது?

உ. பிரமதேவருடைய நாச அவஸ்தை. அவ்வவஸ்தையில் ஆகாசாதிப் பிரபஞ்சங்கள் சர்வாத்மனா யில்லை. அஞ்ஞான மாத்திர மிஞ்சி யிருக்கும். அதற்கு மகாப் பிரளயமென்றும், பிராகிருதப் பிரளயமென்றும், மகா சுழுத்தியென்றும் மூன்று பெயர்.

ச. அத்தியந்தப் பிரளயமாவது யாது?

உ. முத்தி; அவ்வவஸ்தையில் அஞ்ஞானஞ் சர்வாத்மனா யில்லை. இப்படிப் பஞ்சப் பிரளயங்களையும் ஸ்ரீ சற்குரு முன்னிலையில் விசாரித்து இவைகளுக்கெல்லாம் ஆதாரமாய் அனுகுதனாய் அசங்கனா யிராநின்ற ஆத்மா வே நானென்று எவனறிகிறானோ, அவனே ஜீவன் முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாதிகள் சொல்லுகின்றன. இதிற் சம்சயமில்லை சித்தம்.

நாற்பத்திரண்டாவது பிரளயசொரூப நிருபகம் முற்றிற்று.

---

நாற்பத்துமூன்றாவது

# வேதாந்தவெதிருத்தமனன நிருபகம்.

---

சங்கை: உலகத்தில் வேதாந்த சாஸ்திர வெதிருத்தர்களாகிய சில வித்துவான்களும், லௌகிகர்களும், சில பாமரர்களும் ஆகிய இவர்கள்: ஆபாச சாஸ்திர புராணாதிகளைக் கேட்டு, அவைகளைச் சத்தியமென் றெண்ணிப் புத்திரர்களுண்டானவர்களுக்கே இகபர சவுக்கிய முண்டென்றும், புத்திர ரில்லாதவர்களுக்கு இக

லோக பரலோக துக்க முண்டென்றுஞ் சொல்லியிருக்கிறார்கள். அதை யதார்த்தமென் றெண்ணிப் பிரமை கொண்டவர்களுடைய பிராந்தி நீங்கும்படி புத்திரர் உண்டானவர்களுக்கே யதிக துக்கமென்று சொன்ன பிரபல சுருதி வாக்கியங்களை விசாரித்து முமுட்சுவானவர்கள் அந்தப் புத்திராதியரிடத்திற் பிரியங்களை விட்டுவிட்டு, ஆத்ம சொரூபமாகிய தன்னிடத்திலேயே பரமப் பிரீதியாய்ச் சதா நிஷ்டரா யிருக்கவேண்டுமென்று பெரியோர் சொல்லுகிறபடியினால் புத்திரர் உண்டானவர்களுக் கதிக துக்க மென்ப தெப்படி?

உத்தரம்: புத்திரனில்லாத தாய் தந்தைகள் புத்திர சோகங்கொண்டு சாஸ்திரிகளை யழைத்து, சுவாமீ, எங்களுக்குப் புத்திரனில்லாமையாற் கதியில்லையென்று புராணாதிகளிற் சொல்லுகின்றதே. அந்தத் தோஷம் நீங்கப் புத்திரனுண்டாகும் வகை சொல்லவேண்டுமென்று கேட்க, அவர்களும் சந்தோஷகரமாய் நீங்கள் புண்ணிய தீர்த்த யாத்திராதி விரதாதிகளை யனுஷ்டித்தீர்களானால் உங்களுடைய பாவ நீங்கிப் புத்திரோற்சவ முண்டாகுமென்று சொல்ல, அந்தப்படியே தீர்த்தயாத்திரை முதலிய விரதாதிகளைப் பிரயாசை வகித்து வெகுநாள் அனுஷ்டித்தும் புத்திர னுண்டாகாமையினாலுந் துக்கம்; அப்படியிருக்கத் தெய்வகதியாய் ஒருகாலத்திற் கர்ப்பமுண்டாய் அதுவுங் கர்ம்ம சம்பந்தத்தினாற் சேதப்பட அதனாலுந் துக்கமே; திரும்பவுந் தெய்வ கதியாய்க் கர்ப்பந் தரித்துப் பத்து மாதஞ் சென்றபிறகு பிரசவ காலத்திலுந் துக்கம்; பிரசவித்த பிறகு மந்திராதி ஔஷதாதி தேவதாதிப் பிரார்த்தனைகளினாலுந் துக்கப்பட்டவர்களாய்ப் புத்திராபேட்சையினாற் பிராணஹானி யெங்கே நேரிடுகிறதோவென்று தாபப்படுவதினாலுந் துக்கம்; மாந்தம் சுரம் பட்சி தோஷமுண்டாதலினாலும் சதா துக்கம்; இவைகளுக்கெல்லாந் தப்பிப் பிழைத்தால் வித்தியாப்பியாசாதிகளினால் துக்கம்; அப்படி வித்தை வந்தபின்னும் விஷய விச்சை சம்பந்தாதி துர் நடத்தைகளினால் அதிக துக்கம். பின்னும் விவாக காரியாதி செலவுகளினாலும் அப்படி விவாகமாகிக் குழந்தைக ளதிகரித்துத் தரித்திரப்படுவதினாலுந் துக்கம்; ஒருவேளை தரித்திரம் நீங்கி ஐசுவரியம் வந்தகாலத்திலும் இந்தப் புத்திரர்களுடைய ஐசுவரிய ஆரோக்கிய சம்பத்தைக் கூடவிருந் தனுபவியாமல் தாய் தந்தைகளாகிய நாம் செத்துப்போகிறோமே யென்பதில் அதிக துக்கம்; இந்தப் பிரகாரம் புத்திரர்க ளுண்டானவர்களுக்குச் சர்வதா துக்கமே யன்றி, அந்தப் புத்திரர்களா லிகலோக பரலோக சவுக்கியம் எள்ளளவுமில்லை.

இது வீணான பிராந்தி யென்று நன்றாய் விசாரித்து முமுட்சுவானவர்கள் புத்திர களத்திராதிகளிடத்தி லிருக்கும் பிரியமோதப் பிரியத்தைச் சர்வாத்மனாய் விட்டுவிட்டு, அருளே திருமேனியாகிய ஆசிரியர் முன்னிலையில் விவேகித்துச் சர்வதா ஆத்ம சொரூபமாகிய தன்னிடத்தில் பரமப் பிரீதிவைத்துச் சதா நிஷ்டரா யிருக்கவேண்டு மென்கிற வேதாந்த சித்தாந்தத்தைத் தெளிந்தவனெவனோ, அவனே மெய்ஞ்ஞானியென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாதிகளிற் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

நாற்பத்துமூன்றாவது வேதாந்த வெதிருத்தமனனிருபணம் முற்றிற்று.

நாற்பத்துநான்காவது

# பிரியத்துவநிரூபகம்.



சங்கை: பிரியத்துவமாவது யாது ?

உத்தரம்: திரவியமே பிரியத்துவம்; அந்தத் திரவியத்திலும் புத்திரனே பிரியம்.

ச. அதெப்படி ?

உ. புத்திரன் ஓர் குற்றஞ் செய்ய நேரிட்டு அவனை ராஜன் தண்டனை பண்ணத் தொடங்கினால் அதற்கு எவ்வளவு திரவியஞ் செலவானபோதிலும் முன் பின் பாராமற் செலவழித்துப் புத்திரனை விடுவிக்கிறபடியினால் திரவியத்திலும் புத்திரனே பிரிய வஸ்துவாகும். இந்தப் புத்திரனிலுந் தனது சரீரமே பிரியம்.

ச. அதெப்படி ?

உ. புத்திரன் செய்த குற்றத்துக்கு இராஜன் தகப்பனைப் பிடித்துத் தெண்டிக்கத் தொடங்கினால், புத்திரனைக் காட்டிக்கொடுத்து, எனக்கும் அவனுக்குஞ் சம்பந்தமில்லையென்று தகப்பன் தப்பித்துக்கொள்ளுகிறபடியினால், புத்திரனிலுந் தன் சரீரமே பிரியமாகும். அந்தச் சரீரத்திலும் இந்திரியமே பிரியம்.

ச. அதெப்படி ?

உ. ஒருபுருஷன் ஒரு தகாத காரியஞ் செய்ய அதற்கு இராஜன் கண் காது மூக்குகளை யறுக்கத் தொடங்கினால், அப்போது தன் அங்கத்தி லேதாவதறுக்கக் கொடுத்து இந்திரியங்களைக் காத்துக்கொள்ளுகிற படியினால், சரீரத்தினு மிந்திரியமே பிரியமாகும். இவ்விந்திரியத்திலும் பிராணனே பிரியம்.

ச. அதெப்படி ?

உ. ஒரு புருஷன் குற்றஞ் செய்து அவனை யரசன் பிராணச்சேதம் பண்ணத் தொடங்கினால் இந்திரியங்களையாவது கொடுத்துப் பிராணன் தப்பித்துக் கொள்ளுமாறு செய்கிறபடியால், இந்திரியத்திலும் பிராணனே பிரிய மாகும். இந்தப் பிராணனிலும் ஆத்மாவே பிரியம்.

ச. அதெப்படி ?

உ. ஒருபுருடன் தான் தேவனாகவேண்டுமென்று பரலோகத்தை யிச்சித்துக் கங்காப் பிரவேசம் பண்ணிப் பிராணனை விடுகிறபடியினால் பிராணனிலும் ஆத்மாவே பிரியமாகும்.

இந்தப்படி ஸ்ரீ சற்குரு சந்நிதானத்தில் நன்றாய் விசாரித்துப் புத்திரமித்திர களத்திராதி தேகேந்திரியப் பிராணாதிகளுந் துக்கசொரூபமென் றறிந்து அவைகளிடத்தி லிருக்கிற பிரியாபிமானங்களை விட்டுவிட்டு, நீங்காப்பிரியத்துவமாகிய ஆத்மாவே தானென்று அவ்வாத்மாவினிடத்தி லெப்போதும் பிரியம் வைத்திருக்கிறவனெவனோ, அவனே ஜீவன் முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமாதிகள் சொல்லுகின்றன. இதிற் சம்சய மில்லை சித்தம்.

நாற்பத்துநான்காவது பிரியத்துவ நிரூபகம் முற்றிற்று.

நாற்பத்தைந்தாவது

# மகாவாக்கிய நிரூபகம்.

---

சங்கை: மகாவாக்கியமாவது யாது ?

உத்தரம்: கூர்மையான புத்திசாதக மிருந்தால் மோட்ச லட்சுமியை யெளிதிற் கூடலாம். உலகத்தில் யாருக்காயினும் பிரயாசை யில்லாமல் புழுதியி லமிழ்ந்து கிடக்கிற மாணிக்க மகப்பட்டால் அதைப் பத்திரம் பண்ணுவார்களே யன்றி லேசாய் விட்டுவிட மாட்டார்கள். எருக்கஞ் செடியில் தேன் குடங் குடமா யகப்பட்டால் காடென்தோறும் போய் வீணாய் அலைந்து திரியமாட்டார்கள், அதுபோல முமுட்சுக்களும் மகாவாக்கியார்த்த விசார ஞானமிருக்கக் கிரியைகளை யபேட்சித்து விருதாவில் அலைந்து திரியமாட்டார்கள்.

ச. அதை விசாரிக்கு முறைமை யெப்படி ?

உ. அநேக ஜன்மாந்தரங்களி லீசுவரார்ப்பணமாகச் செய்யப்பட்ட நித்திய நைமித்திய கன்மங்களினாலும் சகுணோபாசனையினாலும் சித்த சுத்தி யுண்டாகி மனுஷலோகமுதல் பிரமலோக பரியந்தமான சர்வமும் அநித்தியமென்றுந் துக்கமென்று மறிந்து, இந்தச் சனன மரண துக்கமான சம்சாரத்திற்குப் பயந்து நித்தியா நித்திய வஸ்து விவேகம், இகமுத்திரார்த்த பலபோகவிராகம், சமாதிஷட்க சம்பத்தி, முமுட்சுத்வம் என்கிற சாதன சதுஷ்டயமும் இயற்கையி லுண்டானவனாய், இந்தத் தேகத்திலே தானே பிரயாசையில்லாமல் முத்திகாந்தையைக் கூடுகிற மார்க்கமிருக்க, நாம் விருதாவாகப் பத்தி வயிராக்கிய கன்மக் குழிகளில் விழுந்து, ஏன் இளைத்துப் போகவேண்டும் ? தேகம் விழுந்து போனபிறகு முத்தி யுண்டாகுமென்பதிற் பிரமாணம் காணோமே; இந்தச் சரீரத்திலேதானே முத்திச் சுகத்தைக் காணும்வழி சொல்லமாட்டாமல், இறந்துபோன பின்பு முத்தி யுண்டென்று சொல்லுகிற ஆசாரியர்களை நம்புகிறவர்கள் சம்சார சமுத்திரத்தை யெப்படிக் கடக்கப்போகிறார்களோ வென யோசித்து ஞானதிருஷ்டியினா லகங்காரத்தை வேறுபடுத்தி அத்தக்ஷணமே பிரம சுகத்தை யபரோட்சமா யனுபவிக்கச் செய்யும் சற்குரு சேவையினால் இந்தச் சம்சார துக்க நீங்குமென்பதிற் சந்தேகமில்லை யென்று சிந்தித்துக்கொண்டு, சம்சாரத்தி லிருந்தும் இல்லாமல் விடுபட்டவரும் ஞான வயிராக்கிய முடையவரும், பிரமானந்தானுபவத்தில் ரமித்திருக்கிறவரும், காமக் குரோதாதி யற்றவரும், தானென்று ஈசுவரனென்றென்கிற துவைத பாவ மில்லாதவரும், விதி மார்க்கமாய்க் கோடானுகோடி சற்கன்மங்கள் பண்ணுகிறவரும், அப்படிச் செய்தபோதும் அவற்றிற் பற்றின்றி யிருப்பவரும், ஒருக்காலுஞ் சொரூப ஸ்திதியை மறவாதவரும், அந்தரங்க மக்கினரும், நினைப்பு மறப்பில்லாதவரும், எப்படிப்பட்ட அபக்குவர்களையும் ஒரு நிமிஷமாத்திரத்தில் தமது சந்நிதான விசேஷத்தினால் பரிபக்குவப்படுத்திப் பரஞானத்தைக் கொடுத்தருள்பவருமான ஞானாசிரிய ரெங்கே எழுந்தருளி யிருக்கின்றாரோ வென்றுந் தேட்டமுடன் அகத்தில் விரத்தியையும், புறத்தில் ஆராதனைக்குரிய பத்திர புஷ்பாதி வஸ்துக்களையுங் கைப்பற்றிக்கொண்டு, காடு நாடு மலை குகை

முதலிய ஸ்தானங்களெல்லாஞ் சுற்றித் திரிந்து ஓரிடத்தில் சமஸ்த வேதாந்த சாஸ்திர பூரணக்கியரும், சொப்பிரகாச ஆனந்தமே திருமேனியா யெழுந்தருளி விளங்கப்பட்ட அநுபவ சிகாமணியுமாகிய ஸ்ரீ சற்குருவைக்கண்டு சரணாகதியென் றடைந்து, அடியற்ற மரம்போல் விழுந்து ஏகாங்கத் திரியாங்க பஞ்சாங்க அஷ்டாங்க நமஸ்காரங்கள் செய்து, ஆனந்தபரவசனா யெழுந்துநின்று, கைகட்டி வாய் பொத்திக்கொண்டு, சைதன்யம், சாசுவதம், சாந்தம்; வியோமாதீதம், நிரஞ்சனம், நாதபிந்துகளாதீதம், தஸ்மை ஸ்ரீகுரவே நமா என்று பலவாறாகத் துதித்து, ஓ சுவாமீ ! கிருபாநிதீ ! அடியேன் சம்சார பந்தத்தி லுண்டான தாபத்திரயங்களினின்று நீங்கி, இந்தச் சரீரத்தில்தானே பிறப்பிறப்பில்லாத மோட்சானந்தத்தைப் பெறும்படி அநுக்கிரகஞ் செய்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தான். அதுகேட்டு அவ்வாசிரியரும் கிருபை கூர்ந்து அப்படியே நல்லதென்று அபயாஸ்தங் கொடுத்து, அவனையாதரித்துச் சிலகாலந் தமது சந்நிதானத்தி லிருக்கும்படி செய்தருளிப் பிற்பாடு ஆலசியன், நிஷ்டூரன், குருசேவை வஞ்சகன், ஸ்தம்பனமாதி மாரண மந்தமான அஷ்டவித கர்மங்களைச் செய்கின்றவன், விஷயாசத்தி யுடையவன், பாஷாண்ட மதஸ்தன், சோம்பன், பொய்யன், ஞானசோரன், சாரவிசாரன், கோபன், மூர்க்கன், டம்பன், கோளன், காமுகன், சித்தசுத்தியில்லாதவன், அநாசாரன் ஆகிய இவர்களைத் தள்ளி ஞான வயிராக்கிய யுக்தன், சீவபாவ மில்லாதவன், சித்தசுத்தி யுடையவன், ஆசாரன், சத்தியன், திடவிரதன், குருபத்தி யுள்ளவன் ஆகிய இவர்களுக்கே யுபதேசிக்கவேண்டு மென்றும், அனதிகாரிகளும் மோட்ச விச்சையுண்டாய் வருவார்களானால், அவர்களையும் தமது சந்நிதான விசேஷத்தினால் லோகத்தைப் பொன்னாகச் செய்கின்ற பரிசனவேதி போலக் கிருபாலோசனத்தினால் தரிசனவேதி செய்து பரிபாகப்படுத்தி மந்திர பாவ தியான யோகங்களினா லவர்கள் சித்தத்தை நிருமலம் பண்ணி, அத்தியாரோப அபவாத யுக்திகளையும் அதத்துவாவிருத்தி லட்சணை, தடஸ்தலட்சணை, சொரூபலட்சணையாகிய லட்சணாத் திரயங்களையுங் கிரமமாக வெளித்துப் போதித்து, தேகாதி யநாத்ம புத்தியை நேதிபண்ணி, நீயே பரப்பிரமமென் றுள்ளபடி சகல சம்சயமு மறக் குருசம்பிரதாயக் கிரமத்தினால் சொரூப ஞானத்தைத் தெரிவிக்கவேண்டு மென்றும் சொல்லுகின்ற வுபதேசக் கிரம விதிப்படித் தம்மை யடுத்த சீடனது பக்குவத்தைத் தினே தினே பரீக்ஷித்து அதிதீவிர பக்குவனென் றறிந்து உத்தேசம், இலட்சணம், பரிசோதனையோடுங் கூடிய மகா வாக்கியத்தை யநுக்கிரகஞ்செய்யும்படி திருவுளங்கொண்டு, அவனது சஞ்சித கன்மமெல்லாம் அடியோ டறும்படி ஆமைபோற் றிருவுளத்திற் சிந்தித்து, ஆகாமிய கன்மமெல்லா நீங்கும்படி மீனைப்போற் கிருபாதிருஷ்டி வைத்து, பிராரத்த கன்மமும் பிரமானந்த ரசமாய் ரமிக்கும்படி பறவைபோல் அஸ்த மஸ்தக சையோகஞ் செய்து, பஸ்ம கவசமிட்டு, விதி நிஷேத ரகிதமாகிய சாமவேத மகா வாக்கியார்த்தத்தை யுபதேசஞ் செய்தருளினார்.

சீ. அத்தியாரோபமாவது யாது?

உ. ரச்சு, சுத்திகை, ஸ்தாணுவாதியில் கிரமத்தி லில்லாத சர்ப்ப ரஜித சோராதி கற்பிதம்போற் சத்ரூபப் பிரமத்தி லில்லாத மாயாப்பிரபஞ்ச கற்பிதமே அத்தியாரோபம்.

ச. அபவாதமாவது யாது?

உ. இது சர்ப்ப மல்ல, ரச்சுவே; இது ரசித மல்ல, ஸிளிஞ்சலே; இது சோரனல்ல, ஸ்தாணுவேயென் றறிவிப்பதுபோலும்; ஒருவிருக்ஷத்தில் இலை, பூ, பிஞ்சு, காய், பழம், பட்டை, நார், வேர், கிளை, கொம்புகளாகிய இவைகள் பேதமானாலும் காரணமாகிய வித்து ஒன்றேயென் றறிவிப்பதுபோலும் இது பிரபஞ்ச மல்ல, பிரமமேயென் றறிவிப்பது அபவாதமாகும்.

ச. அதத்துவாவிருத்தி லட்சணையாவது யாது?

உ. தேகாதி யனாத்ம வர்க்கங்களை யுத்தியினால் நேதி பண்ணி, நின்ற ஆத்மாவை யறிவிப்பதே அதத்துவாவிருத்தி லட்சணை.

ச. தடஸ்த லட்சணையாவது யாது?

உ. விருட்சத்தின்மேல் சந்திர னிருப்பானென்பதுபோலப் பூதாதி ஜகத் காரணங்கொண்டு ஆத்மாவை யறிவிப்பதே தடஸ்த லட்சணை.

ச. சொரூப லட்சணையாவது யாது?

உ. பிரகாச சொரூபமே சூரியனென்பதுபோல ஆத்மாவி னிஜசொரூபத்தை யறிவிப்பதே சொரூப லட்சணை. இதுவுமல்லாமல் அந்த மகாவாக்கி யார்த்த விசாரத்தினாலுண்டாகிற கூடஸ்த பிரமாயிக்யஞானமேமோட்ச மென்று சகல வேதாந்த சாஸ்திரங்களும் சொல்லுகின்றன. பெரியோர் களுடைய அனுபவமும் நமது சுவானுபவமும் அதுவேயாகும்.

ச. ஆனால் அடியேனுக்கு அந்த மகாவாக்கியத்தை யுபதேசித்துக் கூடஸ்த பிரமாயிக்ய ஞானத்தையும் நன்றாய்ச் சம்சய விபரீத மறும்படி யனுக்கிரகஞ் செய்தருளவேண்டும். அதற்கு மகா வாக்கிய மென்கிற சிலாக்கிய மேன் வந்தது?

உ. வேதத்தில் விதி வாக்கியம், நிஷேத வாக்கியம், அவாந்தர வாக்கியம், ஆப்த வாக்கியம் என்று சொல்லப்படுகிற வாக்கியசதுஷ்டயத்தில் ஆப்த வாக்கியம் அவாங் மனோகோசரமா யிருக்கிற சைதன்ய வஸ்துவைக் கரதலாமலகம்போற் காட்டுகிறபடியினால் அதற்கு மகா வாக்கியமென்று பேராயிற்று.

ச. மற்ற மூன்றில் விதிவாக்கியமாவது யாது?

உ. பிராமணனைக் குறித்துக் காலை மாலைகளில் அனுஷ்டான சந்தியாவந்தனைகளும், மரணபரியந்தம் அக்கினிஹோத்திரமும் பண்ணவேண்டு மென்கிறது விதிவாக்கியம்.

ச. நிஷேதவாக்கியமாவது யாது?

உ. சுராபானாதிகளைப் பண்ணக் கூடாததென்கிறது நிஷேதவாக்கியம்.

ச. அவாந்தர வாக்கியமாவது யாது?

உ. ஜோதிஷ்டோமாதிகளைப் பண்ணினால் சீவனுக்குச் சொர்க்காதி பல னுண்டாகுமென்றது அவாந்தர வாக்கியம்.

ச. காண்டத்திரயமென்பன யாவை?

உ. கன்மம், உபாசனை, ஞானங்களாம்.

ச. கன்ம காண்டமாவது யாது?

உ. வேத புருஷனுடைய நாபிக்குக் கீழ்ச் சொர்க்க லோகபரியந்தங் கன்ம காண்டம்.

ச. உபாசனா காண்டமாவது யாது?

உ. வேத புருஷனுடைய நாபிக்குமேல் கழுத்துக்குக் கீழ்ப் பிரமலோக பரியந்தம் உபாசனா காண்டம்.

ச. ஞானகாண்டமாவது யாது?

உ. வேத புருஷனுடைய கழுத்துக்குமேல் சிரசுபரியந்தம் ஞானகாண்டம்; அந்த ஞான காண்டத்தில் இந்தத் தத்துவமசி யென்னு மகாவாக்கிய மானது நாலு வர்ணமும், மூன்று பதமும், மூன்று பதார்த்தமும், மூன்று லட்சணையுமாக விளங்கும்.

ச. நாலு வர்ணங்களாவன யாவை?

உ. சத்தியம், ஞானம், அனந்தம், ஆனந்தம் என்பவைகளாம்.

ச. மூன்று பதங்களாவன யாவை?

உ. தத்பதம், துவம்பதம், அசிபதம் என்பவைகளாம்.

ச. மூன்று பதார்த்தங்களாவன யாவை?

உ. அது, நீ, ஆனாய் என்பவைகளாம். இவற்றுள் அது வென்பது பரம் நீ என்பது ஜீவன், ஆனா யென்பது சிவம்.

ச. மூன்று லட்சணைகளாவன யாவை?

உ. விட்டலட்சணை, விடாதலட்சணை, விட்டுவிடாதலட்சணை என்பவை யாம். இதற்குச் சங்சர்க்க வாக்கியம், விசிட்ட வாக்கியம், அகண்ட வாக்கியமென்று சொல்லப்படும். இப்படிச் சொல்லப்பட்ட வேதாந்த சித்தாந்தத்திற்குத் தத்துவம் இருபத்தெட்டாகும். அசித்துருவமாகிய தத்துவம் இருபத்துநான்கும் ஐகமாகவும், சித்துருவமாகிய தத்துவம் நான்கில் புருடன் காலபரம் வியோமம் ஆகிய மூன்றும் ஜீவனாகவும், பரம் ஒன்றும் பரமாகவும் விளங்கும். இதுவுமல்லாமல் மேற்சொல்லிய சத்தியம் பரமாகவும், ஞானம் ஜீவனாகவும், அனந்தம் சராசரமாகவும், ஆனந்தம் சகல புவனமாகவும் விளங்கும். நீ யென்னும் பதத்திற்கு அப ரோட்சமாகிய காரியவுபாதி எ, அது வென்னும் பதத்திற்குப் பரோட்ச மாகிய காரணவுபாதி எ, அவத்தை கூ, அபிமானி கூ, முக்கிய விலக் கியம் உ, அசுத்த சுத்தம் உ இவை சிரவண மனன நிதித்தியாசனமாகிய மூவகையினால் விளங்கும்.

ச. அதெப்படி?

உ. சற்குரு சந்நிதானத்தில் வேதாந்த சாஸ்திரார்த்தங்களை யையந் திரிபறக் கேட்டறிவது சிரவணமென்றும், அங்ஙனங் கேட்ட சிரவணார்த்தத்தி னால் உபாதியை யன்னியப் படுத்தி அவத்தையை யநித்தியமாக்கிச்

சொரூப நிச்சயஞ்செய்து, அதை மனத்திற் சிந்தித்துத் தரிப்பதே மனன மென்றும், அங்ஙன மனனஞ் செய்த பொருளைச் சுவானுபூதியிற் காட்சிப்படுத்துவதே நிதித்தியாசனமென்றும் சொல்லப்படும். இந்தச் சிரவணாதிகளினால்தான் அந்தப் பொருள் விளங்கும்.

ச. அதெப்படி?

உ. சிரவணமானது காரிய காரண வுபாதிகளை நீக்கி, சீவன் இது, பரன் இது வெனக் கேள்வியினாற் றரிசிக்கப்பண்ணும்.

ச. அஃதெவ்வாறு?

உ. காரிய வுபாதி யென்பது சீவவுபாதி; அதற்கு வாக்கியம் சங்சர்க்க வாக்கியமென்று சொல்லப்படும்.

ச. அதெப்படி?

உ. மஞ்சாக் குரோசந்தி கங்காயாம் கோஷப் பிரதிவசதி என்பது.

ச. அதற் கர்த்தம் யாது?

உ. மஞ்சங் கூப்பிடுகிறதென்றும், கங்கை சத்திக்கிறதென்றுஞ் சொல்வது. அப்படிச் சொல்லுமிடத்து மஞ்சம் சடம்; அது கூப்பிடுமோ? கூப்பிட வறியாது. மஞ்சத்தினு ளொரு புருஷ னிருந்து கூப்பிடுகிறா னென்றறிய வேண்டியது. கங்கையாவது ஜலம். அது சட மாதலால் கோஷிக்க வறியாது. அதன் கடையி லிடைச்சேரி யிருக்கிறதென்று கொள்ள வேண்டியது. இதுபோ லேழுஉபாதிக்குஞ் சீவனே சாட்சியாய் நின்று சேட்டிப்பிக் கிறானென் றறியவேண்டியது. இது விட்டலட்சணை.

ச. காரண வுபாதியாவது யாது?

உ. காரண வுபாதி யென்பது பர வுபாதி; இதற்கு வாக்கியம் விசிட்ட வாக்கியமென்று சொல்லப்படும்.

ச. அதெப்படி?

உ. சுரோணத் திஷ்டதி சுவேதோ தாவதி என்பது.

ச. அதற் கர்த்தம் யாது?

உ. ஒரு சிவப்புக் குதிரையையும், வெள்ளைப் பசுவையுங் கண்டாயோ வென்பது. அப்படிச் சொல்லுமிடத்துச் சிவப்பு நிற்கிறது, வெள்ளை போகிறதென்றால், சிவப்பு நிறம் வேறுபட்டுக் குதிரையை யன்றித் தனியே நில்லாது; வெள்ளைநிறம் வேறு பட்டுப் பசுவையன்றித் தனியே போகாது. ஆதலால் சிவப்பு நிறமுள்ள குதிரை நிற்கிற தென்றும், வெள்ளை நிற முள்ள பசு போகிறதென்றுங் கொள்ளவேண்டும். இது போலச் சர்வஞ்ஞத்வாதி காரணோபாதியாகிய துரியத்தை விடாமல் பரனே சாட்சியாய் நின்று சீவனும் பரனு மன்னிய மாகாமல் மகா மாயையினால் அன்னியோன்னிய ஏகமா யிருக்கிறானென் றறியவேண்டியது. இது விடாத லட்சணை.

ச. அசிபதமாவது யாது?

உ. மனனத்தி லற்ற விருவகைப் பொருளையுங் காட்சியி லயிக்கியம் பண்ணுவதே அசிபதம். இதற்கு அகண்ட வாக்கியமென்று சொல்லப்படும்.

ச. அதெப்படி ?

உ. சோயந் தேவதத்தகா வென்பது.

ச. அதற் கர்த்தம் யாது ?

உ. அவனே யிவன், இவனே அவ னென்பது. அப்படிச் சொல்லுமிடத்துச் சர்வ சராசரப் பிரபஞ்சமுந் தன் வடிவாகக் கண்டு விளங்கிய பரன், எல்லாந் தானாய் விளங்குகிறோமென்பது மறந்து, தன்னையு மிழந்து பரமாதீதமா யிருப்பதை யைக்கியமென் றறியவேண்டியது. இது விட்டு விடாத லட்சணை.

ச. நான்கு வேதத்திலும் ஞானகாண்டத்தில் நான்கு உபநிஷத்தி லிருந்து நான்கு மகாவாக்கிய முண்டாயின வென்ப தெப்படி?

உ. இருக்கு வேதத்தில் ஐத்திரேயோபநிஷத்திற் பிரஞ்ஞானம் பிரம மென்னும் வாக்கியமும், யசுர்வேதத்தில் தைத்திரியோபநிஷத்தில் அகம் பிரமாஸ்மி யென்னும் வாக்கியமும், சாமவேதத்தில் சாந்தோக்கிய உபநிஷத்தில் தத்துவமசி யென்னும் வாக்கியமும், அதர்வணவேதத்தில் மாண்டூக்கிய உபநிஷத்தில் அயமாத்மா பிரம மென்னும் வாக்கியமு முண்டாயின. இந்த நான்கு வாக்கியமும் பதினொரு பதங்க ளாயின.

ச. சீவ பரங்களுக்கு ஐக்கியத்தைப் பிரதிபாதிக்கிறதற்கு ஒரு வாக்கியம் போதாதோ ? நான்கு வாக்கியம் யாதுக்கு ?

உ. தத்துவமசி வாக்கியம் குருவின் உபதேச வாக்கியமும், அகம் பிரமாஸ்மி வாக்கியம் சீஷன் அனுபவ வாக்கியமும், பிரஞ்ஞானம் பிரமமென்னும் வாக்கியம் லட்சண வாக்கியமும், அயமாத்மா பிரமமென்னும் வாக்கியம் சாட்சாத்கார வாக்கியமுமாம்.

ச. இவைகளுக் கர்த்த மெப்படி ?

உ. வாக்கியங்களுக்குக் காரணம் பதமும், பதார்த்தமு மாதலால், பூர்வம் சாமானியமாய் விசாரித்திருக்கினும் இன்னும் விசேஷமாக விசாரித்தறிய வேண்டும்.

ச. பதமும், பதார்த்தமுமாவன யாவை ?

உ. தொம்பதம், தத்பதம், அசிபதம் என மூன்று பதங்களாம். தொம்பதார்த்தம் சீவன், தத்பதார்த்தம் ஈசுவரன், அசிபதார்த்தம் அயிக்கம்.

ச. தொம்பதார்த்த பூதமான சீவ சொரூபம் எப்படிப்பட்டது ?

உ. அவித்தையும், அதிஷ்டான சைதன்னியமும், அபஞ்சீகிருத பூத காரிய வியட்டி லிங்க சரீரமும், அதிற் பிரதிபிம்பித்த சிதாபாசனும், சிதாபாச தர்மமான கிஞ்சிக்ஞத்வ கர்த்ருத்வ போக்த்ருத்வாதிகளுங் கூடிச் சீவ சொரூபமென்று சொல்லப்படும்.

ச. தத்பதார்த்த பூதமான பர சொரூபம் எப்படிப்பட்டது ?

உ. மாயையும், அதிஷ்டான சைதன்யமும், அபஞ்சீகிருத பூத காரிய சமட்டி லிங்க சரீரமும், அதிற் பிரதிபிம்பித்த ஈசுவரனும், ஈசுவர தர்மமான சர்வஞ்ஞத்வாதி குணங்களும் கூடி, ஈசுவர சொரூப மென்று சொல்லப்படும்.

ச. அசிபத சொரூபம் எப்படிப்பட்டது ?

உ. கூடஸ்தனே பிரமம், பிரமமே கூடஸ்த னென்று ஐக்கியார்த்தமா யறிவதே அசிபத சொரூபமென்று சொல்லப்படும்.

ச. கிஞ்சிக்ஞத்வாதி குணங்களுடன் கூடி யிருக்கிற சீவனுக்கும், சர்வக்ஞத்வாதி குணங்களுடன் கூடியிருக்கிற ஈசுவரனுக்கும் ஐக்கிய மெப்படிக் கூடும் ? இப்படி விரோதமான அர்த்தத்தைச் சுருதிகள் எப்படிச் சொல்லுகின்றன ?

உ. முன் சொல்லிய இலட்சணைத் திரயங்களில் விட்ட லட்சணையாகிய ஜகர் லட்சணையிற் சொல்லுகிறோம். கங்கா தீரத்தி லிருந் தொரு பிராமணன் வர, அவனை மற்றொரு பிராமணன் கண்டு, சுவாமீ, கங்கா தீரத்தில் விசேஷ மென்ன வென்று கேட்க, அந்தப் பிராமணன் கங்காயாங் கோஷவதி யென்றான். அதற்குத் தாற்பரியம் யாதென்றால் கங்கை யென்கிற பதத்திற்குப் பிரவாகம் அர்த்தமாகையினால் பிரவாகத்தி லிடைச்சேரி யிருக்கு மென்று கொள்ளப்படாது; அப்படிக் கொள்ளு மிடத்துப் பிரத்தியட்ச விரோதமா யிருக்கும். ஆதலால் கங்கைக் கர்த்தமான பிரவாகத்தைச் சர்வாத்மனாய் விட்டுவிட்டு, அப்பிரவாகத் தோடு கூடி யிருந்த கரையினிடத்தி லிடைச்சேரி யிருக்கிறதென்று கொள்ளவேண்டும்.

ச. இவ்வாறு மகாவாக்கியத்திலும் ஜகர்லட்சணை சொல்லலாமா?

உ. சொல்லப்படாது.

ச. ஏன்?

உ. தொம்பதார்த்த பூதனான கூடஸ்த சைதன்னிய பரியந்தமும் விட்டு விட்டால், முமூட்சுக்கள் சொரூபமே யில்லாமற் போகின்றது. அதனால் பிரத்தியட்ச விரோதம் வரும். ஆதலால் இந்த ஜகர்லட்சணை சொல்லக் கூடாது.

ச. எந்த லட்சணத்தினால் எந்த வாக்கியம் பிரமத்தைப் போதிக் கின்றது?

உ. அன்னமயகோசமுதல் விஞ்ஞானமயகோசமட்டும் இந்த நான்கு கோசமும் பரப்பிரமமென்கிற வாக்கியத்திற்குச் சடமான கோசங்கள். அவை பிரம மல்லாதபடியினால் அவைகளை விட்டுவிட்டு அவற்றினுக் கதிஷ்டானமான பூதமான சைதன்னியத்தையே போதிக்கின்றது.

ச. அஜகர் லட்சணையாவது யாது?

உ. மஞ்சாக் குரோசந்தி யென்கிற வாக்கியத்தில் மஞ்சங் கூப்பிடுகிறதென்று அர்த்த மாகின்றது. அந்த அர்த்தத்தை யங்கீகரித்தால் பிரத்தியட்ச விரோதம் வரும். ஆதலால் மஞ்சத்தை விடாமல் அதிலிருக்கும் புருஷன் கூப்பிடுகிறானென்று கொள்ளுகிறதே தாற்பரியம். இப்படிப்போல வேதத்தில் சத்திய ஞான அனந் தானந்த மென்னும் வாக்கியத்தில் ஆனந்தமயத்துடன் கூடியிருக்கிற ஆத்மாவுக்குச் சச்சிதானந்த லட்சணத்தை விடாமல் ஆனந்தமய கோசத்தைச் சொல்லுகின்றது.

ச. இந்த அர்த்தத்தை மகாவாக்கியத்தில் அங்கீகரிக்கலாமோ ?

உ. அங்கீகரிக்கப்படாது.

ச. ஏன்?

உ. கிஞ்சிக்ஞத்வாதி குணங்களுடன் கூடியிருக்கிற சைதன்னியமே சீவன், ஆகையினால் குண விசிஷ்டனானவனுக்கு ஐக்கியஞ் சொல்லக் கூடாது. ஆதலா லிந்த அஜகர்லட்சணையுங் கூடாது.

ச. ஜகத ஜகர்லட்சணையாவது யாது?

உ. சொயந்தேவதத்தகா என்கிற வாக்கியத்தில் கங்காதீரத்தில் ஐந்தாம் வருஷம் தேவதத்தனைப் பார்த்தோம். அவனையே இந்தக் காவேரிதீரத்தில் ஐம்பதாம் வருஷங் கண்டோமென்கிற விவகாரத்தில் அந்தத் தேசமும் அந்தக் காலமும் இந்தத் தேசமும் இந்தக் காலமுமாகிய புருஷனே வாச்சியார்த்த மென் றங்கீகரித்தோ மானால்; வெகு விரோத முண்டு. எப்படி யென்றால், கங்கா தீரங் காவேரி தீர மாகாது; காவேரி தீரங் கங்கா தீர மாகாது; அந்தக் கால மிந்தக் கால மாகாது; இந்தக் கால மந்தக் கால மாகாது. அதனால் பிரமாணாந்தரமான பிரத்தியட்சத்துக்கு விரோதமா யிருக்கின்றது. ஆதலால் அந்தத் தேசம், அந்தக் காலம், இந்தத் தேசம், இந்தக் காலமாகிய வாச்சியார்த்தத்தை விட்டு விட்டு, லட்சியார்த்த பூதனான தேவதத்தனை யறிந்துகொள்வதே தாற்பரியம்.

அதுபோல மகாவாக்கியத்தில் தற்பத வாச்சியார்த்தமான மாயைக்கும், மாயாப் பிரதிபிம்பனான ஈசுவரனது சர்வக்ஞத்வாதி குணங்களுக்கும், தொம்பத வாச்சியார்த்தமான அவித்தைக்கும், அவித்தியாப் பிரதிபிம்பனான சிதாபாசனது கிஞ்சிக்ஞத்வாதி குணங்களுக்கும் அன்னியோன்னிய ஐக்கியம் அங்கீகரித்தால் பிரத்தியட்ச விரோதம் வரும். ஆதலால் விரோதமான மாயா சர்வக்ஞத்வாதி குணங்களும், அவித்தியா கிஞ்சிக்ஞத்வாதி குணங்களுமாகிய இருவகையுந் தள்ளிவிட்டு, பிம்பப் பிரதிபிம்பத் தோற்ற வொடுக்கமும், அஞ்ஞானமும் அஞ்ஞான காரியத் தோற்ற வொடுக்கமு மறிவித்து, லட்சிய பூதமான சைதன்னிய மாத்திரத்தைப்பற்றிச் சச்சிதானந்த பிரமமே நீ; நீயே அந்தச் சச்சிதானந்த பிரமமென்று மகாவாக்கியத்தில் ஜகதஜகர்லட்சணை போதிக்கின்றது.

ஆதலால் நீயே பிரமம்; உன்னுடைய சித்த விருத்தியில் நீயே யவதானித்துப் பார்க்கவேண்டும். இதிற் சம்சய மில்லை. இவற்றுள் வாச்சியார்த்தம், இலட்சியார்த்த மென்னு மிருவகையில் வாச்சியார்த்தத்தை அங்கீகரிக்கு மிடத்துப் பிரத்தியட்ச விரோத முண்டாமாயின், லட்சியார்த்தத்தை அங்கீகரிக்கவேண்டும். ஆனபடியினால் மகாவாக்கிய லட்சணத்தினால் ஐக்கியம் போதிக்கப்படுகிறதென்று லட்சணை யங்கீகரிக்கத் தக்கது. ஆயினும் இந்த மகாவாக்கியத்தையே கிரமப்படி இன்னுமொரு பிரகாரமாய் உனக்குப் புத்தியி லமையும்படி போதிக்கின்றோம்.

ச. அஃதெப்படி?

உ. இருக்கு வேதத்தில் பிரஞ்ஞானம் பிரமம் என்னும் வாக்கியத்தில் பிரஞ்ஞானமென்றும், பிரம மென்று மிரண்டுபதம் உள்ளன.

ச. பிரஞ்ஞானபதத்திற் கர்த்தம் யாது?

உ. வாச்சியார்த்தம் லட்சியார்த்தமென் றிரண்டு விதம். அவற்றில் வாச்சியார்த்தமான பிரத்தியேகாத்மாவின் சாயை அந்தக் கரணத்திற்பிரதிபிம்பித்துத் தற்பிரகாசத்தை யகங்காரனுக்குக் கொடுத்து அகங்கார தர்மத்தைத் தான் மேல் போட்டுக்கொண்டு, சித்துஞ் சடமுமா யன்னியோன்னிய அத்தியாசத்தைப் பண்ணிக்கொண்டு, தப்தாய பிண்டம் போல நான் கர்த்தா, போக்தா, சுகி, துக்கி யென் றபிமானிக்கிறபோது, சிதாபாசனுக்கும் அகங்காரனுக்கும் சகச தாதாத்மியமென்றுஞ் சிற்சடக் கிரந்தியென்றுஞ் சொல்லப்படும்.

ஸ்தூல சரீரத்தை யத்தியாசம் பண்ணிக்கொண்டு அதனது ஷட்பாவ விகாரங்க ளெல்லாவற்றையுந் தான் மேற்போட்டுக்கொண்டு; உண்டானேன், பிறந்தேன், வளர்ந்தேன், பருத்தேன், இளைத்தேன், நசித்தேன் என்ற போதும், கறுப்பு சிவப்பு குட்டை நெட்டையென் றபிமானிக்கிறபோதும் சிற்சாயை யகங்காரனுக்கும், ஸ்தூல சரீரத்திற்கும் கர்மஜ தாதாத்மியமென்று சொல்லப்படும். சரீர தர்மங்க ளெல்லாம் சாட்சியினிடத் தாரோபிக்கும்போது அவ்வகங்காரனுக்குஞ் சாட்சிக்கும் பிராந்திஜ தாதாத்மியமென்று சொல்லப்படும். இந்தப் பிரகாரம் சரீரத் திரயத்திற் கூடியிருக்கிற சிதாபாசன்: ஞாதுரு, ஞான, ஞேயங்களாகிய திரிபுடி வியாபாரம் பண்ணுவான்.

ச. ஞாதுரு ஞான ஞேயங்களாவன யாவை?

உ. அந்தக்கரணப் பிரதிபிம்ப சைதன்னியமே சிதாப்பாசன். அவனேயே ஞாதுருவென்றும், அவன் விருத்தியுடன் கூடும்போது ஞானமென்றும், அவன் விஷயங்களுடன் கூடும்போது ஞேயமென்றுஞ் சொல்லப்படும். இந்தத் திரிபுடியுடன் கூடியிருக்கிற சிதாபாசனே தசேந்திரிய வியாபாரத்தைச் செய்வன். யாதொரு சைதன்னியன் அந்தக் கரண விருத்தியோடு கூடிச் சுரோத்திரேந்திரியத் துவாரா சத்தம், தொக்கிந்திரியத் துவாரா பரிசம், சட்சிந்திரியத் துவாரா ரூபம், சிங்குவை யிந்திரியத் துவாரர ரசம், கிராணேந்திரியத் துவாரா கந்தம், வாக்கிந்திரியத் துவாரா வசனம், பாதேந்திரியத் துவாரா கமனம், பாணீந்திரியத் துவாரா தானம், பாயுரிந்திரியத் துவாரா மல விசர்ஜ்ஜனம், உபஸ்தேந்திரியத் துவாரா ஆனந்தம் ஆகிய இத் தசேந்திரிய வியாபார விஷயங்களை யறிகிறானோ அவனே ஜீவன்; அவனே வாச்சியார்த்தமாம்.

ச. அதெப்படி?

உ. லட்சியார்த்தப் பிம்பவாச்சியம் அகங்காரத்திற் பிரதிபலித்து இரண்டுங் கூடினபோது லட்சியமாகிய சாட்சி யசைவற் றிருக்க, அகங்காரந் தொழிற்படுகிறதே வாச்சியார்த்தமாம்.

ச. லட்சியார்த்தமாவது யாது ?

உ. அந்தக்கரணத்தையும், அதன் விருத்தியையும், தேகேந்திரியாதி வியாபாரங்களாகிய வாச்சியத்தையுந் தள்ளி, மஞ்சாக்குரோச விலட்சணம் போல அவஸ்தாத்திரய சாட்சியாய்க் கூடஸ்தனாய் நிர்விகாரியா யிருக்கிற பிரத்தியேகாத்ம சைதன்னியமே லட்சியார்த்தமாம்.

ச. பிரம பதத்திற்கு வாச்சியார்த்தம் யாது?

உ. உத்தமமா யிருக்கிற இந்திராதி தேவதை சரீரங்களிலும், மத்திமமா யிருக்கிற மனுஷாதி சரீரங்களிலும், அதமமா யிருக்கிற பசுவாதி சரீரங்களிலும், அபஞ்சீகிருத பூத பஞ்சீகரண பூதங்களிலும் யாதொரு சைதன்னிய மானது ஏகமா யிருக்கின்றதோ அதுவே பிரமபத வாச்சியார்த்தமாம்.

ச. லட்சியார்த்தமாவது யாது?

உ. மாயாகாரியங்க ளனைத்தையுந் தள்ளிவிட்டுப் பிரபஞ்ச விலட்சணமாய்ப் பிரபஞ்ச அதிஷ்டானமாய் மாயா தற்காரியாதீதமாய்த் திரிவித பரிச்சேத சூனியமாய்ச் சர்வத்திரா அனுகூதமா யிருக்கிற பரமாத்ம சைதன்னியந்தானே லட்சியார்த்தமென்று சொல்லப்படும். அதுவே பிரத்தியேகாத்மாவா யிருக்கிற கூடஸ்த சைதன்னியம். அதுதான் என்னிடத்தி லிருக்கிற பிரக்ஞை. இந்தப் பிரக்ஞையே பிரமாவினிடத்திலு மிருக்கிறது. பிரமாவினிடத்தி லிருக்கின்ற பிரக்ஞைதான் என்னிடத்திலு மிருக்கிறது. ஆதலால் சைதன்ய மென்றாலும், பிரக்ஞான மென்றாலும், பிரமமென்றாலும், ஆத்மாவென்றாலும் பேர் மாத்திரம் வேறே யல்லாமல், வேறில்லை. பேர் வேறா யிருந்தாலும் வஸ்து ஒன்றா யிருக்கிற படியினாலேக மென்கிற பதத்தினால் ஐக்கியஞ் சொல்லப்பட்டது.

ச. யசுர்வேதத்தில் அகம் பிரமாஸ்மி யென்னும் பதத்தில் அக மென்கிற பதத்திற் கர்த்தம் யாது?

உ. பரிபூரணமாய்த் தேச கால வஸ்து பரிச்சேத சூனியமா யிருக்கிற பிரத்தியேகாத்ம சைதன்னியந்தானே பிரமவித்தைக் கதிகாரியா யிருக்கிற மனுஷ சரீரத்தில் புத்திக்குச் சாட்சியா யிருதய கமலத்தில் அகம் அகமென்று ஸ்மரித்துக் கொண்டிருக்கும்.

ச. பரிபூரணமா யிருக்கிற ஆத்மாவுக்குத் தேக சம்பந்தஞ் சொல்லுகையினால் பரிச்சின்னத்துவம் வாராதோ?

உ. சூட்சும சரீர விலட்சணமா யிருக்கிறபடியினால் அபரிச்சின்னத்வமாகிய பரிபூரண னென்பதிற் சம்சய மில்லை.

ச. சூனிய பூரணத்தைப்போலேயோ?

உ. சூனிய பூரணம்போ லன்று; சதா பூரணனேயாம்.

ச. அதெப்படி?

உ. சைதன்னியம் நிர்விகார மாகையினால் அதை விகாரமான அகங்காரமாய்ச் சொல்லக்கூடாது. அகங்காரஞ் சடமாகையா லிதுவும் அகமென்று தோற்றமாட்டாது. அக மென்னும் பதமோ வென்றால் பரமாத்ம சைதன்யமே அகங்காரத்துடன் கூடிக்கொண் டகமென்று விளங்குகின்றது. ஆனபடியினால் சடமான வாச்சியத்தைத் தள்ளிச் சைதன்ய மாத்திரமே அகமென்கிற சத்தத்திற் கிலட்சியார்த்த மென்று சொல்லப்படும்.

ச. பிரம பதத்துக் கர்த்தம் யாது?

உ. சதா எப்போதும் பூரணமாய்த் தனக்கு முந்தி ஒரு வஸ்துவுங் காரணமா யில்லாமல் தனக்குப் பிந்தி யொரு வஸ்துவுங் காரியமா யில்லாமல் தன்னிடத்தி லொரு வஸ்துவு மில்லாமல் தனக் கன்னியமாய் ஒரு வஸ்துவு மில்லாமல் யாதொரு சைதன்னியம் ஏகமாயிருக்கின்றதோ, அது தான் பிரமபதத்துக்கு லட்சியார்த்தம்.

ச. அஸ்மி யென்கிற பதத்திற் கர்த்தம் யாது?

உ. அவ்விருபதத்தின் லட்சியார்த்த ஐக்கியமே அஸ்மி யென்றும் பதார்த்த மென்று சுருதி சொல்லுகின்றது.

ச. சாம வேதத்தில் தத்துவமஸி வாக்கியத்தில் தத் பதத்திற் கர்த்தம் யாது?

உ. ஏகமேவாத்துவைதம் பிரம மென்று சொல்லப்படும்.

ச. ஏகமென்றால் போதாதோ? ஏகமே வாத்வைதம் பிரமமென்று சொல்லுவானேன்?

உ. ஏக மென்பதிற் சஜாதி சூனியமும், ஏவ வென்பதில் விஜாதி சூனியமும், அத்வைத மென்பதில் சுவகத சூனியமும் விளங்குகின்றன. ஆதலால் அப்படிச் சொல்ல வேண்டியதாயிற்று.

ச. உலக பதார்த்தங்களிற் சஜாதிக விஜாதிக சுவகத பேதங்கள் பிரத்தியட்சமாய் விளங்குகின்றன. எப்படி யென்றால் விருட்சங்களெல்லா மேகமா யிருந்தாலும் ஆலமரம், அரசமரம் என்கிற பேதத்தோ டிருக்கின்றபடியால் சஜாதி பேதமும், பாஷாணாதிகள் விருட்சங்களுக் கன்னியமா யிருக்கிறபடியால விஜாதி பேதமும், பத்திர புஷ்ப பலாதிகள் விருட்சத்தை விட்டு நீங்காமல் அதற்கு அங்கமாய்த் தோற்றுகிறபடியால் சுவகதபேதமுங் கண்டோம். அதுபோல ஆத்மாவிலும் அந்தப் பேதங்கள் இருக்கின்றன. எப்படி யென்றால் ஒரு வஸ்துவில் ஜீவனென்றும், ஈசுவரனென்றும் பேத மிருக்கிறபடியால் சஜாதி பேதமும், ஜீவேசுவரர்களைப் பார்க்கிலும் ஜடப் பிரபஞ்ச மன்னியமா யிருக்கிறபடியினால் விஜாதி பேதமும், சச்சிதானந்த குணங்க ளிருக்கிறபடியால் சுவகத பேதமுங் கண்டோமே?

உ. ஒரு வஸ்து தானே யபின்னமாய் நிமித்த வுபாதான காரணமா யிருந்து கொண்டு தான்தானே சிருஷ்டித்துத் தான்தானே பிரவேசித்ததென்று சுருதி சொல்லுகிறபடியினால் ஜீவேசுவர பேதமாகிய சஜாதி பேதமில்லை. ஜீவேசுவரர்களைப் பார்க்கிலுஞ் ஜடப் பிரபஞ்சத்திற்குச் சுதா சத்தை யில்லாதபடியினால் சுத்திகா ரஜிதம் சொப்பனப் பிரபஞ்சம் ரச்சு சர்ப்ப முதலானவைகளைப்போல் மித்தையா பூதமாய் பாதிக்கப்படுகின்றது. ஆதலால் விஜாதி பேத மில்லை. ஆத்மாவுக்குச் சச்சிதானந்தஞ் சொருபமா யிருக்கிறபடியினால் சுவகத பேத மில்லை. ஆனபடியினால் ஆத்துமா சஜாதிக விஜாதிக சுவகத பேத ரஹித சொருப மென்று தத் பதத்துக் கர்த்த மாயிற்று.

ச. தொம்பதத்திற் கர்த்தம் யாது?

உ. தேகேந்திரியாதிகளுக் கெல்லாம் அதீதமாய்ச் சிரவண மனன நிதித்தியாசனத்துடன் கூடி யிருக்கிற பிரத்தியேகாத்ம சைதன்னியமே தொம்பதத்திற் கர்த்த மென்று சொல்லப்படும்.

ச. அசிபதத்திற் கர்த்தம் யாது?

உ. அவ்விரு பதத்தின் லட்சியார்த்த ஐக்கியமே அசி யென்னும் பதத்திற் கர்த்தமென்று சொல்லப்படும்.

ச. அதர்வண வேதத்தில் அயமாத்மாப் பிரம மென்னும் வாக்கியத்தில் அய மென்னும் பதத்திற் கர்த்தம் யாது?

உ. ஆத்மா அபரோட்ச சொரூப மென்று சொல்லப்படுவது.

ச. ஆத்மா அபரோட்ச சொரூப மானால் கடாதிகளைப்போல் திரிசியமாய்க் காணப்பட்டுச் சடமாமே?

உ. திரிசியமாய்க் காணப்பட்டுச் சடமா யிருக்கிறதல்ல.

ச. ஆனால் சொர்க்காதிகளைப்போல் பரோட்சமாய்க் காணப்படாததோ?

உ. சொர்க்காதிகளைப்போற் பரோட்சமாய்க் காணப்படாதது மல்ல. ஆதலால் அந்த நித்தியாபரோட்ச சொப்பிரகாச சொரூபத்தை யறிவாகவே யறிய வேண்டும்.

ச. ஆத்மா வென்னும் பதத்திற் கர்த்தம் யாது?

உ. அகங்காரமுதல் ஸ்தூல தேக பரியந்தமான காரிய காரண சங்க வாதத்துக் கெல்லா மதிஷ்டானமாய் இருதய கமலத்தில் அக மக மென்று ஸ்மரித்துக் கொண்டிருக்கிற பிரத்தியேகாத்ம சைதன்னியமே யாத்மா வென்னும் பதத்திற் கர்த்தம்.

ச. பிரம பதத்திற் கர்த்தம் யாது?

உ. திரிசியமாய்க் காணப்படுகிற ஜகத்துக் கதிஷ்டானமா யிருக்கிறபடியினால் தத்துவமா யிருக்கிற பரமாத்ம சைதன்னியமே பிரம மென்னும் பதத்திற் கர்த்தமான லட்சியார்த்தம். அங்ஙனமான வஸ்து எதுவோ, அதுவே நித்தியாபரோட்ச சொப்பிரகாசமா யிருக்கிற பிரத்தியேகாத்ம சைதன்னிய மென்று சுருதியிற் சொல்லப்படுகின்றது. மேலும் முதல் வாக்கியந் தற்போத ஞான மென்றும், இரண்டாம் வாக்கியஞ் சாட்சிஞான மென்றும், மூன்றாம் வாக்கியஞ் சிவஞான மென்றும், நான்காம் வாக்கியம் பிரமஞான மென்றுஞ் சொல்லப்படும்.

ச. இப்படி வாக்கியங்க ளொன்றுக் கொன்று பேதம் வருவானேன்?

உ. பேதமல்ல; ஆசிரியர் சீடனுக்குப் பிரஞ்ஞானம் பிரமமென்றுபதேசிக்கச் சீடனும் பிரஞ்ஞானமாவ தேதென்று வினவ, அகமென் றிருக்கிறதே யதென்று இரண்டாம் வாக்கியத்தை யுபதேசிக்க, சீடனும் அனேகமான அகத்தி லெந்த அக மென்று வினவ, சீவேசுவரர்களுக் கப்பாற்பட்ட பிரமமென்று மூன்றாம் வாக்கியத்தை யுபதேசிக்க, சீடனும் சுவாமீ, சீவேசுரர்களும் உபாதியுந் தள்ளுபட்ட போதே துவைதமாயிற்றே யென்று வினவ, அன்னியமான துவைதமும் பிரமத்தைத் தவிர இல்லையென்று நான்காம் வாக்கியத்தை யுபதேசித் தருளினர். ஆதலால் சச்சிதானந்த அத்வைத சொரூபமே நீ; நீ சீவனல்ல; நான்கு வர்ணமும், நான்கு ஆசிரமமும், சட்பாவனையும், சட்கோசமும், சட்கோடியும்,

சட்ரமியும், சுக துக்க கர்த்தவ்யமும், ஆகாமிய சஞ்சித பிராரத்தங்களு முனக்குக் காலத்திரயத்திலு மில்லையென் றறிக.

ச. முன்போலவே நாம ரூப பதார்த்தங்கள் தோற்றப்படுகின்றனவே?

உ. அப்படித் தோற்றுத வைகைக் கொருபாயஞ் சொல்லுகின்றோம். அஃதென்னவென்று கேட்டில், எது பதார்த்த ரூபமாய்த் தோற்றப்படுகின்றதோ, அதைப் பரீட்சித்தால் அது ஒரு பதார்த்தமா யில்லாமற்போம். ஆதலால் எந்நேரமும் நிராலம்ப சொரூபத்தில் திருஷ்டி மாறா திருப்பாயாகில், அகண்ட சமரச சுக சொரூபமான ஆத்மாவாவாயென்று, சீஷனது சிரசில் தமது திவ்விய ஹஸ்தத்தை வைத்துப் பூரணானுக்கிரகஞ் செய்தருளினார். அப்படித் தரிசன பரிசனங்களினால் ஸ்ரீ சற்குருவானவர் சம்சயமற அனுக்கிரகம் பண்ணி, நிருமல நிலைமையைக் காட்டிவிட்டபடியினால், அந்தச் சீடன் பாவிய திருஷ்டியை மறந்து அந்தர்முகப்பட்டு ஸ்தூல சூட்சும காரண சரீர வுபாதிகளைக் கைவிட்டுச் சொரூபாகாரப்பட்டமாத்திரத்தில் ஞான சத்தி பிரவேசமானான்; அதனால் சாத்வீக பாவம் பிறந்தது. அதனாற் பதார்த்த வெதிருத்த மில்லாமற்போயிற்று. அதனால் ஞான சாம்பிராச்சியப்பட்டம் வந்தது. அதனால் ஆனந்த தீர்த்த மெழுந்து சீடனாகிய மடுவைமூடிக்கொண்டோடும்போது விவேக மென்கிற நீச்சுக்காரன் முழுகிப்போனான். ஆங்காரமாகிய கர்த்தவ்ய விருட்சம் வேரோடு பெயர்ந்துபோயிற்று. ஆசை யென்கிற பட்சிக்கூடு கலைந்தது. அப்போது சுவானுபூதி யாகிய அரசன் மனையில் முத்தி காந்தையை யாலிங்கனம் பண்ணிக்கொண்டு தன்னை யிழந்துவிட்டான். இந்திரியங்களெல்லாந் தன்னுடைய ஆதாரத்தில் பிரவர்த்தித் தடங்கிக்கொண்டிருந்தன. அப்பால் இத்தன்மையான சுவானுபவம் பெற்ற சீடன் ஸ்ரீ சற்குருநாதனுடைய பாதத்தில்விழுந்து நமஸ்கரித்தெழுந்து நின்று, அநாத பந்து கருணை சமுத்திரமான குருசுவாமி! அநாதி காலமே என் சொரூபத்தை யிழந்து என்னை நான் திருடிக்கொண்டு மூடனாயிருந்தேன். அப்படியிருக்க என் களவைக் கண்டுபிடித்து என் சொரூபத்தை யுள்ளபடி கரதலாமலகம்போல் சம்சயமறக் காட்டிக் கொடுத்த தேவரீரது பேருதவிக்கு அடியேன் செய்யுங் கைம்மாறு ஒன்றுங் காணேன். உமது கிருபா தரிசன மாத்திரத்தினால் அகங்கார மோக நீங்கிக் கிருத கிருத்தியனானேனென்று பலவாறாகத் துதித்து எப்போதும்போற் சமரசானந்த சுவானுபூதி நிலையில் ரமித்திருந்தான். ஆதலால் இந்த மகாவாக்கியத்தினர்த்தத்தை ஸ்ரீ சற்குரு சந்நிதானத்தில் சந்தேக விபரீதமற விசாரித்தறிந்தவனே சீவன்முத்தன்; அவனே பரமுத்தன். அவனே பிரம சொரூபமென்று சொல்லப்படுவான். மேலும் வேதத்தையும் பிராமணர்களையும் பிரமதேவனையும் பிரம மென்று சொல்வது கூடாது. என்னென்றால் காணப்பட்டவெல்லா மழிந்து போகிறபடியினால் சர்வகாரணமான நிர்க்குணப்பிரமவஸ்துவைமாத்திரம் பிரமமென்று சொல்லவேண்டியதெனச் சகல சுருதி ஸ்மிருதியிதிகாச புராணகமாதிகளிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சய மில்லை சித்தம்.

மகாவாக்கிய நிரூபகம் முற்றிற்று.

ஆறு பிரகரணங்கள் சரி.

வாசுதேவமனனம் என்னும் விவேகசாரம்

முற்றுப்பெற்றது.